ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீரங்கநாயகி ஸமேத ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீபத்மாவதி ஸமேத ஸ்ரீஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:



ஸ்வாமி பராசரபட்டர் அருளிச்செய்த

# பகவத் குண தர்பணம்

(ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமத்திற்கான பாஷ்யம் – தமிழ் மொழிபெயர்ப்பு)

நம்பெருமாள், எம்பெருமானார் அருளால் முயன்றவன்

ஸ்ரீ அஹோபில தாஸன் க. ஸ்ரீதரன்

(Email: sridharan_book@yahoo.co.in)

ஸ்ரீ:
ஸ்ரீமதே இராமாநுசாய நம:

ஸ்வாமி பராசர பட்டர் அருளிச்செய்த

# பகவத் குண தர்பணம்

(ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமத்திற்கான பாஷ்யம்)

## தனியன்

ஸ்ரீபராசர பட்டார்ய: ஸ்ரீரங்கேச புரோஹித:
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸ்து பூயஸே

**பொருள் –** நம்பெருமாளின் ஸந்நிதியில் புராணம் வாசித்தல், வேத விண்ணப்பம் செய்தல், திருமஞ்சனக் கட்டியம் கூறுதல் போன்ற கைங்கர்யங்களை உடையவரும், கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், கைங்கர்யம் என்னும் செல்வம் எப்போதும் நிலைபெற்றவரும் ஆகிய ஸ்ரீபராசரபட்டர், எனக்கு நிறைந்த நன்மைகளை அளிக்க வேண்டும்.

## ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த ச்லோகங்கள்

1. வந்தே கோவிந்த தாதௌ முனிமத மநவை லக்ஷ்மணார்யம் மஹாந்தம்
த்யாயேயம் யாமுநார்யம் மம ஹ்ருதி தநவை ராமமேவாபியாயாம்
பத்மாக்ஷம் ப்ரேக்ஷிஷீய ப்ரதமம் அபி முநிம் நாதமீடே சடாரிம்
ஸ்தௌமி ப்ரேக்ஷேய லக்ஷ்மீம் சரணாமசரண: ஸ்ரீதரம் ஸம்ச்ரயேயம்

**பொருள்** - எம்பார் எனப்படும் கோவிந்தருக்கும், என்னுடைய தந்தையான கூரத்தாழ்வாருக்கும் எனது நமஸ்காரங்கள். லக்ஷ்மண முனியாகிய எம்பெருமானாரையும், மஹானாகிய பெரியநம்பியையும் நான் த்யானிக்கிறேன். எனது மனம் யாமுனாசார்யர் எனப்படும் ஆளவந்தாரால் நிரம்பி இருக்கட்டும். ராமமிஸ்ரர் எனப்படும் மணக்கால் நம்பியையும், புண்டரீகாக்ஷர் எனப்படும் உய்யக்கொண்டாரையும் நான் பணிவுடன் அணுகுகிறேன். நமது ஆசார்ய பரம்பரையின் முதல் ஆசார்யரான நாதமுனிகளை வணங்குகிறேன். எம்பெருமானின் சடாரி எனப்படும் நம்மாழ்வாரை நான் போற்றுகிறேன். மஹாலக்ஷ்மியாகிய ஸ்ரீரங்கநாச்சியாரின் கடைக்கண் பார்வை எனக்குக் கிட்ட வேண்டும். வேறு கதியில்லாத நான், ஸ்ரீதரனாகிய ஸ்ரீரங்கநாதனிடம் சரணம் புகுகிறேன்.

2. ஓம் நமோ கஜவக்த்ராத்யை: பாரிஷத்யை: ப்ரசாஸதே
ஸ்ரீரங்கராஜ சேநான்யே ஸூத்ரவத்யா ஸமேயுஷே

**பொருள்** - ஸ்ரீரங்கநாதனின் சேனாதிபதியும், அவனது அடியார்களைக் கட்டுப்படுத்துபவரும் ஆகிய விஷ்வக்சேனரையும், அவரது துணைவியாரான சூத்திரவதியையும் நான் வணங்குகிறேன்.

3. நமோ நாராயணா யேதம் க்ருஷ்ண த்வைபாயந ஆத்மனே
யதாமுஷ்யாயணா வேதா மஹாபாரத பஞ்சமா:

**பொருள்** - க்ருஷ்ண த்வைபாயனராக அவதரித்து, நான்கு வேதங்களையும் ஐந்தாவது வேதம் என்று போற்றப்படும் மஹாபாரதத்தையும் தொகுத்த ஸ்ரீமந்நாராயணனை நான் வணங்குகிறேன்.

4. ஜாதோ லக்ஷ்மண மிஸ்ர ஸம்ஸ்ரய தநாத் ஸ்ரீவத்ஸசிஹ்நாத் ருஷே:
பூயோ பட்டபராசரேதி பணித: ஸ்ரீரங்கபர்த்ரா ஸ்வயம்
ஸ்ரீஸ்ரீரங்கபதி ப்ரசாத த்ருஷயா ஸ்ரீரங்கநாதாஹ்வய:
ஸ்ரீரங்கேச்வர காரிதோ விவ்ருணுதே நாம்நோ ஸஹஸ்ரம் ஹரே:

**பொருள்** - ராமானுஜரின் சீடராக இருப்பதையே தனக்குக் கிட்டிய பெரும் புதையல் என்று வாழ்ந்த முனிவரான ஸ்ரீவத்ஸாங்கன் எனப்படும் கூரத்தாழ்வானின் புத்திரனாகிய எனக்கு ரெங்கநாதன் என்பதே பெயர் ஆகும். இப்படி உள்ள நான், திருவரங்கத்தின் அதிபதியாகிய ஸ்ரீரங்கநாதனால் பராசரபட்டர் என்று பெயர் சூட்டப்பெற்றேன். இப்படிப்பட்ட நான், ஸ்ரீரங்கநாதனின் பரிபூர்ண அநுக்ரஹத்தை பெறுவதற்காகவும், அவனது துணைவியான ஸ்ரீரங்கநாச்சியாரின் அனுக்ரஹத்தை பெறுவதற்காகவும் - ஸ்ரீஹரியின் ஆயிரம் திருநாமங்களுக்கு உரை எழுதத் தொடங்குகிறேன்.

5. ஸம்ஸார: அயம் அபண்டித: பகவதி ப்ராகேவ பூய: கலௌ
பூர்ணம் அந்யதமே ஜனே ச்ருதிஸிரோகுஹ்யம் ப்ருவே ஸாஹஸாத்
தத்ர ஸ்தோத்ரம் இதம் ப்ரகாசயதி ய: ஸ்துத்யச்ச யஸ்தாவுபௌ
வ்யாச: காருணிகோ ஹரிச்ச தத் இதம் மௌர்க்யம் ஸஹேதாம் மம

**பொருள்** - ஸம்ஸார சுழற்சியுடன் கூடிய இந்த உலகத்தில் பகவானைப் பற்றிய அறியாமை அதிகமாகவே உள்ளது. அதிலும் கலியுகத்தில் இந்த அறியாமை என்பது மிகவும் அதிகமாகவே உள்ளது. இந்த நிலையில், தங்களை மிகவும் ஞானத்துடன் கூடியவர்களாக எண்ணிக் கொள்ளும் மனிதர்களிடம், எனது அறிவு கேட்டின் காரணமாக, வேதாந்தங்களைப் பற்றிய ரகசியங்களைக் கூற முற்பட்டேன். எனது இந்தச் செயலை

ஸஹஸ்ரநாமத்தை இயற்றிய வ்யாசபகவானும், இந்த ஸஹஸ்ரநாமத்தால் போற்றப்படும் கருணையே வடிவான ஸ்ரீஹரியும் பொறுத்துக் கொள்வார்களாக.

6. வந்தே ஹரௌ ததபி தாயிநி நாமவர்கே
தத்வயஞ்ஜகே மயி ச பந்த விசேஷமேத்ய
ஸேவத்வம் ஏதத் அம்ருதம் ப்ரணிபத்ய யாசே
மத்யஸத்மத்ஸரிஜநா இஹ மா ச பூவந்

**பொருள்** - அடியார்களான உங்களை வணங்குகிறேன். ஸ்ரீஹரி மீதும், அவனுடைய திருநாமங்கள் மீதும் மஹாவிச்வாசம் வைப்பீர்களாக. இந்தத் திருநாமத்திற்கு உரை இயற்றிய என் மீது கருணை கொள்வீர்களாக. இது குறித்து எந்த விரோதமும் என்னிடம் பாராட்ட வேண்டாம்.

## ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு பராசரபட்டர் அருளிச்செய்த முன்னுரை

### இராமாயணம் போன்று மஹாபாரதமும் உயர்ந்தது

இந்த உலகில் அறிவுள்ள மனிதன், தனது புலன்கள் மூலமாக அறியப்படும் பொருள்களைப் பற்றிய ஞானம் அடைகிறான். இதன் மூலமாக சந்தனம், மலர்கள் முதலிய நன்மை அளிக்கவல்ல பொருள்களை ஏற்றுக் கொண்டும், விஷம் நிறைந்த பொருள்களை விலக்கவும் செய்கிறான். மேலும், மரம் முதலான பொருள்களை விரும்பவோ வெறுக்கவோ செய்யாமல், நடுநிலையாக இருக்கிறான். இப்படிப்பட்ட புருஷார்த்தங்களில் - அர்த்தம் (செல்வம்), காமம் (விருப்பம்) ஆகிய இரண்டும் ப்ரத்யக்ஷம் மூலமாகவும் (கண்களால் கண்டு உணர இயலும்), யூகம் மூலமாகவும் அறியப்படுகின்றன. இவை இரண்டையும் கைவிடவேண்டும் – காரணம், அவை அற்பமானவை, தீமையை ஏற்படுத்தவல்லவை, மயக்கம் உண்டாக்கவல்லவை, நிலையற்றவை, துன்பங்கள் நிறைந்தவை, எளிதில் அடைய முடியாதவை – ஆகும். இதற்கு மாறாக, தர்மம் மற்றும் மோக்ஷம் ஆகிய இரண்டும் சாஸ்திரங்கள் மூலம் மட்டுமே அறியப்படுபவையாகும். இவை அர்த்தம் மற்றும் காமம் ஆகிய இரண்டு புருஷார்த்தங்களுக்கு மாறானவையாகும். இவை முழுவதுமாக மங்களகரமாக உள்ளவையாகும். ஆகவே சாஸ்திரங்களையும், அவை மூலம் கூறப்படும் உபதேசங்களையும் கைக்கொள்ளவேண்டும். இதனை மஹாபாரதம் பீஷ்மபர்வம் – ஸத்யம் ஸத்யம் புந: ஸத்யம் உத்த்ருத்ய புஜமுச்யதே வேதா சாஸ்த்ராத் பரம் நாஸ்தி ந தைவம் சேசவாத் பரம் – சத்யம், சத்யம், சத்யம் என்று கைகளை உயர்த்தி கூறப்படுகிறது, வேதங்களைக் காட்டிலும் உயர்ந்த ப்ரமாணம் கிடையாது, கேசவனைக் காட்டிலும் உயர்ந்த தெய்வம் கிடையாது – என்று கூறியது.

அறிய வேண்டிய பதினான்கு பிரிவுகளில் மிகவும் உயர்ந்தவை வேதங்களே ஆகும். இவற்றில் கூறப்பட்டுள்ள ஆழ்ந்த பொருளை, இதிகாசம் மற்றும் புராணம் மூலமே அறிய இயலும். இதனை மஹாபாரதம் ஆதிபர்வம் (1-2-73) – இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயதே விபேத்யல்ப ச்ருதாத் வேதோ மாமாயம் ப்ரதிஷ்யதி - அற்பமான ஞானம் உடையவனைக் கண்டவுடன் வேதமானது, தன்னை அந்த மனிதம் தவறாக உணர்ந்து உபதேசிக்கப்போகிறான், தன்னை அவன் வஞ்சிக்கப் போகிறான் என்று எண்ணி நடுங்குகிறது - என்று கூறியது. ஆகவே வேதங்களை இதிகாசம் மற்றும் புராணம் மூலமே நன்றாக அறிந்து கொள்ள இயலும். இவற்றுள் புராணங்கள் என்பவை இதிகாசத்திற்குப் பின்னரே கூறப்படுவதால், இதிகாசங்களே மிகவும் உயர்ந்தது என்று அறிந்தவர்கள் கூறுகின்றனர். ஆகவே இராமாயணம் போன்று மஹாபாரதமும், நாம் தஞ்சம் அடைய ஏற்றதாக உள்ளது.

## ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம அத்தியாயம் சிறந்தது

ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் அடங்கிய மஹாபாரத அத்தியாயம் கீழே கூறப்பட்டுள்ள பல காரணங்களால் மிகவும் உயர்ந்தது ஆகும்.

- இதுவே மஹாபாரதத்தின் ஸாரமாக உள்ளது.
- இதனைப் பல ரிஷிகளும் பல காலமாகப் போற்றியுள்ளனர்.
- வேதங்களைத் தொகுத்தவரான வேதவ்யாஸரே இதனையும் தொகுத்துள்ளார்.
- பீஷ்மரால் மிகவும் உயர்ந்தது எனக் கொண்டாடப்பட்டது.
- முன்னோர்கள் அனைவராலும் சாஸ்திரங்களுக்குள் மிகவும் உயர்ந்த இடத்தில் வைக்கப்பட்டது.
- ஸ்ரீமத் பகவத்கீதை உள்ளிட்ட பல சாஸ்திரங்கள் போன்று ஆழ்ந்த தத்துவங்களை உள்ளடக்கியது.

மேலே கூறப்பட்ட பல காரணங்களினால், ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் உள்ளடக்கிய மஹாபாரத அத்தியாயம் கைக்கொள்ளப்பட்டு, எப்போதும் த்யானிக்கப்படவேண்டும். இவற்றை ஒவ்வொன்றாக நாம் விளக்குவோம்.

## 1. விஷ்ணு ஸஹஸ்ரநாமம் மஹாபாரதத்தின் ஸாரம்

மஹாபாரதம் பலராலும் மிகவும் உயர்ந்தது என்று ஏற்கப்படுவதாகும். இது சரியான சொற்றொடர்களைக் கொண்டு, எந்த விதமான பிழைகளும் இன்றி அமைக்கப்பட்ட இதிகாசம் ஆகும். இதனை வாயுபுராணமும் சைவபுராணமும் வெகுவாகக் கொண்டாடுகின்றன. இந்த வரிகள்:

- வாயுபுராணம் - மதி மந்தாநமவித்ய யேநாஸௌ ச்ருதி ஸாகராத் ஜகத்திதாய ஜநிதோ மஹாபாரத சந்த்ரமா: - மதி என்னும் மத்து கொண்டு, யாரால் வேதம் என்ற கடலைக் கடைந்து, மஹாபாரதம் என்னும் சந்திரன் இந்த உலக நன்மைக்காக உற்பத்தி செய்யப்பட்டதோ.

- பவிஷ்ய புராணம் – பிபேதி கஹநாத் சாஸ்த்ராத் நரஸ்தீவ்ராதிவௌஷதாத் பாரத: சாஸ்த்ர ஸார: அயம் அத: காவ்யாத்மநா க்ருத:- நோய் உள்ள ஒருவன் கசப்பான மருந்துகளை ஒதுக்குவது போன்று, மனிதன் தனக்கு நன்மை அளிக்கவல்ல உயர்ந்த சாஸ்திரங்களை விலக்குகிறான். இப்படிப்பட்ட சாஸ்திரங்கள், சர்க்கரைப்பாகு ஊட்டப்பட்ட மருந்து போன்று, மஹாபாரதம் என்ற சுவையான காவியம் மூலம் அளிக்கப்பட்டது.

- மத்ஸ்ய ப்ராணம் – யஸ்ய த்வைபாயன: புத்ர: ஸ்வயம் விஷ்ணுரஜாயத் ப்ரகாச: ஜநித: யேந மஹாபாரத சந்த்ரம: – பராசர மஹிரிஷியின் புத்திரனாக, மஹாவிஷ்ணுவே க்ருஷ்ண த்வைபாயனராகப் அவதரித்தான். இப்படிப்பட்ட வேதவ்யாஸர் மூலமாக இந்த உலகம் எங்கும் ப்ரகாசிக்கும்படி மஹாபாரதம் என்ற நிலவு எழுந்தது.

- விஷ்ணுபுராணம் – க்ருஷ்ண த்வைபாயனம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும் கோ ஹி அந்ய: புவி மைத்ரேய மஹாபாரத க்ருத் பவேத் - மைத்ரேயரே! மிகவும் உயர்ந்த மஹாபாரதம் என்பதை வேதவ்யாஸர் எனப்படும் க்ருஷ்ண த்வைபாயனராக அவதரித்த ஸ்ரீமந் நாராயணன் அல்லாமல் வேறு யார் உருவாக்கியிருக்க கூடும்?

- மார்க்கண்டேயபுராணம் – வ்யாஸ வாக்ய ஜலௌகதேன குதர்ம த்ருஹாரிணா வேத சைல அவதீர்ணந நீரஜஸ்கா மஹீ க்ருதா - வேதவ்யாஸரின் வாக்கியம் என்ற புனிதமான நீர் மூலம், இந்த உலகமானது தனது ரஜோ குணம் என்ற அழுக்கு நீங்கப் பெற்றது. இந்த நீர் அருவி, மிகவும் உயரமான மலைகளாகிய வேதங்களில் இருந்து தோன்றி, ஓடி வரும் வழியில் உள்ல அதர்மம் என்ற மரங்களை வேருடன் சாய்த்தபடி வருகிறது.

- மஹாபாரதம் ஆதிபர்வம் – யோ வித்யாத் சதுரோ வேதாந் ஸாங்கோபநிஷ்டாந்திவிஜ: ந சாக்யாநமிதம் வித்யாத் ந ஏவ ஸ ஸ்யாத் விசக்ஷணா: - நான்கு வேதங்கள், ஆறு அங்கங்களுடன் கூடிய உபநிஷத் போன்ற பலவற்றையும் ஒருவன் அறிந்தாலும், மஹாபாரதம் கற்கவில்லை என்றால், கற்றவன் என்றே கூறப்படமாட்டான்.

இவ்விதமாகப் பலவற்றிலும் மஹாபாரதம் மிகவும் உயர்ந்தது என்று கொண்டாடப்பட்டது. இது – வேதங்கள், நீதிசாஸ்திரங்கள், இதிகாஸங்கள், புராணங்கள் போன்றதாகும். மேலும் மஹாபாரதம் ஆதிபர்வம் – யத் இதிஹாஸ்தி ததந்யத்ர யந்நோ ஹஸ்தி ந தத் க்வசித் - மற்ற அனைத்திலும் கூறப்பட்டது மஹாபாரதத்தில் உண்டு, ஆனால் மஹாபாரதத்தில் கூறப்பட்டது அனைத்தும் மற்றவற்றில் இருக்கவேண்டிய அவசியம் இல்லை – என்றது. எந்த இடத்திலும் தோஷம் இன்றியும், பாகுபாடு இன்றியும் உள்ளதால் இதனை மிகவும் உயர்ந்தது என்றே போற்றுகின்றனர். ஆகவே புத்திமான்கள் மஹாபாரதம் மிகவும் போற்றப்படக்கூடியது என்றனர்.

மஹாபாரத்த்தின் இதயம் என்ற கூறப்படுவது அனுசாஸநிகா பர்வம் ஆகும். இந்தப் பர்வத்தில் பல உயர்ந்த தர்மங்களும், அனைத்து சாஸ்திர விவரங்களும் உள்ளன. இதில் விஷ்ணுஸஹஸ்ரநாமம் அமைக்கப்பட்டுள்ளது. விஷ்ணுஸஹஸ்ரநாமம் என்பது மிகவும் உயர்ந்த தத்துவங்கள் மூலம், உயர்ந்த பரம்பொருளை உணர்த்துவதாகும்.

## 2. பல முனிவர்களும் கொண்டாடினார்கள்

இந்த விஷயம் மேலே – ருஷிபி: பரிகீதாநி - என்ற பகுதியில் விவரிக்கப்படும்.

## 3. வேதவ்யாஸர் திரட்டினார்

க்ருஷ்ண த்வைபாயனர் என்ற வேதவ்யாஸர் அனைத்தும் ஆசார்யர்களிலும் மிகவும் உயர்ந்தவர் ஆவார். அவர் ஸ்ரீமந் நாராயணனின் அவதாரமாக அவதரித்ததால், அவருக்கு - ஞானம், ஐச்வர்யம் போன்ற உயர்ந்த குணங்கள், தோஷம் இல்லாத தன்மை, முன்னுக்குப்பின் முரணாகச் சொல்லும் தோஷம் இல்லாமை குணங்கள் பொருந்தி இருந்தன். கலியில் கொடுமையால் ஞானம் குறைந்திருந்த மனிதர்களுக்காக அவர் நான்கு வேதங்களையும் சரியான முறையில் பிரித்து வைத்தார். வேதங்களில் கூறப்படும் பொருளை உணர்ந்து கொள்ளவும், அந்தப் பொருளை உணரும்போது ஏற்படும் ஐயங்கள் நீங்கும் விதமாகவும், ஐந்தாவது வேதமாகிய மஹாபாரதத்தை அருளிச்செய்தார்.

வேதவ்யாஸரின் முன்னோர்கள் குறித்து அறிவது எளியதே ஆகும். க்ஷத்ரியனாக இருந்த விஸ்வாமித்திரரைத் தனது ஒரு வாக்கு மூலமாக மட்டுமே ப்ராம்மணனாக உயர்த்திய வசிஷ்டரின் கொள்ளுப்பேரன் வேதவ்யாஸர் ஆவார். வசிஷ்டரும், புலஸ்தியரும் அளித்த வரபலம் காரணமாகப் பரம்பொருளை உள்ளபடி அறிந்து விஷ்ணுபுராணம் இயற்றிவரும், புராணம் மற்றும் ஸம்ஹிதைகள் பல இயற்றி லைங்க புராணம் போன்றவற்றைச் செய்தவரும் ஆகிய பராசரமுனிவரின் புத்திரர் வேதவ்யாஸர் ஆவார். ஒப்பற்ற தவங்கள் பல இயற்றியவர் என்பதால், இவரைப் பல முனிவர்களும் கொண்டாகின்றனர். இப்படிப்பட்ட பெருமைகள் பல கொண்ட வ்யாஸபகவான், தன் போன்ற பல முனிவர்கள்

கொண்டாடிய பகவானின் திருநாமங்கள் அனைத்தையும் திரட்டி, இந்த ஸ்தோத்ர வடிவில் அளித்தார். இதனால் இந்த ச்லோகம் மனித வாழ்க்கைக்கு மிகவும் முக்கியமான ஒன்றாகிறது.

## 4. பீஷ்மர் உகந்தருளியது

பீஷ்மர் மிகவும் உயர்ந்தவர் என்று கொண்டாடப்படுவர் ஆவார். வேதவ்யாஸர் தர்மனுக்கு (யுதிஷ்டிரன்), தர்மங்களை உபதேசிக்கும் நேரத்தில், பீஷ்மரிடம் சென்று உயர்ந்த பலவற்றை அறியும்படிக் கூறுகிறார். இதனை மஹாபாரதம் சாந்திபர்வம் கீழே உள்ள வரிகளில் விளக்குகிறது:

ச்ரதல்பகதோ பீஷ்ம: சாம்யந்நிவ ஹுதாசன:
மாம் த்யாதி புருஷ்வ்யாத்ர: ததோ மே த்த்கதம் மன:
திவ்யாஸ்த்ராணி மஹாதேஜா யோ தாரயதி புத்திமான்
ஸாங்காம்ச்ச சதுரோ வேதாம்ஸ்தமஸ்மி மனஸா கத:

ஸ ஹி பூதம் பவிஷ்யச்ச பவச்ச பரதர்ஷப
வேத்தி தர்மப்ருதாம் ச்ரேஷ்ட: ததோ மே தத்கதம் மன:
தஸ்மிந்நஸ்தாமிதே பீஷ்மே கௌரவாணாம் துரந்தரே
ஜ்ஞாநாந்யல்பீபவிஷ்யந்தி தஸ்மாத் த்வாம் சோதயாம்யஹம்

இதன் பொருள் – வ்யாஸர் யுதிஷ்டிரனிடம், ”வலிமை பொருந்திய அரசனே! ராஜதர்மத்தைப் பற்றி நீ முற்றிலும் அறிந்து கொள்ள வேண்டும் என்றால், பீஷ்மரிடம் செல்லவேண்டும். அவர் குருவம்சத்தின் பாட்டனார் ஆவார். அவருக்குப் புருஷர்கள், பொருள் ஆகிய அனைத்தைப் பற்றிய முழுமையான ஞானம் உள்ளது. உனக்கு ஏற்படும் பலவிதமான ஐயங்களை, கங்கையின் மைந்தரான அவர் தீர்த்து வைப்பார். அவர் தேவர்களின் அதிபதியான இந்திரன் உள்பட பலரையும் நேரடியாகக் கண்டவர் ஆவார். இதனால் அவரது இடத்தில் அனைத்து முனிவர்களும் குழுமி இருந்ததில் வியப்பு இல்லை. அவர் அறியாதது என்று ஏதும் இல்லை. தர்மத்தைப் பற்றி முழுமையாக அறிந்த அவர், உன்னைச் சரியான பாதையில் வழி நடத்துவார்,” என்றார்.

க்ருஷ்ண பகவானும் யுதிஷ்டிரனிடம், பீஷ்மரிடம் சென்று அறிவுரை கேட்க வேண்டும் என்று வலியுறுத்தினான். இதனைக் கீழே உள்ள மஹாபாரதம் சாந்திபர்வ வரிகள் மூலம் அறியலாம்:

யச்ச த்வம் வக்ஷ்யஸே பீஷ்ம பாண்டவாயாநுப்ருச்சதே
வேதப்ரலாபா இவ தே ஸ்தாஸ்யந்தி வசுதாதலே
யத்தி பூதம் பவிஷ்யச்ச பவச்ச பரதர்ஷப
ஸர்வம் தத் ஞான வ்ருத்தஸ்ய தவ பாணாவிவாஹிதம்
அஹம் ச த்வா அபிஜாநாமி ஸ்வயம் புருஷஸத்தம
தமஸா ஹி பவாந் சக்தா: ஸ்ரஷ்டும் லோகாம்ச்சராசரான்
ந தே க்லாநிர்ந தே மூர்ச்சதா
ஸத்வஸ்தம் ச மந: நித்யம் தவ பீஷ்ம பவிஷ்யதி
ரஜஸ்தமோப்யாம் அஸ்பஷ்டம் தநைர்முக்த இவோடுராத்

இதன் பொருள் - க்ருஷ்ணன் பீஷ்மரிடம், "பரதகுலத்தில் உதித்தவர்களில் உயர்ந்தவரே! நீவிர் இப்போது பாண்டவர்களுக்கு உபதேசிக்கப்பட உள்ள ச்லோகமானது (விஷ்ணுஸஹஸ்ரநாமம்), இந்த உலகில் வேதங்கள் போன்று எப்போதும் நிலைத்து நிற்கும். ஞானத்தினால் முதிர்ந்த உமக்கு, மூன்று காலங்களின் அறிவு என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாக உள்ளது. உமது தவ பலத்தால் இந்த உலகில் அசையும் மற்றும் அசையாப் பொருள்களை நீரே உருவாக்க இயலும் என்பதை நான் அறிவேன். அழிவு, அறியாமை, மயக்கம் ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டவர் நீவிர் ஆவிர். தெளிவான வானத்தில் உள்ள சந்திரன் போன்று உமது மனம் எப்போதும் தெளிவாகவே உள்ளது. உமது மனம் ஸத்வ குணத்தில் மட்டுமே நிலைபெற்றுள்ளது. கர்மம் மட்டுமே நிறைந்த ரஜோ குணம், அறியாமை உள்ள தமோ குணம் ஆகியவை உம்மை நெருங்குவதில்லை", என்றான்.

இதே போன்று நாரத பகவான் யுதிஷ்டிரனிடம் கீழே உள்ள வரிகளைக் கூறினார்:

க்ருத்ஸ்நாந் ஹி விவிதாந் தர்மாந் சாதுர்வர்ணர்யஸ்ய வேத்யயம்
தச்சித்ரம் அனுயுஞ்ஜீத்வம் ஸம்சாயாந் மனஸி ஸ்திதாந்

இதன் பொருள் - நாரதர் யுதிஷ்டிரரிடம், "அவர் (பீஷ்மர்) நான்கு வர்ணத்தினரின் கர்மம் எவை என்பதைச் சரியாக அறிவார், உனது ஐயங்களை விலக்குவார்", என்றார். தனது ஆழ்ந்த ஞானம், முனிவர்கள் முதலான பெரியவர்களிடம் உள்ள மரியாதை, ப்ரம்மச்சர்யம், தவம், உறுதி ஆகியவை காரணமாக அவர் பகவானைக் கண்டவர் என்று நாரதர் பீஷ்மரைப் போற்றுகிறார். நாரதர் பீஷ்மரை ஆசிர்வதித்து, "உம்மிடம் உபதேசம் கேட்பவர்களுக்கு உண்மையை மட்டுமே உபதேசம் செய்யாமல், அவர்களின் கடமை

மற்றும் தர்மம் ஆகியவற்றையும் விளக்கவேண்டும்", என்றார். மேலும் தனது பெற்றோர் மூலம் பீஷ்மர் இந்த ஞானத்தை அடைந்தார்.

கீழே உள்ள வரிகள் பீஷ்மர் கூறும் வரிகள் ஆகும்:

தாஹோ மோஹ: ச்ரமச்சைவ க்லமோ க்லாநிஸ்ததா ருஜ:
தவ ப்ரஸாதாந் கோவிந்த ஸத்ய: வ்யபகதாநி மே
யச்ச பூதம் பவிஷ்யச்ச பவச்ச பரமச்யுத
தத்ஸர்வமனுபச்யாமி பாணௌ பலமிவாஹிதம்
வேதோக்தச்சைவ யே தர்மா: வேதாந்த நியதாச்சயே
தாந் ஸர்வாந் ஸம்ப்ர பச்யாமி தரதாநாத் தவாச்யுத

இதன் பொருள் – பீஷ்மர், "கோவிந்தா! உனது கருனை காரணமாக நான் தாகம், பசி, களைப்பு, நோய், சோம்பல் போன்றவை இல்லாமல் உள்ளேன். மூன்று காலங்களையும் என்னால் காண முடிகிறது. அச்யுதனே! வேதவேதாந்தங்களில் கூறப்பட்டுள்ள தர்மம் பற்றிய அனைத்தையும் உனது கருணை மூலம் அறிய இயன்றது", என்றார். மேலும் அவர் - யுவேவ ச அஸ்மி ஸம்வ்ருத்த: த்வதநுஷ்யாந வ்ரும்ஹித: வக்தும் ச்ரேய: ஸமர்த்தே அஸ்மி த்வத்பர ஸாதாத் ஜநார்த்தன – ஜனார்த்தனா! உனது கருணை காரணமாக, நான் உன் மீது தடையற்ற பக்தி வைத்தேன், இதனால் உனது கருணையை மேலும் அளித்தாய் - என்றார். இதன் காரணமாகத் தனக்கு அனைத்து தர்மங்களும் புலப்பட்டதாகக் கூறினார். இப்படிப்பட்ட பீஷ்மர் - ஏஷ மே ஸர்வ தர்மாணாம் தர்மை அதிகதமோ மத: - இதுவே (விஷ்ணுஸஹஸ்ரநாமம் உள்ள மஹாபாரத அத்தியாயம்) மிகவும் உயர்ந்த தர்ம மதம் – என்றார்.

## 5. அனைவரும் ஏற்ற ஒன்று

விஷ்ணுஸஹஸ்ரநாமம் என்பது உலகில் உள்ள அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகும். பகவானுக்கு இந்தத் திருநாமங்களுடன் உள்ள தொடர்பு மஹாபாரதம் சபாபர்வத்தில் கூறப்பட்டுள்ளது. விஷ்ணு தர்மத்தில் உள்ள கஜேந்திர மோக்ஷ பகுதியில் விஷ்ணுஸஹஸ்ரநாமம் கூறப்பட்டது. விஷ்ணுஸஹஸ்ரநாமம் உள்ளடக்கிய மஹாபாரதத்தின் இந்த அத்தியாயத்திலும் (ஸஹஸ்ரநாமம் உள்ள அத்தியாயம்), முகவுரை மற்றும் பலன் கூறும் பகுதி ஆகியவற்றிலும் ஸஹஸ்ரநாமத்தின் பெருமை கூறப்பட்டது.

ஆயுர்வேதம் முதலான பல சாஸ்திரங்களில் விஷ்ணு ஸஹஸ்ரநாமம் பற்றி உயர்வாகக் கூறபட்டதைக் காணலாம். உதாரணமாகக் கீழே உள்ள வரிகள் காண்க:

- சரகஸம்ஹிதை – விஷ்ணும் ஸஹஸ்ரமூர்த்தானாம் சராசரபதிம் விபும் ஸ்துவந் நாம ஸஹஸ்ரேண ஜ்வராந் ஸர்வாந் வ்யபோஹதி – இந்த உலகில் உள்ள அனைத்தின் நாயகனான மஹாவிஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்களைக் கூறுவதன் மூலம் பயம் அனைத்தும் நீங்கிவிடுகிறது.

- மேஹப்ராயச்சித்தம் என்பதில் (இது சிறுநீர் தொடர்பான நோய்கள் விளக்கும் பகுதி) – ஜப்யம் புருஷஸூக்தம் - புருஷஸூக்தம் கூறும்போது அனைத்து நோய்களும் நீங்குகிறது; இதனை தொடர்ந்து - தைைவ பகவந் நாம ஸஹஸ்ரம் பாரதோதிதம் - ஸஹஸ்ரநாமம் கூறப்படவேண்டும் - என்று உள்ளது.

- தைைவ பகவன் நாம ஸஹஸ்ரம் பரிகீர்த்தயேத் – குஷ்டம் தீர ஸஹஸ்ரநாமத்தை ப்ராயச்சித்தமாகக் கூற வேண்டும்.

- பலவிதமான ஜீரம் பற்றிக் கூறும்போது – ஹோமஸ்து பூர்வவத் ஜப்யம் விஷ்ணோர் நாம ஸஹஸ்ரகம் – பலவிதமான நோய்களும் ஹோமத்துடன் கூடிய விஷ்ணுஸஹஸ்ரநாம ஜபம் மூலம் நீங்கிவிடும்.

- க்ரஹதோஷங்கள் பற்றிக் கூறும்போது – ஆஸரத்மதம் மருத்ஸூக்தம் விஷ்ணோர் நாம ஸஹஸ்ரகம் அந்யத்ர ச ஏவம் விதம் அந்வேஷ்டவ்யம் – மருத்ஸூக்தம் கூறுவதும், விஷ்ணுஸஹஸ்ரநாமம் பாராயணம் செய்வதும் அனைத்து கிரஹதோஷங்களுக்கும் ஏற்றது.

இது போன்று பல இடங்களிலும் விஷ்ணுஸஹஸ்ரநாமம் புகழ்ப்பட்டது. பல ஆசிரியர்களும் இந்த ச்லோகத்தை மிகவும் உயர்ந்த கவசம் என்று கூறுகின்றனர் (ஸர்வ ஜீவரக்ஷை). பட்டபாணன் என்பவர் ஸூதிகா க்ருஹ வர்ணனையில் – அவிச்சிந்ந பட்யமான நாராயண நாம ஸஹஸ்ரம் – பிள்ளைப் பேற்றின்போது நாராயணனின் ஸஹஸ்ரநாமம் ஜபிப்பது மிகவும் இன்றியமையாதது – என்றார்.

இந்த உலகில் உள்ளவர்கள் விஷ்ணுஸஹஸ்ரநாமத்தைக் கற்றும், மனப்பாடம் செய்தும், கேட்டும், ஜபித்தும், பாடியும், எழுதியும், பொருள் எழுதியும், இதனைக் கூறுபவர்களை மரியாதை செய்தபடியும் உள்ளனர். இதன் மூலம் அமங்கலம் மற்றும் கவலைகள் நீங்கப் பெறுகின்றனர். இந்தப் பாராயணம் மூலம் விஷம், பேய்பிசாசு, நோய், க்ரஹதோஷம், தீய கனவுகள், தீயசக்திகள், மகாபாவங்கள் ஆகியவை நீங்கிவிடுகின்றன. இதன் மூலம் அனைத்துச் செல்வங்களும் நிறைகின்றன, ஸம்ஸாரக்கட்டு அவிழ்கிறது, பரமபதம் கிட்டி விடுகிறது. இதனைப் பாராயணம் செய்வதன் மூலம் ஒரு சிலர் வேறு எந்தப் பயனையும் எதிர்பாராமல், பகவானின் குணங்கள் என்ற அமிர்தத்தில் திளைப்பதை மட்டுமே

எண்ணியுள்ளனர். குழந்தைகள், ஊமைகள், மூர்க்கன், பெண்கள், நாத்திகன் ஆகியவர்களுக்கு ஏற்ற பாதுகாப்பாகவும் உள்ளது. வேதங்கள் கூட அனைவருக்கும் ஏற்றதல்ல. வேதங்களில் உள்ள குறிப்பிட்ட பகுதிகள் - சில கோத்ரம், சில வர்ணம் ஆகியவற்றுக்கு மட்டுமே ஏற்றது. இதன் மூலம் அனைவரும் ஓதுவது தடுக்கப்பட்டது. இது போன்று தடைகள் ஏதும் இல்லாமல் உள்ளதால் விஷ்ணுஸஹஸ்ரநாமம் அனைவராலும் ஏற்கப்பட்டது.

## 6. ஸ்ரீமத்பகவத் கீதை போன்ற உயர்ந்த வைகளுக்கு சமம்

மஹாபாரதத்தின் பல ஸித்தாந்தங்களை ஸ்ரீமத்பகவத்கீதை, ஸ்ரீமந்நாராயணீயம், யாநம், ஸந்தி, அக்ரபூஜை, உத்தமதர்ம அநுஸாநம் போன்றவை விளக்குகின்றன. இவற்றுடன் ஸஹஸ்ரநாமம் ஒத்துள்ளது.

ஆக மேலே உள்ள ஆறு காரணங்களால் விஷ்ணுஸஹஸ்ரநாமம் மிகவும் ஏற்றது என்றும், அனைவருக்கும் பொருத்தமானது என்றும் கூறப்பட்டது. சாஸ்த்ரஞானம் நிரம்பிய தேவச்சிரவஸ், தேவஸ்தானர், நாரதர், வாத்ஸ்யாயநர், அச்மர், ஸுமந்து போன்ற பலர், தங்கள் இடைவிடாத முயற்சி மூலம் பகவானை நேரில் கண்டவர்கள் ஆவர். இவர்கள் இந்தப் புனிதமான ச்லோகத்தை அங்கீகரித்துள்ளனர். அனைத்திற்கும் ஸர்வேஸ்வரனும், தாமரை போன்ற கண்கள் உள்ளவனும், ஆசார்யர்கள் அனைவருக்கும் ஆசார்யனாய் உள்ளவனும், ஸ்ரீமத்பகவத் கீதை உரைத்தவனும், உபநிஷத்துக்களின் எல்லையும் ஆகிய கண்ணன் செய்தது என்ன? பீஷ்மர் இந்த விஷ்ணுஸஹஸ்ரநாமத்தை உபதேசம் செய்தபோது, மற்றவர்களுடன் இணைந்து நின்று, மிகவும் சந்தோஷத்துடன் கேட்டான். எம்பெருமானின் திருக்கல்யாணகுணங்கள் அனைவருக்கும் புரியவேண்டும் என்பதற்காக, இந்த பாஷ்யம் நம்மால் (ஸ்வாமி பராசர பட்டர்) செய்யப்படுகிறது.

முன்னதாகப் பல இடங்களில் பரத்த்வ விஷயம் குறித்து அனைத்தையும் அறிந்தவர் ஜனமேஜயர் ஆவார். அதானால் அவர் முழு நிறைவு அடைந்தவராக, வைசம்பாயநரிடம் ஏதும் கேட்காமல் மௌனமாக நின்றார். இதனைக் கண்டு ஆச்சர்யம் கொண்ட வைசம்பாயநர், அவருக்கு மேலும் ஞானம் அளிக்கவேண்டும் என்ற கருணை மேலிட, தானாகவே இந்த அத்யாயயத்தைக் கூறத் தொடங்கினார்.

ஸ்ரீ வைசம்பாயந உவாச

ச்ருத்வா தர்மாந் அசேஷேண பாவநாநி ச ஸர்வச:
யுதிஷ்டிர: சாந்தநவம் புநரேவாப்யபாஷதே

**தர்மாந் -** இது ச்ருதி மற்றும் ஸ்ம்ருதிகளில் கூறப்பட்ட ராஜதர்மம், மோக்ஷதர்மம் மற்றும் தான தர்மங்கள் ஆகும். இவை ச்ருதி, ஸ்ம்ருதிகள் விதித்த முறையில் இயற்றப்படும்போது, அனைத்து பயன்களும் கைகூடும்.

**அசேஷேண -** முழுவதுமாக, முற்றிலுமாக, அனைத்தையும் நிரப்புவதாக.

**பாவநாநி ச -** தூய்மைப்படுத்தும் செயல்களான தவம் செய்வது, புண்ணிய இடங்களுக்கு யாத்திரை செல்வது போன்றவை.

**ஸர்வச: -** சரியான நேரத்தில், சரியான முறையில், சரியான மனிதர்களால் இயற்றப்படுவதன் மூலம் பலன் அளிக்கவல்ல கர்மங்கள்.

**ச்ருத்வா யுதிஷ்டிர: -** இதனைக் கேட்டது தர்மத்தின் புத்ரனான யுதிஷ்டிரன்.

**சாந்தநவம் –** கங்கை மூலமாகச் சந்தனுவிற்குப் பிறந்த பீஷ்மர், இதனால் பிறப்பிலேயே பெருமை உள்ளவர்.

**புநரேவ அப்யபாஷத –** பீஷ்மர் யுதிஷ்டிரனிடம் தர்மத்தைப் பற்றி மீண்டும் விரிவாகக் கூறியது ஏன்? இதன் காரணம், பீஷ்மர் தான் அறிந்த உயர்ந்த தர்மங்கள் பற்றியும், அவை அனைவருக்கும் பயன் அளிக்கும் என்றும் அறிந்ததால் ஆகும். அவர் ஞானத்தின் இருப்பிடமாகவே இருந்தவர் ஆவார். மிகவும் உயர்ந்தவர்கள் அனைவரும் தங்கள் முன்னோர்கள் எத்தகைய நடவடிக்கையில் ஈடுபட்டிருந்தனர், அவர்கள் பின்பற்றிய கர்மங்கள் விளைவிக்கவல்ல உயர்ந்த பயன்கள் ஆகியவற்றிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பார்கள். அந்த நடவடிக்கைகளே மிகவும் சிறந்தவை என்று பின்பற்றுவர். அவை வேதம் முதலான ப்ரமாணங்களில் உள்ளன என்பதற்காகப் பின்பற்றாமல், தங்கள் முன்னோர்கள் அந்தச் செயல்களைச் செய்தனர் என்பதற்காகப் பின்பற்றியபடி இருப்பார்கள்.

அறிவாளிகள் செய்வது என்ன? தங்கள் பகுத்தறிவு மூலமாகப் ப்ரமாணங்களை அறிந்து, அவற்றின் மூலம் அறியப்படும் பொருளான ப்ரமேயத்தை அறிந்து, அவற்றில் தனக்கு நன்மை அளிக்கவல்ல ப்ரமேயத்தை மட்டுமே எடுத்துக்கொள்வார்கள் என்று நாம் முன்பே

பார்த்தோம். இப்படிப்பட்ட ப்ரமேயம் என்பது உபாயம் என்றும், உபேயம் என்றும் இரண்டு வகைப்படும் (உபாயம் என்றால் ஒரு பலனை அடைய உள்ள வழி, சாதனம் ஆகும். உபேயம் என்றால் அத்தகைய வழி மூலம் அடையப்படும் பொருள் ஆகும்).

இவ்விதம் அடையப்படவேண்டிய பொருள் (உபேயம்) என்பது - ப்ரியம், ப்ரியதரம், ப்ரியதமம் – என்று மூன்று வகைப்படும் (ப்ரியம் – விரும்பப்படுபவை, ப்ரியதரம் – அதிகம் விரும்பப்படுவது, ப்ரியதமம் – மிகவும் அதிகமாக விரும்பப்படுவது). இதே போன்று உபாயம் என்ற வழியும் – ஹிதம், ஹிததரம், ஹிததமம் – என்று மூன்று வகைப்படும் (ஹிதம் – நம்மை அளிக்கும் வழி, ஹிததரம் – அதிக நன்மை அளிப்பது, ஹித்தமம் – மிக அதிக நன்மை அளிப்பது).

இவற்றுள் அடையப்படும் பொருள் என்று கூறப்பட்ட உபேயம் என்பது வளர்ச்சி, பரிணாமம், அழிவு – என்ற தோஷங்களுடன் கூடியது. இவை அசேதன தர்மங்கள் மூலம் கிட்டும் உபேயங்களுக்குப் பொருந்தும். சேதன தர்மங்கள் மூலம் கிட்டும் உபேயத்திற்கு – வலி, துயரம், பற்றுதல் போன்ற தோஷங்கள் உள்ளன. இத்தகைய உபேயத்தின் நன்மைகளாக உள்ளவை எது என்றால் – குற்றம் இல்லாமை, ஐச்வர்யம், ஞானம், ஆனந்தம் போன்றவை ஆகும்.

உபாயம் என்பதில் உள்ள குறைகள் - செல்வ விரயம், சோர்வு, உறுதியற்ற தன்மை, அற்பமான பலன் - போன்றவை ஆகும். உபாயம் என்பதில் உள்ள நன்மைகள் – பலனை அளித்தல், என்றும் நிலைக்கும் தன்மை, எளிதாகச் செய்தல், பலன் - ஆகியவை ஆகும்.

ஆக எந்தவொரு உபாயம் மற்றும் உபேயத்திலும், இவை அனைத்தையும் ஆராய்ந்து பார்க்க வேண்டும். இவற்றில் எது மிகவும் உன்னதமானதோ, உயர்ந்ததோ அதனைத் தேர்வு செய்யவேண்டும். மிகவும் உயர்ந்தவற்றைத் தேர்ந்தெடுத்த பின்னர் தாழ்ந்தவற்றைக் கைவிட்டு விடவேண்டும் (ஏற்றுக் கொள்ளப்படவேண்டியவை உத்க்ருஷ்டம் என்றும், கைவிடப்படவேண்டியவை த்யாஜ்யம் என்றும் கூறப்படும்).

ஆக மிகவும் சிறந்த உபாயம் எது, மிகவும் சிறந்த உபேயம் எது என்று அறிய யுதிஷ்டிரன் விரும்பினான். உபாயம் மற்றும் உபேயங்களை அவற்றின் தன்மைகளுடன் அறிய எண்ணினான். இதனை அறிய, ஆறு விதமாகத் தனது ஐயத்தைப் பிரித்து, இரண்டு ச்லோகங்களில் கேட்கிறான்.

யுதிஷ்டிர உவாச

கிம் ஏகம் தைவதம் லோகே கிம் வாப்யேகம் பராயணம்
ஸ்துவந்த: கிம் கமர்ச்சந்த: ப்ராப்நுயுர் மாநவச்சுபம்

கோ தர்ம: ஸர்வ தர்மாணாம் பவத: பரமோ மத:
கிம் ஜபந் முச்ச்யதே ஜந்துர்ஜந்ம ஸம்ஸார பந்தநாத்

## முதல் கேள்வி – பரத்த்வம் என்ற உபேயம் பற்றியது

எந்த ஓர் உபாயமும் (வழி) ஏதோ ஒரு உபேயத்தை (இலக்கு) அடைவதன் பொருட்டே உள்ளது. உபாயம், உபேயம் ஆகிய இரண்டில் உபேயமே மிகவும் முக்கியமானது ஆகும். யுதிஷ்டிரன் கேட்ட முதல் கேள்வி உபேயத்தைப் பற்றி ஆகும். இத்தகைய உபேயம் என்பது சாஸ்திரங்களில் இரண்டாகப் பிரிக்கப்பட்டது. அவையாவன – பரத்த்வம், பரமப்ராப்யம் என்பதாகும். (பரத்த்வம் என்பது மிகவும் உயர்ந்த உண்மை என்றும், பரமப்ராப்யம் என்பது அடையப்பட வேண்டிய உயர்ந்த இலக்கு என்றும் பொருள் தருவதாகும்). யுதிஷ்டிரன் முதலில் பரத்த்வத்தைப் பற்றிக் கேட்டார்.

**லோகே** - "சாஸ்திரங்களின்படி" என்று பொருள். இந்தப் பதத்தை ஒவ்வொரு கேள்வியிலும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

**பவத: பரமோமத:** - உம்மால் சிறந்தது என்று கருதப்பட்டது (எது) – மேலே மூன்றாம் ச்லோகத்தில் உள்ள இந்தப் பதங்களை, மேலே உள்ள ச்லோகத்திற்கும் இணைத்துக் கொள்ளவேண்டும். இது ஸிம்ஹ அவலோகன ந்யாயம் என்று பெயர்படும். சிங்கம் நடக்கும்போது அடிக்கடி திரும்பிப் பார்த்தபடி செல்லும். இது போன்று இங்கு மேலே உள்ள ச்லோகத்துடன் இணைத்துப் படிக்கவேண்டும். இதனை ஒவ்வொரு கேள்விக்கும் சேர்த்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் சேர்க்கும்போது, இலக்கணம் மாறாமல் பதங்களை மாற்றி அமைத்துக் கொள்ளவேண்டும்.

**லோக** – இந்தப் பதம் நாம் கண்களால் காணும் ச்ருதி, ஸ்ம்ருதி போன்றவை ஆகும்.

**ஏகம்** - எந்த ஒன்று தனக்கு இணையாக ஏதும் இல்லாமலும், தனக்கு மேல் ஏதும் இல்லாமலும் உள்ளதோ அந்தப் (பரம்) பொருள் "ஏகம்" எனப்பட்டது. இதனை ச்லோகம் 9-ல் உள்ள "பரமம் யோ மஹத் தேஜ:" என்பதன் மூலமும், ச்லோகம் 12-ல் உள்ள "தஸ்ய லோகப்ரதாநஸ்ய" என்பதன் மூலமும் உணரலாம். இங்கு ஏகம் என்ற பதம், ஏதோ ஒரு பொருளையோ அல்லது எண்ணிக்கை என்பதையோ குறிக்கவில்லை. இதனை அடுத்து உள்ள தைவதம் என்ற பதத்துடன் தொடர்புபடுத்திப் பார்த்தால் உணரலாம். தைவதம் என்றபதம் ஒருமையில் வந்துள்ளது. ஆக ஏகம் தைவதம் (ஒரு தெய்வம்) என்று கூறும்போது, ஏகம் என்ற பதம் அவசியம் அற்றதாகிறது (காரணம் - தெய்வம் என்ற பதம் மூலமே ஒன்று மட்டும் உள்ளதாக உணரப்படுகிறது, அதன் பின்னர் ஒரே ஒரு தெய்வம் என்று ஏன் கூறவேண்டும்?). அல்லது ஏதோ ஒரு தெய்வம் "அது மட்டுமே உள்ளது"

என்று கூறப்படாமல் இருந்தாலோ, அந்தத் தெய்வம் "தனித்தன்மை கொண்டது" என்று கூறப்படாமல் இருந்தாலோ மட்டுமே ஏகம் என்ற பதம் பயன்படும் (பல தெய்வங்கள் உள்ளபோது குறிப்பிட்டுக் கூறவேண்டும் அல்லவா). ஆனால் இது போன்று வேறு எந்த ஒரு தெய்வமும் இல்லை. எனவே ஏகம் என்ற பதம் தனிச்சிறப்புடன் அமைக்கப்பட்டது என்று கொள்ளவேண்டும்.

**தைவதம்** – எந்த ஒரு பொருள் தேஜஸ் முதலான தன்மைகளுடன் உள்ளதோ, இந்த உலகங்கள் அனைத்தையும் நியமிக்கும் தன்மையுடன் கூடி உள்ளதோ அதுவே இங்கு கூறப்பட்டது. ஆகவே இங்கு கேட்கப்பட்ட முதல் கேள்வி – உண்மையை மட்டுமே கூறும் சாஸ்திரங்களில் எந்த தெய்வம் உயர்ந்தது எனக் கூறப்பட்டது என்று நீவீர் (பீஷ்மர்) அறிகிறீர் – என்பதாகும். இந்தக் கேள்வியின் காரணம் என்ன? இந்த உலகங்கள் அனைத்தையும் ஒரே பரம்பொருள் நியமித்து வருவதைப் பலர் உணர்ந்த போதிலும், அவர்களுக்கு ஒரு ஐயம் ஏற்பட்டுவிடுகிறது. என்ன ஐயம் என்றால் - எல்லையற்ற வல்லமையும், ஞானமும் அந்தப் பரம்பொருளுக்கு எவ்விதம் அமைந்தது; பல மதங்கள் கூறுவது போன்று மாயை மூலம் ஏற்பட்ட அறியாமை விலகியதாலா அல்லது இது போன்ற நியமிக்கும் தன்மை அதற்கு இயல்பாகவே உள்ளதா – என்பதே அந்த ஐயம் ஆகும். மேலும், இது போன்ற நியமிக்கும் தன்மை என்பது சிவன், விஷ்ணு மற்றும் ப்ரம்மன் ஆகியவர்களில் யாருக்கு உள்ளது என்ற ஐயமும் இக்கேள்வி எழக் காரணமாகும்.

## இரண்டாம் கேள்வி – பரம உபாயம்

(இது இரண்டாவது கேள்வியான – எது அடையப்பட வேண்டிய உயர்ந்த இலக்கு – என்பதற்கான விளக்கம்). இந்தக் கேள்வி எழக் காரணம் என்ன? நன்மைகளைப் போதிக்கும் சாஸ்திரங்களில், மிகவும் உயர்ந்த கதியான மோக்ஷம் பற்றியும், அத்தகைய மோக்ஷத்திற்குப் பின் ஆத்மாவிற்கு ஏற்படும் நிலை குறித்தும் பல்வேறு கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. இதனால் இந்தக் கேள்வி கேட்கப்பட்டது. சாஸ்திரங்களில் மோக்ஷத்திற்குப் பின் ஆத்மாவிற்குப் பின்வரும் பல்வேறு நிலைகள் கூறப்படுகின்றன - தனது ஸ்வரூபத்தை இழந்து விடுகிறதா, ஆத்மாவை மூடியிருந்த அறியாமை மட்டும் விலகுகிறதா, ஆத்மாவின் தன்மைகள் மட்டுமே அழிந்து ஆத்மா அப்படியே உள்ளதா, பரமாத்மாவைப் போன்று ஆகிறதா, பரமாத்மாவின் தன்மைகளை அடைகிறதா, பரமாத்மாவின் நிழல் போன்று ஆகிறதா, ஆனந்தமயமான நிலையை மட்டுமே அடைகிறதா அல்லது பகவானுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்தபடி உள்ள நிலை உண்டாகிறதா?

ச்லோகத்தில் உள்ள – கிம் வா அபி ஏகம் பராயணம் – என்ற தொடர் மேலே உள்ள கதியைப் பற்றிக் கூறுகிறது. "வா" என்ற பதம் "அல்லது" என்ற பொருளிலும், "அபி" என்ற பதம் கூட்டுத்தொகையிலும் வந்தது. ஆக இங்கு கேள்வி கேட்பவர் அறிய நினைப்பது என்னவென்றால் - மிகவும் உயர்ந்த பரம்பொருள் என்பது அடையப்படவேண்டிய

இலக்கை விட மாறுப்பட்டதா அல்லது அடையப்பட வேண்டிய இலக்கு என்பதே அந்தப் பரம்பொருளா என்பதாகும்.

**பரம்** - தோஷங்கள் நீங்கியது, உயர்ந்த பலன்களை மட்டுமே அளிக்கவல்லது, ஆகவே உயர்ந்தது.

**அயனம்** – ஆக இங்கு கேட்கப்பட்ட கேள்வி, "மிகவும் உயர்ந்த இலக்கு என்று, இந்த உலகில் வாழ்கின்ற காலத்திலும் அந்த உலகிற்குச் சென்ற பின்னரும், எதனை எண்ண வேண்டும்?" என்பதாகும். ஆகவே இலக்கு என்ற உபேயத்தைப் பற்றி இரண்டாகப் பிரித்துக் கேட்கப்பட்ட கேள்வியாகிறது.

## மூன்றாம் கேள்வி – லகு அலகு உபாய ஸாத்ய ஸித்தோபாயம்

இப்போது உபாயம் (அடையப்பட வேண்டிய இலக்கினை அடையும் வழி, மார்க்கம்) பற்றிக் காண்போம். இந்தக் கேள்வி எழக் காரணம் என்ன? உயர்ந்த இலக்கை அடையும் வழியாக உள்ளது எது? கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என மூன்று உள்ளனவே! இவற்றை ஒன்றாக, அனைத்தையுமே கடைப்பிடிக்க வேண்டுமா? அல்லது ஒன்றை முக்கியமாகக் கொள்வதற்கு மற்ற இரண்டையும் அதற்குத் துணையாகக் கொள்ளவேண்டுமா?

மேலும் உபாயம் என்பது மூன்றாகப் பிரிக்கப்படலாம் – ஸித்தஉபாயம், ஸாத்யஉபாயம் மற்றும் ஸாலம்பனஉபாயம் – என்பதாகும். இவற்றில் ஸித்தஉபாயம் என்பது பலன் அளிக்கவல்ல ஒரு தெய்வத்தை ஆராதித்துப் பலன் பெறுதல் என்பதாகும். இத்தகைய ஆராதனை என்பது இரண்டு வகைப்படும் – லகு (எளிய ஆராதனை) மற்றும் அலகு (கடுமையான ஆராதனை) என்பதாகும். ஆக இங்கு கேள்வி இரண்டாகக் கேட்டப்பட்டது ( "ஸ்துவந்த: கிம்" என்பதும், "கம் அர்ச்சந்த:" என்பதும் ஆகும். இவற்றில் "கம் அர்ச்சந்த:" என்ற கேள்வி நான்காவது கேள்வி என்று கொள்ளப்படவேண்டும்). ஆக, இங்கு உள்ள கேள்வி – கிம் ஸ்துவந்த: – எந்த ஒரு தெய்வத்தை அவனது உயர்ந்த குணங்களைக் கூறி ஆராதிக்க வேண்டும் – என்பதாகும்.

## நான்காம் கேள்வி - கம் அர்ச்சந்த:

**கம் அர்ச்சந்த:** – பக்தி மூலம் செய்யப்படும் அழ்ந்த ஆராதனை ஆகும். **மானவா** – மனிதர்களில் எந்தப் பிரிவினராக இருந்தாலும் சரியே. **சுபம்** - இந்த உலகில் பெறப்படும் நன்மைகளும், அதன் பின்னர் கிட்டும் உயர்ந்த நன்மையான பரமபதமும்.

## ஐந்தாம் கேள்வி – பரமஸாத்ய உபாயம்

அடுத்து ஸாத்யஉபாயம் பற்றிக் கூறப்பட்டது. இந்த உபாயத்தில் பரம்பொருளை வாக்கு, மனம், உடல் மூலம் அடைவது பற்றிக் கூறப்பட்டது. பரம்பொருளின் கருணையை – ச்லோகம் (வாக்கு), த்யானம் (மனம்), மலர் இடுதல் (உடல்) மூலம் அடைவது பற்றிக் கூறப்பட்டது. இந்த மூன்றில் எது மிகவும் சிறந்தது என்ற கேள்வியே ச்லோகத்தில் – கோதர்ம: - என்று கேட்கப்பட்டது. செல்வம் என்பது ஆபத்தான நிலைமைக்கு உதவும் என்று பாதுகாக்கப்படுவது போன்று, இவை மூன்றில் எது மிகவும் முக்கியமானது என்று உம்மால் (பீஷ்மர்) ஆராயப்பட்டு, அறியப்பட்டது? (என்று யுதிஷ்ட்ரர் கேட்டார்)

## ஆறாம் கேள்வி – ஸாலம்பன உபாயம்

அடுத்து ஸாலம்பனஉபாயம் பற்றிக் கேட்கப்பட்டது. இத்தகைய உபாயம் - ஸ்தோத்ரம், மந்த்ரம், மலர்கள், சந்தனம் முதலான வாசனைப் பொருள்கள் கொண்டு பின்பற்றப்படுவதாகும். இவற்றில், வாயினால் உச்சரிக்கப்படும் மந்திரங்கள் குறித்து – கிம் ஜபம் – என்ற கேள்வி எழுந்தது. அதாவது, “எந்த ஜபம் செய்வதன் மூலம் மனிதர்கள் ஸம்ஸாரம் என்ற பிறப்பு – இறப்பு பந்தம் நீங்கப் பெறுவார்கள்?”, என்று கேட்கப்பட்டது. ஜபம் என்பது குறிப்பிடப்பட்ட விதிகளின்படி மந்திரங்களை உச்சாடனம் செய்வதாகும். கீழே உள்ள சில வரிகள் இதனை விளக்குகின்றன:

- மனுச்ம்ருதி (2-87) - ஜப்யேநைவ து ஸந்ஸித்யேத் ப்ராஹ்மணோ நாத்ர ஸம்சய: குர்யாதந்யத் ந வா குர்யாத் மைத்ரோ ப்ராஹ்மணா உச்யதே – ஒரு அந்தணன் தனக்குத் தேவையான அனைத்தையும் ஜபம் மூலம் மட்டுமே பெற இயலும். இதில் எந்த ஐயமும் இல்லை. மற்ற கர்மங்களை அவன் செய்தாலும் சரி, செய்யாமல் விட்டாலும் சரி. ஜபம் செய்யும் இத்தகைய அந்தணன் அனைவருக்கும் நண்பனாக உள்ளான்.

- மனுச்ம்ருதி (2-85) - த்ரவ்ய யஜ்ஞாத் ஜபோ யஜ்ஞோ விசிஷ்டோ தசாபிர்குணை: - செல்வம் முதலான பலவற்றைக் கொண்டு இயற்றப்படும் யாகத்தை விட, ஜபம் மூலம் செய்யப்படும் யஜ்ஞம் என்பது பத்து மடங்கு உயர்ந்தது.

- ஸ்ரீமத் பகவத் கீதை (10-25) - யஜ்ஞாநாம் ஜப யஜ்ஞோ அஸ்மி – அனைத்து யஜ்ஞங்களில் நான் ஜப யஜ்ஞமாக உள்ளேன்.

ஆக வாக்கு, மனம், உடல் ஆகிய மூன்றின் மூலம் செய்யப்படும் கர்மங்களை விட, ஜபம் உயர்ந்தது ஆகும்.

**ஜந்து:** - ஜனனம் (பிறப்பு) என்ற தன்மைக்கு உட்பட்டது ஜந்து ஆகும். **ஜன்ம ஸம்ஸார பந்தநாத்** – ஜன்மம் என்பது கிழத்தன்மை, மரணம் கர்ப்பத்தில் இருத்தல், நரகவாசம் போன்றதாகும். ஸம்ஸாரம் என்பது கர்மம் இயற்றுதல் போன்றதாகும். **ஸம்ஸார:** - ஸம்ஸாரம் என்பது அறியாமை, புண்ணியபாவ கர்மங்கள் மூலம் ஏற்பட்ட வாசனை, அவற்றுக்கு ஏற்ப நடக்கவேண்டும் என்ற ஆசை, ப்ரக்ருதியுடன் உடலுக்கு உண்டான தொடர்பு போன்றவை ஆகும். பந்தநாத் என்பது பரமபதத்தை அடைய விடாமல் தடுக்கும் அனைத்துத் தடைகளும் ஆகும்.

**முச்யதே** – இந்தப் பதம், ஜபம் மூலம் விளையும் அனைத்துப் பயன்களையும் குறிக்கும். அனைத்துப் பயன்களும் விளைவிக்கவல்ல உபாயமாக ஜபம் உள்ளதால், இந்தக் கேள்வி அனைத்துப் பயன்களையும் பற்றிக் (மோக்ஷம் மட்டும் அல்லாமல்) கேட்டதாகவே கொள்ள வேண்டும். யுதிஷ்டிரர் தனது கேள்விகளில் – அசேஷண, ஸர்வஸ, லோகே மானவா சுபம் – போன்ற பதங்களைப் பயன்படுத்தினார். இதன் மூலம், யுதிஷ்டிரர் எப்போது தர்மம் செய்வது, தர்மம் செய்யத் தகுதி உள்ளவர் யார் போன்றவற்றை அறிந்தவராகவே உள்ளார் எனத் தெரிகிறது. இப்படிப்பட்ட தர்மங்களில் மிகவும் உயர்ந்தது எது என்று அறிய விரும்பியே யுதிஷ்டிரர் கேள்விகளைக் கேட்டார்.

இந்த ஆறு கேள்விகளுக்கும் பீஷ்மர் பதில் அளித்தார். ஆனால் யுதிஷ்டிரர் கேள்வி கேட்ட அதே வரிசையில் விடை தரவில்லை. உபேயம் (பரம்பொருள்) என்பதைத் தகுந்த உபாயம் மூலமே அடைய வேண்டும் என்பதாலும், உபேயம் என்பதைப் பற்றிய கேள்வி இறுதியாக உள்ளதாலும், பீஷ்மர் முதலில் உபாயம் பற்றிக் கூறத் தொடங்குகிறர். அதிலும் குறிப்பாக ஜபம் என்ற உபாயம் மூலம் தொடங்குகிறார்.

**பீஷ்ம உவாச**

**ஜகத் ப்ரபும் தேவதேவம் அநந்தம் புருஷோத்தமம்**
**ஸ்துவந் நாம ஸஹஸ்ரேண புருஷ: ஸததோத்தித:**

**ஜகத் ப்ரபும்** - உலகில் உள்ள அசையும் பொருள் மற்றும் அசையாப் பொருள்களின் ஸ்வாமியாக உள்ளவன்; **தேவதேவம்** - மனிதர்களை விட ஜப செல்வத்தில் உயர்ந்த தேவர்கள் எவ்விதம் மனிதர்களால் துதிக்கப்பட்டு, உயர்ந்தவர்களாகக் கொள்ளப் படுகின்றனரோ, அது போன்று இவன் மற்ற தேவர்களை விடத் தனது புகழில் உயர்ந்தவன்; **ஆனந்தம்** - இவனுடைய வைபவங்கள் எல்லையற்றது; **புருஷோத்தமம்** - மிகுந்த உயர்ந்த கருணை கொண்டவன்; **நாமஸஹஸ்ரேண** - ஜபத்தின் ஆதாரமாக அவனது திருநாமங்கள் உள்ளன; **ஸ்துவந்** - பகவானைத் துதிப்பது மட்டுமே நமது துன்பங்களை நீக்கவல்லதாகும். ச்லோகம் 6-ல் உள்ள ஸர்வதுக்காதிகோ பவேத் என்பதற்கும் தொடர்பு உண்டு.

அவனைத் துதித்தல் என்பது, நமது அனைத்து துயரங்களையும் நீக்கவல்லது என்பதே இங்கு கூறப்பட்டது. யார் இவ்விதம் துதிக்கிறார்கள் என்றால் - **புருஷ:** - சேதனர்கள்; இவர்கள் மேலே கூறப்பட்ட முறைகளைப் பின்பற்றி, அதனால் உயர்ந்த பலன்களை அடையவல்ல ஞானம் கொண்டவர்கள் என்று கருத்து. எப்போது துதிக்கவேண்டும் என்றால் – **ஸததோத்தித:** – எப்போதும் துதித்தபடி இருத்தல் வேண்டும். இதன் காரணம், பகவானின் நினைவு எம்போது இருப்பதனால் பக்தனுக்கு மகிழ்வும் ஆனந்தமும் ஏற்பட்டு விடுகிறது. இந்த நிலை மாறும்போது துயரம் உண்டாகிறது. உதாரணமாக தைத்திரீய உபநிஷத் (1-7) கீழே உள்ள வரிகளைக் கூறுகிறது:

யதா ஹி ஏவ ஏஷ ஏதஸ்மின் அத்ருச்ய அநாத்ம்யே அநிருக்தே அநிலயநே அபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே அத ஸ: அபயம் கதோ பவதி யதா ஹி ஏவ ஏஷ ஏதஸ்மின் உதரமந்தரம் குருதே அத தஸ்ய பயம் பவதி

**இதன் பொருள்** – ஸம்ஸாரத்தில் உள்ளதன் காரணமாக ஒருவனுக்குப் பயம் உண்டாகலாம். அந்த நேரத்தில் அவன் – கண்களால் கான இயலாதவனும், சரீரம் அற்றவனும், வர்ணிக்க முடியாதவனும் வேறு எதனையும் சார்ந்து இல்லாதவனும் ஆகிய பகவானைப் பற்றியவுடன், பயம் நீங்கப் பெற்றுவிடுகிறான். ஆனால் தனக்கும் பகவானுக்கு சிறிதளவு இடைவெளி ஏற்படுத்திக் கொண்டாலும், அவனை ஸம்ஸார பயம் மீண்டும் சூழ்ந்து விடுகிறது.

இது போன்று கீழே உள்ள பல வரிகளும் உற்று நோக்கத் தக்கவை ஆகும்.

- கருட புராணம் (222-22) - யத் முஹுர்த்தம் க்ஷணம் வா அபி வாஸுதேவோ ந சிந்த்யதே ஸா ஹாநிஸ்தந்மஹச்சித்ரம் ஸ ப்ரபந்தி: ஸா ச விக்ரியா - எந்த ஒரு நொடிப் பொழுதேனும் வாசுதேவன் நமது மனதில் இல்லாமல் இருந்தாலும், மிகுந்த சோதனை வந்து சேர்ந்துவிடும். அந்த நேரத்தில் தவறான எண்ணங்களும், வஞ்சனையும் தலை தூக்கிவிடும்.

- வரம் ஹுதவஹ ஜ்வாலா பஞ்ஜராந்தவ்யோர்வஸ்திதா: ந ஸௌரி சிந்தா விமுக ஜன ஸம்வாஸவைசஸம் - நான்கு புறங்களிலும் பற்றி எரியும் நெருப்பின் நடுவே உள்ள கூண்டில் அமர்வது என்பது, நாராயணன் பக்கம் சிந்தனை வைக்காத மனிதர்களின் நடுவே உள்ளதை விடச் சிறந்தது.

- ஏகஸ்மின் அபி அதிக்ராந்தே முஹுர்த்தே த்யான வர்ஜிதே தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ப்ருசம் – பகவானைப் பற்றிய சிந்தனை இல்லாமல் ஒரு நொடிப்பொழுது இருந்தாலும், அவன் தன்னை ஒரு திருடன் கொள்ளையடித்துவிட்டது போன்று அழவேண்டும்.

இப்படியாக ஸாத்ய உபாயங்களுள் ஜபம் என்று கூறப்படும் ஆலம்பன உபாயம் விளக்கப்பட்டது.

**தமேவ சார்ச்ச்யந் நித்யம் பக்த்யா புருஷ அவ்யயம்**
**த்யாயந் ஸ்துவந் நமஸ்யம்ச்ச யஜமாநஸ்தமேவ ச**

இந்த ஐந்தாவது ச்லோகம் மூலம் யாரை உபாசிக்க வேண்டும் என்ற நான்காவது கேள்விக்கான விடை தரப்பட்டது. இதன் காரணம், அர்ச்சனை மற்றும் ஸ்தோத்ரம் ஆகிய இரண்டுமே இங்கு முதன்மையாகக் கருதப்பட்டது. ஆகவே அடுத்து விடை அளிக்க வேண்டிய ஐந்தாவது கேள்வியைச் சற்று தள்ளி வைத்துவிட்டு, அர்ச்சனை மற்றும் ஸ்தோத்திரம் ஆகியவை குறித்து உள்ள மூன்று மற்றும் நான்காவது கேள்விக்களுக்கான பதிலை முதலில் கூற விழைகிறார். முதலில் அர்ச்சிக்கத் தகுந்தவன் யார் என்பதையும், அவனை அர்ச்சிக்கும் விதத்தையும் விளக்குகிறார்.

கடந்த ச்லோகத்தில் ஜபம் செய்வதற்கு யார் விஷயமாக உள்ளானோ அவனே அர்ச்சிக்கத் தகுந்தவனும் ஆவான். இதனைக் கீழே உள்ள பல வரிகளும் கூறுகின்றன:

- மஹாபாரதம் ஸபா பர்வம் (38-21) – தமிம ஸர்வ ஸம்பந்நம் ஆசார்யம் பிதரம் குரும் அர்ச்சயமர்சிதும் இச்சாம: ஸர்வே ஸம்பந்துமர்ஹத – தூய்மையானவனும், அனைவருக்கும் ஆசார்யனும், முதல் குருவும் ஆகிய க்ருஷ்ணனை நாங்கள் வணங்க உள்ளோம். அவனே வணங்குவதற்குத் தகுதி உள்ளவன். இதனை அனைவரும் ஏற்க வேண்டும்.

- மஹாபாரதம் ஸபா பர்வம் – தஸ்மாத் பூஜ்யதம் நாந்யமஹம் மன்யே ஜனார்த்தனாத் – ஜனார்த்தனனைத் தவிர வேறு யாருக்கும் வணங்கப்படும் தகுதி இல்லை.

- மஹாபாரதம் மோக்ஷ பர்வம் (342-36) - ப்ராஹ்மணம் சிதிகுண்டம் ச யாச்ச அந்யா தேவதா: ஸ்ம்ருதா: ப்ரதிவ்ருத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம் - ஸ்ம்ருதிகளில் கூறப்பட்ட இதர தேவதைகளான ப்ரம்மனையும், ருத்ரனையும் அறிவுள்ளவர்கள் வணங்கமாட்டனர்; அவர்களால் பெறக்கூடிய பலன்கள் அற்பமே ஆகும்.

- ஸ்ரீமத் பகவத் கீதை (7-23) - அந்தவந்து பலே தேஷாம் இதி ச – மற்ற தேவதைகளை ஆராதிப்பதன் மூலம் கிட்டும் பலன்கள் அற்பமானதே.

**புருஷம்** - பபுண்டரீகாக்ஷன் – தாமரை போன்ற கண்கள் கொண்டவன் – என்றார்; **அவ்யயம்** – எத்தனை அனுபவித்தாலும் அவனது கல்யாண குணங்கள் வளர்கின்றதே அல்லாமல் குறைவதில்லை, அவனுக்கு ஏற்றபடி அவை வளர்கின்றன; **அர்ச்சயந்** – பக்தி யோகத்தில் ஈடுபட்ட ஒருவன், இதன் மூலம் அவனுக்குக் கைங்கர்யம் செய்தபடி உள்ளவன்; **நித்யம்** - எப்போதும் என்று பொருள். ஸ்ரீமத் பகவத் கீதையில் (10-9) – மத் சித்தா மத்கதப்ராணா: – என் சிந்தனை இல்லாமல் நொடிப்பொழுது கூட உயிர் தரிக்க இயலாதவன் – என்றான் அல்லவா? இது போன்று அவனை விட்டு ஒரு நொடியும் பிரியாமல் உள்ளவன்; **பக்த்யா** – "அவன் எனது எஜமானன், நான் அவன் அடிமை" என்ற எண்ணம் மேலிட அவன் மீது கொள்ளும் அன்பு கூறப்பட்டது. இது தவிர மேலும் கூறுகிறார்; **த்யாயந்** – அவனது உயர்ந்த திருக்கல்யாண குணங்களை எப்போதும் த்யானித்தபடி இருத்தல் வேண்டும். இந்தக் குணங்கள் இடைவிடாமல் பெருகி நிற்கும் அமிர்தம் போன்று இனிமையாகவும், ஸம்ஸாரத்தில் ஏற்படும் துயரங்கள் அனைத்தையும் நீக்கவல்லவையாகவும் உள்ளன. இது தவிர மேலும் கூறுகிறார்; **ஸ்துவந்** - அவனது குணங்களை எப்போதும் த்யானம் செய்த மயக்கத்தால் ஏற்படும் இன்பம் காரணமாக மகிழ்ச்சி பெருகி நிற்கிறது. இதனால் மயிர்கூச்சல் எடுத்து, வாயின் மூலம் சொற்கள் வெளிவராமல் தழுதழுக்க, கண்கள் பனிக்க, அவன் குணங்களை இடைவிடாது சங்கீர்த்தனம் செய்ய வேண்டும். இது தவிர மேலும் கூறுகிறார்.

**நமஸ்யந்** – இத்தகைய பக்தி காரணமாக மமகாரம் தொலைந்து (நான், எனது போன்ற எண்ணங்கள்), அஹங்காரத்தின் வடிவமாக உள்ள தன்னை, அவனது தாமரை போன்ற திருவடிகளில் கிடத்தவேண்டும். அப்போது அவனிடம், "இதுவரை எனது என்று எவற்றை நான் எண்ணி வந்தேனோ, அவை அனைத்தும் உனதே" என்று கூறியபடி சமர்ப்பிக்க வேண்டும். இது தவிர மேலும் கூறுகிறார்.

**யஜமான** - இவ்விதம் தன்னை அவனிடம் சமர்ப்பித்தவுடன் அவன் நம்மை ஏற்றுக் கொண்டு விடுகிறான். இப்படியாக அவன் நமக்குச் செய்த பெரிய உதவிக்குத் (மஹா உபகாரம்) தகுந்த நன்றி (ப்ரதி உபகாரம்) செலுத்த நம்மிடம் ஏதும் இல்லையே என்று பரபரக்கவேண்டும். இத்தகைய பரபரப்பு, உண்மையான ஆழ்ந்த பக்தி ஆகியவற்றுடன் அவனுக்கு ஏற்ற அர்க்யம் (மரியாதையுடன் விடும் தண்ணீர்), மலர்கள், மதுபர்க்கம் (தேன்) என்று கூறப்படும் ஔபசாரிகம் (முறைப்படி), ஸாம்ஸ்பரிசிகம், ஆப்யவஹாரிகம் (உண்ணக்கூடியவை) ஆகியவற்றை அளிக்கவேண்டும். இவற்றை, அவனுடைய பணிவிடைகளுக்காகவே உள்ள நமது உடல் கொண்டு, மிகவும் பக்தியுடன் அன்றாடம் செய்து வரும்போது, நாம் ஸம்ஸாரப்பிடியில் இருந்து விடுபட்டுவிடுவோம்.

இப்படிப்பட்ட பக்தி யோகம் என்பதே மோக்ஷம் அடைவதற்கான ராஜபாட்டை என்று வேதாந்தங்கள் முழங்குகின்றன. இத்தகைய பக்தி என்பது நம் வர்ணாச்ர தர்மங்களின்படி மறைமுகமாகத் தூண்டப்படுவதாகவும், புலன் அடக்கம் போன்றவை மூலம் நேரடியாகத் தூண்டப்படுவதாகவும் உள்ளது. மேலும் வேதநம் (அறிதல்), த்யானம், த்ருவாநு ஸ்ம்ருதி (மறக்காத தன்மை) போன்ற பதங்களால் கூறப்படும் புத்தி கொண்டு, எப்போதும்

வெள்ளம் போன்று சூழப்பட்ட புத்தி கொண்டு நிற்கும்போது, முடிவாக பகவத் தரிசனம் ஏற்பட்டுவிடுகிறது. ஸத்வித்யை, ஆனந்த வித்யை, புருஷ வித்யை, உபகோஸல வித்யை ஆகிய வித்யைகள் மூலம் குணங்கள் தெளிவுற்று, இவை மூலம் ப்ரஹ்ம உபாஸநம் கைகூடுகிறது. இத்தகைய ப்ரஹ்ம உபாஸநத்தை பாதராயணர், ப்ரஹ்மசூத்திரம் கொண்டும் வேதாந்த வரிகளைக் கொண்டும் மோக்ஷ மார்க்கமாகக் கூறினார். இதனைக் கீழே உள்ள பல வரிகளில் காண்க:

- தைத்திரீய உபநிஷத் - தமேவம் வித்வான் – அவனை அறிபவன் யாரோ.
- தைத்திரீய ஆரண்யவல்லி – ப்ரஹ்மவிதாப்நோதிபரம் – ப்ரஹ்மத்தை அறிந்தவன் உயர்ந்ததை அடைகிறான்.
- ப்ரஹத் உபநிஷத் (6-4-22) - யஜ்ஞேந தானேந தபஸா அனாசகேந – யஜ்ஞம், தானம், தவம் போன்றவை மூலமாக.
- ப்ருஹத் உபநிஷத் (6-4-23) - சாந்தோ தாந்த: - புலன்களை அடக்கிய ஒருவன் ஆத்மாவை உணர்கிறான்.
- ப்ரஹ்ம சூத்திரம் (3-4-26) - ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதி ச்ருதேரச்வவத் – குதிரைக்குப் பல உபகரணங்கள் அவசியம் போன்று, யஜ்ஞத்திற்குப் பக்தி முதலானவை தேவை.
- ப்ரஹ்ம சூத்திரம் (3-4-27) – ஸமதமாத்யுபேத: த்வாத் – மோக்ஷத்தை எண்ணுவதற்கு முன்பாக புலன் அடக்கம் கைகூட வேண்டும்.
- ப்ரஹ்ம சூத்திரம் (4-1-1) - ஆவ்ருத்தி: அஸக்ருதுப தேசாத் – மீண்டும் மீண்டும் முயற்சித்தபடி இருக்க வேண்டும்.

இவ்விதமாக ப்ரஹ்மசூத்திரம் மூலமாகவும் பக்தி என்பதே மோக்ஷத்திற்கான பாதை எனபது தெளிவாக நிர்ணயிக்கப்பட்டது. ப்ரஹ்மசூத்திர வாக்யகாரரும் இப்படியே நிர்ணயம் செய்தார். இதனை - வேதநம் உபாஸனம் ஸ்யாத் தத்விஷயே ச்ரவணாத் - உபாஸனம் நன்கு பழுத்த நிலையே பக்தி எனப்படும் – என்றார்; இவை இரண்டிற்கும் இடையே ஸம்யோகம் (பலன்களின் தொடர்பு), ரூபம் (கடைபிடிக்கும் தன்மைகள்) சோடனம் (விதி முறைகள்) ஆகியவை பொதுவாகவே உள்ளன.

ஸம்யோகம் என்றால் உபாஸனம் போன்ற தன்மைகள் கொண்டதும், மோக்ஷத்திற்கு இட்டுச் செல்ல வல்லதும் ஆகிய பக்தியாகும். உதாரணமாக தைத்திரீய ஆனந்தவல்லீ – ந ஸந்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம் ஹ்ருதா மனீஷா மனஸா அபிக்ல்ருப்தோ ய ய ஏனம் விது: அம்ருதாஸ்தே பவந்தி – நம் கண்களால் பார்க்கும்படியாக அவன் ரூபம் இல்லை, அவனை வெறும் கண்கள் கொண்டு யாரும் கண்டதில்லை. மனம் முழுவதுமாக புத்தியால் கட்டுப்படுத்தப்பட்ட நிலையில், இதயத்தில் உள்ள சிறு துளையில் அவன் புலப்படுகிறான், இவ்விதம் அவனைக் கண்டவர்கள் இறவாவரம் பெறுகின்றனர் - என்றது. இங்கு உள்ள ஹ்ருதா என்ற பதம், பக்தி என்ற பொருளில் வந்தது. இவ்விதமாகக் கொண்டால், மேலே உள்ள ச்ருதியின் பொருள் – எந்த

மனதில் ஆழமான பக்தி உள்ளதோ, அந்த மனம் அவனைக் காண்கிறது – என்று மாறிவிடுகிறது.

இது போன்று ஸ்ம்ருதிகளிலும் கூறப்பட்டது. உதாரணமாக, மஹாபாரதம் மோக்ஷபர்வம் – ந ஸந்த்ருசோ திஷ்டதி – என்று தொடங்கி - பக்த்யா ச த்ருத்யா ச ஸமாஹிதாத்மா ஞான ஸ்வரூபம் பரிபஸ்யதீஹ - அவன் உருவம் கண்களின் பார்வையில் அகப்படுவதில்லை; யாருடைய மனதில் பக்தியும், உறுதியும் உள்ளதோ, அவர்கள் அவன் தரிசனம் பெற்றுவிடுவர் – என்று கூறியது. இங்கு ஹ்ருத் என்ற பதத்திற்குப் பதிலாக, பக்தி என்ற பதம் பயன்படுத்தப்பட்டது காண்க. இது போன்று கீழே உள்ள பல வரிகள் காண்க:

- ஸ்ரீமத் பகவத் கீதை (8-22) - புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வனன்யயா - பார்த்தா! அந்தப் பரமபுருஷன் இடைவிடாத பக்தி மூலம் மட்டுமே அடையப்படுவான்.
- ஸ்ரீமத் பகவத் கீதை – (11-54) - பக்த்யா த்வநந்யயா சக்ய: - பக்தியைத் தவிர வேறு எதனாலும் அடைய இயலாது.
- ஸ்ரீமத் பகவத் கீதை (18-55) - பக்த்யா மாமபிஜாநாதி – என்னைப் பக்தியால் அறிகிறான்.
- ஆங்கிரஸ ஸ்ம்ருதி – பக்த்யா அவிச்சிந்நயா முக்தி: - தடையற்ற பக்தியே மோக்ஷம் அளிக்கும்.
- வைஷ்ணவ தர்மம் – பரமாத்மனி கோவிந்தே பக்தி: அவ்யபிசாரிணீ ப்ரயச்சதி த்ருணாம் பக்திம் மா தே அபூதத்ர ஸம்சய: - பரம்பொருளான கோவிந்தனிடம் ஏற்படும் மாசற்ற பக்தியானது ஒருவனை முக்திக்கான பாதையில் கொண்டு செல்லும். இதில் எந்தவிதமான ஐயமும் தேவை இல்லை.
- இராமாயணம் யுத்த காண்டம் (120-30) - யே த்வாம் தேவம் த்ருவம் பக்தா: புராணம் புருஷோத்தமம் ப்ராப்நுவந்தி ஸதா காமாநிஹ லோகே பரத்ர ச அமோதாஸ்தே பவிஷ்யந்தி பக்திமந்தச்ச யே நரா: - பழமையானவனும், உயர்ந்தவனும் ஆகிய உன் மீது எப்போதும் மாறாத பக்தி உள்ளவர்கள், இந்த உலகிலும் மறு உலகிலும் தங்கள் விருப்பம் அனைத்தும் நிறைவேறப் பெறுவார்கள். தங்களது இலக்கை அடைவதில் இவர்களுக்கு எந்தத் தடையும் உண்டாகாது.
- வாமன புராணம் – யேஷாம் விஷ்ணு: நித்யம் யே விஷ்ணோ: ஸததம் ப்ரியா: நதே புந: ஸம்பவந்தி தத்பக்தா: தத்பராயணா: - யார் ஒருவன் மீது மஹாவிஷ்ணு மிகவும் பிரியமாக உள்ளானோ, யார் ஒருவன் மஹாவிஷ்ணுவிடம் ப்ரியமாக உள்ளானோ அப்படிப்பட்டவன் இந்த உலகில் மீண்டும் பிறவி எடுப்பதில்லை.

(இவ்விதமாக ஸம்யோகம் உணர்த்தப்பட்டது. அடுத்து ரூபம் கூறப்பட உள்ளது). பக்தி மற்றும் உபாஸனம் ஆகிய இரண்டிலும் புண்டரீகாக்ஷனின் ரூபம் அல்லவோ இலக்காகக் கொள்ளப்பட வேண்டும் எனப்பட்டது?

அடுத்து சோடனம் (விதிமுறை) பற்றிக் காண்போம். ஒரு சில இடங்களில் உபாஸ்வ (த்யானம்) என்பதே விதிமுறையாகக் கூறப்பட்டுள்ளது. வேறு சில இடங்களில் பஜஸ்வ (பக்தி) என்பதே விதிமுறையாகக் கூறப்பட்டுள்ளது. இவை இரண்டுமே ஒருவகையான சேவையே ஆகும். நிகண்டுகளில் – ஸேவா பக்தி: உபாஸ்தி - சேவை (கைங்கர்யம்), பக்தி உபாஸனம் ஆகியவை ஒன்று – எனக் கூறப்பட்டது. லைங்க புராணத்திலும், மார்க்கண்டேய புராணத்திலும் – பஜ இதி ஏஷ தாதுர்வை ஸேவாயாம் பரிகீர்த்தித: தஸ்மாத் ஸேவா புதை: ப்ரோக்தா பக்திசப்தேன பூயஸி – பஜ என்ற அடிப்படைச் சொல் (தாது), சேவை என்பதன் மூலம் உணர்த்தப்பட்டது; ஆகவே பண்டிதர்கள் பக்தி என்ற பதம் மூலமே கைங்கர்யத்தை உணர்த்தினர் – என்று கூறப்பட்டது. உபாஸிக்கப்படும் பகவான் எந்தவிதமான தோஷங்களும் அற்றவனாக உள்ளதால், மங்கள குணங்கள் அனைத்தும் கொண்டவனாக உள்ளதால், அவன் மீது இயற்றப்படும் ப்ரியமான உபாஸனம் என்பது அன்பு மட்டுமே கொண்டு, வேறு எதனையும் எதிர்பாராமல் உள்ளது; இத்தகைய உபாஸனம் என்பதே பக்தி எனப்படுகிறது.

பக்தி என்பது இவ்விதம் ப்ரியத்துடன் கூடியது என்பதைக் கீழே உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை வரிகளின் மூலம் அறிந்து கொள்ளலாம்:

- (7-17) - ப்ரியோ ஹி ஞானிந: அத்யர்த்தம் – ஞானி எனக்கு மிகவும் ப்ரியமானவன்.
- (10-10) - பஜதாம் ப்ரீதி பூர்வகம் – என்னை மிகவும் அன்புடன் பூஜிப்பவர்களிடம் நான் ப்ரியமாக உள்ளேன்.
- (10-9) - துஷ்யந்தி ச ரமந்தி ச – அவர்கள் நிறைவுடைய மனம் பெற்றவர்களாக, என்னைப் பற்றிப் பேசும்போது மகிழ்பவர்களாக.
- விஷ்ணுபுராணம் (1-20-18) – நாத யோநி ஸஹஸ்ரேஷு – என் நாதனே! எத்தனை ஆயிரம் பிறவி எடுத்தாலும், உன்னிடம் பக்தியுடன் இருப்பேன் (இது ப்ரஹ்லாதன் கூற்று).
- விஷ்ணுபுராணம் (1-20-19) - யா ப்ரீதிரவிவேகானாம் – அறிவற்றவர்களுக்கு இந்த உலகில் உள்ள விஷயங்கள் மீது உண்டாகும் ஆழ்ந்த அன்பு போன்று எனக்கு உன் (பகவான்) மீது ஆழ்ந்த அன்பு உள்ளது.
- விஷ்ணு புராணம் (1-17-30) – தத் ஸ்ம்ருத்யாஹ்லாத ஸம்ஸ்தித: தத் நாம ஸ்மரணோத் பூதபுலகோ திதிபுங்கவ: - அவனுடைய திருநாமங்களை எண்ணியபடி அவனிடமே லயித்த ப்ரஹ்லாதன்.
- விஷ்ணு தத்வம் – ஸேவா பக்தி: ஸமாக்யாதா ஞானவாஸநயா க்ருதா உத்பந்நாயாம் ததஸ்தஸ்யாம் ஸ்நேஹபாவ: ஸ்வயம் பவேத் – ஆத்மா அடிமை என்றும், அதன் எஜமானன் பகவான் என்றும் எண்ணியபடிச் செய்கின்ற

கைங்கர்யமே பக்தி ஆகும். இவ்விதம் செய்யும்போது பகவானிடம் ஆழ்ந்த ப்ரேமை ஏற்படுகிறது.

- பார்ஹஸ்பத்ய ஸ்ம்ருதி – பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோ அபரமாத்மநி ஸர்வேஷணாவிநிர் முக்தஸ்ஸ பைக்ஷம் போக்துமர்ஹதி – பகவானிடம் யார் பக்தியுடன் அண்டியுள்ளனரோ, பகவானைத் தவிர்ந்த மற்ற விஷயங்களில் இருந்து யார் விலகி உள்ளனரோ அவர்கள் காலம் முழுவதும் பிக்ஷை எடுத்தபடி கழிக்கும் அதிகாரி ஆகின்றனர் (ஸந்ந்யாஸி).
- தைத்ரீய ஸ்ம்ருதி – ஸ நோ தேவ: சுபயா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து – அவன் தன்னைப் பற்றிய நினைவுகள் எப்போதும் நம்மை விட்டு நீங்காமல் இருக்கும்படிச் செய்வானாக.

இது போன்ற பல வரிகளின் மூலம் உபாஸனை கூறப்பட்டது. இத்தகைய உபாஸநம் என்பது அவனுக்குத் தொண்டு புரிந்தபடி இருப்பதில் அதிகமான ருசியுடன் உள்ளதைப் பல வரிகளும் கூறுகின்றன. உதாரணமாகக் கீழே உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை வரிகள் காண்க:

- (8-13) - மாமநுஸ்மரந் – என்னைத் தொடர்ந்து எண்ணியபடி இருந்தல்.
- (8-8) - பார்த்த அநுசிந்தயன் - அர்ஜுனா! என்னையே சிந்தித்தபடி இருப்பாயாக.
- விஷ்ணுபுராணம் (2-6-38) - க்ருஷ்ண அநுஸ்மரணம் பரம் – க்ருஷ்ணனின் திருநாமங்களை எப்போதும் கூறுவதே உயர்ந்தது.

அநுஸ்மரணம் என்ற பதத்தில் உள்ள அநு என்பது தாழ்வான நிலையில் உள்ளதைக் கூறுகிறது. பகவான் எஜமானனாகவும், நாம் அவன் அடிமைகளாகவும் உள்ளதை உணர்த்துகிறது. அவனை எப்போதும் உபாஸித்தபடி இருப்பதே ஜீவனின் இயல்பாக இருத்தல் வேண்டும். இவனைப் பற்றிப் பாடியபடி இருந்தல் என்பதே அவனிடம் உள்ள பக்தியின் இலக்கணமாகும். உதாரணமாகக் கீழே உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை வரிகள் காண்க:

- (9-14) - ஸததம் கீர்த்தயந்த: - எப்போதும் என்னைப் பற்றிப் பாடியபடி இருத்தல்.
- (9-34) - மன்மநா பவ – என்னிடம் மனம் உடையவனாக இருத்தல்.

இப்படிப்பட்ட பக்தி என்பதே அனைத்து சாஸ்திரங்களின் காரணமாக உள்ளதால், இது பரமரஹஸ்யம் என்று கூறப்பட்டது. இதனைக் கீழே உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை வரிகளின் மூலம் உணரலாம்:

- (9-1) - இதம் து தே குஹ்யதமம் – மிகுந்த இரகசியமான இதனை.
- (7-2) - யஜ்ஞாத்வா நேஹ பூயோ அந்யத் – இதனை அறிந்தால் வேறு எதனையும் அறிய வேண்டியதில்லை.
- (18-64) - ஸர்வ குஹ்ய தமம் பூய: - மிகவும் உயர்ந்த இரகசியமான இதனை.

ஆக இது போன்று பல இடங்களிலும் பக்தியைப் பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட பக்தி என்பது, கீழே உள்ள பல வரிகளின்படி, பல ஆயிரம் பிறவிகள் எடுத்து, தங்கள் அனைத்து பாவங்களையும் தொலைத்து, இடைவிடாமல் அவனைத் துதிப்பதால் மட்டுமே கைகூடும். அந்த வரிகளானவை:

- ஸ்ரீமத் பகவத் கீதை (7-9) - பஹூநாம் ஜன்மநாமந்தே ஞானவாந் மாம் ப்ரபத்யதே - எண்ணற்ற பிறவிகளின் பின்னர், ஞானி என்பவன் என்னை அடைகிறான்.
- விஷ்ணு தர்மம் (75-76) – ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு – ஆயிரக்கணக்கான பிறவிகளின் பின்னர் மட்டுமே (ஒருவன் வாஸுதேவனிடம் பக்தி கொள்கிறான்).

ஆக இப்படிப்பட்ட பக்தி என்பது தொடர்ச்சியான நிலையில் மட்டுமே ஏற்படும். பலவிதமான தடைகள் கடந்தே உண்டாகும். சிறந்த புண்ணியங்கள் மூலம் தங்கள் பாவங்கள் அனைத்தும் கழுவப்பட்ட நிலையில் மட்டுமே ஏற்படும். இவ்விதம் சாஸ்திரங்கள் விதிக்கும் பக்தி இலக்கணத்தைப் பின்பற்ற இயலாத பிராணிகளின் (மக்களையும் சேர்த்து) கதி என்ன? இந்த அச்சத்தை நீக்க மிகவும் எளிதான உபாயத்தை, மூன்றாவது கேள்விக்குப் பதிலாக அளிக்கிறார். இந்த கேள்விக்கான விடை "தமேவ" என்னும் ஐந்தாம் ச்லோகம் தொடங்கி "ஸர்வபூதபவோத்பவம்" என்ற ஏழாம் ச்லோகம் வரை கூறுகிறார்.

6 அநாதி நிதநம் விஷ்ணும் ஸர்வலோக மஹேச்வரம்
லோகாத்யக்ஷம் ஸ்துவந் நித்யம் ஸர்வ துக்காதிகோ பவேத்

7 ப்ரஹ்மண்யம் ஸர்வ தர்மாஜ்ஞம் லோகாநாம் கீர்த்தி வர்த்தநம்
லோகநாதம் மஹத்பூதம் ஸர்வ பூத பவோத்பவம்

(இது ச்லோகம் 6,7 ஆகியவைகளுக்கும் உரியது) இவ்விதம் பக்திக்கு இலக்காகவும், அனைவராலும் அன்றாடம் தொழப்படும் தகுதி உள்ளவனாகவும் மஹாவிஷ்ணு உள்ளான். அவன் மற்ற தெய்வங்களில் இருந்து உயர்ந்தவன் என்பதை அநாதி நிதநம் என்று தொடங்கும் ச்லோகம் மூலமாகப் பத்துவிதமான குணங்களைக் கூறி விளக்குகிறார்.

- **அநாதி நிதநம்** – தொடக்கம் முடிவு அற்றவன் – காலம் போன்ற எந்தவிதமான கட்டுப்பாடுகளும் இன்றி எப்போதும் உதவத் தயாராக உள்ளவன்.
- **விஷ்ணும்** – இந்த இடத்தில் மட்டும் உள்ளான், இங்கு இருக்கமாட்டான் என்பது போன்ற "இருப்பிட" எல்லை இல்லாதவன், எங்கும் நிறைந்தவன்.
- **ஸர்வலோக மஹேச்வரம்** – தன்னைத் துதிப்பவர்களின் விருப்பங்களை நிறைவேற்றும் செல்வம் உள்ளவன்
- **லோகத்யக்ஷம்** – இந்த உலகம் முழுவதையும் எப்போதும் பார்த்தபடி உள்ளதால், தன்னைத் துதிப்பவனுக்கு எது ஏற்புடையது என்று தானாகவே சிந்தித்து நிற்பவன்.
- **ப்ரஹ்மண்யம்** – எல்லையற்ற சாகைகளுடன் கூடிய வேதங்களால் போற்றப்படுபவன், துதிக்கத் தகுந்த விஷயங்கள் உள்ளவன்.
- **ஸர்வ தர்மஜ்ஞம்** – அனைத்துத் தர்மங்களையும் அறிந்தவன் என்பதால், தன்னைத் துதிப்பதே மிகவும் உயர்ந்த தர்மம் என்று அறிபவன்.
- **லோகநாதம் கீர்த்தி வர்த்தநம்** – தன்னைத் துதித்து நிற்கும் எந்த ஓர் உயிரும், தன்னைப் போன்றே வேதங்களாலும் அனைத்து உலகங்களாலும் போற்றும்படியான புகழ் பெறச் செய்பவன். இதனை விஷ்ணுதர்மம் - யம் ஸ்துவந் ஸ்தவ்யதாம் ஏதி – அவனைத் துதிப்பவன் துதிக்கப்படுகிறான் - என்று கூறியது.
- **லோகநாதம்** – அனைத்து உலகிற்கும் ஸ்வாமியாக உள்ளவன்; துதிப்பது முதலான பலவிதமான கர்மங்களையும் பெறத் தகுதி உள்ளவன்.
- **மஹத்பூதம்** – மிகவும் உயர்ந்த ஐச்வர்யத்தை தனது இயல்பான தன்மைக்கு ஏற்ப வைத்துள்ளவன்; மிகவும் அற்பமான அளவு அல்லது எந்தவித முயற்சியும் எடுக்காமல் தன்னைத் துதிப்பவர்கள் கண்டு மனம் மகிழ்கிறான். மிகவும் உயர்ந்த மஹான்கள் தங்கள் ஆசியை விண்ணப்பிக்கும் சாதாரண சொற்கள் கேட்டவுடன் மகிழ்வர் அல்லவா? மஹாபாரதம் உத்யோகபர்வம் – அன்யத் பூர்ணதபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத் அந்யத் குஸச ஸம்ப்ரஸ்நாத் ச சேச்சதி ஜநார்தன: -- பூர்ணதபாம் திருவடிகளைக் கழுவ சிறிது நீர் , அன்பான விசாரிப்பு ஆகியவற்றைத் தவிர ஜனாரத்தன வேறு எதனையும் வேண்டுவதில்லை.
- **ஸர்வ பூத பவோத்பவம்** – அனைத்து உயிர்களுக்கும் அவற்றின் உயிர் அளிப்பவனாகவும் (அவை இருப்பதற்குக் காரணமானவனாக உள்ளான்), தனது கருணையை மழை எனப் பொழிபவனாக உள்ளான்.
- **ஸ்துவந்** - பக்தியோகத்தில் ஆழமாக ஈடுபடத் தகுதி இல்லாமல் போனாலும், அவனுடைய குணங்களை ஸங்கீர்த்தனம் செய்தபடி இருந்தாலே போதுமானது.
- **ஸர்வ துக்காதிகோ பவேத்** - ஸம்ஸாரம் என்பதால் உண்டாகும் தாபத்ரயம் என்ற காட்டுத்தீயைக் கடந்து, எல்லையற்ற குளிர்ச்சியுடன் கூடிய நீர் நிலை போன்ற பரம்பொருளை அடைந்து வாழ்வான்.

இங்கு உள்ள (ஆறாம் ச்லோகம்) ஸ்துவந் என்ற பதம் மூலம் அவனை மிகவும் எளிதாக மகிழ்விக்கும் முறை என்பது கூறப்பட்டதாகவே கொள்ளவேண்டும். காரணம் – இதற்கு முன்பாக உள்ள ச்லோகத்தில் "த்யாநம் ஸ்துவந் நமஸ்யந்" என்பதில் உள்ள ஸ்துவந் என்ற பதம், த்யானம் என்பதுடன் கூடியதால், கடைபிடிக்கச் சற்றே கடினமாக உள்ள

முறையைக் கூறியதாகக் கொள்ள வேண்டும். இவ்விதம் கொள்ளவில்லை என்றால், கூறியதுகூறல் (புனருக்தி தோஷம்) என்ற பிழை ஏற்படும். மேலும் பல கேள்விகளில் "ஸ்துவந்தகம்" என்ற கேள்வி தனியாகவே உள்ளது. அடுத்து "கோ தர்ம" என்ற ஐந்தாவது கேள்விக்கு ஏஷமே என்ற ச்லோகம் மூலம் பதில் தரப்பட்ட உள்ளது.

8. ஏஷ மே ஸர்வ தர்மாணாம் தர்மாதிகதமோமத:
ஸத் பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்ச்சேந்நர: ஸதா

"கோ தர்ம" என்ற ச்லோகம் மூலம் கேட்கப்பட்ட ஐந்தாவது கேள்விக்கான விடை, "ஏஷ மே" என்னும் இந்த ச்லோகத்தில் அளிக்கப்படுகிறது.

**ஏஷ:** மேலே கூறப்பட்ட த்யானம், ஸங்கீர்த்தனம் போன்றவை அந்தந்த மனிதர்களின் தகுதிக்கு ஏற்ப கடினமானதும் எளிமையானதும் ஆகும். தர்மங்கள் நான்கு வகைப்படும். புத்திரன், பசு, அன்னம் முதலானவற்றை அளிப்பது முதல் வகை; ஸ்வர்கம் போன்ற பலன்களை அளிக்கும் செயல்கள் இரண்டாவது வகை; பலனில் விருப்பம் இன்றி பகவானின் ஆராதனை என்ற எண்ணத்துடன் இயற்றப்படும் கர்மங்கள் மூலம் கிட்டும் ஞானம் முதலானவற்றைக் கொண்டு அடையப்படும் மோக்ஷம் ஆகியவற்றை உள்ளடக்கியது மூன்றாவது வகை; மிகவும் அன்புடன் எம்பெருமானை நினைத்தல், அவனது குணங்களைப் பாடுதல், அவன் முன்பு விழுந்து வணங்குதல், அவனுக்கே அடிமை என்று நினைத்தல் என்பது நான்காவது வகை ஆகும். இவற்றில் தம: என்ற பதம் மூலம் நான்காவது வகையான தர்மமே உயர்ந்தது என்று கூறினார்.

**யத் பக்த்யா** – மிகுந்த பக்தியுடன் ஆராதிப்பது. பக்தியுடன் ஆராதிக்கும்போது மிகுந்த ப்ரியம் ஏற்படுவதால், அந்த முறையில் எளிதாக ஆராதிக்க இயலும் என்று கருத்து. இதனையே ஸ்ரீமத் பகவத் கீதை (9-2) - ஸுஸுகம் கர்த்தும் - இயற்றுவதற்குச் சுகமான – என்று கூறியது. எப்போதும் கண்ணனை எண்ணியிருப்பது சுகமானது அன்றோ?

**புண்டரீகாக்ஷம்** – தாமரை போன்ற கண்கள் கொண்டவன். அனைவராலும் வணங்கப்படுபவன். மிகவும் அழகாக உள்ளதால், விகாரமாகவும் பயங்கரமாகவும் உள்ள மற்ற தெய்வங்களை விட இவனது வழிப்பாட்டிற்கு ஏற்றம் கூறப்பட்டது.

**ஸ்தவை -** ஸ்தோத்திரங்கள் மூலமாக. விச்வஜித், சந்த்ராயணம் போன்ற பொருள் செலவும் கடினமும் ஒருங்கே கொண்ட யாகங்கள் போன்று அல்லாமல், மிகவும் எளிய சொற்களைக் கொண்டே ஆராதிப்பது. இதனைக் கீழே உள்ள பல வரிகளில் காணலாம்:

- வ்யாஸ பகவன் – ஆர்த்தா விஷண்ணாச்சிதிலாச்ச பீதா: கோரேஷு ச வ்யாதிஷு வர்த்தமாநா: ஸங்கீர்த்ய நாராயண ஸப்தமாத்ரம் விமுக்த துக்காஸ் ஸுகிநோ

பவந்து – துன்பம் அடைந்தவர்களும், மனவியாதி உள்ளவர்களும், வருத்தம் கொண்டவர்களும் பயம் உள்ளவர்களும், தீராத நோய் உள்ளவர்களும், "நாராயாணா", என்று ஒரு சொல்லை பக்தியுடன் கூறினால் போதுமானது; அவர்கள் தங்களது அனைத்துத் துன்பங்களும் நீங்கப் பெற்று, இன்பமாக வாழ்வர்.

- ஸ்ரீவிஷ்ணு புராணம் – அவசேநாபி யந்நாம்நி – அவனது திருநாமத்தைத் தன்னை அறியாமல் உச்சரித்தாலும் சரியே – என்றது.

- விஷ்ணு தர்மம் - அஜ்ஞானதோ ஞானதோ வா வாஸுதேவஸ்ய கீர்த்தனாத் தத் ஸர்வம் விலயம் யாதி தோயஸ்தம் லவணம் யதா - தெரிந்தோ தெரியாமலோ ஒருவன் வாசுதேவனின் திருநாமத்தை உச்சரித்தான் என்றால், அவனது பாவங்கள் அனைத்தும் நீரில் கரைக்கப் பெற்ற உப்பு போல் ஆகிவிடும் – என்றது.

- விஷ்ணு தர்மம் – சாமாயாலம் ஜலம் வஹ்நேஸ்தமஸோ பாஸ்கரோதய: சாந்தி: கலே: அதெளதஸ்ய நாம ஸங்கீர்த்தநம் ஹரே: - நெருப்பை அணைக்கத் தண்ணீர் எப்படியோ, அது போன்று கலியுகத்தில் பாவங்களை விரட்ட ஸ்ரீஹரியின் திருநாமத்தை உச்சரிப்பதே வழியாகும் – என்றது.

- விஷ்ணு தர்மம் – யத் நாம ஸங்கீர்த்தநதோ மஹாபயாத் விமோக்ஷமாப்நோதி – யாருடைய திருநாமத்தை ஸங்கீர்த்தனம் செய்தவுடன் விடுபடுகிறானோ.

- விஷ்ணுதர்மம் – ஸக்ருதுச்சரிதம் யேந ஹரி: இதி அக்ஷர த்வயம் பத்த: பரிகரஸ்தேந மோக்ஷாய கமநம் ப்ரதி – ஹரி என்னும் இரண்டு எழுத்து உச்சரித்தாலே ஒருவன் மோக்ஷம் செல்வதற்குத் தயாராகிவிடுகிறான்.

- விஷ்ணுதர்மம் - யஸ்ய நாம்நி ஸ்ம்ருதே மத்யை: ஸமுத்க்ராந்தே: அநந்தரம் ப்ராப்நோதி வைஷ்ணவம் ஸ்தாநம் புநரா வ்ருத்தி வர்ஜிதம் – அவனுடைய திருநாமத்தை நினைத்தவுடன் மரணத்திற்குப் பின்னர், மீண்டும் திரும்பி வருதல் இல்லாத பரமபதத்தை அடைகிறான்.

- விஷ்ணு தர்மம் – அச்யுத அநந்த கோவிந்த நாமம் உச்சாரணபேஷஜாத் நச்யந்தி ஸகலா ரோகா: ஸத்யம் ஸத்யம் வதாம்யஹம் – அச்சுதன், அநந்தன், கோவிந்தன் ஆகிய மூன்று திருநாமங்களை உச்சரிப்பதால் அனைத்து நோய்களும் நீங்கும் என்பதை "உண்மை, உண்மை", என்று கூறிகிறேன்.

- விஷ்ணு தர்மம் – ஸங்கீர்த்தயை: ஜகந்நாதம் வேதம் வா அபி ஸமீரயேத் – ஜகந்நாதனின் திருநாமத்தையாவது, வேதத்தையாவது ஒருமுறை உச்சரிக்க வேண்டும்.

- விஷ்ணுஸூக்தம் – ஆஸ்ய ஜாநந்தா நாம சித் விவக்த்தன த்ருவாஸோ அஸ்ய கீரயோ ஜநாஸ: - இவனுடைய திருநாமங்கள் தனித்தன்மை கொண்ட்து என்று அறிந்து அவற்றை உச்சரிப்பவர்கள், பரமபதத்தில் நிலைக்கின்றனர், மீண்டும் உலகிற்கு வருவதில்லை.

**அர்ச்சேத்** – இந்த தர்மம் பரமபுருஷனின் ஆராதனமாக உள்ளதால் இது நேரடியாகக் காண்பதை விட வேறுபட்டது அல்ல. இதனையே கீதையில் (9-2) – ப்ரத்யக்ஷாவகமம் - நேரடியாகக் காணக்கூடியது – என்றான். பக்தி என்பது நேரடியாக அனுபவிக்கவல்லதாகும். மாறாக தவம், புண்ணிய யாத்திரை போன்றவை எம்பெருமானை மகிழ்விக்கவல்லவை என்று சாஸ்த்ரங்கள் மூலமாக மட்டுமே அறியப்படுகின்றன. ஆனால் ஸ்தோத்ரங்கள் அவனை மகிழவைக்கின்றன என்பதை நாம் நேரடியாகவே அறிய இயலும்.

**நர:** - அனைத்து உயிர்களுக்கும் அவரவர்களின் தகுதிக்கு ஏற்ப அவனை அர்ச்சனை செய்வதில் அதிகாரம் உண்டு. இங்கு நரன் என்று ஒருமையில் கூறுவது காண்க. இதன் மூலம் மற்றவர்கள் உதவி இன்றி தனியாகவே அர்ச்சிக்க முடியும் என்பதையும், யாகங்கள் போன்று பலரும் உதவும் அவசியம் இல்லை என்பதையும் உணர்த்துகிறார். தனது குலம், குணங்கள் இவைகள் மூலம் மற்றவர்களால் இகழப்படும்படி ஒருவன் இருந்தாலும் அவன் பகவானிடம் ஆழ்ந்த பக்தியுடன் இருந்தால், பயம் இன்றி உபாஸிக்கலாம். இதன் மூலம் அவனது பாவங்கள் அனைத்தும் கங்கையில் நீராடுவது போன்று அழிந்து, மிகுந்த உத்தமனாகிறான். இதனைக் கீதையில் (9-29) - ஸம: அஹம் ஸர்வ பூதேஷு – நான் அனைவருக்கும் சமமானவன் என்றான். மேலும் கீதையில் (9-30) - அபிசேத் ஸுதுராசார: - அவன் தாழ்வான ஒழுக்கம் கொண்டிருந்தாலும், (9-32 ) – மாம் ஹி பார்த்த வ்யாபாச்ரித்ய யே அபி ஸ்யு: பாபயோநய: - அவன் தாழ்வான பிறவியில் பிறந்தவனாக இருந்தாலும் என்னை அடைந்தால் உயர்ந்த கதியை அடைகிறான் – என்று முழங்கினான். மேலே கூறப்படுவதன் கருத்து என்ன? தவறான ஒழுக்கமும் தர்மம் என்றே ஏற்றுக் கொள்ளப்படுகிறது என்று கொள்ளலாமா? அப்படி அல்ல, தீய ஒழுக்கம் அனைத்து இடங்களிலும் கண்டிக்கப்படுகிறது என்பதில் சந்தேகம் இல்லை. உதாரணமாகக் கீழே உள்ள வரிகள் காண்க:

- **கட உபநிஷத்** (11-23) – நாவிரதோ தச்சரிதாத் நாசாந்தே நாஸமாஹித: – தீய ஒழுக்கத்தைக் கைவிடாத ஒருவன், புலன்களை அடக்காத ஒருவன், த்ருப்தி அடையாத மனம் கொண்ட ஒருவன், தன்னுடைய ஞானம் மூலம் ஆத்மாவை அடைய இயலாது.

- அப்ராப்ய: கேசவோ ராஜந் இந்திரியை ரஜிதை: ந்ருணாம் – அரசனே! புலன்களை வெல்லாத ஒருவனால் கேசவனை அடைய இயலாது.

மேலே உள்ள வரிகள் மூலமும், மேலும் பல ப்ரமாணங்கள் மூலமும் தீய ஒழுக்கமானது பகவானால் விரும்பப்படாததால் அது தர்மம் ஆகாது என்று உணர்த்தப்பட்டது. ஆகவே தீயஒழுக்கம் என்பது அதர்மமே ஆகும். இதனைக் கீதையில் (9-31 ) – க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா - உடனே அவன் தர்மம் நிறைந்தவன் ஆகிரான் - என்று தெளிவுபடுத்தியது.

பக்தி என்பது ஒருவன் எந்த ஆச்ரமத்தில் இருந்தாலும் பொதுவானதே ஆகும். ஆனால் அவன் விதுரர் முதலான உயர்ந்த ஆத்மாக்களைப் போன்று ஸத்வகுணம் நிரம்பியவனாக இருத்தல் வேண்டும். இதனை ப்ரஹ்மசூத்திரம் கீழே உள்ளது போல் கூறுகிறது:

- (3-4-27) - சமதமாதுபேத: ஸ்யாத் – அவன் புலன் மற்றும் மன அடக்கம் உள்ளவனாக இருத்தல் வேண்டும்.

- (3-4-36) - அந்தரா சாபி து ததூத்ருஷ்டே: - எந்த ஆச்ரமத்தில் இல்லாவிட்டாலும் பகவானைப் பற்றிய ஞானம் பெறுவதற்குத் தகுதி உண்டு.

மேலே கூறிய வரிகள் மிகவும் பொருத்தமே ஆகும். தாயை மகன் கூப்பிடுவதற்கு எவ்விதம் எந்தத் தடையும் இல்லையோ அது போல, ஸர்வேச்வரனின் திருநாமத்தைக் கூறுவதற்கு யாருக்கும் எந்தத் தடையும் இல்லை. இதன் காரணம் - பகவான் அன்பான தாய் போன்றும், அனைத்து பந்துவாகவும், உற்ற நண்பனாகவும் உள்ளான். இதனை கஜேந்திரன், ஜடாயு, காகம்(இந்திரனின் மகன்), விபீஷணன், கோஸல நாட்டு மக்கள் மற்றும் மதுராவில் இருந்த மாலை தொடுப்பவன் ஆகியோரின் வாழ்க்கை மூலம் அறியலாம்.

ஆனால் ப்ரஹ்மசூத்திரத்தில் உள்ள அபசூத்ர அதிகரணத்தில் வேறுவிதமாகக் கூறப்பட்டுள்ளதே; அந்த அதிகரணத்தில் மூன்று வர்ணத்தினர் அல்லாத நான்காம் வர்ணத்தினர் வேதம் ஓதுதல் கூடாது என்று கூறப்பட்டுள்ளதே என்ற கேள்வி எழலாம். இதற்கு விடை கூறுவோம். அங்கு மூன்று வர்ணத்தினர் அல்லாதவர்கள், அக்னியை உபயோகப்படுத்தி செய்கின்ற அக்னிகார்யங்களை, நான்காம் வர்ணத்தினர் அறியாத காரணத்தினாலேயே தடை விதிக்கப்பட்டது. மேலும் அவர்கள் - வேதாந்தத்தின் மூலமாக மட்டுமே அறியக்கூடிய எம்பெருமானை உணர்த்தும் வேதாந்தங்கள், குரு மூலமாக அறியக் கூடிய வேதங்கள் மற்றும் குரு மூலமாக உபநிஷத் கற்றவர்கள் என்ற தகுதி ஆகியவற்றைப் பெறாதவர்கள் ஆவர். ஆனால் நான்காம் வர்ணத்தினர் மோக்ஷத்தில் விருப்பம் கொண்டு, எம்பெருமானை அடைவதற்குத் தயாராக நின்றால், அவர்களின் ஸத்வகுணம் காரணாம, எம்பெருமானை அடைவதற்கு எந்தத் தடையும் இல்லை.

இவர்களுக்கு ஸத்வகுணம் மேலோங்கி உள்ளதால், எம்பெருமானைப் பற்றிப் பேசியபடியும் அவனையே நினைத்தபடியும் இருந்து கொண்டு, உபநிஷத்துக்களின் பாதையில் சென்று ப்ரஹ்மவித்யையை அடையலாம். இது வெளிப்படையான உண்மையாகும். மற்ற மூன்று வர்ணத்தில் உள்ளவர்கள் கூட சில நேரங்களில் பலன்களில் விருப்பம் வைத்து மயங்குதல், ஸத்வகுணத்துடன் ரஜோ மற்றும் தமஸ் குணங்கள் கலத்தல் போன்றவற்றால் மாசுபட வாய்ப்பு உண்டு. எப்படி இருப்பினும் அவர்கள் உபாஸனைக்கான தகுதி பெற்றவர்களே ஆவர். ஆனால் அனைத்து வர்ணத்தைச் சேர்ந்த பெண்கள், சூத்திரர்கள் மற்றும் விலங்குகள் ஆகியோருக்கு உபாஸனை செய்யும் தகுதி குறித்துத் தெளிவாக உரைக்க இயலாது.

விதுரர், தர்மவ்யாதர் போன்ரவர்களின் வாழ்க்கையில் என்ன நிகழ்ந்தது? தூக்கத்தில் இருந்து விழிப்பது போல் எண்ணற்ற பிறவிகளைத் தொடர்ந்து இவர்களது ஞானம் சட்டென்று விழித்துக் கொள்ளும். இப்படிப்பட்டவர்கள் தங்களைத் தாழ்வான குலத்தினருடன் ஏன் சம்பந்தப்படுத்திக் கொள்கின்றனர் என்றால், அதன் மூலம் மட்டுமே பலன் தர ஆரம்பித்துவிட்ட தங்கள் கர்மபலன்களை இவர்கள் தொலைக்க இயலும். விஷ்ணுதர்மத்தில் (102-29) - தர்மவ்யாக்ராதயோ அப்யந்யே பூர்வ அப்யாஸாத் ஜிகுப்ஸிதே வர்ணாவரத்வே ஸம்ப்ராப்தாஸ் ஸம்ஸித்திம் ச்ரமணீ யதா - விதரர் தர்மவ்யாதர் முதலானோர் தங்களது முற்பிறவியில் சேர்ந்த ஞானம் மூலமாகத் தடையற்ற பக்தி பெற்றனர் - என்று கூறியது. பகவானைப் பற்றி எந்த ஞானமும் ஒருவனுக்கு இல்லை என்றாலும், அவன் பகவானைப் பற்றியே எண்ணி இருத்தல், பகவானைப் புகழ்ந்து பாடுதல், பகவானைப் பற்றிக் கேட்டபடி இருத்தல் ஆகிய செயல்களைச் செய்வதர்களுக்கு எந்தத் தடையும் இல்லை. இவை பக்தியின் தொடக்க நிலைகள் ஆகும். தர்ம சாஸ்திரங்கள் - சண்டாளன் தொடங்கி உயர்ந்த குலத்தினர் வரை உள்ள அனைவரும் அஹிம்சை, உண்மை, தூய்மை, மற்றவர்க்குத் தொண்டு செய்தல், பெற்றவர்க்குத் தொண்டு செய்தல், எம்பெருமானை மகிழும்படிச் செய்தல் போன்றவற்றை அனைவரும் பின்பற்றலாம் - என்று கூறுகின்றன.

ஒருவன் நாம ஸங்கீர்த்தனம் செய்யக்கூடாது என்று தடுக்கப்பட்டவனாக இருக்கலாம். ஆனால் அப்படிப்பட்டவர்கள் கூட நாம ஸங்கீர்த்தனம் செய்பவர்களுடன் மகிழ்ந்தபடி, அவர்களுடன் விரோதம் பாராட்டாமல் இருந்தால், அவனுக்கு மறைமுகமாக எம்பெருமானின் ஸம்பந்தம் கிட்டி விடுகிறது. மஹாபாரதம் – தர்ம: ச்ருதோ வா த்ருஷ்டோ வா கதிதோ வா க்ருதோ அபிவா அநுமோதிதோ வா ராஜேந்த்ர புநாதி புருஷம் ஸதா – அரசனே! தர்மத்தைப் பற்றிக் கேட்டாலோ, பார்த்தாலோ, கூறினாலோ, செய்தாலோ, பாராட்டினாலோ அந்த மனிதன் சந்தேகம் இல்லாமல் தூய்மை அடைகிறான் - என்றது. ஆக எம்பெருமானைக் குறித்து எதனை, எந்த முறையில் செய்தாலும் அது ஒருவனைத் தூய்மைப்படுத்திவிடும் என்று கருத்து. கீழே உள்ள பல வரிகள் காண்க:

- உத்தோஷித: பூஜிதோ வா த்ருஷ்டோ வா நமிதோ அபி வா ப்ரஸஹ்ய ஹரதே பாபம் கோ ந ஸேவேத் ஹரிம் தத: - ஒருவன் பகவானை உரத்த குரலில் உதவிக்கு அழைத்தோ, வணங்கியோ, வழிபட்டோ அல்லது கண்டோ நிற்பான் என்றால் அவன் அனைத்து பாவங்களில் இருந்தும் விடுபட்டுவான். அவனது பாவங்களில் இருந்து பகவான் அவனை வேகமாக விடுவிக்கிறான். இப்படி உள்ளபோது ஸ்ரீஹரியை யார் தான் வணங்க மாட்டனர்?

- கீர்த்தித ஸம்ஸ்ம்ருதோ த்யாத: பூஜித: ஸம்ஸ்க்ருதஸ்ததா ஐஹிகாமுஷ்மிகீம் ரக்ஷாம் கரோதி பகவான் ஹரி: - யார் ஒருவன் ஸ்ரீஹரியை வணங்கி, த்யானித்து, மலர்கள் கொண்டு ஆராதிக்கிறானோ அவனுக்கு இந்த உலகிலும், அந்த உலகிலும் ஸ்ரீஹரி பாதுகாப்பு அளித்தபடி இருக்கிறான்.

- ச்ருண்வந்தி யே வை பட தஸ்ததா அந்யே பச்யந்தி யே மாம் தத ஐரையந்தி - யார் ஒருவன் என்னைப் பற்றிக் கேட்கிறானோ, படிக்கிறானோ, பார்க்கிறானோ, புகழ்கிறானோ அவன் என்னால் காக்கப்படுவான்.

இதிகாசங்களிலும் புராணங்களிலும் எந்தக் குலத்தில் பிறந்தவர்களும் பகவானைக் குறித்தும், அவன் புகழைக் குறித்தும் ஸங்கீர்த்தனம் செய்யலாம் என்று கூறப்பட்டது.

விஷ்ணு தர்மம் – நம இத்யேவ யோ ப்ரூஹ்யாத் மத்பக்த: ச்ரத்தயா அந்வித: தஸ்யாக்ஷயோ பவேல்லோக: ஸ்வபாகஸ்யாபி நாரத – நாரதா! இந்த உலகில் ஒருவன் நம: என்று எப்போது கூறுகிறானோ அவன் மோக்ஷம் அடைகிறான் – என்றது. இந்த வரிகள் அனைத்தும் மோக்ஷம் பெறுவது பற்றிய உயர்ந்த மனிதர்களைக் குறிப்பதுடன், இவை அனைத்தும் தகுந்த ப்ரமாணங்களுடன் உள்ளன. இப்படியாக திருநாமம் குறித்துக் கூறப்பட்டது.

**ஸதா** – எப்போதும்; ஒரு குறிப்பிட்ட காலம் கிடையாது, குறிப்பிட்ட இடமோ கட்டுப்பாடோ திருநாமம் உச்சரிக்கக் கிடையாது; எந்த நேரத்திலும், எந்த இடத்திலும், எந்த நிலையிலும், கர்மம் இயற்றத் தூய்மை இருந்தாலும் இல்லாவிட்டாலும், அவனை ஆராதிக்கக் கட்டுப்பாடு இல்லை. ஆக - குறிப்பிட்ட நாள், மாதம், திதி, நக்ஷத்ரம், நேரம் ஆகியவற்றுக்கு அடங்கிய மற்ற ஆராதனைகளைவிட நாம ஸங்கீர்த்தனம் உயர்ந்தது.

விஷ்ணு தர்மம் – சக்ராயுதஸ்ய நாமாநி ஸதா ஸர்வத்ர கீர்த்தயேத் நாசௌஸம் கீர்த்தனே தஸ்ய பவித்ரம் பகவான் ஹரி: - சக்கரத்தை திருக்கரத்தில் கொண்டவனான ஸ்ரீஹரியின் திருநாமத்தை எப்போதும், எங்கும் கூறலாம்; அவன் எப்போதும் தூய்மையானவனாக உள்ளதால், இந்தத் திருநாமத்திற்கு அசுத்தம் என்பதே இல்லை – என்று கூறியது. மேலும் – ப்ராதர்த்தே வேதி க்ருஷ்ணேதி கோவிந்தேதி ச ஜல்பதாம் மதாயாஹ்னே ச

அபராஹ்ணே ச ய: அவஸாத: ச உச்யதாம் - யாரொருவர் காலை, மதியம் மற்றும் மாலை ஆகிய நேரங்களில் க்ருஷ்ணனும் கோவிந்தனும் ஆகிய ஸ்ரீஹரியின் திருநாமத்தை உச்சரிக்கிறானோ அவனுக்குச் சோகமோ அல்லது துன்பமோ எவ்விதம் உண்டாகும் – என்று கூறப்பட்டது. இப்படியாகவே பல ரிஷிகளும் முழங்கினர்.

தன்னுடைய அடியார்களின் அசுத்தத்தைக் கண்டு எம்பெருமான் எப்போதும் விலகி நிற்பதில்லை; அடியார்களிடம் உள்ள தூய்மைக் குறைவு கண்டும் அவன் தன்னுடைய அனுக்ரஹத்தைக் குறைத்துக் கொள்வதில்லை; அடியார்களிடம் வேறு ஏதேனும் தகுதி குறைகிறதா என்று அவன் ஆராய்வதில்லை; மாறாக அவன் தூய்மையானவனாக உள்ளதால் - தூய்மைக் குறைவு காரணமாகத் தன்னுடன் தொடர்பு கொள்ளமுடியாத நிலையில் ஒருவன் உள்ளபோதிலும் அவனைத் தூய்மைப்படுத்தி, தன்னுடன் தொடர்பு கொள்ளக்கூடிய தூய்மையை அவனுக்கு உண்டாக்கி, தன்னுடன் சேர்த்து கொள்கிறான். விஷ்ணு தர்மம் – ந அசௌசம் கீர்த்தேன – சுத்தம் இன்மை என்பது நாம சங்கீர்த்தனத்தைத் தடை செய்யாது - என்று கூறியது. சாஸ்த்ரங்கள் நல்லவற்றை உயர்வாகவும், தீயவற்றைத் தாழ்வாகவும் கூறுவது ஏன் என்றால் நல்லவற்றையும், தீயவற்றையும் பிரித்து அறியாத நிலை உண்டாகி, தர்மம் மூழ்கிவிடக் கூடாது என்பதாலேயே ஆகும். நாம ஸங்கீர்த்தனம் போன்றவை இயல்பாகவே உயர்ந்த பயன்கள் அளிப்பதாகும். கீழே உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை வரிகள் காண்க:

- (2-40) - ஸவல்பமப்ஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் - சிறு தர்மம் கூட பெரிய பயத்தை விலக்கும்.
- (2-40 ) - நேஹாபி க்ரமநாஸ: அஸ்தி - இவ்விதம் தொடங்கிய தர்மம், நடுவில் தடைப்பட்டாலும் வீணாவதில்லை.
- (9-31) - நமே பக்த : ப்ரணச்யதி - என்னுடைய பக்தன் ஒரு நாளும் அழியமாட்டான்.

விஷ்ணு தர்மம் – யம் ப்ரணம்ய ந ஸீததி – அவனை வணங்குபவன் துயரம் அடைவதில்லை – என்றும்; விஷ்ணுதர்மம் - ந வாஸுதேவம் ப்ரணிப்த்ய ஸீததி - வாஸுதேவனை வணங்கியவர்கள் வருத்தம் அடைவதில்லை – என்றும்; விஷ்ணு தர்மம் - ஜநார்த்தனம் ப்ரணிபதிதோ ந ஸீததி - ஜநார்த்தனனை வணங்கியவர்கள் வருத்தம் அடைவதில்லை – என்றும் கூறப்பட்டது காண்க.

இத்தகைய நாம சங்கீர்த்தனம் என்னும் தர்மமானது விதிமுறைகளின்படி, சரியாகச் செய்யவில்லை என்றாலும், ஏதேனும் தடை ஏற்பட்டு நின்றாலும் அதனால், பாவம் அல்லது பலன் குறைவு ஏற்படாது. இதனைக் கண்ணன் (2-40) – ப்ரத்யவயோ ந வித்யதே – பாவமோ பலன் குறைவோ ஏற்படுவதில்லை - என்றான். இந்த வரிகள் அனைத்தும் முகஸ்துதி போன்று பெரிதுபடுத்திக் கூறப்பட்டவை அல்ல. இவை அனைத்தும் உண்மையானவையே ஆகும்.

எம்பெருமானைப் புகழ்வது என்பது முக்தியை அளிக்கும் என்பது, பெரிதுபடுத்தப்பட்ட கருத்து அல்ல. இங்கு பாவங்கள் அழிந்து, அதன் மூலம் ஞானம் கிட்டி (அல்லது ஞானம் ஏற்படுவதற்கான பாவங்கள் நீங்கப் பெற்று), அதனால் பக்தி மிகுந்து, அதனால் ஸத்வ குணம் படிப்படியாக மேலோங்கி நிற்கிறது. விஷ்ணுதர்மம் – பத்த: பரிகரஸ்தேந மோக்ஷாய கமநம் ப்ரதி – ஹ என்றும், ரீ என்றும் உள்ள இரண்டு அக்ஷரங்களை உச்சரிப்பவன், மோக்ஷத்திற்குச் செல்லத் தயாராகிறான் – என்றது. விஷ்ணு புராணம் (6-56) - யஸ்மிந் ந்யஸ்த மதிர்ந யாதி நரகம் ஸ்வர்கே அபி யச்சிந்தநே விக்ந: யத்ர நிவேசதாமமநஸோ ப்ரஹ்ம: அபி லோக: அல்பக: முக்திம் சேதஸி ய: ஸ்திதோ அமலதியாம் பும்ஸாம் ததாத்யவ்யய: கிம் சித்ரம் யததம் ப்ரயாதி விலயம் தத்ராச்யுதே கீர்த்திதே - யார் ஒருவன் அவன் மீது தனது சிந்தனையை வைக்கிறானோ அவன் நரகத்திற்குச் செல்லமாட்டான்; அவனைச் சிந்தனை செய்த பின்னர், ஸ்வர்க்கம் கூட வேண்டாத தடையாகவே தோன்றும்; ப்ரஹ்மலோகம் கூட அவனுக்கு அவசியம் அற்றதாகும். இது போன்ற தூய்மையான மனிதர்களின் இதயங்களில் நிலையாக நிற்கும் ஸர்வேச்வரன், இவர்களுக்கு மோக்ஷ வரத்தை அளிக்கிறான் - என்று கூறியது. இப்படி உள்ளபோது, ஸர்வேச்வரனின் துதியானது பாவங்களை விரட்டவல்லது என்று கூறுவதில் என்ன வியப்பு உள்ளது?

பூர்ணாஹுதி என்பது அனைத்துப் பலன்களையும் அளிக்கவல்லது என்று கூறப்பட்டாலும், மீமாம்ஸகர்களால் இத்தகைய பூர்ணஹுதி என்பது அர்த்தவாதம் மட்டுமே எனக் கூறப்பட்டது (அர்த்தவாதம் என்பது, ஒரு கருத்தை உணர்த்தாமல், ஒன்றைப் புகழ்வதற்காக, வர்ணிப்பதற்காக மட்டுமே கூறுவது). இப்படிக் கூறுவதன் காரணம் என்ன? பூர்ணாஹுதி என்பது பல யஜ்ஞங்களுடன் கூறப்படுவதாகும். இவற்றில் சில பூர்ணாஹுதிக்கு முன்பும், பின்பும் செய்யப்படுபவையாகும். பூர்ணாஹுதியே அனைத்துப் பலன்களையும் அளிக்கவல்லது என்றால், மற்ற யஜ்ஞங்கள் அவசியம் இல்லை என்றாகிறது. ஆனால் இது போன்ற முரணான சூழ்நிலை நாம ஸங்கீர்த்தனத்தில் காணப்படுவதில்லை. திருநாம ஸங்கீர்த்தனத்திற்கு வேறு எந்தச் சடங்குகளோ அல்லது இதனை வேறு எந்தச் சடங்குடன் இணைத்தோ செய்ய வேண்டிய அவசியம் இல்லை. இதற்கு முன்பாக எந்த இறைவணக்கத் துதியைக் கூடக் கூற வேண்டிய அவசியம் இல்லை. நாம ஸங்கீர்த்தனம் மட்டுமே பாவங்களை அழிக்க வல்லதாகும்.

நாம ஸங்கீர்த்தனம் பூர்ணாஹுதி போன்றதல்ல. அங்கு மிகைப்படுத்திக் கூறப்படுவது பல உள்ளன. பூர்ணாஹுதியைப் போன்று அர்த்தவாதங்களும், மற்ற துதிகளும் ஸங்கீர்த்தனத்தில் காணப்படுவதில்லை. ஆனால் அர்த்தவாதத்தை நாம் முழுவதுமாக விலக்குவது இல்லை. அர்த்தவாதம் என்பது ஒரு ப்ரமாணத்தை எதிர்க்காதவரை அதை விலக்கக்கூடாது. அர்த்தவாதத்திற்கு உரிய சரியான பொருளையோ அல்லது அதன் மேன்மையையோ கூடுமான வரையில் விளக்குவதற்கு முயற்சிக்க வேண்டும். இதனை ஒதுக்குதல் சரியல்ல.

## பரம்பொருளைக் குறித்த ஞானம் ஸங்கீர்த்தனம் மூலம் ஏற்படுதல்

பரம்பொருளை குறித்த ஞானமானது, அவனைப் பற்றித் துதிப்பதன் மூலமே கிட்டிவிடும் என்று கூறுதல் சற்று மிகையாக உள்ளதே என்னும் சந்தேகம் எழலாம். காரணம் – தத்வஞானம் என்பது அவ்வளவு எளிதாகக் கிட்டுவது அல்ல; மிகவும் கடுமையான, நீண்ட தவம் மூலமும் த்யானம் மூலமுமே தத்வஞானம் பிறக்கும். ஆனால் ஸ்தவம் என்ற துதிக்கும் செயலானது நாக்கை மட்டும் சற்று அதிகமாகச் செயல்படுத்த வைத்தால் போதுமானது. மேலும் இந்த இரு வழிகளிலும் (கடுமையான தவம், துதித்தல்) ஒரே பலன் கிட்டும் என்றால், சாஸ்திர வழிகளின்படி இயற்ற வேண்டிய கடுமையான தவம் போன்ற கர்மங்களுக்கு அவசியம் இல்லாமல் போய்விடும். மேலும், அந்த சாஸ்த்ரங்களுக்கும் பயன் இல்லாமல் போய் விடும். ஆக இது அனைத்து ப்ரமாணங்களுக்கும் விரோதமாகவே உள்ளது எனலாம்.

அப்படி அல்ல. மேலே கூறப்பட்ட கருத்துக்கள் அனைத்தும் எம்பெருமானின் மேன்மையை உணராமலும், சந்தஸ் முதலான கர்மகாண்ட பகுதிகளில் நிலை நின்றதாலும் ஒருவனுக்குத் தோன்றுவதாகும். நாம ஸங்கீர்த்தனம் என்பது சுலபமாகத் தோன்றினாலும், அது மிகவும் கடினமானதே ஆகும். இதன் மூலம் கடினமான கர்மங்களை உபதேசிக்கும் சாஸ்திரங்கள் வீணாவதில்லை. அந்தச் சாஸ்திரங்கள், நாம ஸங்கீர்த்தனம் இயற்றத் தகுதி படைத்தவர்களுக்கு உதவியாகவே உள்ளன. ஸ்தவம் என்பது பகவானின் பல திருக்கல்யாண குணங்களின் சுவையை அனுபவிக்க ஆசைப்படும் புண்ணியம் நிறைந்தவர்களுக்கு மட்டுமே கிட்டுவதாகும். இப்படிப்பட்டவர்கள், தவம் முதலான கர்மங்களை இயற்றத் தகுதி உடையவர்களாகவோ, தகுதி அற்றவர்களாகவோ இருக்கக்கூடும். எத்தனை கடுமையான கர்மம் இயற்றினாலும், அதற்கான பலன் எம்பெருமானின் கருணை இருந்தால் மட்டுமே கிட்டும். இப்படி உள்ளபோது மிகவும் எளிதான மார்க்கமான நாம ஸங்கீர்த்தனம் என்பது எளிமையாக இருப்பதால், அவனை எளிதாக வசப்படுத்தி, அவன் கருணையைச் சுலபமாகப் பெறலாம் என்பதில் என்ன தவறு? கடுமையான விதிகள் நிறைந்த கர்மங்கள் கண்டு எம்பெருமான் மகிழ்கிறான்; அதே போன்று சுலபமான மார்க்கத்திலும் தூய மனதைக் கண்டு மகிழ்கிறான். இதனை கீழே உள்ள பல வரிகளின் காணலாம்:

- ஸ்ரீமத் பகவத் கீதை (9-20) - ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: - தகாத ஒழுக்கம் இருப்பினும் பக்தியால் சீராகிறான்.

- ஸ்ரீமத் பகவத் கீதை (9-26) - பத்ரம் புஷ்பம் பலம் தோயம் – இலை, மலர், பழம் மற்றும் தண்ணீர் ஆகிய எதனையும் நான் ஏற்கிறேன்.

- விஷ்ணு தர்மம் (90-69) - யோ ந வித்தைர்ந விபவைர்ந வஸோபிர்ந பூஷணை: தோஷ்யதே ஹ்ருதையேநைவ கஸ்தமீசம் ந பூஜ்யேத் – அவன் மிகுந்த செல்வம் அளிப்பதாலோ, தனம் அளிப்பதாலோ, துணி அளிப்பதாலோ, ஆபரணம் அளிப்பதாலோ மகிழ்வதில்லை; தூய்மையான மனதைக் கண்டு மகிழ்கிறான்; இப்படி உள்ளபோது அவனை வணங்காமல் யார் இருப்பார்கள்?

- வ்யாஸ ஸ்ம்ருதி – தத்யாத் புருஷ ஸூக்தேந ய: புஷ்பாண்யப ஏவ வா அர்ச்சிதம் ஸ்யாத் ஜகத் இதம் தேந ஸர்வம் சராசரம் - யார் ஒருவன் மலர்கள் போன்றவற்றை புருஷஸூக்தம் கூறியபடி எம்பெருமானுக்குச் சமர்பிக்கிறானோ, அவன் அசையும் பொருள்கள் மற்றும் அசையாப் பொருட்கள் ஆகியவற்றைக் கொண்ட உலகம் முழுவதையும் வணங்கியவன் ஆகிறான்.

- விஷ்ணுதர்மம் (73-6) - ப்ருத்வீம் ரத்ந ஸம்பூர்ணாம் ய: க்ருஷ்ணாய ப்ரயச்சதி தஸ்யாபி அந்தமநஸ்கஸ்ய ஸுலபோ ந: ஜநார்த்தன: - ஒருவன் தனது மனதை வேறு எங்கோ நிலை நிறுத்தி, இந்த உலகம் முழுவதும் நிரம்பும் அளவிற்கு இரத்தின கற்களைக் க்ருஷ்ணனுக்குச் சமர்பித்தாலும், அவன் ஜநார்த்தனனை அடைய இயலாது.

புண்ணியமோ பாவமோ எதுவாக இருந்தாலும் மனநிலையை பொறுத்தே அமையும் அல்லாமல் கர்மங்களால் அல்ல. விஷ்ணு தத்வம் - பாவ சுத்திர் மனுஷ்யாணாம் ப்ரமாணம் ஸர்வ வஸ்துஷு அந்யதா ஆலிங்கயதே காந்தா ஸ்நேஹேந துஹிதா அந்யதா - ஒருவனுடைய மனத்தூய்மையே முக்கியமானது; தனது மனைவியை அணைத்துக் கொள்ளும்போதும், மகளை அணைத்துக் கொள்ளும்போதும் மனநிலை வேறுபடுகிறது அல்லவா – என்று கூறியது காண்க. மஹாபாரதம் வநபர்வம் (1-2-79) - தபோ ந கல்க: அத்யயநம் ந கல்க: ஸ்வாபாவிகோ தேவ விதிர்நகல்க: ப்ரஸக்ய சித்தாஹரணம் ந கல்க: தாந்யேவ பாவோபஹிதாநி கல்க: - தவம் இயற்றுவது நல்லதே, வேதம் ஓதுவது நல்லதே, ஒழுக்கம் நல்லதே, எம்பெருமானுக்காக அடுத்தவர்களின் சொத்தை அபகரிப்பதும் நல்லதே, ஆனால் தவறான எண்ணத்துடன் இருந்தால் பாவங்கள் ஆகிவிடும் – என்றது. மேலும் ஒரு வடமொழி வரியானது - கங்காதி தீர்த்தேஷு வஸந்தி மத்ஸ்யா: தேவாலயே பக்ஷி ஸங்காஸ்ச நித்யம் பாவோஜ்ஞிதாஸ்தே ந பலம் லபந்தே தீர்த்தாநி புஷ்யாய தனாச்ச முக்யா: - மீன்கள் கங்கையில் வாழ்கின்றன, பறவைகள் கோயில்களில் வசிக்கின்றன; ஆனால் அவை வழிபடும் எண்ணம் கொண்டு அங்கு இருக்கவில்லை

என்றால், அந்த இடங்களில் வசிப்பதால் எந்தப் புண்ணியமும் ஏற்படுவதில்லை – என்றது.

அனைத்தும் அறிந்தவனும், அனைத்துச் செல்வங்கள் உடையவனும் ஆகிய பகவான், யாரிடமிருந்தும் எதனையும் எதிர்பார்ப்பதில்லை. இப்படிப்பட்ட ஸர்வேச்வரனைத் தூய மனதுடன் ஆராதிக்க வேண்டுமே அல்லாமல், செல்வங்கள் அளித்து அல்ல என்று கூறுவது சரியான கருத்தே ஆகும். சிறு அளவிலான பக்தியாக இருந்தாலும், அது காலம் மற்றும் இடங்களால் தோஷப்பட்டிருந்தாலும், முழுமையாகவும் தூய்மையாகவும் இருந்தால் எம்பெருமான் அதனை உடனே ஏற்றுக்கொள்கிறான். யதாதத்யேன பண்டித: - பண்டிதர்கள் உண்மையைக் கண்டு மகிழ்கிறார்கள் என்பது போன்றே பகவானின் செயல்களும் உள்ளன.

விஷ்ணு புராணம் (6-2-17) - த்யாயந் க்ருதே யஜந் யஜ்ஞை ஸம்த்ரேதாயம் த்வாபரே அர்ச்சயந் யத் ஆப்நோதி தத் ஆப்நோதி கலௌ ஸங்கீர்த்ய சேசவம் - க்ருதயுகத்தில் த்யானம் மூலம் கிடைக்கும் அதே பலன்கள், த்வாபர யுகத்தில் அர்ச்சனை செய்வதன் மூலம் கிடைக்கும், அதே பலன்கள் கலியுகத்தில் கேசவனின் நாம ஸங்கீர்த்தனத்தில் கிட்டும். விஷ்ணு தர்மம் (109-28-29) - ததா விநிந்தாம் ப்ரதமே பாதே கரிஷ்யந்தி ஹரேர்நரா: யுகாந்தே ச ஹரேர்நாம ந ஏவ கச்சித் க்ரஹீஷ்யதி தந்யாஸ்தே புருஷ வ்யாக்ர பவாம்போதாவமாயிந: யத்நேநாபி கலௌ விஷ்ணோர் க்ரஹீஷ்யந்த்ய க்ஷயாத்மந: - கலியுகத்தின் தொடக்கத்தில் மனிதர்கள் ஸ்ரீஹரியின் திருநாமத்தைத் தவறாகத் தூற்றுவார்கள். கலியுகத்தின் முடிவில் ஸ்ரீஹரியைப் பற்றி யாரும் சிந்திக்கமாட்டார்கள். அப்படியும் உள்ள காலத்தில், யார் ஒருவன் விஷ்ணுவின் திருநாமத்தை ஓரளவாவது சிந்திக்கிறானோ, அவன் மிகுந்த புண்ணியம் செய்தவனாக, பாவங்கள் நிறைந்த இந்த ஸம்ஸாரத்தைக் கடந்தவனாக, மோக்ஷமும் பெறுகிறான் – என்றது. இது சரியானதே ஆகும். காரணம் - தனது குடிமக்களில் ஒருவன் செய்த சிறிய உதவியையும் பெரிதாகப் பாராட்டும் ஒரு நாட்டு அரசன், அந்தக் குடிமகனுக்கு அவனது பெற்றவர்கள் போன்று சரியான நேரத்தில் உதவுவான். இதே போன்று, பகவத் ஆராதனமோ அல்லது பித்ருக்களின் சடங்குகளோ – ஆக எதுவாக இருந்தாலும், காலதேசங்களால் சிறியதாகவோ பெரியதாகவோ இருந்தாலும் பாவங்களை விலக்குதல் என்று அவற்றின் பலன் ஒன்றே ஆகும். இதுவே சிறந்தவர்களின் வழக்கமாகும். ச்ரார்த்தம் முதலான கர்மங்களை இயற்றப் போதுமான செல்வம் இல்லை என்பதால் அவற்றை இயலாமல் விட்டாலும், தனது வறுமை காரணமாக இயற்றவில்லையே என்று எண்ணினாலே போதுமானது, அந்தச் சிந்தனையே அந்தக் கர்மங்களை முழுமையாக இயற்றியதன் பலனை அளித்துவிடும். இப்படியாக ச்ரார்த்தம் முதலான கர்மங்களை இயற்ற இயலவில்லை என்றாலும், அதற்கான மந்திரங்களையாவது உச்சரிக்கவேண்டும்.

ஆக பகவானின் நாம ஸங்கீர்த்தனமோ அல்லது அதனைப் போன்ற உபாசனங்களோ மிகவும் சிறந்தவை என்று பீஷ்மரால் பின் வரும் காரணங்கள் மூலம் கூறப்பட்டன:

1. இது மிகவும் சுலபமானது, மிகவும் ப்ரியமான ஒருவனைக் குறித்து உள்ளது.
2. எந்தவிதமான செலவுகளோ, களைப்படைய வைக்கும் முயற்சிகளோ அவசியம் இல்லை.
3. மிகவும் அருகில் இருக்கும் எஜமானனைக் குறித்து ஆத்மார்த்தமாக ஏற்றப்படுவதால் மிகவும் கவரக்கூடியது.
4. மிகவும் எளிதாக உள்ளபோதிலும் ஸம்ஸார பயம் என்னும் தாங்க முடியாத சுமையை விலக்கவல்ல உயர்ந்த பலனை அளிக்கிறது.
5. அன்றாடம் செய்யப்படவில்லை என்றாலும், முறை தவறி செய்யப்பட்டாலும் பாவத்தை ஏற்படுத்துவது இல்லை.
6. இதற்கான தகுதியுடையவர்கள் எண்ணற்றவர்கள் ஆதலால், அனைவருக்கும் இது ஏற்பு உடையது.
7. இது காலத்தாலோ, இடத்தாலோ, சூழ்நிலையாலோ பாதிக்கப்படாதது.
8. இதனால் போற்றப்படும் இலக்காக உள்ள பகவானின் மேன்மை காரணமாக, நாம ஸங்கீர்த்தனத்தின் மூலம் எட்டப்படும் இலக்கிற்கு எந்தத் தடையும் இல்லை.

மற்ற முனிவர்களும் இதே கருத்தைக் கூறுகின்றனர். கீழே உள்ள வரிகள் காண்க:

- மஹாபாரதம் (மோக்ஷபர்வம்) - ஸர்வேஷாம் அபி தர்மானாம் உத்தமோ வைஷ்ணவோ விதி: ரக்ஷதே பகவான் விஷ்ணு: பக்தான் ஆத்ம சரீரவத் – மஹாவிஷ்ணுவின் ஆராதனையே மிகவும் உயர்ந்த ஆராதனையாகும். இது மற்ற ஆராதனைகளை விட உயர்ந்தது. தன்னுடைய அடியார்களை பகவான் விஷ்ணு தன்னுடைய உடலைப் பாதுகாப்பது போன்று பாதுகாக்கிறான்.

- கோவிந்த பக்த்யப்யதிகம் ச்ரேயசாந்யந்ந வித்யதே - கோவிந்தனைத் துதித்து, அவன் மீது பக்தி செலுத்துவதை விட உயர்ந்தது வேறு எதுவும் இல்லை.

இப்படியாக, தர்மனின் உபேயம் பற்றிய கேள்விக்கு விடை அளித்து, ச்லோகம் ஒன்பது முதல் ச்லோகம் பன்னிரண்டுவரை உள்ளவற்றில் கூறப்படும் ஸஹஸ்ரநாமம் குறித்து மனதைத் திருப்பும்படி உபதேசித்தார். அடுத்து உள்ள 1½ வரிகளில், தர்மனின் இரண்டாவது கேள்வியான, "கிம் வா அப்யேகம் பராயணம்", என்ற கேள்விக்கு விடை அளிக்கிறார்.

9. பரமம் யோ மஹத்தேஜ: பரமம் யோ மஹத்தப:
பரமம் யோ மஹத்ப்ரஹ்ம பரமம் ய: பராயணம்
10-1. பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களாநாம் ச மங்களம்

**தேஜ:** - ய: என்னும் ஆண் பாலுடன் தேஜ: என்னும் அஃறிணையைக் குறிக்கும் சொல் இணைந்து வந்தது கண்டு வியக்கக்கூடாது. இங்கு புண்டரீகாக்ஷன் என்ற பதத்துடன் பல்வேறு சொற்களை இணைப்பதே குறிக்கோளாகும். இது இலக்கண ரீதியாகவும் சரியே ஆகும். உதாரணமாக, வேத: ப்ரமாணம் - வேதமே ப்ரமாணங்கள், தத்வம் நாராயண: பர: - - நாராயணனே உண்மை – என்ற வரிகள் காண்க. முதலாவது வரியில் எண்ணிக்கை வேறுபாடு உள்ளது காண்க. அதாவது, வேத: என்பது பன்மை, ப்ரமாணம் என்பது ஒருமையாகும். இரண்டாவதில் பால் வேற்றுமை உள்ளது. தத்வம் என்பது பால் அற்ற சொல், நாராயண என்பது ஆண்பால் ஆகும். இந்த வரிகள் எப்படிச் சேர்ந்தனவே அது போன்றே ய: தேஜ: என்ற வரியும் உள்ளது. எம்பெருமானே பரமபுருஷன், அவன் அனைவரையும் வசப்படுத்துபவன், அவனே உயர்ந்த புருஷார்த்தம் என்பதை அவனது ஆறு குணங்கள் விளக்குகின்றன. அவையாவன:

- தேஜ: - ஒளிமயமானவன். அதாவது ஞானமயமானவன், மற்றவர்களையும் ஒளி வீசும்படிச் செய்பவன். சாந்தோக்ய உபநிஷத் (8-12-2) – பரம் ஜ்யோதி உபஸம்பத்ய – அந்தப் பரம் ஜ்யோதியை அடைந்து; தைத்திரீய உபநிஷத் – தஸ்ய ஆதித்யோ பாமுபயுஜ்ய பாதி -அவனை அடைந்து, அவனிடம் இருந்து பெற்ற ஒளி கொண்டு, சூரியன் ஒளிர்கிறான் – என்று கூறின.

மஹத் - மஹத் என்றால் எல்லையற்றதாக அவனது தேஜஸ் உள்ளது.

பரம் - அவனை ஒத்தவர்களோ மிக்கவர்களோ இல்லை.

தபஸ: - அனைத்திற்கும் உத்தரவு இட்டு நியமிக்கிறான். நாராயணஸூக்தம் – யோ தேவேப்ய ஆதபதி - தேவர்களுக்காக தனது ஆளும் தன்மையை வெளிப்படுத்துகிறான்; ஸ்வேதாஸ்வதர உபநிஷத் – தம் ஈச்வராணாம் பரமம் மஹேச்வரம் – மஹேச்வரனாக உள்ள ஈச்வரன்; ப்ருஹத் உபநிஷத் - ஏஷ ஸர்வேச்வர: - அவனே அனைத்துக்கும் ஈச்வரன்.

ப்ரஹ்ம – எல்லையற்ற, எண்ணற்ற குணங்களைக் கொண்டுள்ளதால் மிகவும் உயர்ந்த ப்ரஹ்மம் ஆகிறான். தனது வலிமையால் மற்றவர்களையும் உயர்த்துகிறான்.

பவித்ரம் – இது கீழே விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

# எம்பெருமானின் தொடர்பு அனைத்து தோஷங்களையும் நீக்குகிறது

**பவித்ரம்** - தூய்மையானவற்றுள் தூய்மையானது. இங்கு பரமம் மற்றும் மஹத் ஆகிய பதங்களைப் புரிந்து கொள்ளவேண்டும். அவனே அனைத்தையும் தூய்மைப்படுத்துகிறான் என்கிறது. தூய்மைப்படுத்துதல் என்றால் தோஷங்களை நீக்குவதாகும். ரஜஸ் மற்றும் தமஸ் ஆகிய குணங்களில் ஏற்படும் மாறுபாடு காரணமாக, அசேதநங்களில் தோஷம் உண்டாகிறது. இப்படிப்பட்ட அசேதநங்களின் தொடர்பு காரணமாகச் சேதனங்களுக்கும் தோஷம் உண்டாகுகிறது. அறியாமை, எம்பெருமானுக்கு எதிராகச் செயல்படுதல், பற்றுதல், வெறுப்பு போன்றவை தோஷங்கள் ஆகும். இவை போன்ற தோஷங்களுக்கு எதிர்த்தட்டாக எம்பெருமான் உள்ளதால், இத்தகைய தோஷங்களை முழுமையாக அழிக்க வல்லவனாக அவன் உள்ளான். அவன் தூய்மையானவற்றில் தூய்மையாவான். இதனைக் கீழே உள்ள பல சாஸ்த்ர வரிகள் உணர்த்துகின்றன.

- தைத்திரீய உபநிஷத் – ஏதம் ஹ வா வ ந தபதி – அவனைத் துன்பங்கள் சூழ்வதில்லை.
- சாந்தோக்ய உபநிஷத் (4-14-3) – தத யதா புஷ்கரபலாச வ்யாபோ ந ச்லிஷ்யந்தே - தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாமல் உள்ளது போன்று (அவனை அடைந்தவர்களிடம் தோஷம் ஒட்டுவதில்லை).
- சாந்தோக்ய உபநிஷத் (5-24-3) – தத் யதா இஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத - நெருப்பில் இடப்பட்ட பஞ்சு எறிவது போன்று (அவனை அடைந்தவர்களின் பாவங்கள் எரிந்து விடுகின்றன).
- கௌஷீதகீ உபநிஷத் (1-4) – தத் ஸுக்ருததுஷ்க்ருதே தூநுதே – (அவனை அடைந்தவன்) தனது பாவ புண்ணியங்களை உதறுகிறான்.
- முண்டக உபநிஷத் (3-1-3) – ததா வித்வாந் புண்யபாபே விதூய: - புண்ணிய பாவங்களை நீக்கிய வித்வான் ஒருவன்.
- யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி (34) – க்ஷேத்ரஜ்ஞஸ்ய ஈச்வர ஜ்ஞானாத் விசுத்தி: பரமா மதா - எம்பெருமானைப் பற்றிய ஞானம் என்பதே ஆத்மாவுக்கு உயர்ந்த தூய்மையை அளிக்கிறது.
- தக்ஷ ஸ்ம்ருதி – த்யாயேந் நாராயணம் தேவம் ஸ்நாநாதிஷு ச கர்மஸு ப்ராயச்சித்திர் ஹி ஸர்வஸ்ய துஷ்க்ருதஸ்யேதி வை ச்ருதி: - நீராடும் செயல் உட்பட அனைத்து செயல்களின்போதும் நாராயணனைத் த்யானிக்க வேண்டும்.
- ஸ்ரீமத் பகவத் கீதை (10-3) – யோ மாம் அஜம் அநாதிம் ச – யார் என்னை பிறப்பற்றவன், எல்லையற்றவன் என்று அறிகிறானோ.
- இராமாயணம் உத்தரகாண்டம் (82-9) – பாவந: ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந: - ரகு வம்சத்தின் பிரியமானவனே! அனைத்து உலகையும் நீயே தூய்மையாக்க வல்லவன்.

- விஷ்ணு புராணம் (2-6-39) – ப்ராயச்சித்தாநி அசேஷாணி இத்யாதி ப்ராயச்சித்த ப்ரகரணம் காத்ஸ்ந்யேந – கண்ணனின் நினைவேஅனைத்து ப்ராயச்சித்தமும் ஆகும்.
- விஷ்ணு புராணம் (6-7-74) – யதா அக்னி: உத்தசிக: கக்ஷம் வஹந்தி ஸாநில: ததா சித்தஸ்திதோ விஷ்ணு: யோகிநாம் ஸர்வ கில்பிஷம் – காற்றுடன் இணைந்த அக்னி எவ்விதம் வைக்கோலை எறிக்கிறதோ அது போன்று யோகிகளின் மனதில் விஷ்ணு புகுந்து, அனைத்துப் பாவங்களையும் அழிக்கிறான்.

## புண்ணியமான பொருள்களின் தூய்மை என்பது அவை எம்பெருமானுடன் கொள்ளும் தொடர்பால் ஆகும்

புண்ணிய தீர்த்தம் முதலான தூய்மைப்படுத்தவல்ல வஸ்துக்களின் தூய்மைபடுத்தவல்ல தன்மை என்பது, அவை எம்பெருமானுடன் கொண்டுள்ள தொடர்பால் ஆகும். இந்தக் கருத்தை பரமம் மற்றும் மஹத் ஆகிய பதங்கள் உணர்த்துகின்றன.

இயற்கையாகவே அசுத்தமாக உள்ள அசேதனங்களும், ஏதோ ஒரு தோஷத்தால் பாதிக்கப்பட்ட தேவர்களும் மற்றவர்களைத் தூய்மைப்படுத்த வல்லவர்கள் என்று கூறுவது சரியல்ல. இந்தக் காரணத்தினால்தான் பராசரர், ஸௌனகர் முதலானவர்கள் தங்களது நூல்களில் மற்ற தேவர்களைப் பின்பற்றுவதும், ஆராதிப்பதும் கூடாது என்று தடுத்தனர். இவர்களின் இந்தக் கருத்து, இவர்களது சுபாச்ரயத்தை பற்றிய இடங்களில் காணலாம். சுபாச்ரயம் என்பது த்யானிக்கத் தகுந்தது, மங்களம் நிறைந்தது, எளிதில் அண்டவல்லது என்னும்படியான வஸ்துவாகும். விஷ்ணு புராணம் (6-7-77) - அசுஸ்தாஸ்தே ஸமஸ்தாஸ்து தேவாத்யா: கர்யயோநய: - அனைத்து தேவர்களும் கர்மத்தால் பிறந்தவர்கள் என்பதாலும், கர்ம வசப்பட்டவர்கள் என்பதாலும் அவர்கள் தோஷம் நிறைந்தவர்கள் ஆவர் - என்கிறது. விஷ்ணுதர்மம் (104-23) - ஆப்ரஹ்மஸ்தம்பர் யந்தா: ஜகத் அந்தர்வ்யவஸ்திதா: - ப்ரம்மன் தொடங்கி புல் பூண்டுவரை உள்ள அனைத்தும் கர்மத்தால் உண்டானவை, அவை ஸம்ஸாரப் பிடியில் உள்ளன - என்றது.

எம்பெருமானின் திருவடிகளைக் கழுவிய நீரை உட்கொள்வதாலும், அவனுக்குக் கைங்கர்யம் செய்வதாலும் மட்டுமே தேவர்கள் தூய்மை அடைகின்றனர். இது போன்று புண்ணிய தீர்த்தங்களும், திவ்ய தேசங்களும் எம்பெருமானின் தொடர்பு காரணமாகவே தூய்மையாக்கவல்ல தன்மையைப் பெறுகின்றன. விஷ்ணு புராணம் (4-4-30) - விஷ்ணுர் ஆயதனம் ஹி ஆப: ச ஹி ஆயபாம் பதிர்ருச்யதே – விஷ்ணுவின் திருவடிகளில் இருந்து பெருகிய நீர் என்பதால் மட்டுமே கங்கைக்கு பெருமை – என்றது. அவனே தண்ணீரின் பதி எனப்படுகிறான்.

இது போன்று காலம் என்பது அவனுடன் கொண்ட தொடர்பு காரணமாகத் தூய்மை பெறுகிறது. இது எப்படி என்றால் - அவன் அவதரித்த காலம் என்பதாலும்; அவனைத் தன்னுடைய அபிமானத் தேவதையாகக் கொண்டதாலும்; த்வாதசி, ஜயந்தி, ச்ரவணம், முதலிய அவன் விழித்திருக்கும் நாள்கள், அவதரித்த நாள், உறங்கும் நாள்கள் என்றும் கூறிப்பதால் ஆகும். மேலும் ஆத்ம குணமானது அவனைப் பற்றி அறிவதற்கு உதவுவதால் அவையும் தூய்மை அடைகின்றன.

யாகங்கள், தவங்கள், ச்ரத்தை முதலானவை அவனது ஆராதனைகளாக உள்ளதால் அவையும் தூய்மைப்படுத்தவல்லவை ஆகும். அவனைப் புகழ்கின்ற வேதங்களைக் கற்று ஓதும் அதிகாரம் உள்ளதால் அந்தணர்கள் தூய்மை அடைகின்றனர். மஹாபாரதம் – விஷ்ணும் க்ராந்தம் வாஸுதேவம் விஜாநந் விப்ரோ விப்ரத்வம் ஆப்நுயாத் தத்வ தர்சி - இந்த உலகம் அனைத்திலும் வாசுதேவன் வியாபித்துள்ளான் என்றும், தனது திருவடியால் முழுவதுமாகக் கடந்துள்ளான் என்றும் உள்ள உண்மையை அறிகின்ற அந்தணனே உண்மையான அந்தணன் ஆவான் - என்றது. வேதங்கள் மற்றும் ஸ்ம்ருதிகள் அவனது கட்டளைகளாக இருப்பதாலும், அவனையே பரதத்வம் என்று அறிவதாலும் தூய்மையாக்கவல்லதாக உள்ளன. ஸ்ரீமத் பாகவதம் (2-5-15) – நாராயணபரா வேதா: - வேதங்கள் நாராயணனுக்காகவே உள்ளன – என்றும், ச்ருதி ஸ்ம்ருதி மம ஏவ ஆஜ்ஞா - ச்ருதியும், ஸ்ம்ருதியும் எனது கட்டளைகள் – என்றும் உள்ளது காண்க. எம்பெருமான் வாசம் செய்வதால், கோயில்கள் புண்ணியமான இடங்களாகவும், தூய்மைப்படுத்தவல்ல இடங்களாகவும் உள்ளன.

இதனை மஹாபாரதம் கூறுகிறது – புண்ணிய த்வாரவதி – துவாரகா புண்ணியமானது – என்று தொடங்கி, (88-24) - ஆஸ்தே ஹரிரசிந்த்யாத்மா தத்ர ஏவ மதுஸூதந: தத் புண்யம் தத்பரம் ப்ரஹ்ம தத் தீர்த்தம் தத் தபோவனம் - சிந்தனைக்கு அப்பாற்பட்டவன், மது என்ற அரக்கனை அழித்தவன் ஸ்ரீஹரி; அந்த இடம் தூய்மையானது, அங்கு புண்ணிய தீர்த்தங்கள் உள்ளன – என்று முடிக்கப்பட்டது. இப்படியாக ஓர் இடத்தின் தூய்மை என்பது, எம்பெருமானின் தொடர்பு உள்ளதால் மட்டுமே ஆகும். இதனை மஹாபாரதம் (88-26) - பவித்ராணாம் ஹி கோவிந்த: பவித்ரம் பரம் உச்யதே புண்யாநாமபி புண்ய: அஸௌ இதி ஏவம் ஏவ ஸ்பஷ்டம் நிகம்யதே – கோவிந்தனே தூய்மையான அனைத்திலும் தூய்மையானவன், புண்ணியமான அனைத்திலும் புண்ணியமானவன் என்று தெளிவாக உரைக்கப்பட்டது – என்று கூறியது.

## எம்பெருமானின் விரும்பத்தக்க ஸ்வரூபம்

இவனே அனைத்திலும் விரும்பப்படுபவனாக உள்ளான். நறுமணம் வீசும் மாலைகள், சந்தனக்குழம்பு, தேவலோகப் பெண்கள், அம்ருதம் ஆகிய அனைத்தைக் காட்டிலும் விரும்பப்படுபவனாக உள்ளான். ஸம்ஸார தோஷங்கள் நீங்கப் பெற்றதாகவும்,

ஆனந்தமயமாக உள்ளதாகவும், ஞானமயமாக உள்ளதாகவும், தூய்மையாக உள்ளதாகவும், எல்லையற்றதாக உள்ளதாகவும் இருக்கின்ற ஆத்மாவைக் காட்டிலும் விரும்பப்படுபவனாக இவனே உள்ளான். மங்களங்கள் அனைத்தைக் காட்டிலும் மங்களமாக இவன் விரும்பப்படுவதால், மங்களானாம் ச மங்களம் எனப்பட்டது. இந்தக் காரணங்களால் இவனே அடையப்படும் உயர்ந்த இலக்காக உள்ளான். இதனைக் குறித்து பின்னர் விளக்கப்படும்.

ய: ஏவம் ஸ: பரமம் பராயணம் – இப்படிப்பட்ட ஒரு பரமபுருஷன் அடையப்படும் இலக்காக இருப்பது பொருத்தமே ஆகும். இதனை இந்த வரி மிகவும் தெளிவாகக் கூறுகிறது. இந்த வரியின் மூலம் இத்தகைய கருத்தே சாஸ்த்ரங்களில் உள்ளது என்று உணரலாம்.

## பரம்பொருளே நிமித்த காரணம்

இனி யுதிஷ்டிரனின் முதல் கேள்விக்கான பதில் அளிக்கப்படுகிறது. அடுத்து உள்ள 1 ½ ச்லோகம் மூலம் (10-2, 11) - எது மட்டுமே தெய்வம்? என்ற கேள்விக்கு விடையளிக்கப் படுகிறது.

10-2. தைவதம் தேவதாநாஞ்ச பூதாநாம் யோ அவ்யய: பிதா
11. யதஸ் ஸர்வாணி பூதாநி பவந்த்யாதி யுகாகமே
யஸ்மிம்ச்ச ப்ரளயம் யாந்தி புநரேவ யுகக்ஷயே.

அவன் மட்டுமே உயர்ந்த தெய்வம் ஆவான். சிவன், ப்ரம்மன் போன்றவர்களை விட உயர்ந்த தெய்வமாக உள்ளான். ஏன்? காரணம் - அனைத்து உயிர்களுக்கும் அவனே தந்தையாக உள்ளான். இவனது அழியாத தன்மை என்பது இவனை மற்றவைகளிடம் இருந்து வேறுபடுத்துகிறது. மிகவும் புராதானமானவனாக இவன் உள்ளதால், இந்த உலகில் உள்ள எதுவுமே அநாதை என்று கூற இயலாது எனப்பட்டது.

இவனே அனைத்திற்கும் தந்தை என்பது விளக்கப்பட உள்ளது.

**யதா** - யாரிடம் இருந்து - என்பதன் மூலம் இவனே நிமித்த காரணமக உள்ளான் என்பது விளங்குகிறது (பானைக்கு நிமித்த காரணம் = குயவன், மண் = உபாதான காரணம், சக்கரம் நீர் = ஸஹகாரி காரணம்). யாருக்கு நிமித்த காரணமாக உள்ளான் என்றால்?

**ஸர்வாணி** – ப்ரம்மன் தொடங்கி, மரம் வரை உள்ள அனைத்திற்கும் இவனே நிமித்த காரணமாக உள்ளான். எப்போதிலிருந்து நிமித்த காரணமாக உள்ளான்?

**ஆதி யுகாகமே** – முதல் யுகம் தொடங்கி. இதன் மூலம் ப்ரம்மனுக்கு முன்பாக இருந்த காலத்திற்கும், ப்ரம்மன் அனைத்தையும் படைத்த காலத்திற்கும் இடையே உள்ள வேறுபாடு உணர்த்தப்படுகிறது.

## பரம்பொருளே உபாதாநக் காரணம்

அனைத்தும் இறுதியில் சென்று லயிக்கின்ற உபாதானக் காரணமாக இவனே உள்ளான். இதன் மூலமாக, எந்த ஒரு பொருளும் அதன் உபாதானக் காரணத்திலேயே சென்று லயித்துவிடும் என்று விளங்குகிறது. இது, சிலந்தியின் நூலானது அந்தச் சிலந்திக்குள்ளேயே இழுக்கப்படுவது போலாகும். ச்லோகத்தில் உள்ள "ச" என்ற பதம் இவனே ஸஹகாரி காரணமாகவும் உள்ளான் என்பதையும், அனைத்து உயிர்களின் செயல்பாட்டிற்குக் காரணமாக உள்ளான் என்பதையும் குறிக்கிறது. எம்பெருமான் இத்தகைய தன்மைகளை கொண்டுள்ளான் என்பதை வேதங்களில் காணலாம்.

- தைத்திரீய உபநிஷத் - யதோ வா இமாநி – எதிலிருந்து இவை அனைத்தும் வெளிப்பட்டனவோ – என்று கூறியது.
- ப்ரஹ்மசூத்திரம் (1-1-2) – ஜந்மாத்யஸ்ய யத: - எதிலிருந்து இவை தோன்றினவோ - என்று கூறியது.

ப்ரஹ்மமே நிமித்த காரணம், உபாதாநக் காரணம் மற்றும் ஸஹாகாரி காரணம் என்பதை வேதத்தில் உள்ள உதாரணம் மூலம் காணலாம். இந்த வரியானது – ப்ரஹ்ம வநம் ப்ரஹ்ம ஸ வ்ருக்ஷ ஆஸீத் – ப்ரஹ்மமே காடு, அந்த ப்ரஹ்மமே மரம் – என்பதாகும். இந்தக் கருத்தை - ப்ரஹ்ம சூத்திரம் (1-4-23) – ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞான த்ருஷ்டாந்தாநுபரோதாத் - ப்ரஹ்மமே உபாதானக் காரணம் என்பதில் எந்த முரண்பாடும் இல்லை, இதற்கு உதாரணங்கள் பல உள்ளன - என்றது.

எம்பெருமான் உபாதாநக் காரணம், ருத்திரன் நிமித்த காரணம் என்று சிலர் வாதிடுகின்றனர். இந்தக் கருத்து வேதங்களில் ப்ரமாணம் இல்லாத ஒன்றாகும். மேலும் ஒரு சிலர் ப்ரஹ்மம் உபாதாநக் காரணம் என்றால், மாறுபாடு அடைதல் முதலான தோஷங்களுக்கு ப்ரஹ்மம் இலக்காகிவிடுமே என்று வாதாடலாம். இதற்கான சமாதாநம் – இப்படிப்பட்ட மாறுதல்கள் அனைத்தும் அவனுடைய சரீரமாக உள்ள ப்ரக்ருதி மற்றும் ஆத்மாக்களுக்கு மட்டுமே என்பதை அறிய வேண்டும். இதனை விளக்கவே வேதத்தின் சிலந்தி உதாரணம் கூறப்பட்டது (நூல், பஞ்சு போன்ற எந்தவிதமான பொருள்களும் இல்லாமல் சிலந்தி எவ்விதம் தனது வலையைப் பின்னுகிறதோ அது போன்று

எம்பெருமானும் எந்தவிதமான உதவிகளும் இன்றி அனைத்தையும் படைக்கிறான். இதனை முண்டக உபநிஷத் 1-1-7 தெளிவாகக் கூறுகிறது).

யுதிஷ்டிரன் பீஷ்மரிடம், "யோ தைவதம்" - எது உயர்ந்த தெய்வம் - என்று கேட்டவுடன், பீஷ்மர் நேரடியாக "விஷ்ணு" என்று பதில் அளித்திருக்க வேண்டும். ஆனால் அவ்வாறு கூறாமல் பீஷ்மர், "ய:" என்று பதில் அளிக்கத் தொடங்கினார். இதன் மூலம், சாஸ்திரங்களில் விஷ்ணுவே உயர்ந்த தெய்வம் என்று கூறப்படுவதை யுதிஷ்டிரர் முன்பே அறிந்திருந்தார் என்று உணரலாம். எம்பெருமானின் பரதத்த்வம், லக்ஷணம், உபாஸனை முறைகள் ஆகிய பலவும் கூறப்பட்டுள்ள உபநிஷத்துக்களில், அவனை அடையும் உபாயமும் கூறப்பட்டுள்ளது. ஸத், அஸத், ப்ரஹ்ம, அக்ஷர முதலான பதங்கள் ப்ரஹ்மத்தைக் கூறுவதாக உள்ளன. சில இடங்களில் இந்தப் பதங்களில், "பரம் – உயர்ந்த" என்பதும் கூறப்படுகின்றன. வேதங்களில் நான்முகன், விஷ்ணு, சிவன் முதலானவர்கள் பற்றி நேரடியாகக் கூறப்பட்டுள்ளதா என்ற கேள்வி எழலாம். இதற்கான விடைகள் கீழே உள்ள வரிகளில் காணலாம். இந்த வரிகள் மூலம் வேறு எந்தவிதமான ஐயமும் ஏற்பட அவசியம் இல்லை என்றாகிறது.

- நாராயண ஸூக்தம் – நாராயணபரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர: - நாராயணனே பரப்ரஹ்மம், நாராயணனே மிகவும் உயர்ந்தவன்.

- கட உபநிஷத் – தத் விஷ்ணோ : பரமம் பதம் - விஷ்ணுவின் உயர்ந்த இடம்.

- ஸ்வேதாஸ்வதர உபநிஷத் - யஸ்மாத் பரம் ந அபரம் அஸ்தி கிஞ்சித் - விஷ்ணுவின் இடத்தை விட உயர்ந்த இடம் இல்லை.

- கட உபநிஷத் - புருஷாந்ந பரம் கிஞ்சித் – அவனை விட உயர்ந்த புருஷன் இல்லை.

- ஸ்ரீமத் பகவத் கீதை (7-7) - மத்த: பரதரம் ந அந்யத் கிஞ்சித் – என்னை விட வேறு எதுவும் உயர்ந்தது இல்லை.

- ஸ்ரீமத் பகவத் கீதை(15-17) - உத்தம: புருஷஸ்து அந்ய: - இவர்களில் வேறுபட்ட ஒருவனே பரம புருஷன்.

அறிவுள்ள ஒருவன் கீழே கூறப்பட்டுள்ள காரணங்களால் மஹாவிஷ்ணுவே உயர்ந்த தெய்வம் என்றும், வேறு ஈடு இல்லாத தலைவன் என்றும், மற்ற யாரும் இவனை விட உயர்ந்தவர்கள் இல்லை என்றும் உணரலாம்:

1. ஸ்ருஷ்டி குறித்து கூறப்பட்டுள்ள வேதவரிகளில் ஒற்றுமை உள்ளது.
2. புருஷஸூக்தம் மற்றும் உத்தர நாராயணஸூக்தம் முதலானவற்றில் உள்ள உண்மைகள்.
3. ஸுபால, மைத்ராவர்ருணீய, மஹோபநிஷத், சாந்தோக்யம், தைத்திரீயம், ஐதரேயம் மற்றும் கட உபநிஷத்துகளில் கூறப்பட்டுள்ள உண்மைகள்.
4. பரமாத்மாவைப் பற்றி நன்கு அறிந்து ரிஷிகளான பராசரர், வால்மீகி மற்றும் வ்யாசர் ஆகியவர்களின் கருத்துக்கள்.
5. இதிகாசங்களிலும், ஸாத்வீக புராணங்களிலும் கூறப்பட்டுள்ள கருத்துக்கள்.
6. வேதங்களை ஒட்டியே அமைந்துள்ள கருத்துக்கள்.
7. இயற்கையாகவே மேன்மையுடன் விளங்கும் அவனது ரூபம், ஆயுதங்கள், வாகனங்கள் மற்றும் சரிதங்கள்.

நமது ஆசார்யர்கள் மேலே உள்ள கருத்துக்கள் கொண்டிருந்தனர் என்பது அவர்களது தஹரா, வைஷ்வாநரம் மற்றும் ப்ரஹ்மசூத்திரத்தின் சமந்வய அத்யாயம் போன்றவற்றுக்கான பல வ்யாக்யானங்களில் இருந்து அறிந்து கொள்ளலாம். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- ஸ்தோத்ர ரத்னம் (15) - த்வாம் சீல ரூப சரிதை: பரமப்ரக்ருஷ்ட ஸத்த்வேந ஸாத்விக தயா ப்ரபலைச்ச சாஸ்த்ரை: ப்ரக்யாத தைவ பரமார்த்த விதாம் மதைச்ச நைவாஸுர ப்ரக்ருதய: ப்ரபவந்தி போத்தும் - மனிதத் தன்மையை கடந்த இனிமையான செயல்களையும், வடிவத்தையும், மேலான ஸத்வ குணத்தையும் கொண்டவனே! மயக்கம் இல்லாத சாஸ்திரங்களை நன்றாக உணர்ந்தவர்கள் கூறுகின்ற வாக்கு, சமயம் போன்றவற்றால் உண்மை என்று போற்றப்படும் புகழ் பெற்றவனே! அசுரத்தன்மை கொண்டவர்கள் உன்னை அறிய இயலாதவர்கள் ஆவர்.

- ஸ்ரீ வைகுண்ட ஸ்த்வம் (17) – தத்வார்த்த தத்பர பரச்சதவேத வாக்யை: ஸாமர்த்யத: ஸ்ம்ருதிபிரப்யத தாத்ருசீபி: த்வாமேவ தத்வபர ஸாத்விகஸத்புராணை: தேவஜ்ஞதீபிரபி நிச்சிநும: பரேசம் - சரியான காரணங்கள் மூலம் உண்மையானவற்றை மட்டுமே கூறுகின்ற நூற்றுக்கணக்கான வேதங்கள் மூலமாகவும், ஸ்ம்ருதிகள் மூலமாகவும் ஸாத்வீக புராணங்கள் மூலமாகவும் நீயே பரம்பொருள் என்பதை நாங்கள் ஐயம் இன்றி ஏற்றுக் கொள்கிறோம்.

- ஸ்ரீ வைகுண்ட ஸ்தவம் (28) – ரூபச்ரியா பரமயா பரமேண தாம்நா சித்ரைச்ச கைச்சிதுசிதைர் பவதச் சரித்ரை: சிஹ்நைர நிஹ்நவபரை ரபரைச்ச கைச்சித் நிச்சிந்வதே த்வயி விபச்சித ஈசித்ருத்வம் - நீயே பரம்பொருள் என்று உன்னுடைய

திருமேனியின் அழகைக் கொண்டே அறிஞர்கள் கூறுகின்றனர். மேலும் இவர்கள் உன்னுடைய ஜோதி ஸ்வரூபம், இனிமையான நேர்த்தியான சரிதங்கள் போன்றவை மூலமும் இப்படியாக முடிவு செய்கின்றனர்.

இப்படியாக உயர்ந்த தத்துவமும், அடையக்கூடிய சரியான மார்க்கமும் மற்ற அனைத்தையும் விட உயர்ந்தது என்று கூறப்பட்டது. இதில் அனைவருக்கும் பொதுவாக உள்ளதும், நன்மை அளிக்கவல்லதும் ஆகிய ஓர் உபாயத்தைக் கூறவேண்டும். ஆகவே யுதிஷ்டிரனை தொடர்ந்து கேட்கும்படி பீஷ்மர் கூறுகிறார்.

12. தஸ்ய லோக ப்ரதாநஸ்ய ஜகந்நாதஸ்ய பூபதே
விஷ்ணோர் நாம ஸஹஸ்ரம் மே ச்ருணு பாப பயாபஹம்.

- **தஸ்ய** – அனைத்திற்கும் எஜமானனாக உள்ளவனைப் பற்றி.
- **லோக ப்ரதாநஸ்ய** – வேறு எந்தவிதமான இலக்கும் இன்றி, அனைத்தும் சார்ந்துள்ள ஸர்வேச்வரன்
- **ஜகந்நாதஸ்ய** – அனைத்தையும் நியமிப்பவன்.
- **விஷ்ணு நாம ஸஹஸ்ரம்** – மஹாவிஷ்ணுவை மகிழ வைத்து, அதன் மூலம் பாவங்களைப் போக்கிக் கொள்ள எண்ணற்ற வழிகள் உள்ளன. அவற்றில் ஆயிரம் நாமங்களைக் கொண்ட இதுவே உன்னதமான வழியாகும்.
- **மே** - என்னிடமிருந்து, எனக்காக.
- **ச்ருணு பூபதே** – முன்பே கேட்டுக் கொண்டிருந்த யுதிஷ்டிரனைப் பார்த்து, "மீண்டும் கேட்பாயாக", என்று ஏன் கூறவேண்டும்? இதன் மூலம், இதனைக் கேட்பதால் கேட்பவனுக்கு இந்த விஷயம் மிகவும் முக்கியமானது என்று பீஷ்மர் உணர்த்துகின்றார்.

ஒரு சொல் என்பது நான்கு செயல்களைச் செய்கிறது. அந்தச் சொல் ஒருவனையோ, ஒரு ஜாதியையோ, ஒரு குணத்தையோ அல்லது ஒரு செயலையோ குறிக்கும். ஒரு சொல்லானது, ஒரு தனி நபரைக் குறிக்கும்போது, அவருகே உண்டான எல்லைகளையும், ஒரு பிரிவைக் குறிக்கும்போது அந்தப் பிரிவுக்கே உண்டான பொதுத் தன்மைகளையும் குறிக்கும். ஆக, இவை இங்கு கூறப்படவில்லை. எனவே குணாநி என்ற பதம் எம்பெருமானின் திருநாமங்கள் அனைத்தும், அவனுடைய குணங்களில் இருந்தும்

செயல்களில் இருந்தும் வெளிப்பட்டன என்பதைக் கூறுவதாக உள்ளது எனலாம். ஸர்வேச்வரனின் திருநாமங்கள் அனைத்தும் குறிப்பிட்ட காரணங்களால் தோன்றின. குண என்ற பதம் கர்மங்களையும் குறிக்கும்.

மஹாபாரதத்தில் தன்னுடைய திருநாமங்கள் அனைத்தும் தனது குணங்கள் மற்றும் செயல்பாடுகளின் அடிப்படையில் அமைந்துள்ளதாக எம்பெருமான் கூறுகின்றான். இதனை அவன் பின்வருமாறு கூறுவது காண்க:

- மஹாபாரதம் (சாந்தி பர்வம் 342-3) – ப்ரவதந்நாத்மநோ நாம்நாம் நிருக்தம் குண கர்மணாம் - என்னுடைய திருநாமங்கள் பலவும் குணங்களைக் குறிப்பதாக உள்ளன.

- மஹாபாரதம் – (சபா பர்வம் 342-10) - கௌணாநி மம நாமாநி கீர்த்திதாநி ச காநிசித் - யார் ஒருவன் என்னுடைய திருநாமங்கள் மூலம் கூறப்படும் கர்மங்களை அறிகிறானோ.

- மஹாபாரதம் (உத்யோக பர்வம் 59-1) - நாம கர்மார்த்தவித் தாத - நாமங்கள் கர்மத்தின் அடிப்படையில் உள்ளன என்று அறிவாயாக, என் புத்திரனே.

- மஹாபாரதம் (சாந்தி பர்வம் 342-10) - நிருக்தம் கர்ம ஜாநாம் ச ச்ருணுச்ச ப்ரயத: அநத - பாவங்கள் அற்றவனே! எனது கர்மங்களின் அடிப்படையில் அமைந்துள்ள திருநாமங்கள் குறித்துக் கேட்பாயாக.

இப்படியாக உள்ள பல வரிகள் மூலம் எம்பெருமானின் திருநாமங்கள் எதுவும் முக்கியத்வம் இல்லாமல் இல்லை என்பதும், அவை காரணங்களுடன் அமைந்துள்ளன என்றும், ஆராய்ந்தால் ஆழ்பொருளை அளிக்கவல்லன என்றும், ஏதோ ஒரு வழக்கம் காரணமாக மட்டுமே வந்தவை அல்ல என்றும் உணரலாம்.

**விக்யாதாநி** – அனைவராலும் அறியப்பட்டது. இந்தத் திருநாமங்கள் வேதங்களால் பரவலாக உபயோகப்படுத்தப்பட்டதாலும், மேலும் பல சாதாரண நூல்களிலும் உபயோகபடுத்தப்பட்டதாலும், தனிப்பட்ட தன்மை கொண்டதாலும், அவனுக்கு மட்டுமே உரித்தானதாக உள்ளதாலும் அனைவராலும் அறியப்படுகிறது. இவை மற்றவர்களுக்கு சொல் இலக்கணம் மூலமாக ஏற்புடையதாக உள்ளன என்று தோன்றினாலும், இவை ஸர்வேச்வரனுக்கு மட்டுமே உரித்தானவையாகும்.

**ரிஷிபி:** - இவை வேதங்களை நன்கு அறிந்த முனிவர்களாகிய ஸனகர், ஸநத்குமாரர் மற்றும் நாரதர் ஆகியோரால் பாடப்பட்டன.

**பரிகீதாநி** – அனைத்து பக்கங்களிலும் பாடப்பட்டது. பசுவானது தனது கன்றின் மீது எவ்விதம் மிகுந்த ஆசையுடன் இருக்குமோ அது போன்று, இந்த முனிவர்கள் எம்பெருமான் மீது மிகுந்த ஆசையுடன், இவனது ரூபம் மற்றும் தன்மைகளை விளக்குவது போன்று இந்தத் திருநாமங்களைக் கூறினார்கள். தேனீ ஒன்று எவ்விதம் பலவிதமான மலர்களில் அமர்ந்து தேனைச் சேகரிக்கிறதோ, அது போன்று பலவிதமான முனிவர்களின் கூற்றுகளை, ஒரே ச்லோகமாக வ்யாசர் அளித்துள்ளார். இது நமக்கு வழிவழியாக, பரம்பரை பரம்பரையாக அளிக்கப்பட்டுள்ளது. இப்போது இதன் நான் உனக்கு கூறுகிறேன்.

**பூதயே** – இந்த உபதேசமானது தொடக்கம் இல்லாத ஸம்ஸாரத்தில் சிக்கிக்கொண்ட ஆத்மாக்கள் கரை சேர்வதற்காக அமைந்தது. தைத்திரீய உபநிஷத், ஆத்மா ஸத்தாகவும் அஸத்தாகவும் உள்ளதை (11-6-1) – அஸந்நேவ ஸ பவதி அஸத் ப்ரஹ்மேதி வேத சேத் அஸ்தி ப்ரஹ்மேதி சேத் த்வேத ஸந்த மேனம் ததோ விது: - ப்ரஹ்மம் இல்லை என்று அறிபவன் இல்லாதவனாகிறான், ப்ரஹ்மம் உள்ளது என்று அறிபவன் உள்ளவன் ஆகிறான் - என்றது. எம்பெருமானின் மேன்மையும், ஞானமும் எல்லையற்றது என்பதால் அவனுடைய திருநாமங்கள் அனைத்தையும் கூறுவது என்பது இயலாத ஒன்றாகும்.

ச்ருதமே தஸ்ய தேவஸ்ய நாமநிர் வசனம் சுபம் யாவத் தத்ராபிஜாநே அஹம் அப்ரமேயோ ஹி கேசவ: - எம்பெருமானின் திருநாமங்கள் குறித்த விளக்கங்களை நான் கேட்டேன். இதன் மூலம் சேசவனை முழுவதுமாக அறிய இயலாது என்று உணர்ந்து கொண்டேன் – என்ற வரி காண்க. இந்த அனுபவம் கிடைக்க வேண்டும் என்று எண்ணும் யார் ஒருவரும், மஹாவிஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்களைக் கேட்பதன் மூலம், தங்களுக்குச் சிறந்த நன்மையைத் தேடிக் கொள்கின்றனர். இதனால்தான் எம்பெருமானுக்கு மஹாத்மந: என்ற திருநாமம் உள்ளது.

இந்தத் திருநாமங்கள் எம்பெருமானின் குணங்கள் மற்றும் நிலைகளின் அடிப்படையில் உள்ளன. ஆகவே இந்தத் திருநாமங்களைக் கூறுபவர்கள், இந்தத் திருநாமங்கள் ஸ்ரீமந் நாராயணனுக்குப் பொருந்தாது என்று கூறுபவர்களுடன் சேரவே கூடாது.

## ஸகுண நிர்க்குண ப்ரஹ்ம ஆராய்ச்சி

ஒரு சிலர் – இப்படியாகக் குணங்களுடன் கூடிய ப்ரஹ்மத்தைப் பற்றிய ச்லோகங்கள் மோக்ஷத்தைத் தவிர்த்த குறைவான பலன்களை எதிர்பார்ப்பவர்களாக இருக்கட்டும்; மோக்ஷம் என்ற உயர்ந்த பலனை விருப்புவர்கள், குணங்கள் இல்லாத ப்ரஹ்மத்தைப் பற்றிப் படிக்கட்டும் என்று கூறலாம். இவ்விதம் கூறுபவர்களே! உங்களது காதுகள் செவிடு என்றே கொள்ளவேண்டும். இந்தத் திருநாமங்கள் எத்தகைய உயர்ந்த பலனை

அளிப்பதற்கான உபாயங்கள் என்று பல இடங்களிலும் கூறுவதை நீங்கள் கேட்டதில்லையா? இந்த ச்லோகத்தின் இறுதியில் மிகவும் உரத்த குரலில் கீழே உள்ளபடி கூறுவது காண்க:

- முச்யதே ஜந்துர் ஜந்ம ஸம்ஸார பந்தநாத் – ஸம்ஸாரம் என்ற பிடியிலிருந்து தப்பிக்கிறான்.

- யாதி ப்ரஹ்ம ஸநாதனம் - உயர்ந்த நித்யமான ப்ரஹ்மத்தை அடைகிறான்.

நீங்கள் கூறியப்படி இரண்டு ப்ரஹ்மங்கள் உண்டு – ஒன்று குணங்களுடன் கூடியது மற்றும் குணங்கள் அற்றது என்றால், ப்ரஹ்மம் ஒன்று என நீங்களே ஒப்புக்கொண்ட விஷயம் தவறாகிறது அல்லவா?

இங்கு சாஸ்திரங்கள் எதனைச் சிறந்த கரையேறும் வழியாக உரைத்தன என்பதை அறியும் விதமாக - பரமோமத – எது உயர்ந்த தர்மம் – என்று கேட்கப்பட்டது. இதற்கு விடையாக அதே சொற்கள் மூலம் - ஆதி கதமோ மத - இதுவே உயர்ந்த வழியாகும் என்பது என் எண்ணம் – என்று கூறப்பட்டது. நீங்கள் (அத்வைதிகளை நோக்கி) இதன் மூலம், குறைவான ஸகுண ப்ரஹ்மமே கூறப்பட்டது என்றால், உயர்ந்த ப்ரஹ்மத்தை அடைகின்ற மார்க்கம் எங்கு உணர்த்தப்பட்டுள்ளது?

நீங்கள் குணங்களுடன் கூடிய ப்ரஹ்மம், குணங்கள் இல்லாத ப்ரஹ்மம் என்ற இரண்டை உபதேசித்து, முதலாவதாக கூறப்பட்ட ப்ரஹ்மம் என்பது இரண்டாவதாகக் கூறப்பட்ட ப்ரஹ்மத்தை அடைவிக்கும் வழி என்று கூறுதல் சரியல்ல. இவை இரண்டும் ஒன்றுக்கு ஒன்று முரணாக உள்ளதால், ஒன்று மற்றொன்றுக்கு இட்டுச் செல்லாது என்பது தெளிவு.

குணங்களுடன் இல்லாத ப்ரஹ்மம், குணங்களுடன் கூடிய ப்ரஹ்மமாகத் தோன்றுவதற்கு என்ன காரணம் உள்ளது? இதற்கு நீங்கள், "அவித்யை (அறியாமை)", என்று விடை அளிக்கலாம். பிறப்பு, இறப்பு, மயக்கம் மற்றும் ஸம்ஸாரத்தில் உள்ள தோஷங்கள் ஆகிய விஷங்களால் பாதிக்கப்பட்ட ஒருவனுக்குச் சிறந்த மருந்தாக ப்ரஹ்மம் உள்ளது என்று வேதங்கள் முழங்குகின்றன. அப்படி உள்ளபோது அதே ப்ரஹ்மம் எப்படி குணங்கள் இல்லாமல், அவித்யை மற்றும் மயக்கம் ஆகியவற்றுக்கு இருப்பிடமாக இருக்கமுடியும்?

ப்ரஹ்மத்திற்கு இது போன்ற தோஷங்கள் ஒட்டுவது மாயை என்றால், நீங்கள் கூறும் குணங்கள் அற்ற ப்ரஹ்மம் என்பதும் மாயையே ஆகும். இந்தக் குணங்கள் உண்மையா? பொய்யா? தோஷங்கள் மாயை என்றால், தோஷங்கள் அற்றது, குணங்கள் அற்றது என்றாகும். குணங்கள் அற்றது என்பது மாயை என்றால், குணங்களுடன் கூடியது என்பது

உண்மையாகும். ஆக நீங்கள் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் ப்ரஹ்மம் தோஷங்கள் அற்றது, குணங்களுடன் கூடியது என்றே ஆகிறது.

ப்ரஹ்மத்தின் அவித்யை என்பதை யாரால் விலக்க இயலும்? இதற்கு நீங்கள் – பரம் ப்ரஹ்ம பம்ப்ரமீதி ஸம்ஸாரீ தத் உத்தாரயதி – யார் ஒருவன் ப்ரஹ்மம் ஒன்று என அறிகிறானோ - என்று வியக்கத்தக்க பதிலை அளிக்கலாம். உயர்ந்த ப்ரஹ்மம் என்பதே மாயையில் சிக்கித் தவிக்கும்போது, அதனை ஸம்ஸாரத்தில் உள்ள சாதாரண ஜீவன் விடுவிக்கிறான் என்று கூறுவது என்ன ஒரு கருத்து?

ப்ரஹ்மத்திற்கு குணங்கள் உண்டு என்று கூறும் வரிகள் எந்த அடிப்படையில் தவறானவை என்று கூறப்படுகின்றன? இதற்கு நீங்கள், "இந்த வரிகள் ப்ரஹ்மத்திற்குக் குணங்கள் இல்லை என்ற வரிகளுடன் முரண்படுகின்றன", எனலாம். அப்படி என்றால், இதற்கு எதிர்மறையாகவும் கூறலாம் அல்லவா? இந்த இரண்டு விதமான வாக்கியங்களும் சரியான ப்ரமாணங்களாக உள்ளபோது ஒன்றை விடுத்து, மற்றதை மட்டும் ஏற்பது ஏன்?

அடுத்து ஒரு கருத்தைக் காண்போம். ப்ரஹ்மத்திற்குக் கூறப்பட்ட குணங்கள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டால் அவற்றைக் கூறுகின்ற வேதவரிகளுக்கு என்ன பயன் உள்ளது? இதற்கு நீங்கள் (அத்வைதி) - ப்ரஹ்மத்திற்கு இப்படிப்பட்ட குணங்கள் இல்லை என்று கூறுவதற்காகவே அந்த வரிகளில் பல குணங்கள் கூறப்பட்டன என்று பதில் அளிக்கலாம். இப்படிக் கூறி மறுப்பதற்கு, அவற்றை வேதவரிகள் கூறாமலேயே இருந்துவிடலாமே! சாஸ்த்ரங்கள் சிலவற்றைத் தவறானவை என்று கூறுவதற்காக, அந்தத் தவறானவைகளை கூறுமோ? மஹாபாரதம் – ப்ரக்ஷாலனாத் ஹி பண்டகஸ்ய தூரதஸ்பர்ஸனம் பரம் – சேற்றைத் தொட்டுவிட்டு, அதனைக் கழுவுவதை விட, தொடாமலேயே இருப்பது சிறந்தது - என்றது. பூர்வ மீமாம்ஸையில் (6-5-19) - பௌர்வபர்யே பூர்வ தௌர்பல்யம் ப்ரக்ருதிவத் – ப்ரக்ருதி முதலான கருத்துக்கள் போன்று, பின்னே வரும் கருத்துக்கள் முன்னால் உள்ளவற்றை மறுக்கின்றன - என்று கூறியதை இங்கு கொள்ளலாமா என்றால் முடியாது. முதலில் ஒரு பொருளை உள்ளது என்று கூறிவிட்டு, அதன் பின்னர் அந்தப் பொருள் இல்லை என்று மறுக்க இயலாது.

**குறிப்பு** - அடுத்த பத்தியை படிப்பதற்கு முன்னால் அதில் கூறப்பட்டுள்ள ப்ரதஸ்ஸவநம் பற்றி அறிந்து கொள்ளவேண்டும். ப்ரதஸ்ஸவநம் என்பதில் அத்வர்யூ, ப்ரஸ்தோத்ரீ, ப்ரதிஹர்த்ரீ, உத்கத்ரீ மற்றும் ப்ரம்மன் ஆகியோரை வெளிப்படுத்தும் விதமாக அந்தணர்கள் இருப்பார்கள். இவர்கள் தொடக்கத்தில், வேள்வி அக்னியைச் சுற்றி ஒருவரது அங்கவஸ்த்ரத்தை பின்னால் வருபவர் பிடித்துக் கொண்டு, வரிசையாக சுற்றி வருவர். இதில் உத்கத்ரீ என்பவர் தனது பிடியை விட நேர்ந்தால் வேள்வி முடிந்துவிட்டது என்று பொருள் (தானாகவே விடாமல் அவரை அறியாமலேயே விடவேண்டும்). இந்த நிலையில் அந்தணர்களுக்குத் தக்ஷணை அளிக்கப்படும். உத்கத்ரீ என்பவர் தனது பிடியை நழுவவிட்டால், வேள்வியானது அந்தணர்களுக்குத் தக்ஷணை அளிக்கப்படாமலேயே

முடிந்துவிடும். ப்ரதிஹர்த்ரீ தனது பிடியை விட்டு விட்டால், தக்ஷிணை முழுவதும் யாகம் இயற்றுபவனுக்கு அளிக்கப்படும். இதில் ப்ரஸ்தோத்ரீ மற்றும் உத்கத்ரீ ஆகிய இருவரும் தங்கள் பிடியை ஒருவர் பின்னர் ஒருவராகத் தொடர்ந்து விட நேர்ந்தால் என்ன ஆகும்? இதற்குப் முன்னர் கூறப்பட்ட உத்கத்ரீ குறித்த விதியே பொருந்தும்.

**பாஷ்யம் தொடர்கிறது** - மேலே கூறுப்பட்ட சடங்கில் ஒரு விதி என்பது அதன் முந்தைய விதியை விட வலுவானதாக உள்ளபோது, சரியான விதியையே எடுத்துக்கொள்ள வேண்டும். ஒரு விதி அதற்கு முந்தைய விதியை அழித்துவிட்டு வர இயலாது (உதாரணமாக, ப்ரஸ்தோத்ரீ மற்றும் உத்கத்ரீ ஆகிய இருவரும் விடுவது என்ற செயலில், உத்கத்ரீ விடுவது என்பது தனித்து அடங்கி உள்ளது அல்லவா). இது போன்று இங்கும் கொள்ளவேண்டும். குணங்களைப் பற்றிக் கூறுவதும், அவற்றை மறுப்பதும் முரண்பாடுகள் அல்ல. ஒன்றை ஒன்று முரண்படுத்தாமல் இரண்டுமே இருக்கலாம். ஸர்வேச்வரனுக்கு உள்ள குணங்களை மறுக்கும் வேதவரிகள், பின்னே வருவதால் அவற்றுக்கு முன்பாக உள்ள வரிகளில் கூறப்படும் கருத்தான எம்பெருமானுக்குக் குணங்கள் உண்டு என்பதை அந்த வரிகள் மறுப்பதாக நீங்கள் (அத்வைதி) கொள்ளலாம். இப்படிக் கொண்டால் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை விளக்கக்கூடிய வேதத்தின் பகுதியானது - ஸூந்யமேவ தத்வம் – உண்மையான அது இல்லாதது - என்று நகைப்பது போன்ற வரி மூலம் முரணாகிவிடும். இதற்கு பதில் உரைக்கும் பொருட்டு நீங்கள் (அத்வைதி), "இந்த வரியானது பௌத்த மதத்தின் மயக்கம் காரணமாக உள்ளது; இவை வேதங்கள் கூறுவதை மறுக்க இயலாது", என்றும் கூறலாம். இந்தப் பதிலை ஏற்க இயலாது. இதன் காரணம், உங்கள் வாதத்தின்படி வேதம் என்பதே ப்ரஹ்மத்தின் மயக்கத்தால் உண்டாவது என்பதாகும் . இந்த இரண்டு மயக்கங்களில் என்ன வேறுபாடு உள்ளது?

கவனித்துப் பார்த்தால், ஸர்வேச்வரனுக்குக் குணங்கள் உள்ளன என்ற வரிகள் பின்னால் வருகின்றன என்று கொள்ள வேண்டும். சாந்தோக்ய உபநிஷத் (7-1-4) – அபஹதபாப்மா விஜ்வர: - அவன் தோஷங்கள் அற்றவன், வயோதிகத்தன்மை அற்றவன் - என்றது. இதன் மூலம் ப்ரஹ்மத்திற்குத் தாழ்ந்த குணங்கள் ஏதும் இல்லை என மறுத்து, கல்யாண குணங்கள் மட்டுமே உள்ளன என்று கூறுவதை அறிய முடிகிறது. அவனுக்குக் குணங்கள் இல்லை என்று கூறும் வரிகள், தாழ்ந்த குணங்கள் இல்லை என்று கூறுவதாகும். சரீரத்தால் ஏற்படும் தோஷங்கள் அற்றவன் என்று கூறுவதாகவே கொள்ளவேண்டும்.

மேலும் அத்வைதிகள் ஒரு வாதம் செய்யலாம். ஸகுண ப்ரஹ்மத்தைக் (ஸகுண ப்ரஹ்மம் = குணங்களுடன் கூடிய ப்ரஹ்மம்) கூறும் ச்ருதிகள் பொய்யாகக் கூறுகின்றன என்றும், நிர்க்குண ப்ரஹ்மத்தைப் (நிர்க்குண ப்ரஹ்மம் = குணங்கள் அற்ற ப்ரஹ்மம்) பற்றி கூறும் வேதவரிகள் ஸத்யமான விஷயத்தைக் கூறுகின்றன என்று அத்வைதிகள் வாதம் செய்யலாம். இவை வஞ்சனை நிறைந்த வாதங்கள் ஆகும். ப்ரமாணங்களாக உள்ள வேதவரிகள் பொய்யான விஷயங்கள் என்றால் அது கேலியான கூற்று அல்லவா? முத்துச்

சிப்பியை, பொய்யான வெள்ளி என்று உணரும் ஞானம் ஏற்பட்டால், அந்த ஞானம் மட்டுமே உண்மையாகுமா? அந்த ஞானத்தின் மூலம் உணர்த்தப்படும் விஷயம் பொய் என்ற பின்னர், அந்த ஞானத்திற்கு மட்டும் பெருமை உண்டா? உங்களது கருத்தின்படி ப்ரஹ்மத்திற்குக் குணங்கள் உண்டு என்று சொல்லக்கூடியவை பொய்யானவை என்றால், குணங்களை மறுத்துக்கூறும் வேதவரிகளையும் பொய் என்று நீங்கள் ஏன் தள்ளவில்லை?இப்படி இவர்களின் கருத்தை விவாதம் செய்தது போதும்.

இனி உண்மையைக் காண்போம். ப்ரஹ்மத்திற்கு ஞானம், சக்தி முதலானவை உண்டு எனக் கூறுகின்ற வேதவரிகள், ப்ரஹ்மத்திற்குக் கல்யாண குணங்கள் உள்ளன என்று ஆமோதிக்கின்றன. ப்ரஹ்மத்திற்குக் குணங்கள் இல்லை என்று கூறும் வரிகள் ப்ரஹ்மத்திற்குப் பற்றுதல், வெறுப்பு முதலான குணங்கள் இல்லை என்பதையே கூறுகின்றன. சாந்தோக்ய உபநிஷத் (8-1-5) - ஸத்ய காம ஸத்ய ஸங்கல்ப – என்பவை அவனது திருக்கல்யாண குணங்களைக் கூறுகின்றன. நிர்க்குணம் என்று பொதுவாக தள்ளப்பட்டது, அவை திருக்கல்யாண குணங்களைத் தவிர மற்றவற்றையாகும். இங்கு பதாஹவநீய ப்ராஹ்மண பரிவ்ராஜ, ப்ராஹ்மண கௌண்டிந்ய, கோபலீவர்த்த நியாயங்களைக் கொள்ளவேண்டியது.

வேதவரிகளில் மறுத்தல் என்பது, தாழ்ந்த குணங்கள் ப்ரஹ்மத்திடம் இல்லை என்று கூறுவதாகவே கொள்ளவேண்டும். ப்ரஹ்மத்திற்குக் குணங்கள் உண்டு என்று கூறுகின்ற வேதவரிகள் நேரடியாகவே கூறுகின்றன. உதாரணமாக சாந்தோக்ய உபநிஷத் (8-1-5) - அபஹதபாப்மா - பாவங்கள் அற்றவன் - என்று தொடங்கி, ஸத்ய காம ஸத்ய ஸ்ங்கல்ப - என்று நேரடியாகக் கூறுவதைக் காண்க. இது போன்று, முண்டக உபநிஷத் (1-1-6) – யத் தத் அத்ரேச்யம் – எது காண இயலாததோ – என்று தொடங்கி, நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம் தத் அவ்யயம் யத் பதயோநிம் பரிபச்யந்தி தீரா: - எது அனைத்திற்கும் ஆதாரமாக உள்ளதோ, நித்யமாக உள்ளதோ, அழியாமல் உள்ளதோ, ஸூக்ஷ்மமாக உள்ளதோ, அதனை அறிவாளி காண்கின்றான் - என்றது.

இந்த விஷயத்தில் வேத வரிகள் இவ்வளவு தெளிவாக இருக்கும்போது, அத்வைதிகள் போன்று – கம்பம் இருக்கிறது, பானை இல்லை - என்ற வீண் விவாதங்கள் அவசியம் அற்றது. ப்ரஹ்ம சூத்திரத்தில் (1-2-22) - அத்ருச்யத்வாதி குணகோ தர்மோக்தே: - பரமாத்மாவைக் காண இயலும் என்பதை மறுத்தும், அவனது கல்யாண குணங்களை ஆமோதித்தும் - அருளிச் செய்தார்.

ப்ரஹ்ம ஸூத்திரத்தின், முதல் அத்யாயத்தின், மூன்றாவது பாதமாகிய குண உபஸம்ஹார பாதத்தில் சாண்டில்ய, உபகோஸல, தஹர, புருஷ, பர்யங்க வித்யைகள் மூலமாக அறியப்படும் ஸர்வேச்வரனின் குணங்களைக் கூறுகிறார். மேலும் இவற்றை மனதால் அறிவதை விட, த்யானம் மூலம் அறிய வேண்டும் என்றும் கூறுகிறார். இதனால் அவர் (3-3-39) – ஆதராதலோப: - ச்ருதிகள் ப்ரஹ்மத்தின் குணங்களைக் கூறுவதால் அவற்றைத்

தள்ளக்கூடாது - என்றார். விஷ்ணு புராணத்தின் ஆசிரியரான பராசரர் (19-44) - ஸத்யாதயோ ந ஸந்தீசே யத்ர ச ப்ராக்ருதா குணா: - ஸத்வம் முதலான ப்ரக்ருதி தொடர்புடைய குணங்கள் ஸர்வேச்வரனிடம் இருப்பதில்லை - என்றார். மேலும் விஷ்ணு புராணம் (6-5-54) - ஸமஸ்த கல்யாண குணாத்மக: அஸௌ – அனைத்துவிதமான திருக்கல்யாண குணங்கள் உடையவன் - என்றது. எம்பெருமான் தோஷங்கள் அற்றவனாகவும், திருக்கல்யாண குணங்கள் நிறைந்தவனாகவும், தாழ்வுகள் – குறைகள் – எண்ணிக்கை ஆகியவற்றுக்கு எதிர்த்தட்டாகவும் உள்ளான் என்று சாஸ்த்ரங்கள் முழங்குகின்றன. இதனைக் கீழே உள்ள பல வரிகளில் காணலாம்:

- ப்ருஹத் உபநிஷத் (6-4-22) - ஏதம் ஹி ஸர்வாணி வாமாநி அபி ஸம்விஸந்தி - அனைத்துக் குணங்களும் அவனில் புகுகின்றன.
- ப்ருஹத் உபநிஷத் (6-4-22) - ஸர்வஸ்ய வசீ ஸர்வஸ்யேசாந: - அனைத்தையும் நியமிப்பவனாகவும், ஆள்பவனாகவும் உள்ளான்.
- சாந்தோக்ய உபநிஷத் (8-1-5) – ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:
- முண்டக உபநிஷத் (1-1-10) - ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் – அனைத்தையும் அறிந்தவன், அனைத்தையும் புரிந்தவன்.
- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-8) - பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஞானபலக்ரியா ச - அவனுக்கு இயல்பாகவே உள்ள சக்தி பலவிதமனது என்று வேதங்கள் கூறுகின்றன. இவை ஞானம், பலம், செயல்கள் முதலானவை.
- ஸுபால உபநிஷத் – மாதா பிதா ப்ராதா நிவஸச் சரணம் ஸுஹ்ருத் கதி நாராயண: - நாராயணனே தந்தை, தாய், சகோதரன், வாழும் இடம், புகலிடம், நண்பன், மற்றும் அடையப்படும் இலக்கு ஆவான்.
- சாந்தோக்ய உபநிஷத் (3-3-14) - ஸர்வகர்மா ஸர்வகந்த: ஸர்வரஸ: - அனைத்து செயல்களையும் உருவாக்குபவன், அனைத்து நறுமணமும் அனைத்துச் சுவையும் அவனே ஆவான்.
- பரமாத்மாவின் ஞானம், சக்தி, பலம், இளமை ஆகிய கல்யாண குணங்கள் அளவில்லாத காரணத்தால் தைத்திரீய ஆனந்தவல்லியில் – அவனது ஆனந்தம் என்ற குணத்தை அளவிட முயன்ற வாக்கும் மனமும் திரும்பிவிட்டதாகக் கூறப்பட்டது
- விஷ்ணு புராணம் (6-5-72) - சுத்யதே மஹா விபூத்யாக்யே – தூய்மையும் அளவற்ற ஆனந்தமும் கொண்டவன் – என்று பகவான் என்னும் பதத்தை விவரிக்கும்போது கூறுகின்றது.

- மஹாபாரதம் – ஸபாபர்வம் - ஞான வ்ருத்யதா மயா ராஜன் பஹவ: பர்யுபாஸிதா: தேஷாம் குணவத்தாம் சௌரே: அஹம் குணவதோ குணாந் ஸமாகதாநாம் அச்ரௌஷம் பஹூந் பஹுமதாந் ஸதாம் குணைரந்யாத் அதிக்ரம்ய ஹரி: அர்ச்சய தமோ மத: - பீஷ்மர், "அரசனே! ஞானத்தில் பழுத்த பல ஞானிகளுக்கு நான் தொண்டு செய்துள்ளேன். அவர்களிடம் இருந்து சௌரியாகிய கண்ணனின்

உன்னதமான பல குணங்களைக் குறித்து கேட்டிருக்கிறேன். மற்ற அனைவரையும் விட இப்படிப்பட்ட குணங்கள் காரணமாக, ஸ்ரீஹரியே ஆராதிக்கத்தகுந்தவன்", என்று பீஷ்மர் கூறுகிறார்.

- மஹாபாரதம் – கர்ணபர்வம் – வர்ஷாயுதைர்யஸ்ய குணா ந சக்யா வக்தும் ஸமேதைரபி ஸர்வலோகை: மஹாத்மாந: சங்கசக்ராஸிபாணே: விஷ்ணோர் ஜிஷ்ணோர் வஸுதேவாத்மஜஸ்ய - வசுதேவரின் புத்திரனும், உயர்ந்தவனும், சங்கு சக்கரம் கதை ஆகியவற்றை ஏந்தியவனும், எங்கும் உள்ளவனும், வெற்றி உடையவனும் ஆகிய கண்ணனின் கல்யாண குணக்கள் எண்ணிக்கையற்றவை ஆகும். இந்த உலகங்களில் உள்ள அனைவரும் ஒன்றாகக் கூடி அமர்ந்து, ஆயிரம் வருடங்கள் தொடர்ந்து கூறினாலும், அவனது அனைத்து குணங்களையும் கூற இயலாது.

- வராஹ புராணம் (73-35) - சதுர்முகாயு: யதி கோடிவக்த்ர: பவேந்நர: க்வ அபி விசுத்யத சேதா: ஸ தே குணாநாம் ஆயுதைகம் அம்சம் வதேந்ந வா தேவவர ப்ரஸீத - தூய்மையான மனம் கொண்ட ஒருவன் கோடிக்கணக்கான நாக்குகள் கொண்டு, நான்முகனின் ஆயுள் உள்ளவரை கூற முயன்றாலும், உன்னுடைய கல்யாண குணங்களில் பத்து ஆயிரத்தில் ஒரு பகுதியையாவது கூற இயலுமோ?

- மத்ஸ்ய புராணம் – யதா ரத்நாநி ஜலதே: அஸங்க்யயாநி புத்ர: ததா குணா ஹி அநந்தஸ்ய அஸங்க்யேயா மஹாத்மந: - கடலுக்கு அடியில் எண்ணற்ற ரத்தினங்கள் உள்ளது போன்று, நித்யமான எம்பெருமானின் குணங்கள் எண்ணற்றவையாகும்.

- வைஷ்ணவ தர்மம் – நஹி தஸ்ய குணா: ஸர்வே ஸர்வை: முநிகுணைரபி வக்த்தும் சக்யா வியுக்தஸ்ய ஸத்வாத்யை: அகிலைர் குணை: - ஸத்வம், ரஜஸ், தமஸ் போன்ற குணங்கள் இல்லாத பரம்பொருளின் குணங்களைப் பற்றி எண்ணற்ற ரிஷிகள் கூற முயன்றாலும், அவர்களால் இயலாது.

பாஸ்கரர் முதலானோர் ப்ரஹ்மம் ஒரு சில உபாதிகள் (limitations – குறைபாடுகள். இவர்கள் கூறும் உபாதிகள் என்பது சரீரம் மற்றும் புலன்களுடன் கூடிய நிலையாகும். அதாவது ப்ரஹ்மம் இவற்றுடன் கூடி ஸம்ஸாரத்தில் உள்ளது என்பதாகும்) காரணமாக ஸம்ஸாரத்தில் ஈடுபடுவதாகக் கூறுகின்றனர். யாதவப்ரகாசர் முதலானவர்கள் மாற்றம் காரணமாக ப்ரஹ்மம் ஸம்ஸாரத்தை அடைகிறது என்றும் கூறுகின்றனர். இவர்கள் கூறுவதை ஏற்றால் ப்ரஹ்மம் அனைத்து விதமான தோஷங்களுக்கும் உட்பட்டது என்றும், மாறுதலுக்கு உட்பட்டது என்றும் ஒப்புக்கொள்ள வேண்டும். இப்படிக் கொண்டால் "பவித்ரம்", "மங்களம்", "பரம்" முதலான திருநாமங்கள் பொருத்தமாகாது.

தைத்திரீய உபநிஷத் (11-9) - யதோ வாசோ நிவர்த்தந்தே - அவனை அடைய இயலாமல் வாக்குகள் திரும்பின – என்று கூறியது. இதன் காரணமாக, வேதங்களால் ப்ரஹ்மத்தைப் பற்றியும், அவனது குணங்களைப் பற்றியும் கூற இயலவில்லை என்று ஒரு சிலர் பொருள் கூறுகின்றனர். இவ்விதம் கூறுவது சரி அல்ல. இவ்விதம் பொருள் கொண்டால், ப்ரஹ்மம் என்பது முயல் கொம்பு போன்று கற்பனையான ஒன்று என்றாகிவிடும். அதே தைத்திரீய உபநிஷத் பகுதியில் - எந்த ப்ரஹ்மத்தின் ஆனந்தத்தில் இருந்து வாக்குகள் திரும்பினவோ - என்று உள்ளது. இதன் மூலம் ப்ரஹ்மத்திற்கு ஆனந்தம் என்றும் உள்ளதாகக் கூறுவதால், இவர்கள் இந்த உபநிஷத் வரிக்குக் கற்பித்த கருத்துடன் முரணாக உள்ளது விளங்குறது. மேலும் ப்ரஹ்மத்தை அடைய இயலாமல் திரும்பிவிட்டதாகக் கூறப்படும் வரிகளும் பொருத்தமற்றுப் போய்விடும். இது தவிர ப்ரஹ்மத்தை விளக்குவதற்காக உள்ள சாஸ்திரங்கள் பயனற்றுப் போய்விடும். அததோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா - ஆகையால் ப்ரஹ்மத்தை அறிவதில் ஆவல் - என்று கூறுவது அவசியம் இல்லாமல் போய்விடும். ஜிதந்தே ஸ்தோத்ரம் – வசஸாம் வாச்யம் உத்தமம் – வாக்குகள் அனைத்திற்கும் உத்தமமான பொருள் யாரோ - என்பது போன்ற வாக்கியங்கள் கோபிக்கும். கடகம் (3-9) - நாவேதவிந்மநுதே தம் ப்ருஹந்தம் – வேதங்களில் ஞானம் இல்லாத ஒருவன் உயர்ந்த அவனை பற்றி அறிய இயலாது – என்று கூறும் வரிகள் பயன் இயலாமல் போய்விடும்.

ப்ரஹ்ம சூத்திரம் (1-1-3) - சாஸ்த்ர யோநித்வாத் - சாஸ்திரங்கள் மூலமே அவனை அறிய இயலும் – என்றது. தைத்திரீய ஆனந்தவல்லீ – சேஷா ஆன்ந்தஸ்ய மீமாம்ஸா பவதீ – அவனது ஆனந்தத்தை அளக்க முற்படுவோம் - என்று தொடங்கி ஒவ்வொரு முறையும் நூறு நூறு மடங்காக ப்ரஹ்மத்தின் ஆனந்தத்தை அளந்து, நான்முகனின் ஆனந்தம் வரை சென்று நிற்கிறது. இப்படியாக ஆனந்தம் பற்றி பலவிதமாகக் கூறப்படுவது ஏன் என்றால், அந்த ஆனந்தம் எல்லையற்றது என்று உணர்த்துவதற்காகவே ஆகும்; அல்லாமல் ஆனந்தம் என்ற குணமே இல்லை என்று மறுப்பதற்கு அல்ல. வேதாந்த சூத்ரக்காரர் (3-2-21) - ப்ரக்ருதைதாவத்தவம் - என்று அருளிச்செய்தார். ஆகவே என்னுடைய தந்தை ( கூரத்தாழ்வாரன்) – ச்ருதிஸ்தவாநந்தமுகாந் ஹரேர்குணாந் இயதத்த்யா மாதுமிவோத்யதா ஸதீ உவாச வாசோ மநஸா ஸஹோசிதாம் நிவ்ருத்திம் ஏவத்வ வதேரஸம்பவாத் - வேதங்கள் அவனது குணங்களையும், ஆனந்தத்தையும் அளக்க முற்பட்டு, அவற்றுக்கு எல்லை காண இயலாமல், வாக்கும் மனமும் திரும்பின - என்றார். இதன் மூலம் – ந யத்ர நாத வித்யந்தே நாம ஜாத்யாதி கல்பநா: - எம்பெருமானே! பெயர், குலம் போன்ற கற்பனைப் பொருள்கள் ஏதும் உன்னிடம் இல்லை - என்று வரிக்கு (அவை உண்டு என்று) பொருள் உறைக்கப்பட்டது.

நாமம், ஜாதி முதலானவை கற்பனை இல்லை என்று கூறியதால், அவை உண்டு என்றே ஆகியது. இந்த வாக்கியமே அவர்களது கழுத்துக்குத் தூக்குக் கயிராகிறது. நாமம் இல்லை என்று கூறிவிட்டு, அந்த வரியில் "நாத" என்று ஏன் அழைக்கவேண்டும்? இதன் மூலம் புலன்களுக்கு அப்பால் இருந்தாலும், நமது சொற்கள் எட்டும் தூரத்திலேயே அவன் உள்ளான் என்றாகிறது. ஆக வேத வரிகள் கூறுவது - சொற்கள் மூலம் அவனை

வரையறுத்துக் கூற இயலாது என்பதே ஆகும். அவன் அவனுக்கு மட்டுமே உரியதான, மற்ற யாருக்கும் கூற இயலாததான திருநாமங்களால் போற்றப்படுகிறான். இதனை விஷ்ணு புராணம் (5-2-19) - நாம கர்ம ஸ்வரூபாணி ந பரிசேத் கோசரே - யாருடைய பெயர், செயல், ரூபம் ஆகியவை எல்லையை அறியாதோ, அவன் உனது கருவில் உள்ளான் – என்றது.

ஒரு சிலர் திருநாமங்களில் உள்ள ஒவ்வொரு திருநாமத்தையும் பல்வேறு பகுதியாகப் பிரித்து, அதன் மூலம் அந்தத் திருநாமங்கள் எதனை உணர்த்துகின்றன என்பதை அந்தந்த பகுதிகள் மூலம் கூற இயலாது - என்று வாதாடலாம். மேலும் இவர்கள் கூறுவது - இங்கு திருநாமங்கள் மூலம் எம்பெருமானின் குணங்கள் குறித்து நமக்கு உபதேசிக்க முயற்சிக்கவில்லை - என்பதாகும். இந்தக் கருத்து மிகைப்படுத்தப்பட்ட ஒன்று என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். காரணம், ஒவ்வொரு திருநாமமும் உயர்ந்த ஒரு பொருளை அளிப்பதாகவே உள்ளது. மேலும் இவற்றைத் தள்ளலாம் என்பதற்கு எந்த ப்ரமாணமும் இல்லை. தவிரவும், இந்தத் திருநாமங்களை பீஷ்மர் – யாநி நாமாநி கௌணாநி - என்றே போற்றுகிறார்.

விஷ்ணு ஸூக்தம் – ஆஸ்ய ஜாநந்தோ நாம சித் விக்தேந – யார் ஒருவன் திருநாமத்தில் ஒன்றையாவது பிரித்து ஆராய்கிறானோ – என்றது. ஆக எம்பெருமானின் திருநாமங்களை உச்சரித்தல் என்பது, அவனது பல்வேறு குணங்களை நமக்கு ஞாபகப்படுத்தவே ஆகும். இந்தத் திருநாமங்கள் சாஸ்திரத்தில் உள்ள மந்திரங்கள் போன்று, சாஸ்திரங்களில் கூறப்பட்ட குணங்களை மட்டுமே நமக்கு உணர்த்துவதாக உள்ளன. இதனால், அந்த ப்ரஹ்மத்திற்கு உள்ள குணங்கள் இல்லை என்று ஆகிவிடாது. இதனால்தான் இந்த ஸஹஸ்ரநாமத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும், எம்பெருமானின் குணங்களைக் கூறுவதாக உள்ளது. ஸஹஸ்ரநாமத்தின் நடுப்பகுதியில் அந்தக் குணங்களை நினைவில் வைத்துக் கொள்வதற்காக, திருநாமங்கள் கூறப்பட்டுள்ளதன. இந்தத் திருநாமத்தி ஒன்றையாவது உச்சரித்தாலே போதுமானது, அனைத்து பலன்களையும் அளிப்பதாக அது உள்ளது. இப்படி எந்த ஒரு திருநாமத்தை எடுத்துக் கொண்டாலும், அது பன்னிரண்டு எழுத்து மந்திரமாகவும் (ஓம் நமோ பகவதே வாஸுதேவாய), எட்டு எழுத்து மந்திரமாகவும் (ஓம் நமோ நாராயணாய), ஆறு எழுத்து மந்திரமாகவும் (ஓம் நமோ விஷ்ணவே) உள்ளது. ஒரு மந்திரத்தை மூல மந்திரமாகவும் மற்றவற்றை அங்கமாகவும் கொள்ளலாம். இதனை ஸ்ரீமத்பாகவதமும் கூறுகிறது.

விஷ்ணு ஸூக்தம் – நாம சித் விவக்தேன – என்பதன் மூலம் இது உணர்த்தப்படுகிறது. இந்தத் திருநாமங்களின் பொருளைக் கூறித்து விவரிக்கப்பட்டுள்ள மஹாபாரதத்தின் அத்யாயங்களில், திருநாமங்களைப் பொருள் அறியாமல் உச்சரித்தாலே போதுமானது என்று கூறப்பட்டாலும், அவற்றை நன்கு ஆராய்வதன் மூலமே, எம்பெருமானின் குணங்கள் குறித்து நன்கு அறிந்து, மனத் தெளிவும் பெற இயலும்.

மஹாபாரதம் சாந்தி பர்வம் – அஸ்தௌஷீத் நாமபி: வ்யாஸ: ஸா விஷ்யோ மதுஸூதநம் ஏஷாம் நிருக்தம் பகவந் பரமம் வக்தும் அர்ஹஸி சுச்ருஷோ: ச்ரத்ருதாநஸ்ய ப்ரஜாபதிபதே: ஹரே: ச்ருத்வா பவேயம் யத் பூத சரத் சந்த்ர இவாமல: - வ்யாசர் தன்னுடைய சீடர்களுடன் சேர்ந்து மதுசூதனின் திருநாமங்களைக் கூறி புகழ்ந்துள்ளார்; அந்தத் திருநாமங்களின் முக்கியத்வத்தைப் பற்றி எனக்குக் கூறுவதற்கு நீங்கள் மனம் வைக்கவேண்டும்; அவற்றைக் கேட்பதில் நான் ஆவலாக உள்ளேன்; நான்முகனையே படைத்த ஸ்ரீஹரியின் திருநாமங்களைக் கேட்பதன் மூலம் தோஷத்துடன் கூடிய சந்திரன் போன்று அல்லாமல், நான் தூய்மை அடைவேன் – என்றது.

மஹாபாரதம் (உத்யோக பர்வம்) – பூயோ மே புண்டரீகாக்ஷம் ஸஞ்ஜய ஆசக்ஷ்வ ப்ருச்சதே நாம கார்மார்த்தவித் தாத பாப்நுயாம் புருஷோத்தமம் – த்ருதராஷ்ட்ரன் சஞ்சயனிடம், "தந்தை போன்றவனே! தாமரை போன்ற கண்கள் கொண்ட க்ருஷ்ணனைப் பற்றி மீண்டும் எனக்குக் கூறுவாயாக. அவனது திருநாமங்களின் பொருள்களையும், அவனது செயல்களையும் அறிவதன் மூலம் நான் அவனையே அடைய இயலும் – என்றது. இந்தத் திருநாமங்களை விநியோகிக்கின்ற முறை பற்றி உத்யோக பர்வம், மோக்ஷ தர்மம் மற்றும் வைஷ்ணவ தர்மம் முதலானவற்றில் இருந்தும், ஒவ்வொரு திருநாமத்தை உச்சரிக்கும்போது செய்யப்பட வேண்டிய ஜபம் பற்றியும் வேறு பல நூல்களில் இருந்து அறிந்து கொள்ளலாம்.

ஹரித வம்சத்தின் ஒளியாக உள்ளவரும், ஸ்ரீவத்ஸாங்கர் என்பவரின் புத்திரரும், ஸ்ரீரங்கநாதனால் பராசரபட்டர் என்று திருநாமம் சூட்டப்பட்டவரும் ஆகிய ரங்கநாதனால், ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு இயற்றப்பட்ட ஸ்ரீ பகவத் குண தர்ப்பணம் என்னும் வ்யாக்யானத்தின், உபோத்காத அதிகாரம் ஸம்பூர்ணம்.

## 1. விச்வம்

முழுமையாக உள்ளவன். முதலில் எம்பெருமான் அனைத்து விதத்திலும் பூர்ணமாக உள்ள தன்மையைக் கூறுகிறது. இந்தத் திருநாமம் விச் என்ற மூலத்திலிருந்து, அனைத்து அவயவங்களிலும் ப்ரவேசிக்கிறான் என்ற பொருளில் வந்தது. மஹாபாரதம் மோக்ஷ தர்மத்தில் – வேசநாத் விச்வமித்யாஹு: லோகாநாம் காசிஸத்தம லோகாம்ச்ச விச்வம் ஏவ இதி ப்ரவதந்தி நராதிப – காசி அரசனே! அனைத்து உலகங்களிலும் ப்ரவேசிப்பதால் எம்பெருமானை விச்வம் என்கின்றனர். இதனால் அந்த உலகங்களையும் விச்வம் என்கின்றனர் – என்று உள்ளது. எம்பெருமான் தன்னுடைய ஸ்வரூபம், ரூபம், குணம் மற்றும் விபவம் ஆகிய அனைத்தையும் இயல்பாகக் கொண்டுள்ளான். இவற்றை முழுமையாகவும் பூர்ணமாகவும் கொண்டுள்ளான். இவற்றைப் போன்று வேறு யாருக்கும் இவை இப்படியாக இல்லை. இவனை விட உயர்ந்தவர்களும் இந்த விஷயங்களில்

இல்லை. இவை அனைத்தும் மங்களகரமாக உள்ளன. விச்வம் என்பது முழுமையைக் குறிக்கும். எல்லையற்ற குணங்கள் கொண்ட பகவானை இப்படி முதலில் கூறியது பொருத்தமே ஆகும்.

இங்கு விச்வம் என்பது ஆண் பாலாகவும், பெண் பாலாகவும் வரவில்லை (neuter gender). இது விஷ்ணுவைக் குறிப்பதால் ஆண்பாலாக இருக்கலாம் என்ற சிலர் எண்ணக்கூடும். ஆனால் ஒரு சொல்லின் பால் என்பது, உபயோகத்தால் வருவது அல்லாமல் இலக்கணத்தினால் மட்டுமே அல்ல. இதனை அஷ்டாத்யாயி – ததிசிஷ்யம் ஸஜ்ஞா ப்ரமாணத்வாத் – என்றது.

விச்வம் என்று பதம் பொதுவாக காரியத்தைக் குறிக்கிறது. ஆனால் இங்கு காரணத்தைக் குறிப்பதாக உள்ளது என்று சிலர் கூறுகின்றனர். இது சரியான வாதம் அல்ல. காரணம் - எம்பெருமானே அனைத்து திருநாமங்களுக்கும் மூலமாக, சொல் இலக்கணம் ரீதியாகவும் உபயோக ரீதியாகவும் விளங்குகிறான். அப்படி உள்ளபோது, இந்தத் திருநாமங்களின் இரண்டாம் பட்சமாக எம்பெருமானைக் கொள்ள இயலாது.

ஒரு சிலர் விச்வம் என்றால் ப்ரஹ்மத்திற்கும் உலகத்திற்கும் உள்ள ஒற்றுமையைக் கூறுகிறது என்று வாதாடாலாம். இது சரியான வாதம் அல்ல. விச்வம் என்பது ஒற்றுமையைக் குறிக்கவில்லை. "தத்வம் அஸி" என்னும் உபநிஷத் வாக்யத்தில் கூறப்பட்டபடியே இங்கும் ஒற்றுமை கூறப்பட்ட்து என்று வாதாடலாம். இந்த வாதம் இங்கு பொருந்தாது. இந்த இரண்டு சொற்களுக்கும் இடையே பொருத்தம் இல்லை. மேலும், பொதுப்பெயர்கள் அனைத்தும் தனித்தனியாகவே கொள்ளப்பட்ட வேண்டும். அவற்றில் ஒற்றுமை காண இயலாது. மேலும் பெயர்களில் பால் வித்யாசம் உண்டு. உதாரணமாக, விச்வம் என்பது பொதுப்பாலாகவும், விஷ்ணு என்பது ஆண்பாலாகவும் உள்ளதைக் காணலாம். இப்படியாக ஒற்றுமை குறித்துக் கூறப்படும் அனைத்து வாதங்களும் நம்மால் முன்பே பல இடங்களில் மறுக்கப்பட்டன. இங்கு கூறப்பட்ட பூர்ணத்வம் என்பது, "விஷ்ணு" என்று தொடங்கி, அனைத்து திருநாமங்களிலும் விவரிக்கப்படுகின்றன.

## 2. விஷ்ணு

விஷ்ணு தன்னுடைய விபூதிகள் அனைத்திலும் ப்ரவேசிப்பவன்; சித் மற்றும் அசித் என்று உள்ள தன்னுடைய விபூதிகளில் ப்ரவேசிப்பவன். இதனை ச்ருதி கீழே உள்ளபடி கூறுகிறது.

- தைத்திரீய நாராயணவல்லீ - விவேச பூதாநி சராசராணி – அசையக்கூடியவை, அசையாமல் உள்ளவை என்று அனைத்திலும் ப்ரவேசித்தான்.

- தைத்திரீய ஆரண்யகம் – ததேவானுப்ராவிசத் - அதற்குள்ளே ப்ரவேசித்தான்.

- வ்யாப்ய ஸர்வாந் இமான் லோகாந் ஸ்தித: ஸர்வத்ர கேசவ: ததச்ச விஷ்ணுநாமா அஸி விசேர்த்தாதோ: ப்ரவேசநாத் – அனைத்திலும் கேசவன் ப்ரவேசித்ததால் அவன் எங்கும் உள்ளான்; ஆகவே உனது திருநாமம் விஷ்ணு ஆகும்.

விஷ்ணு என்பது ப்ரவேசித்தல் என்பதைக் கூறும் தாதுவான விச் என்பதிலிருந்து வருகிறது. விஷ்ணு என்ற பதம், விச் என்ற தாதுவுடன் க்னு என்பதைச் சேர்த்து வெளிப்படுகிறது. இதன் மூலம் ப்ரவேசித்தல் என்பது இவனுக்கு எப்போதும் உள்ளதைத் தெரிவிக்கிறது. இந்த மேன்மை இவனுக்கு இயல்பாகவே உள்ளது. முதல் திருநாமம் ஆகிய விச்வம் என்பது பூர்ணத்வத்தையும், இரண்டாவது திருநாமம் ப்ரவேசித்தலையும் விளக்குவதால், புனருக்தி என்னும் கூறியது கூறல் என்ற தோஷம் இல்லை.

## 3. வஷட்கார:

ஆகாயம் எங்கும் ப்ரவேஸித்திருப்பது போன்று அல்லாமல், இவன் எங்கும் ப்ரவேஸித்திருப்பதன் பயன் கூறப்படுகிறது. அனைத்தையும் தன் வசமாக்கிக் கொள்கிறவன் என்பதால் வஷட்கார என்று வந்தது. இதன் தாதுவான வஸ் என்பது காந்தியைக் (தேஜஸ்) குறிக்கும். இதனுடன் அட் என்பது சேர்க்கப்பட்டுள்ளது. ஸ என்பதற்குப் பதில் தாதுவில் ஷ என்பது உள்ளது. ப்ருஹத் உபநிஷத் (6-4-22) – ஸர்வஸ்ய வசீ ஸர்வஸ்ய ஈசாந: - அனைத்தையும் வசப்படுத்துவன், அனைத்தையும் ஆள்பவன் - என்றது. மஹாபாரதம் – ஜகத்வசே வர்த்தேதம் – இந்த உலகம் அவனது கட்டுப்பாட்டில் உள்ளது – என்றது.

## 4. பூத பவ்ய பவத்ப்ரபு:

மூன்று உலகங்களுக்கும் எஜமானனாக உள்ளான். ப்ரபு என்றால் ஸ்வாமி மற்றும் சேஷி (எஜமானன்) என்றாகிறது. அஷ்டாத்யாயி – விப்ரஸம்பயோ டு அஸங்ஞாயாம் – என்றது. அதாவது, பூ முதலான தாதுக்களில் வி, ப்ர முதலான ப்ரயோகங்கள் முன்னோ பின்னோ வருமாயின், டு என்பது சேர்க்கப்படவேண்டும். எனவே இங்கு டு என்பது (பூ+த) சேர்க்கப்பட்டது. சாஸ்த்திரங்கள் கிழே உள்ளபடிக் கூறுகின்றன:

- தைத்திரீய நாராயணவல்லீ (11) - பதிம் விச்வஸ்ய – உலகின் நாயகன்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-7) – பதிம் பதீநாம் – நாயகர்களின் நாயகன்.

- தைத்திரீய ஸம்ஹிதை (4-1-8) - பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத் – அனைத்து உயிர்களின் ஒரே எஜமானன்.

- புருஷஸூக்தம் – தத் புருஷஸ்ய விச்வம் - இந்த உலகம் அந்தப் புருஷனுடையது.

- தைத்திரீய ஸம்ஹிதை (4-18) – யஸ்யேமா: ப்ரதிச: - அனைத்து திசைகளும், பாகங்களும் அவனுடையதே.

- மஹாபாரதம் ஸபா பர்வம் (38-23) - க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதம் இதம் விச்வம் சராசரம் - அசையும், அசையாப் பொருள்களைக் கொண்ட இந்த உலகம் க்ருஷ்ணனுக்காகவே உள்ளது.

- மஹாபாரதம் ஸபா பர்வம் (31-11) – பூத பவ்ய பவந்நாத: கேசவ: கேசிஸூதன: - கேசியை அழித்த கேசவனே மூன்று காலங்களுக்கும் எஜமானன்.

- ஸஹஸ்ரநாமம் - ஜகந்நாதஸ்ய பூபதே - அரசனே! அவனே உலகின் எஜமானன்.

இது போன்றே மேலும் பல வரிகளும் கூறுகின்றன. அடுத்து உள்ள ஐந்து திருநாமங்கள் அவனுடைய சேஷத்வத்தை (எஜமானத்தன்மை) விளக்குகின்றன.

## 5. பூதக்ருத்

அனைத்தையும் எம்பெருமான் எதனுடைய உதவியும் இன்றி, எதனையும் சார்ந்து இராமல் உருவாக்கிறான் என்பதை இந்தத் திருநாமம் கூறுகிறது. ச்ருதிகள் கீழே உள்ளபடி முழங்குகின்றன:

- ஸர்வம் ஹி ஏதம் ப்ரஹ்மணா ஹி ஏவ ஸ்ருஷ்டம் – இவை அனைத்தும் ப்ரஹ்மத்தால் படைக்கப்பட்டன.

- தைத்திரீய ப்ருஹு - யதோ வா இமாநி – அவனில் இருந்து அனைத்தும் தோன்றின.

## 6. பூதப்ருத்

அனைத்தையும் ஆதாரமாகத் தாங்கி நிற்பவன்.

- தைத்திரீய நாராயணவல்லீ (1) – விச்வம் பிபர்த்தி புவநஸ்ய நாபி: - இந்த உலகைத் தாங்கி நிற்கிறான், இந்த உலகத்தின் நாபியாக உள்ளான்.

- கௌஷீதகீ உபநிஷத் (3-9) – தத் யதா ரதஸ்யாரேஷு நேமிர்பிதா நாபாவரா அர்பிதா: ஏவம் ஏவ ஏதா பூதமாத்ரா: ப்ரஜ்ஞாமாத்ராஸு அர்பிதா: ப்ரஜ்ஞாமாத்ரா: ப்ராணேஷ்வர்ப்பிதா: - தேர் ஒன்றின் சக்கரம் குறுக்குக் கம்பிகளில் தாங்கப்படுகிறது; குறுக்குக் கம்பிகள் சக்கரத்தின் அச்சில் தாங்கப்படுகிறது. இது போன்று ஸூக்ஷ்மமான இந்த உடலில் உள்ள பஞ்சபூதங்கள் ஜீவனால் தாங்கப்படுகின்றன; ஜீவன் ப்ராணனாகிய எம்பெருமானால் தாங்கப்படுகிறான்.

- தைத்திரீய ஸம்ஹிதை (4-1-8) – ஸ தாதார ப்ருதிவீம் – அவன் இந்த உலகைத் தாங்குகிறான்.

- ஸ்ரீமத் பகவத் கீதை (15-17) - பிபர்த்தி அவ்யய ஈச்வர: - அழிக்க முடியாத ஸர்வேச்வரன் உலகைத் தாங்குகிறான்.

## 7. பாவ:

இருப்பவன். தோகை விரித்த மயில் போன்று, இதுவரை கூறப்பட்ட அனைத்து ஐச்வர்யங்கள், இனி கூறப்பட உள்ள ஐச்வர்யங்கள் ஆகியவற்றைக் கொண்டுள்ளான். அஷ்டாத்யாயி (3-1-143) – பவதேச்ச இதி வக்தவ்யம் – இந்தப் பதம் "பூ" என்ற தாதுவில் "ந" என்று எழுத்து சேர்த்து வந்தது. அனைத்தும் அவனது ப்ரகாரமாக உள்ளதாலும், அனைத்திலும் ஆதாரமாக உள்ளதால் அனைத்தையும் கொண்டதாலும், அனைத்தும் இவனது விபூதிகள் எனப்பட்டன.

## 8. பூதாத்மா

அனைத்தின் ஆத்மா. அனைத்தும் எம்பெருமானின் உடைமையாக உள்ளதாலும், இவன் அனைத்தையும் உடையவனாக இருப்பதாலும் - அனைத்தும் இவனது சரீரமாக உள்ளன; இவன் அனைத்தின் ஆத்மாவாக உள்ளான். ஜீவாத்மா ஒரு சரீரத்தில் புகுந்து, அதனை நியமித்து, அதனைச் செயல்படுத்துவதால் அந்தக் குறிப்பிட்ட சரீரத்தின் ஆத்மா எனப்படுகிறது. ஆனால் பரமாத்மா இவற்றை அனைத்திலும் செய்கிறான். ஜீவாத்மாவிற்கும், அந்த ஜீவாத்மா உள்ள சரீரத்திற்கும் இருக்கும் உறவு முறை, அந்த ஜீவனுக்கு அதன் சரீரத்தின் மனைவி புத்திரன், வீடு முதலானவற்றுக்கு உள்ளதை விட வேறுபட்டது, மிகவும் நெருக்கமானது ஆகும். இதனை வேதங்களிலும் புராணங்களிலும் காணப்படும் வரிகள் மூலம் உணரலாம்:

- ப்ருஹத் உபநிஷத் (3-7-3) - ய: ப்ருதிவ்யாம் திஷ்டந் – யார் பூமியில் உள்ளானோ
- ப்ருஹத் உபநிஷத் (மாத்யம்) – ய: ஆத்மநி திஷ்டந் - யார் ஆத்மாவில் உள்ளானோ
- ப்ருஹத் உபநிஷத் (3-7-3) – யஸ்ய ப்ருத்வீ சரீரம் - யாருக்கு பூமி சரீரமோ
- ப்ருஹத் உபநிஷத் (மாத்யம்) – யஸ்ய ஆத்மா சரீரம் – யார் ஆத்மாவில் உள்ளானோ
- ஸுபால உபநிஷத் (7) – ஏஷ ஸர்வ பூத அந்தராத்மா – அனைத்திற்கும் அவனே அந்தர்யாமி
- இராமாயணம் யுத்தகாண்டம் (120-25) - ஜகத் ஸர்வம் சரீரம் தே - இந்த உலகம் முழுவதும் உனது சரீரம்
- விஷ்ணு புராணம் (1-22-86) – தாநி ஸர்வாணி தத்வபு: - இவை அனைத்தும் அவனது சரீரம்
- விஷ்ணு புராணம் (1-22-38) - தத் ஸர்வம் வை ஹரேஸ்தநு: - இவை அனைத்தும் ஸ்ரீஹரியின் சரீரம்

## 9. பூதபாவந:

அனைத்தையும் வளர்ப்பவன். அனைத்தையும், அவற்றுக்குத் தேவையானவற்றை அளித்து வளர்ப்பவன், போஷாக்கு அளிப்பவன், அவற்றின் இன்பத்திற்கு வழி செய்பவன். "ல்யு" என்பது நந்தி என்ற பதத்தின் பின்னே சேர்க்கலாம் என்பதை அஷ்டாத்யாயி (3-1-134) – நந்த்யாதிப்யோ ல்யு: - கூறியது. அதாவது, "ல்யு"என்பது செயல் புரிவதைக் குறிக்கும் வகையில் சேர்க்கப்பட்டது என்பதை அஷ்டாத்யாயி (3-3-113) – க்ருத்ய லீயூடோ பஹுலம் – என்றது. பாவந: (32), ப்ரதர்த்தந: (60) ஆகிய இரண்டு திருநாமங்களும் ல்யுட் என்பது சேர்க்கப்பட்டவையாகக் கொள்ளவேண்டும். கீழே உள்ள வரிகள் காண்க:

- கீதை (10-15) - பூத பாவந பூதேச: – உலகைத் தாங்குபவன், உலகின் நாயகன்
- ப்ருஹத் உபநிஷத் (4-4-22) - ஏஷ பூதபால: - அனைத்தையும் காப்பவன்

இப்படியாக அவனது சேஷித்வம் (எஜமானத்தன்மை) என்பது ஸ்ருஷ்டி செய்பவன், தாங்குபவன், நியமிப்பவன், காப்பவன் என்ற செயல்கள் மூலம் வெளிப்படுகிறது. சேஷி என்ற பதம் யார் ஒருவனுக்காக ஒரு பொருள் படைக்கப்பட்டதோ, காக்கப்பட்டதோ

அவனைக் குறிக்கும். பூர்வ மீமாம்சை (3-3-1) – சேஷ: பரார்த்தத்வாத் - எது மற்றதற்காக உள்ளதோ அது சேஷ (அடிமை) எனப்படும் - என்றது.

## 10. பூதாத்மா

தூய்மையானவன். பகவான் அனைத்து வஸ்துக்களின் அந்தர்யாமியாக உள்ளபோதிலும், அவன் சாதாரண ஜீவன் போன்று, தனது சரீரமாக உள்ள சேதன அசேதனங்களின் தோஷங்களால் பீடிக்கப்படாதவன் ஆவான். அவன் இயல்பாகவே தூய்மையானவன் ஆவான். ஒரு உடலைப் பொறுத்தவரை, அந்த உடலில் பரமாத்மா, ஜீவாத்மா என்ற இருவரின் இருப்பு பொதுவாகவே உள்ளது. இருந்தாலும் ஜீவாத்மா மட்டுமே தனது கர்மத்திற்கான பலனை அனுபவிகிறான், துன்பமும் அடைகிறான். தைத்திரீய நாராயணவல்லீ (10-5) – ஜஹாத்யேநாம் முக்தபோகாம் அஜ: அந்ய: – பிறப்பற்ற ஜீவன் அனுபவித்த பின்னர் கிளம்புகிறான்; பரமாத்மாவோ அனுபவிப்பதுடன் நிற்காமல் ஒளி வீசுகிறான் - என்கிறது. இதனை ஓர் உதாரணம் மூலம் அறியலாம். ஓர் ஆசிரியர் மாணவனைப் பிரம்பால் அடிக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். பிரம்பைத் தொடுதல் என்பது ஆசிரியருக்கும் மாணவனுக்கும் பொதுவாகவே உள்ளது. ஆயினும், அடிபட்டதன் காரணமாத் துன்பப்படுவது மாணவனே அன்றி ஆசிரியர் அல்ல. கீழே உள்ள பல வரிகள் காண்க:

- முண்டக உபநிஷத் (3-1-1) - அநச்நந் அந்யோ அபிசாகசீதி - உண்ணாத அந்தப் பறவை ஒளிர்ந்தபடி இருக்கிறது.
- ஸுபால உபநிஷத் (3-3) - ஏஷ ஸர்வ பூத அந்தராத்மா அபஹதபாப்மா - இவனே அனைத்திற்கும் ஆத்மா, பாவங்கள் அற்றவன்.
- கீதை (4-11) - ந மாம் கர்மாணி லிம்பந்தீ – நான் கர்மங்களால் பாதிக்கப்படுவதில்லை
- மஹாபாரதம் சாந்தி பர்வம் (340-26) - பச்ய தேவஸ்ய மஹாத்ம்யம் மஹிமாநம் ச நாரத சுப அசுபை: கர்மபிர்யோ ந லிப்யதி கதாசந - நாரதா! கர்மங்களாலும், நன்மை தீமைகளாலும் பாதிக்கப்படாத பரமாத்மாவின் உயர்வையும் மேன்மையையும் காண்பாயாக.
- ப்ரஹ்ம சூத்திரம் (1-2-8) - ஸம்போக ப்ராப்தி: இதி சேத்ந வைசேஷ்யாத் – அவன் இயல்பாகவே அனைவரையும் விட உயர்ந்தவன்.

## 11. பரமாத்மா

அனைத்து உயிர்களும் இவனைத் தங்களது ஆத்மாவாகக் கொண்டுள்ளது போன்று, இவன் எதனையும் தனது ஆத்மாவாகக் கொள்ளாதவன் ஆவான். எனவே இவன் பரமாத்மா எனப்படுகிறான். பரம் என்ற பதம் "பர: மா அஸ்ய" – இவனை விட உயர்ந்தவன் இல்லை – என்பதிலிருந்து வந்ததாகும். ப்ருஷோதரா என்ற பதத்திலிருந்து இலக்கண ரீதியாக சரியான முறையில் வெளி வந்த சொல் "பரம்" என்பதாகும். பரம் என்பது பகவான், ஆத்மா என்பது ஆத்மாவாகும். ஆக இவனை விட உயர்ந்தவர்களோ, இவனை நியமிப்பவர்களோ இல்லை என்றாகிறது. கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய நாராயணவல்லி (11) - ஆத்மேச்வரம் – அவனே அவனது ஆத்மாவின் ஈச்வரன்
- தைத்திரீய ஸம்ஹிதை (2-8-9) - தஸ்மாத் ஹ அந்யத்ர பர: கிஞ்சநாஸ – அவனை விட உயர்ந்தவர்கள் யாரும் இல்லை.
- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-8) - ந தத் ஸமச்ச அப்யதிகச்ச த்ருச்யதே – அவனுக்கு சமமானவர்களையும், உயர்ந்தவர்களையும் காணமுடியாது.
- ச்வேதாஸ்வதர உபநிஷத் (3-9) - யஸ்மாத் பரம் ந அபரம் அஸ்தி கிஞ்சித் - அவனை விட உயர்ந்தது எதுவும் இல்லை.
- மஹாபாரதம் பீஷ்மபர்வம் (62-2) – ந பரம் புண்டரீகாக்ஷாத் த்ருச்யதே பரதர்ஷப – பரத குலத்தில் சிறந்தவனே! செந்தாமரைக் கண்கள் கொண்ட கண்ணனைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் யாரும் இல்லை.
- மஹாபாரதம் பீஷ்மபர்வம் (67-18) - பரம் ஹி புண்டரீகாக்ஷாத் ந பூதம் ந பவிஷ்யதி – செந்தாமரைக்கண்ணனை விட உயர்ந்தவற்றைக் காணவும் இல்லை, காணப் போவதும் இல்லை
- மஹாபாரதம் – ந தைவம் கேசவாத் பரம் - கேசவனை விட உயர்ந்த தெய்வம் இல்லை
- யஸ்மாத் பரஸ்மாத் புருஷாத் அநந்தாத் அநாதிமத்யாத் அதிகம் ந கிஞ்சித் - தொடக்கம், மத்தி, முடிவு இல்லாத பரமாத்மாவை விட உயர்ந்தது ஏதும் இல்லை
- கீதை (7-7) - மத்த: பரதரம் ந அந்யத் கிஞ்சித் அஸ்தி - என்னை விட உயர்ந்தவர்கள் யாரும் இல்லை

- பரம் ஹி அம்ருதம் ஏதஸ்மாத் விச்வரூபாத் ந வித்யதே - விஸ்வரூபம் எடுத்த எம்பெருமானை விட உயர்ந்த அமிர்தம் இல்லை
- விஷ்ணு புராணம் (1-2-10) - பர: பராணாம் பரம: பரமாத்மா - உயர்ந்தவற்றை விட உயர்ந்தவன், மிக உயர்ந்தவன், மிக உயர்ந்த ஆத்மா.

## 12. முக்தாநாம் பரமாகதி:

**குறிப்பு** – இந்தத் திருநாமத்தின் பாஷ்யம் சற்றே விரிவாக உள்ளதைக் காணாலாம். அத்வைதம் முதலான பல வாதங்களைத் தள்ளி, தனது கருத்துக்களைப் பட்டர் இங்கு நிரூபிக்கிறார்.

அனைவர்க்கும் உயர்ந்த எஜமானனாக உள்ள அவனே அடையப்படும் இலக்காக உள்ளான். முக்தி பெற்ற ஜீவன்கள் அடையும் இலக்காக இருக்கிறான். அறியாமை காரணமாக கர்ம பந்தங்களில் சிக்கி, அதிலிருந்து முற்றிலுமாக விடுபட்டவர்களே முக்தர்கள் எனப்படுகின்றனர். கீழே உள்ள வரிகள் காண்க:

- கௌஷீதகீ உபநிஷத் (1-4) - தத் ஸுக்ருத துஷ்க்ருதே தூநுதே - உபாஸகன் தனது புண்ணிய பாவங்களை உதறுகிறான்.
- சாந்தோக்ய உபநிஷத் (8-13-1) - அச்வ இவ ரோமாணி விதூய பாபம் – குதிரை தனது பிடரி முடியை உதறி தூசிகளைத் தள்ளுவது போன்று, இவன் தனது பாவங்களைத் துறக்கிறான்.
- முண்டக உபநிஷத் (3-1-3) – புண்ய பாபே விதூய - புண்ணியத்தையும் பாவத்தையும் தள்ளுகிறான்.
- முண்டக உபநிஷத் (3-2-1) - ததா வித்வான் நாம ரூபாத் விமுக்த: - நன்கு அறிந்த உபாஸகன் நாம ரூபங்களில் இருந்து விடுபடுகிறான்.
- ச்வேதாஸ்வதர உபநிஷத் (1-4) - ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை: - எம்பெருமானை அறிந்தவுடன் பந்தங்களில் இருந்து விடுபடுகிறான்.
- முண்டக உபநிஷத் (2-2-8) – பித்யதே ஹ்ருதய க்ரந்தி: - இதயத்தைப் பிணைக்கும் முடிச்சு அவிழ்கிறது.

- கீதை (7-14) - மாயாமேதாம் தரந்தி தே - ஸம்ஸாரமாகிய மாயையைக் கடக்கின்றனர்.
- மஹாபாரதம் சாந்தி பர்வம் (335-40) – ஏ ஹீநா: ஸப்ததசாபி: குணை: கர்மபிரேவ ச கலா: பஞ்சதசா த்யக்த்வா தே முக்தா இதி நிச்சய: - பதினேழு குணங்கள் மற்றும் கர்மங்களுடன் உள்ள ஒருவன் அவற்றைக் கைவிடும்போது, பதினைந்து கலைகளைக் கைவிட்டவனாக, முக்தி அடைந்தவனாக ஆகிறான் என்பது நிச்சயம் – என்றது

யார் ஒருவன் ஸம்ஸாரத்தின் பிடியில் இருந்து விடுபடுகிறனோ அவன் மிக உயர்ந்த ஆத்மாவான ஸர்வேச்வரனை ஒத்த நிலையை அடைகிறான் என்று வேதங்கள் கூறுகின்றன. ஒத்த நிலை என்பது – எல்லையற்ற ஞானம், ஆனந்தம், பாவங்கள் அற்ற தன்மை தொடக்கமாக ஸத்யஸங்கல்பம் உள்ளிட்ட எட்டு குணங்கள் போன்றவையாகும்.

- சாந்தோக்ய உபநிஷத் (8-12-5) - திவ்யேந சக்ஷுஷா மனஸா ஏதாந் காமாந் பச்யந் ரமதே – விரும்பிய பொருளைத் தனது திவ்யமான கண்ணாலும் மனதாலும் கண்டு மகிழ்கிறான்.
- முண்டக உபநிஷத் (3-1-3) – நிரஞ்ஜந: பரமம் ஸாம்யம் உபைதி - பாவங்கள் நீங்கப் பெற்று பரமாத்மவைப் போன்று ஆகிறான்.
- கீதை (14-2) - மம ஸாதர்ம்யம் ஆகதா – என்னைப் போன்றே ஆகின்றனர்.
- ப்ரஹ்மசூத்திரம் (4-4-7) – ஏவம் அபி உந்யாஸாத் பூர்வபாவாத் அவிரோதம் பாதராயண: - முக்தி பெற்ற ஜீவன்கள் தங்களது சரீரத்தில் ஸத்வகுணம் மேலோங்க, பரமாத்மாவை ஒட்டிய சரீரம் பெறுகின்றனர்.
- சாந்தோக்ய உபநிஷத் (7-26-2) – ஸ ஏகதா பவதி – அவன் ஒன்றாகிறான்.
- சாந்தோக்ய உபநிஷத் (8-12-3) - ஜக்ஷத் க்ரீடந் ரமமாண: - அவன் உண்கிறான், விளையாடுகிறான், அநுபவிக்கிறான்.
- தைத்திரீய ப்ருஹுவல்லீ (10) - காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந் – எதை வேண்டுமோ அதை அனுபவித்து, எந்த உருவம் வேண்டுமோ அதனை அடைந்து, எம்பெருமான் பின்னே செல்கிறான்.
- கௌஷீதகீ உபநிஷத் (1-5) – தம் ப்ரஹ்ம கந்த: ப்ரவிசதி தம் ப்ரஹ்ம ரச: ப்ரவிசதி – ப்ரஹ்மத்தின் சுவையும் நறுமணமும் அவனுள் ப்ரவேசிக்கிறது.

- கௌஷீதகீ உபநிஷத் (1-4) - தம் ப்ரஹ்ம அலங்காரேண அலங்குர்வந்தி – ப்ரஹ்மத்தைப் போன்றே இவனையும் அலங்கரிக்கின்றனர்.
- ப்ரஹ்மசூத்திரம் (4-4-12) - த்வாதசாஹவத் உபய வீதம் பாதராயண: - முக்தர்கள் இரண்டு ரூபம் (சரீரம் கூடிய நிலை, சரீரம் அற்ற நிலை) பெறுவதாகப் பாதராயணர் கூறுகிறார்.

இந்தத் திருநாமத்தில் உள்ள முக்தாநாம் என்ற பதம் பன்மையில் உள்ளதால், முக்தி பெற்ற ஜீவர்கள் பலர் உள்ளனர் என்றும், அவர்கள் வெவ்வேறு என்றும் அறியலாம். இதனை கீழே உள்ள வரிகளில் காணலாம்:

- முண்டக உபநிஷத் (3-2-6) - பராம்ருதாத் பரிமுச்சயந்தி ஸர்வே – அவர்கள் பரமபுருஷனின் அருளால் மோக்ஷம் அடைகின்றனர்.
- புருஷஸூக்தம் – மஹிமாந: ஸசந்தே – பரமபுருஷனை உபாஸிப்பவர்கள் உயர்கிறார்கள்.
- கீதை (14-2) - ஸாதர்ம்யம் ஆகதா: - என்னைப் போன்ற குணங்கள் கொள்கின்றனர்.
- கீதை (10-10) - மாம் உபாயந்தி தே - என்னையே அடைகின்றனர்.

இங்கு திருநாமங்கள் 15, 517 மூலம் எம்பெருமானே சாக்ஷி என்றும், அவன் முக்தர்களால் அடையப்படும் இலக்கு என்றும் கூறப்படுவதால், எம்பெருமானுக்கும் முக்தர்களுக்கும் வேறுபாடு உள்ளதைக் காணலாம். இதனைக் கீழே உள்ள வரிகளில் காண்க:

- முண்டக உபநிஷத் (3-1-2) - ஜுஷ்டம் யதா பச்யத்யந்யம் ஈசம் அஸ்ய மஹிமாநம் இதி வீதசோக: - உபாஸகன் தன்னைக் கண்டதால் எம்பெருமான் மகிழ்ச்சி அடைவதைக் கண்டு, அவனது மேன்மையை உணர்ந்து, தானும் தனது துன்பங்களை விலக்குகிறான்.
- ச்வேதாஸ்வதர உபநிஷத் (1-6) – ப்ருதக் ஆத்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா - நியமிக்கப்பட்ட ஆத்மாவும், நியமிக்கும் பரமாத்மாவும் வேறு என்று எப்போது உணர்கிறானோ.

- முண்டக உபநிஷத் (3-2-8) - புருஷம் உபைதி திவ்யம் – திவ்யமான பரமபுருஷனை அடைகிறான்.
- தைத்திரீய ஆனந்தவல்லீ – ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா - முக்தி பெற்ற ஜீவன் எங்கும் உள்ள ப்ரஹ்மத்துடன் சேர்ந்து ஆனந்தம் அடைகிறான்.
- சாந்தோக்ய உபநிஷத் (8-12-2) - பரம் ஜ்யோதிரூப ஸம்பத்யா - ஜ்யோதிமயமான பரமபுருஷனை அடைகிறான்.
- ப்ரஹ்மசூத்திரம் (1-3-2) - முக்த உபஸ்ருப்ய வ்யபதேசாத் ச – முக்தர்களால் பரமாத்மா அடையப்படுகிறான்.
- மஹாபாரதம் (சாந்தி பர்வம் 352-14, 15) – ஸ ஹி நாராயணோ ஞேய: ஸர்வாத்மா புருஷோ ஹி ஸ ந லிப்யதே மலைச்சாபி பதமபத்ரம் இவ அம்பஸா கர்மாத்மா து அபரோ ய: அஸௌ மோக்ஷ பந்தே: ஸ யுஜ்யதே ஸ ஸப்த தசகேநாபி ராசிநா யுஜ்யதே து ஸ: - அவனே நாராயணன்; அவனை உயர்ந்த புருஷனாகவும், அனைத்து ஆத்மாக்களின் அந்தர்யாமியாகவும் அறியவேண்டும். தாமரை இலையானது தண்ணீரால் எப்படி நனைக்கப்படுவதில்லையோ அது போன்று இவன் எந்தத் தோஷங்களாலும் தீண்டப்படுவதில்லை. இதற்கு மாறாக உள்ள ஜீவன், கர்மாத்மா என்று கூறப்படுகிறான். அவன் பந்தங்களாலும், மோக்ஷத்தாலும் பாதிக்கப்படுகிறான். பதினேழு தன்மைகளால் பீடிக்கப் படுகிறான்.

ஆகாசம் என்பது ஒரு பாத்திரத்தில் சிறைபிடிக்கப்பட்டது போன்று ப்ரஹ்மம் என்பது மாயை மூலம் இந்த உலகத்தில் பீடிக்கப்பட்டுள்ளது என்ற வாதத்தையும், முக்தி பெற்ற நிலையில் ஜீவனுக்கும் பரமாத்மாவிற்கும் பேதம் இல்லை என்ற வாதத்தையும் மேலே உள்ள பல சாஸ்த்ரங்கள் மூலம் தள்ளியதைக் காணலாம். மேலும் முக்தி பெற்ற ஜீவனும் பரம்பொருளும் ஒரே நிலையை அடைகின்றனர் என்று கூறும் இந்த ஒற்றுமை கருத்து காரணமாகவே, முண்டக உபநிஷத் (3-2-9) - ப்ரஹ்ம வேத ப்ரஹ்ம ஏவ பவதி - ப்ரஹ்மத்தை அறிந்தவன் ப்ரஹ்மமாகவே ஆகிறான் - என்று ஒற்றுமையை உணர்த்துகிறது என வாதம் செய்கின்றனர். ஆனால், வேறு ஒரு பகுதியின் மூலம் இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை உணர்த்த இயல்கிறது. இந்த நிலையை நாம் விளக்குவோம். "இது மாடு" என்னும் வரியானது உடைந்த கொம்புள்ள மாடு அல்லது கொம்பே இல்லாத மாடு என அனைத்தையும் குறிக்கும். இவற்றில் ஒரு சில மாடுகளுக்கு

கொம்பு இல்லாத தன்மை போன்ற புற வேறுபாடுகள் இருந்தாலும், அவை அனைத்தும் மாடுகள் என்றே அழைக்கப்படுகின்றன. ப்ரஹ்மத்திற்கும் முக்தி பெற்ற ஜீவனுக்கும் வேறுபாடு இல்லை என்று கூறுபவர்கள் கூறும் வரிக்கும், அவற்றுற்கு இடையே ஒற்றுமை உள்ளது என்று கூறும் வரிக்கும் முரண்பாடுகள் உள்ளன.

ப்ரஹ்மத்திற்கும் முக்தி பெற்ற ஜீவனுக்கும் இடையே வேறுபாடு இல்லை எனவும், வேறுபாடு உள்ளதாகத் தோன்றுவது மாயை காரணமாகவே எனவும் ஔபாதிக பேத வாதிகள் கூறுகின்றனர். அவர்கள் முக்தி பெற்ற ஜீவனுக்கு முடிவு உண்டு என்கின்றனர். அப்படி என்றால், இலக்காகக் கருதப்படும் முக்தி என்ற நிலை யாராலும் நாடப்படாமலேயே போய் விடும். இவ்விதம் கொள்ளும்போது முக்தி பெற்ற நிலை, முக்தி அடையாத நிலை என்பது குறித்த வரிகள் முரணாக ஆகின்றன. பரமாத்மாவிற்கும் ஜீவாத்மாவிற்கும் நாம் கூறிய வேறுபாடு என்பது வேறுபாடு இல்லை என்றே கூறப்படுகிறது. ஆக உபநிஷத்துகளில் கூறப்படும் வேறுபாடுகள், இந்த இருவருக்கும் உள்ள தன்மைகளில் காணப்படும் வேறுபாடுகளை உணர்த்துவதே அன்றி, முக்தி பெற்ற ஜீவன் என்பதே இல்லை என்று கூறவில்லை.

விஷ்ணுபுராணம் (6-7-95) – தத் பாவ பாவம் ஆபந்ந: ததா அஸௌ பரமாத்மநா பவதி அபேதீ – முக்தி பெற்ற ஜீவன் பரமாத்மாவை ஒத்த சரீரம் அடையும்போது முக்தி பெற்ற ஜீவன்களுக்கு இடையில் வேறுபாடு இல்லை - என்றது. மேலும் விஷ்ணுபுராணம் (2-14-33) – தேவாதி பேதோ அபத்வஸ்தே நாஸ்த்யேவாவரணே ஹி ஸஹ – அதன் பின்னர் தேவர்கள் முதலான பேதங்கள் இல்லை, ஜீவனுக்கும் பரமாத்மாவிற்கும் உள்ள ஒற்றுமையை மறைத்துக் கொண்டிருக்கும் திரை விலகுகிறது - என்றது. "முக்தாநாம் பரமாகதி:" என்பதில் உள்ள "கதி:" என்ற பதம், விரும்பப்படும் இலக்கைக் குறிக்கிறது. இதன் மூலம் முக்தி பெற்ற ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பு என்பது அடிமை – எஜமானன் என்பதாகவே உணரலாம். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- தைத்திரீய ப்ருஹுவல்லீ(10) – ஏதம் ஆநந்தமயம் ஆத்மாநம் உபஸங்க்ரம்ய – ஆனந்தமயமான ப்ரஹ்மத்தை அடைந்த பின்னர்.
- தைத்திரீய ப்ருஹுவல்லீ(10) - அநுஸஞ்சரன் – முக்தி பெற்ற ஜீவன் பரமாத்மாவின் பின் செல்கிறான்.

- ஏன ஏன காதா கச்சதி தேன தேன ஸஹ கச்சதி தத் யதா தருண வத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் - எந்த வழியில் எல்லாம் பரமாத்மா செல்கிறானோ அந்த வழியில் எல்லாம் முக்தனும் செல்கிறான். இது கன்றின் பின்னே செல்லும் பசு போன்றும், பசுவின் பின்னே செல்லும் கன்று போன்றும் உள்ளது.
- பரம ஸம்ஹிதை – சாயா வா ஸத்வம் அநுகச்சேத் - பொருளைத் தொடர்ந்து அதன் நிழல் செல்வது போன்று.

வேதங்கள் மூலமாக ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் பற்றி நாம் அறிகிறோம். அதே வேதங்கள், ஜீவாத்மா அடிமை என்றும், பரமாத்மா எஜமானன் என்றும் கூறுகிறது. பரமாத்மாவினுடைய எஜமானத் தன்மை என்பது ஞானம் முதலான குணங்கள் அவனுக்கு எப்படி இயற்கையாகவே உள்ளதோ, அது போன்று இயற்கையாகவே உள்ளது. ஜீவன் முக்தி அடைந்த பின்னர் இந்த அடிமைத்தனம் மாறுவதில்லை. மாறாக அதுவரை இருந்த தடைகள் நீங்கி அடிமைத்தனம் ப்ரகாசமாக வெளிப்படுகிறது.

- சாந்தோக்ய உபநிஷத் (8-12-2) - ஸ்வேந ரூபேண அபிநிஷ்பத்யதே - ஜீவன் அவனுக்கு இயல்பான ரூபத்தை அடைகிறான்.

- விஷ்ணு தர்மம் (104-55, 56) - யதா ந க்ரியதே ஜ்யோத்ஸ்நா பல ப்ரக்ஷாலநாத் மணே: ததா ஹேய குணத்வம்ஸாத் அவபோதாதயோ குணா: ப்ரகாச்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவ ஆத்மநோ ஹி தே ஞானம் வைராக்யம் ஐச்வர்யம் தர்மம்ச்ச மநுஜேச்வர ஆத்மநோ ப்ரஹ்ம பூதஸ்ய நித்யமேதத் சதுஷ்டயம் - ஒரு மாணிக்கத்தின் மீது உள்ள தூசியை விலக்கும்போது அதன் ஒளிரும் தன்மை எப்படி புதிதாக உருவாக்கப்படுவதில்லையோ அது போன்று ஆத்மாவிற்கு கர்மம் மூலம் மறைக்கப்பட்ட ஞானம் முதலான தன்மைகள் புதிதாக உண்டாவதில்லை. அவை இயல்பாகவே உள்ளன. மனிதர்களின் அரசனே! ஞானம், வைராக்யம், ஐச்வர்யம் மற்றும் தர்மம் ஆகியவை ப்ரஹ்மம் போன்ற தன்மைகள் கொண்ட ஜீவனுக்கு இயல்பாகவே உள்ளன.

- ப்ரஹ்மசூத்ரம் (4-4-1) - ஸம்பத்ய ஆவிர்பாவ: ஸ்வேந ஸப்தாத் – ப்ரஹ்மத்தை அடைந்த முக்தன் தனது இயல்பான தன்மையை அடைகிறான்.

இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. தைத்திரீய சீக்ஷாவல்லீ – ஆபநோதி ஸ்வாராஜ்யம் – சுதந்திரம் பெறுகிறான் - என்றும்; சாந்தோக்ய உபநிஷத் (7-25-2) ஸ்வராட் பவதி - சுதந்திரமானவன் ஆகிறான் – என்றும்; ப்ரஹ்மசூத்ரம் (4-4-9) - அத ஏவ ச அநந்ய அதிபதி: - அதன் பின்னர் அவன் வேறு யாரையும் எஜமானன் என்று கொள்வதில்லை – என்றும் கூறுகின்றன. இப்படிக் கூறிய பின்னர், எவ்விதம் ஆத்மா பரமாத்மாவிற்காக உள்ளது என்றும், அவன் வசப்பட்டது என்றும் கூற இயலும்?

(மேலே உள்ள கருத்தைக் கூறியவர்களைப் பார்த்து பட்டர் கூறுவது) மந்தபுத்தி உள்ளவர்களே! கேலிக்கு ஆளாகாதீர்கள்! இங்கு அநந்ய அதிபதித்வம் என்பது - ஜீவன் வேறு யாருடைய கட்டுப்பாட்டிலும் இல்லாமல், தன்னுடைய எஜமானனான ஸர்வேச்வரனின் கட்டுப்பாட்டில் உள்ளான் - என்று கொள்ளவேண்டும். முக்தனைப் பீடீத்து இருந்த துன்பம் மற்றும் கர்மங்கள் விலகியவுடன், அந்த முக்தன் எஜமானனே இல்லாதவன் என்பதை உணர்த்தவில்லை. இப்படி உணர்த்துகிறது என்றால் அநாதிபதி என்றே கூறியிருக்கவேண்டும், அநந்ய அதிபதி என்று கூறியிருக்க மாட்டார். கணவனுக்கு தொண்டு செய்தபடி இருத்தல் மனைவியின் பொறுப்பு என்பதை யாரும் இழிவாகக் கூற இயலாது; காரணம் அரசர்கள் கூட தங்கள் மனைவிமார்களால் தொண்டு செய்யப்படுவதைக் காண்கிறோம். ஆக எண்ணமே முக்கியம் ஆகும்.

மீண்டும் மீண்டும் பல இடங்களில் குணங்களைப் பற்றியே முக்கியமாகக் கூறப்பட்டன. பரமாத்மாவிற்கும் ஜீவாத்மாவிற்கும் உள்ள ஒற்றுமை என்பது ஆனந்தமயமாக உள்ள தன்மையால் மட்டுமே என்று ப்ரஹ்மசூத்திரம் கூறுகிறது. மேலும் ஈச்வரனே எஜமானன் என்பதையும், ஜீவன் என்பவன் அடிமை என்பதையும் அது மறுக்கவில்லை. ப்ரஹ்ம சூத்திரம் (4-4-17) - ஜகத் வ்யாபார வர்ஜம் – உலகைக் காப்பது போன்ற விஷயங்களைத் தவிர்த்தால் ஜீவனும் பரமாத்மா போன்றவனே – என்றும், (4-4-21) - போக மாத்ர ஸாம்யாலிங்காச்ச – பரமாத்மா-ஜீவாத்மா என்ற ஒற்றுமை ஆனந்தமயமாக உள்ளதில் மட்டுமே - என்று காணலாம். இதே கருத்தைக் கீழே உள்ள பல வரிகளிலும் காணலாம்:

- விஷ்ணு தத்வம் – பாரதந்த்ர்யம் பரே பூம்ஸி ப்ராப்ய நிர்கத பந்தந: ஸ்வாதந்த்ர்யம் அதுலம் லப்த்வா தேநேவ ஸஹ மோததே – முக்தன் பரமபுருஷனை முழுவதுமாகச்

சார்ந்து விடுகிறான். அவன் அனைத்து பந்தங்களில் இருந்து விடுபட்டு, வேறு யாருக்கும் கிட்டாத சுதந்திரம் அடைகிறான். அவன் பரமாத்மாவுடன் சேர்ந்து ஆனந்தம் அடைகிறான்.

- விஷ்ணு தத்வம் – ஸ்வத்வம் ஆத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மநி ஸ்திதம் உபயோரேஷ ஸம்பந்தோ ந பரோ அபிமதோ மம – "இது ஒரு வஸ்து" என்ற தன்மை ஜீவனிடமும், அந்த வஸ்துவை உடையவன் என்ற தன்மை பரமாத்மாவிடம் உள்ளது. இதுவே இந்த இருவருக்கும் உள்ள தொடர்பு அல்லாது, வேறு எதுவும் எனக்குப் புலப்படவில்லை.
- மஹாபாரதம் (மௌஸல பர்வம் 337-34) - ப்ரதாவஸாநே ஸுசுபாந் நராந் தத்ருசீமோ வயம் ச்வேதாந் சந்த்ர ப்ரதீகாசாந் ஸர்வ லக்ஷண லக்ஷிதாந் நித்யாஞ்ஜலி க்ருதாந் ப்ரஹ்ம ஜபத: ப்ராகுதங்கமுகாந் - எங்களது சபதம் நிறைவேறிய நேரத்தில் உயர்ந்த குணங்களுடன் கூடியவர்களும், சந்திரன் போன்று ப்ரகாசமானவர்களும், நல்ல தன்மைகள் கொண்டவர்களும் ஆகிய மனிதர்களைக் கண்டோம். அவர்களது கைகள் எப்போது குவித்தபடி, ப்ரஹ்மத்தைக் குறித்து த்யானித்தபடி, வடகிழக்காக முகம் வைத்தப்படி காணப்பட்டன.
- மஹாபாரதம் (மௌஸல பர்வம் 337-40) - க்ருத அஞ்சலி புடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந: - கைகளைக் குவித்து நிற்கும் அவர்கள் எப்போதும் மகிழ்வுடன் "நம:" என்று உச்சரித்தபடி உள்ளனர்.
- அதீந்த்ரியா அநாஹார அநிஷ்யந்தா: ஸுகந்தின: - அவர்கள் தங்கள் புலன்களை அடக்கியவர்களாக, உண்ணாதவர்களாக, வியர்க்காதவர்களாக, இனிமையான நறுமணம் கொண்டவர்களாக உள்ளனர்.

இது போன்ற பல வரிகள் ஸ்வேத தீபத்தில் இருப்பவர்கள் குறித்தும், அவர்களது திவ்யமான தன்மைகள் குறித்தும், அவர்கள் ஸர்வேச்வரனுக்குச் செய்யும் கைங்கர்யம் குறித்தும் கூறப்பட்டுள்ளன. இதே கருத்து முக்தி பெற்ற ஜீவன்கள் குறித்தும் கொள்ளலாம். இதனை கீதை (7-29) - யே அபி முக்தா பவந்தீஹ நரா பரதஸத்தம தேஷாம் லக்ஷணாம் ஏதத்தி யத் ச்வேத த்வீப வாசிநாம் – பரத குலத்தில் உயர்ந்தவனே! மோக்ஷம் பெற்ற அனைவரும் ஸ்வேத தீபத்தில் உள்ளவர்களின் தன்மையை அடைகின்றனர் - என்பதைக் காண்க.

கதி: என்ற பதத்திற்கு பரமா என்ற சிறப்புத் தன்மையைக் கூறியதன் மூலம், ஒரு சிலர் தாழ்வான கதிக்கும் செல்வர்கள் என்று உணர்த்தப்படுகிறது. அந்த தாழ்வான கதியானது வயோதிகம், மரணம் போன்றவையற்ற கைவல்யம் ஆகும். இதனைக் கண்ணன் (7-29) – ஜரா மரண மோக்ஷாய மாம் அஸ்ரித்ய யதந்தி யே - என்னை அடைந்தவர்கள் வயோதிகம் மற்றும் மரணத்தை வெல்கின்றனர் - என்றான். அவர்கள் ஸம்ஸார உலகிற்கும் பரமபதத்திற்கும் நடுவில் உள்ள கைவல்யம் என்ற இடத்தில் வாழ்கின்றனர்.

- விஷ்ணுபுராணம் (1-6-38) – யோகிநாம் அம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மா ஸந்தோஷ காரிணாம் – அவர்களுடைய ஆத்மாவை அனுபவிப்பதிலேயே ஆனந்தம் கொண்ட யோகிகளின் இடம் இதுவாகும்.
- கட உபநிஷத் (3-11) - ஸா காஷ்டா ஸா பரா கதி: - அவனே உயர்ந்த உபாயம், அவனே உயர்ந்த இலக்கு.
- தைத்திரீய நாராயணவல்லீ (6-11) - விச்வாத்மாநம் பராயணம் – இந்த உலகின் ஆத்மாவாகவும் உயர்ந்த கதியாகவும் உள்ளவன்.
- கீதை (7-18) - மாமேவ அனுத்தமாம் கதிம் – என்னையே உயர்ந்த கதியாக அடைகின்றனர்.
- கட உபநிஷத் (3-9) - ஸோ அத்வந: பாரம் ஆப்நோதி - அவன் தனது இறுதியை அடைகிறான்.
- ஆத்மலாபாத் ந பரம் வித்யதே - பரமாத்மாவை அடைவதை விட உயர்ந்த குறிக்கோள் ஏதும் இல்லை.

## 13. அவ்யய:

முக்தி பெற்ற ஜீவன் இவனால் தான் (எம்பெருமானால்தான்) மீண்டும் ஸம்ஸாரத்திற்கு திரும்புவதில்லை. இந்தப் பதம் ”ந வீயதே” என்பதில் இருந்து வந்ததாகும். அவனிடமிருந்து யாரும் திரும்ப அனுப்பப்படுவதில்லை என்பதால், அவனுடைய திருநாமம் அவ்யய எனப்பட்டது. இப்படியாக உள்ள மற்ற திருநாமங்கள் ப்ரத்யய (94), விநய: (510), ஜய: (511) – என்பவையாகும். மிகுந்த முயற்சி எடுத்து ஸம்ஸாரக் கடலைக் கடந்து எம்பெருமானின் தாமரை போன்ற திருவடிகளை அடைந்த ஆத்மாவை, அவன்

மீண்டும் ஸம்ஸாரத்திற்கு அனுப்புவதில்லை. இதனை வேதங்கள் பின்வருமாறு கூறுகின்றன:

- சாந்தோக்ய உபநிஷத் (4-15-6) - ஏதேந ப்ரதிபத்யமாநா இமம் மாநவம் ஆவர்த்த ந ஆவர்த்தந்தே - இந்த (அர்ச்சிராதி) மார்க்கத்தில் செல்பவன் எம்பெருமானை அடைந்து மீண்டும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பாதவன் ஆகிறான்.
- சாந்தோக்ய உபநிஷத் (8-15-1) - ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே – அவன் திரும்புவதில்லை, அவன் திரும்புவதில்லை.
- ப்ரஹ்ம சூத்திரம் (4-4-4) – அநாவ்ருத்தி: சப்தாத் அநாவிருத்தி: சப்தாத் - வேதங்களின்படி திரும்புவதில்லை, வேதங்களின்படி திரும்புவதில்லை.
- யம ஸ்ம்ருதி - ஸத்வம் வஹதி ஸூக்ஷ்மத்வாத் பரம் நாராயணம் ப்ரபும் பரமாத்மாநம் ஆஸாத்ய பரம் வைகுண்டம் ஈச்வரம் அம்ருதத்வாய கல்பதே ந நிவர்த்ததே வை புந: - தூய்மையானதும் ஸூக்ஷ்மமானதும் ஆகிய சரீரத்தை அடைகின்ற முக்தன் ஈச்வரனும், பரமாத்மாவும், நாராயணனும் ஆகிய எம்பெருமானையும், உயர்ந்த வைகுண்டத்தையும் அடைகிறான். அதன் பின்னர் மோக்ஷம் பெற்று, மீண்டும் வராமல் இருந்து விடுகிறான்.
- ஹாரித ஸ்ம்ருதி - யதி தர்ம கத: சாந்த: ஸர்வ பூத ஸமோ வசீ ப்ராப்நோதி பரமம் ஸ்தாநம் யத் ப்ராப்ய ந நிவர்த்ததே - யார் ஒருவன் அனைத்தும் துறந்த ஸந்ந்யாசியாகவும், அனைத்து உயிர்களையும் ஒன்றாகப் பார்த்தபடி, புலன்களை அடக்கியபடி உள்ளானோ, அவன் உயர்ந்த வைகுண்டத்தை அடைகிறான். அதன் பின்னர் மீண்டும் திரும்புவதில்லை.

## 14. புருஷ:

மிகுதியாக அளிப்பவன். புரு என்றால் மிகுதி, ஸநோதி என்றால் அளிக்கும் செயல் ஆகும். ஸந் என்ற தாது, புரு என்பதை முதலில் கொண்டிருந்தால், ட என்ற எச்சம் சேர்க்கப்படும். முக்தர்கள் மீது தன்னை அனுபவிக்கும் ஆனந்தம், தனது குணங்கள், தனது மேன்மைகள் ஆகிய அனைத்தையும் சொற்களாலும் மனதாலும் நினைக்க இயலாதபடி பொழிகிறான். கீழே உள்ள வேத வரிகள் காண்க:

- தைத்திரீய ஆனந்தவல்லீ (1-2) - ஏஷ ப்ரஹ்மேவ ஆநந்தயாதி – அவனே ஆனந்தத்தை அளிக்கிறான்.

- சாந்தோக்ய உபநிஷத் (8-12-5) - லோ அச்நுதே ஸர்வான் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா – பரமாத்மாவுடன் சேர்ந்து முக்தன் அனைத்து விருப்பமானவற்றையும் அனுபவிக்கிறான்.
- சாந்தோக்ய உபநிஷத் (8-12-3) - திவ்யேந ஸக்ஷுஷா மநஸா ஏதாந் காமாந் பச்யந் ரமதே – தன்னுடைய திவ்யமான கண்களாலும், மனதாலும் முக்தன் விரும்பிய அனைத்தையும் கண்டு அனுபவிக்கிறான்.
- தைத்திரீய ப்ருஹுவல்லீ - ஸ தத்ர பர்யேதி ஜக்ஷத் க்ரீடந் ரமமாண: - ஆக அனைத்து ஆனந்தங்களையும் முக்தன் அனுபவித்து, உண்டு மகிழ்கிறான்.
- தைத்திரீய ஆனந்தவல்லீ (7-1) – காமாந்நி காமரூபீ - அனைத்து விருப்பங்களும் அடையப் பெற்று, விரும்பிய உருவமும் அடைகின்றான்.
- தைத்திரீய ஆனந்தவல்லீ – ரஸோ வை ஸ: ஹி ஏவம் அயம் லப்த்வா ஆனந்தீ பவதி - பரப்ரஹ்மம் ஆனந்தமயமானது, அவனை அடைந்த முக்தன் ஆனந்தமயமாக உள்ளான்.
- ப்ரஹ்மசூத்ரம் (4-4-12) – அஸ்மிந் அஸ்ய ச தத் யோகம் அஸ்தி – ப்ரஹ்மத்தை அடைந்த முக்தன் ஆனந்தம் பெறுகிறான்.
- ப்ரஹ்மசூத்ரம் (1-1-15) - தத்தே து வ்யபதேசாத் ச - ஆனந்தமயமான ப்ரஹ்மமே ஜீவனுக்கு ஆனந்தத்தை ஏற்படுத்துவதாகும்.

## 15. ஸாக்ஷீ

யார் நேரடியாக முக்தர்கள் இன்பமாக உள்ளதைக் காண்கிறானோ. பகவான், முக்தர்கள் தன்னால் அளிக்கப்பட்ட ஆனந்தத்தை அனுபவிப்பதை நேரடியாகக் காண்பதால் ஸாக்ஷீ எனப்படுகிறான். அவர்கள் ஆனந்தமயமாக உள்ளதைக் கண்டு அவனும் மகிழ்கிறான். இங்கு அஷ்டாத்யாயி (5-2-91) - ஸாக்ஷாத் த்ரஷ்டரீ ஸம்ஜ்ஞ்யாம் - என்பதற்கு ஏற்ப “இனி” என்ற எச்சம் தாதுவுடன் சேர்க்கப்பட்டு, நேரடியாகக் காண்பதை உணர்த்தும் பெயர்ச்சொல் கூறப்பட்டது. முக்தர்களால் ஆசைப்படும் ப்ரஹ்மம் குறித்து தைத்திரீய ஆனந்தவல்லீ (1-1-2) - ப்ரஹ்மணா விபச்சிதா – அனைத்தும் அறிந்த ப்ரஹ்மம் - என்றது. அனைத்தையும் ஒரே நேரத்தில் காண்பவன் என்பதால் விபச்சித் எனப்பட்டான்.

## 16. க்ஷேத்ரஜ்ஞ

எந்தத் தகுதியான இடத்தில் (க்ஷேத்ரம்) முக்தர்கள் இருந்தால் தன்னை அனுபவித்து ஆனந்தப்படுவார்கள் என்பதை அறிந்தவன். அஷ்டாத்யாயி (3-2-3) - ஆத: அனுபஸர்க்க க: - "ஆ" என்று முடிகின்ற தாதுவுடன் "க" என்ற எச்சம் சேர்க்கப்பட்டு, "ஆ" என்பது விடப்படுகிறது - என்பதற்கு ஏற்ப இந்தத் திருநாமம் உள்ளது. எல்லையற்ற ஆனந்தம் என்ற பயிர் ஓங்கி வளரும் வயலாக உள்ளதால், ஸ்ரீவைகுண்டமே க்ஷேத்ரம் எனப்படுகிறது. அல்லது க்ஷேத்ரம் என்பது அதே தன்மை கொண்ட திருமேனி என்றும் கொள்ளலாம். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- தைத்திரீய சீக்ஷாவல்லீ (6-2) - ஆகாச சரீரம் ப்ரஹ்ம – ப்ரஹ்மம் ஸ்ரீவைகுண்டம் என்ற ஆகாயத்தைத் தனது சரீரமாகக் கொண்டது.
- மஹாபாரதம் மோக்ஷ பர்வம் – முக்தாநாம் து கதி: ப்ரஹ்மந: க்ஷேத்ரஜ்ஞ இதி கல்ப்யதே – நான்முகனே முக்தர்கள் அடையும் இலக்காக க்ஷேத்ரஜ்ஞ என்பது கூறப்பட்டது.
- தைத்திரீய ஆனந்தவல்லீ – பரமே வ்யோமந் ஸ: அச்நுதே – முக்தன் பகவானை வைகுண்டத்தில் அனுபவிக்கிறான்.
- புருஷஸூக்தம் - தே நாஹம் மஹிமாந: ஸசந்தே – வைகுண்டத்தில் முக்தர்களால் பகவானின் மேன்மையை அனுபவிக்க இயல்கிறது.
- நாக ப்ருஷ்டே விராஜதி – முக்தன் வைகுண்டத்தில் ஒளிர்கிறான்.
- ஸ மோதேத த்ரிவிஷ்டபே – முக்தன் வைகுண்டத்தில் ஆனந்தத்தை அனுபவிக்கிறான்.

மீண்டும் பிறவி வேண்டாத முக்தனின் விருப்பத்தைக் கீழே உள்ள மந்திரம் விளக்குகிறது: ராத்ரி: காமேதத் புஷ்பாந்தம் யத் புராணமாகாசம் தத்ர மே ஸ்தாநம் குர்வந் ந புன: பவேயம் - மலர்கள் போன்று நக்ஷத்ரங்களால் அலங்கரிக்கப்பட்ட போதிலும், ஆகாயம் என்பது வைகுண்டம் போல் ஒளிராமல், இரவாகவே உள்ளது. அந்த வைகுண்டத்திற்கு நான் சென்று வாழ்வேனாக எனக்கு மறு பிறவி இருத்தல் வேண்டாம்.

கீழே உள்ள வரிகள் காண்க:

- கீதை (8-21) - யத் கத்வா ந நிவர்த்தந்தே தத்தாம் பரமம் மம - இதுவே எனது உயர்ந்த இடம், இங்கு அடைந்தவன் திரும்புவதில்லை.
- மஹாபாரதம் மோக்ஷதர்மம் – ச்ருதி ப்ரமாணாகம மங்கலைஸ்து யுக்தே ஜரா ம்ருத்யு பயாத் அதீத: ததோ நிமித்தே ச பலே விநஷ்டேஹி அலிங்கம் ஆகாசம் அலிங்க ஏஷ: - எம்பெருமானுடைய கல்யாண குணங்களை அடையும் ஜீவன், மரணம் மற்றும் வயோதிகம் குறித்த பயத்தை விலக்குகிறான் என்று வேதங்களும் ஆகமங்களும் கூறுகின்றன. அவன் கர்மத்தையும், அதன் பலனான சரீரத்தையும் விடுகிறான்.
- விஷ்ணுபுராணம் - ஏகாந்தின: ஸதா ப்ரஹ்ம த்யாயந்தே யோகினோ ஹி யே தேஷாம் தத் பரமம் ஸ்தாநம் யத்வை பச்யந்தி ஸூரய: - யார் பரம்பொருளிடம் ஆழ்ந்த பக்தியுடனும், த்யானித்தடனும் உள்ளனரோ அவர்கள் யோகிகள். அவர்கள் எம்பெருமானை எப்போதும் பார்க்கின்ற நித்யசூரிகள் உள்ள உயர்ந்த இடத்தை அடைகின்றனர்.
- ப்ரஹ்ம புராணம் – யத் தந்ந கிஞ்சித் இதி யுக்தம் மஹாவ்யோம தத் உச்யதே – இதுவே வைகுண்டம், இந்த உலகில் உள்ளவை போன்று இதனுள் ஏதும் இல்லை என்று கூறப்படுகிறது.
- தந்மோக்ஷ தத் பரம் தேஜோ விஷ்ணோரிதி விநிச்சய: - இந்த இடமே மோக்ஷத்திற்கான இடம் என்பதில் வேறுபாடான முடிவு இல்லை, இந்த இடம் மிகுந்த தேஜஸ்ஸுடன் கூடியது, இதுவே விஷ்ணுவின் இடமாகும்.
- வராக புராணம் - பச்ய லோகம் இமம் மஹ்யம் யோ ந வேதைஸ்து த்ருச்யதே த்வத் ப்ரியார்த்தம் அயம் லோக: தர்சிதஸ்தே த்விஜோத்தம - எம்பெருமான் அகஸ்தியரிடம், "அந்தணர்களில் உயர்ந்தவனே! எனக்காக இருக்கின்ற இந்த உலகத்தை நீ காண்பாயாக. இதனை வேதங்கள் கூடப் பார்த்ததில்லை. உனக்கு மகிழ்வு அளிக்கவே இந்த லோகம் உனக்குக் காண்பிக்கப்பட்டது", என்றான்.

- வராஹபுராணம் – பகவந் த்வந்மயோ லோக: ஸர்வ லோக வரோத்தம: ஸர்வலோகா மயா த்ருஷ்டா: ப்ரஹ்ம சக்ராதிநாம் முநே அயம் த்வத் பூர்வலோகோ மே ப்ரதிபாதி தபோதந ஸம்பத் ஐச்வர்ய தேஜாபி: ஹர்ம்யை: ரத்ந மயைஸ்ததா அத்யாபி தம் லோகவரம் த்யாயந் திஷ்டாமி ஸுவ்ரத கதா ப்ராப்ஸ்யேத் து அஸௌ லோக: ஸர்வலோக வரோத்தம: இதி சிந்தாபர: அபவந் – அகஸ்தியர், "எம்பெருமானே! உன்னுடைய சரீரமாகவே இந்த உலகம் உள்ளது. அனைத்து உலகங்களையும் விட உனது இந்த லோகம் மிகவும் உயர்ந்ததாகவே உள்ளது. நான் நான்முகன், இந்திரன் ஆகியவர்களின் லோகங்களைப் பார்த்துள்ளேன். அவற்றைக் காணும்போது, இந்த உலகம் தனித்தன்மையுடன் உள்ளது. இது ஸம்பத், ஐச்வர்யம், தேஜஸ் ஆகியவற்றுடன் கூடியதாக உள்ளது," என்றார்.

- ருக்வேதம் – கார்யாணாம் காரணம் பூர்வ வசஸாம் வாச்யம் உத்தமம் யோகாநாம் பரமாம் ஸித்திம் பரமம் தே பதம் விது: - அனைத்து காரியத்திற்கும் காரணமாக உள்ள இதுவே, அனைத்து உலகங்களிலும் உயர்ந்த இலக்காக உள்ளது. இதுவே யோகங்களின் உயர்ந்த குறிக்கோளாக உள்ளது.

- மஹாபாரதம் வநபர்வம் – யமாஹு: ஸர்வ பூதாநாம் ப்ரக்ருதே ப்ரக்ருதி த்ருவாம் அநாதி நிதநம் தேவம் ப்ரபும் நாராயணம் பரம் ப்ரஹ்மண: ஸதநாத் தஸ்ய பரம் ஸ்தாநம் ப்ரகாசதே – தௌம்யரிஷி யுதிஷ்டிரனிடம், "ஸர்வேச்வரனாகிய நாராயணன் தொடக்கமும் முடிவும் அற்றவன். அவனே அனைத்திற்கும் காரணமாக உள்ளான். அவனுடைய பரமபதம், நான்முகனின் உலகத்தை விட ப்ரகாசமானது.

- மஹாபாரதம் வநபர்வம் – தத்ர கத்வா புநர்நேமம் லோகம் ஆயாந்தி பாரத ஸ்தாநம் ஏதத் மஹாராஜ த்ருவம் அக்ஷரம் அவ்யயம் ஈச்வரஸ்ய ஸதா ஹி ஏதத் ப்ராண மாத்ரம் யுதிஷ்ட்டிர – யுதிஷ்டிரனே! அந்த பரமபதத்தை அடைந்த யாரும் இந்த உலகிற்குத் திரும்புவதில்லை. அரசனே! அந்த இடம் உறுதியானது, அழியாதது, வெல்ல இயாலாதது ஆகும். ஸர்வேச்வரனுக்கு எப்போதும் சொந்தமான அந்த பரமபதத்திற்கு முன்பு வணங்குவாயாக.

- ஹரி வம்ஸம் - ப்ரஹ்ம தேஜோமயம் திவ்யம் ஆச்சர்யம் த்ருஷ்டவாந் அஸி அஹம் ஸ பரதச்ரேஷ்ட மத்தேஜ: தத் ஸநாதனம் ப்ரக்ருதி: ஸா மம பரா வ்யக்தாவ்யக்தா ச பாரத தாம் ப்ரவிச்ய பவந்தீஹ முக்தா பரதஸத்தம ஸா ஸாங்க்யானாம் கதி: பார்த்த யோகிநாம் ச தபஸ்விநாம் தத் பரம் பரமம் ப்ரஹ்ம ஸர்வம் விபஜதே ஜகத் – க்ருஷ்ணன் அர்ஜுனனிடம், “அர்ஜுநா! நீ ப்ரகாசமான உலகத்தைக் கண்டாய் அல்லவா? எனது அந்த ப்ரகாசம் எப்போதும் உள்ளதாகும். வ்யக்தமாகவும் அவ்யக்தமாகவும் உள்ள இதுவே எனது உயர்ந்த ப்ரக்ருதியாகும். இந்த ப்ரக்ருதியில் புகுந்தவர்கள் முக்தர்கள் ஆகின்றனர். இதுவே ஸாங்க்யர்களும் யோகிகளும் விரும்புகின்ற இலக்காகிறது. இந்த உலகத்தை அடைய விரும்பும் அனைத்து உலகங்களும் ஸர்வேச்வரனிடம் பக்தி செய்கின்றன”, என்றான்.

- ப்ரஹ்மஸம்ஹிதை: - ஹ்ருத்பத்ம கர்ணிகாந் தஸ்த: புருஷ: ஸர்வதோமுக: ஸர்வஜ்ஞ: ஸர்வக: ஸர்வ: ஸர்வம் ஆவ்ருத்ய திஷ்டதி தஸ்மாத் து பரமம் ஸூக்ஷ்மம் ஆகாசம் பாதி நிர்மலம் சுத்த ஸ்படிக ஸங்காசம் நிர்வாணம் பரமம் பதம் தத் பதம் ப்ராப்ய தத்வஜ்ஞா: முச்யந்தே ச சுபாசுபாத் த்ரஸரேணு ப்ரமாணாஸ்தே ரச்மிகோடி விபூஷிதா: பூயஸ்தே நைவ ஜாயந்தே ந லீயந்தே ச தே க்வசித் - இதயத் தாமரையில் வசிக்கின்ற பரமபுருஷன் பல முகங்கள் கொண்டவனாகவும், எங்கும் உள்ளவனாகவும் அனைத்தும் அறிந்தவனாகவும் உள்ளான். அவனே அனைத்துமாகவும், அனைத்தையும் சூழ்ந்தபடியும் உள்ளான். ஸ்ரீவைகுண்டம் தூய்மையான அவனது ஒளியால் ப்ரகாசிக்கிறது. இந்தப் பரமபதம் தூய்மையான ஸ்படிகம் போன்று மகிழ்ச்சியால் நிரம்பியுள்ளது. அவனை அண்டியவர்கள் புண்ணியம் மற்றும் பாவம் ஆகிய இரண்டிலிருந்தும் விடுபடுகின்றனர். அவர்கள் மூன்று அணுக்கள் சேர்ந்த அளவுள்ள துகளாக மாறி, கோடிக்கணக்கான ஒளியுடன் ப்ரகாசிக்கின்றனர். அவர்கள் இந்த உலகத்தில் மீண்டும் பிறப்பதோ இறப்பதோ இல்லை.

- இந்த பரமபதத்தில் அயோத்யா, அபராஜிதா என்றும் அழைக்கப்படும் நகரம் உள்ளது. அபராஜிதம் எனப்படும் ஒளியுடன் கூடிய 1000 கால் மண்டபம் உள்ளது. அதில் உள்ள படுக்கை மீது நாராயணன் மஹாலக்ஷ்மியுடன் உள்ளான்.

எண்ணற்ற முக்தர்களால் ஆனந்தத்துடன் அனுபவிக்கப்படும் அவனையே த்யானிக்க வேண்டும்.

இவை அனைத்தும் சாந்தோக்யம், தைத்திரீயம், கௌஷீதகீ போன்ற உபநிஷத்துகளால் அறியப்படுகின்றன.

## 17. அக்ஷர:

அவன் எப்போதும் குறையாமல் உள்ளதால் அக்ஷர: எனப்படுகிறான். ஆனால் முக்தர்களால் எப்போதும் தொடர்ந்து அனுபவிக்கப்படுகின்ற தேன் அருவி போன்ற வஸ்துவாக இருந்து, எத்தனை அனுபவித்தாலும் குறையாமல் பெருகியபடியே உள்ளான். இப்படியாக அவனது எல்லையற்ற குணங்கள் உள்ளன. "அச்" என்ற எச்சம், "பச்சதி" போன்ற வினைகளுடன் சேர்க்கப்படவேண்டும் என்ற இலக்கண விதியின்படி, "அச்" என்ற எச்சம் "க்ஷரதி" என்ற வினையுடன் சேர்க்கப்பட்டுள்ளது. விக்ரம: (79), ஸுராநந்த: (188) போன்ற திருநாமங்கள் "அச்" என்பது சேர்க்கப்பட்டதாகும். பரமபுருஷன் எல்லையற்ற முக்தர்களால் அனுபவிக்கப்படும்போதும், அவன் மாறாமல் உள்ளான். இதன் காரணம், அவன் தன்னுடைய மேன்மைக்கு யாரையும் நம்பி இருப்பதில்லை என்பதாலும், தானாகவே மேன்மை உடையவன் என்பதாலும் ஆகும். அதாவது, அவனுடைய பரமபுருஷ தன்மை எப்போதும் மாறுவதில்லை.

ப்ரஹ்மசூத்திரம் நான்காவது அத்யாயத்தில் மோக்ஷம் என்பது இப்படியாகவே கூறப்பட்டுள்ளது. இந்த அத்யாயம் தாழ்வான பலன்களைக் கூறுவதாகக் கொள்ள இயலாது. அவ்விதம் கொண்டால், அதற்கு முந்தைய மூன்று அத்யாயங்களும், உபநிஷத்துக்களும், ஸ்ம்ருதிகளும், இதிகாசங்களும், மற்ற சாஸ்திரங்களும் தாழ்வான பலனையே கூறுகின்றன என்றாகிவிடும். அப்படிக் கொள்ளும்போது, இவை அனைத்தும் மோக்ஷத்தைப் பற்றிக் கூறாத சாஸ்திரங்கள் என்றாகிவிடும். ஆக, எம்பெருமான் முக்தர்களால் அடையப்படும் உயர்ந்த இலக்காக உள்ளான்.

## 18. யோக:

உபாயமாக உள்ளவன். இந்த எம்பெருமானே மோக்ஷத்திற்கான இயல்பான, எதனையும் சாராத உபாயம் ஆவான். யோக என்ற பதம் யுஜ்யதே – யாருடைய உதவியால் குறிக்கோள் அடையப்படுகிறது - என்ற பதத்தில் இருந்து வந்ததாகும். யோக என்ற பத்த்தின் பொருள் – அவனே மோக்ஷம் அடைவதற்கு நேரடி உபாயமாக உள்ளான், வேறு எதனுடைய உதவியையும் எதிர்பாராமல் உள்ளான் – என்பதாகும்.

- தைத்திரீய ஆனந்தவல்லீ (2-7-1) - ஏஷ ஹி ஏவ ஆனந்தயாதி – அவன் மட்டுமே ஆனந்தத்தை அளிக்கிறான்.
- ப்ரஹ்ம சூத்திரம் (1-1-15) - தத் தே து வ்யபதேசாத் ச – அவனே ஆனந்தத்திற்கு காரணம்.
- கீதை (18-66) - அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷ இஷ்யாமி – நான் உன்னை அனைத்து பாவங்களில் இருந்து விடுவிப்பேன்.

## 19. யோகவிதாம் நேதா

யோகத்தை அனுஷ்டிப்பவர்களை வழி நடத்துபவன், மோக்ஷத்திற்கான நேரடியான பாதையைப் பின்பற்றாதவர்களுக்கும் மோக்ஷபலனை அளிப்பவன். நயதி என்ற வினையுடன், த்ருச் என்ற எச்சம் சேர்க்கப்பட்டு, நேதா என்ற பதம் தோன்றியது. பர்த்தா (33), தாதா(43, 951) போன்ற திருநாமங்களும் த்ருச் என்று முடிகின்றன. மோக்ஷம் என்ற பலன் கிட்டும்வரை பகவான் வழி நடத்துகிறான்.

- கீதை (10-11) - தேஷாம் ஏவ அநுகம்பார்த்தம் – அவர்களை அனுக்ரஹம் செய்வதற்காக, அவர்களது அறியாமையை நான் போக்குகிறேன்.

- கீதை (12-7) – தேஷாம் அஹம் ஸமுத்தர்த்தா – மரணத்தை போன்று அச்சம் ஏற்படுத்தும் ஸம்ஸாரத்தில் இருந்து அவர்களை உயர்த்துகிறேன்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (1-6) - ஸம்ஸாரம் பார்ம பரம் ஈப்ஸமானை: ஆராதனீயோ ஹரி: ஏக ஏவம் – ஸம்ஸாரம் என்ற கடலைக் கடப்பதற்கு ஸ்ரீஹரியை மட்டுமே ஆராதிக்கவேண்டும்.

- தைத்திரீய உபநிஷத் (3-3-2) - பரம் அம்ருதாத் பரிமுச்சந்தி ஸர்வே - பரமபுருஷனை அடைந்து ஸம்ஸாரத்தில் இருந்து விடுபடுகின்றனர்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (1-6) - ஜுஷ்டஸ்ததஸ்தேந அம்ருதத்வம் ஏதி – பரமாத்மா மகிழ்ந்தவுடன் அவன் மூலமாக பக்தர்கள் மோக்ஷம் அடைகின்றனர்.

## 20. ப்ரதாந புருஷ ஈச்வர:

ப்ரக்ருதிக்கும், புருஷனான ஜீவனுக்கும் எஜமானன். ஈச்வரன் ப்ரக்ருதியையும், ஜீவனையும் நியமிப்பவன். ஸம்ஸார பந்தத்துக்குக் காரணமாக ப்ரக்ருதியே உள்ளது. ஜீவன் அவனால் பந்தப்படுத்தப்படுகிறான். வரச் என்ற எச்சம், ஸ்தா என்ற தாதுவுடன் சேர்க்கப்பட்டு, ஈச்வர என்பது தோன்றுகிறது. ஸ்தாவர (428) என்ற திருநாமம் இதனை ஒட்டியே உள்ளது.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் – (1-8) - ஸம்யுக்தம் ஏதத் க்ஷரம் அக்ஷரம் ச வ்யக்த அவ்யக்தம் பரதே விச்வம் ஈசா: அநீசச்சாத்மா பத்யதே போக்த்ரபாவாத் ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை: - அழிகின்ற ப்ரக்ருதியும், அழியாத ஜீவனும் ஒன்றாக இருக்கின்ற ப்ரபஞ்சத்தை ஸர்வேச்வரன் நியமித்தபடி உள்ளான். இந்த ப்ரபஞ்சம் ஸூக்ஷ்ம ஸ்தூலங்களைத் தன்னுள் அடக்கியதாகும். அனுபவிப்பவனாக இருக்கின்றவனும், ஸர்வேச்வரனை சார்ந்தவனாக இருக்கின்றவனும் ஆகிய ஜீவன், பந்தப்படுத்தப்பட்டே உள்ளான். ஜீவன் ஸர்வேச்வரனை அறிந்தவுடன், அனைத்து பந்தங்களில் இருந்து விடுபடுகின்றான்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-16) - ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞ: பதி: குணேச: - அனைத்து குணங்களும் பொருந்திய பகவான், ப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் ஏஜமானனாக உள்ளான்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (1-10) - க்ஷராத்மாநௌ ஈசதே தேவ ஏக: - க்ஷரம் எனப்படும் ப்ரக்ருதியையும், ஜீவனையும் ஒரு தெய்வமே கட்டுப்படுத்துகிறது.

இப்படியாக அனைவரையும் பந்தத்தில் ஆழ்த்துவதைத் தனது லீலையாக்க் கொண்டுள்ள ஈச்வரன், தவறு செய்யும் ஜீவன்களை பந்தப்படுத்தியும், அவனை அடைந்த ஜீவனை விடுவித்தும் செய்கிறான்.

- ஈச்வர: ஸர்வ பூதநாம் – அனைத்து உயிர்களுக்கும் ஈச்வரன்.
- கீதை (7-14) - தைவீ ஹி ஏஷா குணமயீ - இந்த ப்ரக்ருதி ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகியவற்றால் ஆனது, இது என்னுடையது.
- தைவீ தேவஸ்ய க்ரீடத: - இது ஈச்வரனின் விளையாட்டுப் பொருளாகும்.
- க்ரீடநகம் – விளையாட்டு பொருள்.
- ஸம்ஸார மோக்ஷ ஸ்திதி பந்தஹேது: - பந்தத்திற்கும், மோக்ஷத்திற்கும், இருப்பிற்கும் காரணமாக அவனே உள்ளான்.
- விஷ்ணுதர்மம் – தத்க்ருதாயாஸ்து மாயாயா: தத்ப்ரஸாதம் விநா க்வசித் நாஸ்தி நிர்ணாசநே ஹேது: ஸங்க்ஷிப்யேதத் ப்ரபாஷிதம் – அவனது கருணையைத் தவிர, அவனால் உருவாக்கப்பட்ட மாயை என்பதை, வேறு எதனாலும் அழிக்க இயலாது.
- ப்ரஹ்மசூத்திரம் ( 3-2-4) – பராபித்யாநாத் து திரோஹிதம் தத: ஹி அஸ்ய பந்த விபர்யயௌ – அவனது ஸங்கல்பம் காரணமாகவே ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபம் மறைக்கப்பட்டுள்ளது. அவனது ஸங்கல்பம் மூலமாகவே பந்தமும் மோக்ஷமும் ஏற்படுகிறது.
- ப்ரஹ்மசூத்திரம் (3-2-5) - தேஹ யோகாத் வா ஸோ அபி - ஜீவனின் ஸ்வரூபம் மறைவதற்குக் காரணம் சரீர தொடர்பே ஆகும்.

வரச் என்ற எச்சத்தின் மூலம் இங்கு கூறப்பட்ட குணங்களும், கூறப்பட்ட பரமாத்மாவின் இயல்பு என்பதும், அவனிடம் இருந்து பிரிக்கமுடியாது என்பதும் உணர்த்தப்பட்டது. இதன் மூலம் தத்வ பேதங்களான ப்ரக்ருதி, புருஷன், ஈச்வரன் என்பதும், நியமிப்பவன் - நியமிக்கப்படுபவன் என்பதும், இந்த இரண்டு தன்மைகளும் இயல்பானது என்பதும் வேறு எந்தக் காரணத்தாலும் வருவதல்ல என்பதும் உணர்த்தப்பட்டது.

## 21. நாரஸிம்ஹ வபு:

மனித வடிவும், சிம்ம வடிவும் கலந்தவன். தன்னிடம் பக்தி செய்பவர்களின் பக்திக்கு ஏற்படும் தடைகள் அனைத்தையும் நீக்குபவன். அவன் மனிதனும், சிங்கமுமான பெரிய உருவத்தை தனது ஸங்கல்பத்தாலே எடுத்தான். இதன் மூலம் அவனது பக்தர்களின் அச்சத்தை விலக்குகிறான். மேலும், எந்த நேரத்தில் அடியார்கள் விண்ணப்பித்தாலும் அந்த நேரத்தில் உதிக்கிறான்.

## 22. ஸ்ரீமாந்

முகமும் உடலும் பொருந்தாத வகையில் ஒரு விசித்திரமான வடிவம் எடுத்த போதிலும், அவன் ஸ்ரீமானே ஆவான். அதாவது, அவன் ஸௌந்தர்யம் லாவண்யம் ஆகியவற்றுடன் கூடியவனாகவே உள்ளான். மனிதனாகவும் சிங்கமாகவும் நின்ற அவனுடைய தோற்றம் கச்சிதமாக இருந்தது. அதனைக் கண்டவர்களுக்கு, அதன் பின்னர் மனிதனைக் காண்டாலும் ரசிக்க முடிவதில்லை, சிங்கத்தைக் கண்டாலும் ரசிக்க முடிவதில்லை, இரண்டும் சேர்ந்த நிலையையே விரும்புவார்கள். இத்தகைய உன்னதமான ஒரு வடிவம் மூலமே அவன் இந்த உலகத்தைக் காக்கிறான். விஷ்ணு தர்மம் (43-21) - தம்ஷ்ட்ரா கராளம் ஸுர பீதி நாசநம் க்ருத்வா வபு: திவ்ய ந்ருஸிம்ஹ ரூபிணா த்ராதம் ஜகத் யேந - அச்சத்தை உண்டாக்குகின்ற பற்களுடன் கூடிய தெய்வீகமான திருமேனியை உடைய நரஸிம்ஹத்தால், தேவதைகளிடம் கொண்ட அச்சம் நீங்கும்படியாக இந்த உலகம் காப்பாற்றப்பட்டது.

## 23. கேசவ:

எம்பெருமான் ஐச்வர்யம், ஸௌந்த்ர்யம் ஆகிய தன்மைகளை இயல்பாகவே கொண்டுள்ளான் என்பதை உணர்த்துகிறது. இந்த பதத்தின் மூலம் அழகான, மென்மையான, அடர்த்தியான, நீல நிறமான தலைமுடியைக் கொண்டவன் என்பது உணர்த்தப்பட்டது. கேச என்ற பதத்துடன் வ: என்ற பதம் இலக்கண ரீதியாக சேர்க்கப்பட்டது. இதன் மூலம் மென்மையான தலைமுடி என்பது உணர்த்தப்பட்டது.

## 24. புருஷோத்தம:

ஜீவன்களும் பரமாத்மாவும் ஒன்று என சிலர் கூறுவதைத் தகர்த்து, பரமாத்மாவின் உயர்ந்த தன்மைகளை சுட்டிக் காட்டி, அவன் புருஷர்களில் உயர்ந்தவன் என்பதை இந்த திருநாமம் உணர்த்துகிறது. ஸ்தூலமாகவும் ஸூக்ஷ்மமாகவும் உள்ள ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஒரு சேதனனை புருஷ என்ற பதம் உணர்த்துகிறது. உத்தம என்ற பதத்தில் உள்ள உத் என்ற சப்தம் "உயர்ந்த" என்ற பொருளைத் தரும். இது பந்தத்தில் உள்ள ஜீவன்களில் இருந்து பரமாத்மாவை வேறுபடுத்திக் கண்பிக்கிறது. புருஷோத்தம: என்பதில் உள்ள தம: என்ற சப்தம், நித்யஸூரிகளாக உள்ள ஆதிசேஷன் மற்றும் கருடன் போன்றவர்களைக் காட்டிலும் உயர்வாக உள்ள தன்மை இவனுக்கு இயற்கையாகவே உள்ளது என்பதைக் காட்டுகிறது. இது இவன் தாழ்வுகளுக்கு எதிர்த்தட்டாகவும், அனைத்திலும் வ்யாபித்துள்ளதாலும், அனைவருக்கும் ஸ்வாமியாக உள்ளதாலும் அமைகிறது.

மேலே கூறப்பட்ட பல உயர்ந்த ரஹஸ்யங்கள் கீழே உள்ள வரிகளில் காணலாம்:

- கீதை (15-16) - த்வாவிமௌ புருஷௌ லோகே – இந்த உலகில் இரண்டு விதமாக புருஷர்கள் உள்ளனர். அவர்கள் க்ஷரம், அக்ஷரம்
- கீதை (7-4) – பூமிராப: அனலோ வாயு: - பூமி, நீர், நெருப்பு, வாயு போன்ற அனைத்தும் என்னுடையது.
- கீதை(10-3) – யோமாம் அஜம் அநாதிம் ச - யார் என்னைப் பிறப்பற்றவனாகவும், தொடக்கம் அற்றவனாகவும் அறிகிறானோ.
- விஷ்ணு ஸஹஸ்ரநாமம் – அவிகாராய சுத்தாய - மாறாதவனும் தூய்மையானவனும்.
- விஷ்ணு புராணம் (1-2-10) – பர: பராணாம் பரம: - உயர்ந்தவன், உயர்ந்தவற்றில் உயர்ந்தவன்.

## 25. ஸர்வ:

அவன் அனைவரையும் விட உயர்ந்தவனாக உள்ளதால், யாரையும், எதற்காகவும் நம்பி இருப்பதில்லை. ஆனாலும் அவன் யாரையும் கைவிடாமல், தன்னுடைய சரீரமாகவே அனைவரையும் எண்ணி, காப்பாற்றி, நியமிக்கிறான் – ஓர் ஆத்மா தன்னுடைய உடலை எப்படி நடத்துமோ அது போன்று அவன் செய்கிறான். ஆகவே ஸர்வ: எனப்படுகிறான். ஸரதி என்ற தாது, இலக்கண விதியின்படி வன் என்ற எச்சத்தைப் பெறுகிறது. இது உடல் அவயங்களை அசைக்கும் பொருளை அளிப்பதாகும். அதாவது, அசைப்பதைக் குறிக்கும். சரதி என்றால் "அசைதல்" என்ற பொருளைக் குறித்தபோதிலும், இங்கு "அறிதல்" என்ற பொருளையே தருகிறது.

மஹாபாரதம் - அசதச்ச ஸதச்சைவ ஸர்வஸ்ய ப்ரபவாப்யய: ஸர்வஸ்ய ச ஸதா ஞானாத் ஸர்வம் ஏநம் ப்ரசக்ஷதே – அவனே சித் என்பதையும், அசித் என்பதையும் படைத்து அழிப்பதால் அவனை ஸர்வ என்று கூறுகின்றனர். அவன் அனைத்தைப் பற்றியும், அனைத்தையும், ஒரே நேரத்தில் அறியக்கூடிய ஞானம் உள்ளவன் ஆவான் – என்றது காண்க. கீழே உள்ள வரிகளையும் காண்க:

- தைத்திரீய நாராயணவல்லீ - தேந ஸர்வம் இதம் க்ரோதம் – நூலில் கோர்க்கப்பட்ட முத்துக்கள் போன்று இவை கோர்க்கப்பட்டுள்ளன.
- கீதை (11-40) - ஸ வை ஸர்வம் இதம் ஸர்வம் ஸமாப்நோஷி ததோ அஸி ஸர்வ: - நீயே அனைத்தையும் வ்யாபித்துள்ளதால் நீயே அனைத்துமாக உள்ளாய்.

## 26. சர்வ:

தன்னுடைய சரீரமாக உள்ள அனைத்தின் தோஷங்களையும் நீக்குவதால் சர்வ: எனப்படுகிறான்.

## 27. சிவ:

மங்களத்தை அனைவருக்கும் அளிப்பதால் சிவ: எனப்படுகிறான். சீங் என்ற பதமானது மங்களம் என்பதைக் குறிக்கும். இதிலிருந்தே சிவ என்பது கிட்டுகிறது. இதற்கு வன் என்ற எச்சம் சேர்க்கப்படுகிறது.

- தைத்திரீய நாராயணவல்லீ - சாஸ்வதம் சிவம் அச்யுதம் - எப்போதும் உள்ளவன், மங்களமானவன், அடியார்களை நழுவ விடாதவன்.
- விஷ்ணு தர்மம் – ஸ்ம்ருதே ஸகல கல்யாண பாஜநம் – அவனை நினைவு கொள்ளும் நேரத்தில் ஒருவன் அனைத்து மங்களங்களையும் பெறுகிறான்.
- மங்களம் பகவான் விஷ்ணு: - மஹாவிஷ்ணு மங்களமே வடிவானவன்.
- மங்களாயதநம் ஹரி: - ஸ்ரீஹரி மங்களத்தின் இருப்பிடமாக உள்ளான்.
- மஹாபாரதம் – மங்களானாம் ச மங்களம் - மங்களம் எல்லாவற்றுக்கும் காரணமான மங்களமாக உள்ளவன்.
- விஷ்ணு தர்மம் - மங்கல்யம் மங்களம் விஷ்ணும் – மங்களமாக உள்ள விஷ்ணு, மங்களம் நிறைந்த செயல்களுக்கு மங்களமாக உள்ளான்.

## 28. ஸ்தாணு:

மங்களங்களை அளிப்பதில் உறுதியாக உள்ளவன். ணு என்ற எச்சம் ஸ்தா என்பதுடன் இணைந்து, மற்றவர்களுக்குக் கடாக்ஷம் செய்வதில் உள்ள உறுதியை வெளிப்படுத்துகிறது. எம்பெருமானுடன் கொள்ளும் தொடர்பு என்பது, மற்ற ப்ராயச்சித்தங்கள் போன்று பாவங்களை அழிப்பதுடன் மட்டும் நிற்பதில்லை. காரீரி, சித்ர தர்ச பூர்ணாமாஸம், மற்ற தாழ்ந்த தேவதைகளை வழிபடுதல், தடைகளால் தடைபடுதல் முதலானவை போன்று எம்பெருமானுடன் கொள்ளும் இந்தத் தொடர்பு அழிவதில்லை. அவனுடன் ஒரு முறை கொள்ளப்பட்ட தொடர்பு என்பது எந்தவிதமான தோஷங்களாலும், தடைகளாலும் அழிவதில்லை. மாறாக, தொடர்பு கொண்ட அடியார்களின் அமங்களங்கள் அனைத்தையும் அழிப்பதுடன் நிற்காமல், விருப்பமான அனைத்தையும் அளிக்கவும் செய்கிறது. அத்துடன் நிற்காமல் மேலும் பல கடாக்ஷத்தையும் அளிக்கிறது.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-13), கட உபநிஷத் – ஏகோ பஹூநாம் யோ விததாதி காமாந் – எண்ணற்ற அடியார்களின் விருப்பத்தை அவன் மட்டுமே பூர்த்தி செய்கிறான்.
- கட உபநிஷத் (2-16) - ஏதத்தி ஏவ அக்ஷரம் ஜ்ஞாத்வா யோ யாதிச்சதி தஸ்ய தத் - அழியாத இந்த ப்ரஹ்மத்தை அறிபவன், தான் விரும்பும் அனைத்தையும் அடைகிறான்.

- விஷ்ணுபுராணம் (1-17-91) - தஸ்மிந் ப்ரஸன்னே கிமிஹாஸ்தி அலப்யம் – அவன் மகிழ்ந்தவுடன் அடியார்களின் எந்த விருப்பம் தான் நிறைவேறாது?
- விஷ்ணுதர்மம் (42-47) – ஸகல பலப்ரதோ ஹி விஷ்ணு: - மஹாவிஷ்ணு மட்டுமே அனைத்து பலன்களையும் அளிக்கிறான்.
- விஷ்ணுதர்மம் (7-3) - ரத்ந பர்வதம் ஆருஹ்ய யதா ரத்நம் நரோ முனே ஸத்த்வாநு ரூபம் ஆதத்தே ததா க்ருஷ்ணாத் மனோரதாம் – முனிவரே! ரத்ன மலையில் ஏறும் ஒருவன், அவனால் இயன்ற அளவு மட்டுமே இரத்தினங்களை எடுத்து வர இயலும். அது போன்று, எந்த அளவு சத்வ குணம் உள்ளதோ, அந்த அளவு மட்டுமே க்ருஷ்ணன் மூலம் தனது விருப்பங்கள் நிறைவேறப் பெருகிறான்.
- விஷ்ணுபுராணம் (3-8-6) – பீமம் மனோரதம் ஸ்வர்க்கம் ஸ்வர்க்கிவந்த்யம் ச யத் பதம் ப்ராப்நோதி ஆராதிதே விஷ்ணெள முக்திம் அபி அதி துர்லபாம் – மஹாவிஷ்ணு ஆராதனை காரணமாக மகிழ்ந்தவுடன், உலகில் உள்ளவர்களுக்கு விருப்பங்களும் ஸ்வர்க்கமும் கிட்டுகின்றன. ஸ்வர்க்கத்தில் அனைவராலும் போற்றப்படுகிறான். அப்படி ஆராதிப்பவன் கிட்டுவதற்கு அரிய மோக்ஷத்தையும் பெருகிறான்.
- யத் துர்லபம் யத் அப்ராப்யம் மநஸோ யத் அகோசரம் ததாபி அப்ரார்த்திதம் த்யாதோ தாதாபி மதுஸூதந: - மதுஸூதனனை ஆராதிப்பவனுக்கு அடைய இயலாத்தும், மனதால் எண்ண இயலாததும் ஆகிய பலவற்றையும் அளிக்கிறான்.

## 29. பூதாதி:

மிகவும் விருப்பத்துடன், அனைவராலும் அடையப்படுபவன்; அனைவராலும் அவன் விரும்பப்படுபவனாக உள்ளதால், அனைவராலும் அடையப்படுகிறான். அஷ்டாத்யாயி (3-3-92) - உபஸர்க்கே கோ: கி: - கி என்ற யச்சம் இலக்கண விதியின்படி சேர்க்கப்பட்டது. ஸர்வாதி: (100), நிதி: (30) போன்ற திருநாமங்கள், கி என்ற யச்சம் உள்ளவையாகும்.

- ப்ருஹத் உபநிஷத் (4-4-22) - கிம் ப்ரஜயா கரிஷ்யாமோ யேஷாம் ந: அயம் ஆத்மா - இந்தப் பரமாத்மா நமது எஜமானனாக இல்லை என்றால், புத்திரர்களைப் பெற்று நாம் என்ன செய்யப் போகிறோம்.

- இராமாயணம் அயோத்யா காண்டம் (16-49) - ஏதே வயம் ஸர்வ ஸம்ருத்தகாமா: யேஷாமயம் நோ பவிதா ப்ரசாஸ்தா - அவன் நம்முடைய எஜமானனாக உள்ளபோது, நமது விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறியதாகவே கொள்ளலாம்.

## 30. நிதிரவ்யய:

ஆபத்து காலங்களில் உதவுகின்ற செல்வம் போன்று பாதுகாப்பாக வைக்கப்பட வேண்டியவன் ஆவான். சாந்தோக்ய உபநிஷத் – தத் யதா ஹிரண்ய நிதிம் நிஹிதம் – பூமியில் மறைத்து வைக்கப்பட்டுள்ள தங்கப்புதையல் போன்றவன். அவ்யய என்ற பதம், அவன் குறையாத செல்வம் என்பதையும், எப்போதும் அனைத்து வகைகளிலும் பயன் படுத்தப்பட்டாலும் சிறிதளவும் குறையாதவன் என்பதையும் கூறுகிறது. அவ்யய என்பது, நிதி என்பதை விளக்க வந்த உருபு மட்டுமே ஆகும். அது தனியான ஒரு திருநாமம் அல்ல. இவ்விதம் கொள்ளவில்லை என்றால், அவ்யய: புருஷ: (14-5) என்பது புநருத்தி தோஷத்தை (கூறியது கூறல்) அளித்துவிடும்.

## 31. ஸம்பவ:

அவன் புதையல் போன்று மறைவாக இருந்தாலும், அவனையே எண்ணி ஆசையுடன் இருப்பவர்களுக்குத் தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொள்கிறான். அனைத்து இடங்களிலும், அனைத்து நேரங்களிலும் மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரஸிம்ஹம், இராமன், க்ருஷ்ணன் எனப் பல யுகங்களிலும் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷ ஸூக்தம் – பஹுதா விஜாயதே - பல விதங்களில் வெளிப்படுகிறான்.
- கீதை (4-5) - பஹூநி மே வ்யதீதாநி – நான் முன்பு பல அவதாரங்களை எடுத்துள்ளேன்.
- கீதை (4-7) – யதா யதா ஹி தர்மஸ்ய – தர்மம் சாயும்போது நான் என்னை வெளிப்படுத்திக் கொள்கிறேன்.

## 32. பாவந:

பல அவதாரங்கள் எடுத்து, அனைவரது தீமைகளையும் அழித்து, நல்லவர்களை வாழ வைக்கிறான். கீதை (4-8) - பரித்ராணாய ஸாதூநாம் – நல்லவர்களைக் காக்க நான் பிறக்கிறேன்.

## 32. பர்த்தா

தன்னையே தனது அடியார்களுக்கு அளித்து, அவர்களை ஆதரித்துக் காக்கிறான்.

## 34. ப்ரபவ:

அவன் தனது அடியார்களுக்காக பிறவி எடுப்பதால் ப்ரபவ: எனப்படுகிறான். அவனது பிறப்பு சிறிதளவும் தோஷம் அற்றது; இதனை உணர்பவர்களின் பிறவிகள் அனைத்தையும் அறுக்கவல்லது. இப்படியாக இவனது பிறப்பு, மற்ற தேவதைகளின் பிறவிகளை விட மாறுபட்டதாகவே உள்ளது. கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷஸூக்தம் – அஜாயமான: – பிறப்பற்றவன்.
- புருஷஸூக்தம் – தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம் – இவனது பிறப்பைப் பற்றி அறிந்தவர்கள் அறிவர்.
- மஹாபாரதம் சபா பர்வம் (62-35) - நைஷ கர்பத்வம் ஆபதே ந யோந்யாம் அவஸத் ப்ரபு: ஆத்மநஸ்தேஜஸா க்ருஷ்ண: ஸர்வேஷாம் குருதே கீதம் – அவன் யாருடைய கர்ப்பத்திலேயும் பிறக்கவில்லை, யாருடைய கர்ப்பத்திலேயும் இருக்கவில்லை, தன்னுடைய வல்லமை மூலம் க்ருஷ்ணன் அனைவரது பிறப்பையும் நீக்குகிறான்.
- மஹாபாரதம் – அப்ரமேயம் அநாத்யந்தம் காமாத் ஜாதம் அஜம் ந்ருஷு பாண்டவ: தர்க்கயாமாச கர்மபி: தேவ ஸம்மிதை: - க்ருஷ்ணனின் செயல்கள் ஸர்வேச்வரனின் செயல்களே என அறிந்த காரணத்தால், அவன் எல்லையற்றவன், தொடக்கம் மற்றும் முடிவற்றவன், பிறப்பற்றவன், ஸங்கல்பம் காரணமாகப் பிறப்பவன் என்று யுதிஷ்டிரன் முடிவு செய்தான்.
- பகவத் கீதை (4-9) - ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத: த்யக்த்வா தேஹம் புவநர் ஜந்ம சைதி மாமேதி ஸ: அர்ஜுன – அர்ஜுனா! என்னுடைய பிறவி மற்றும் செயல்களை அறிந்து, என்னிடம் வருபவன், தனது சரீரத்தை விடுகிறான்.

## 35. ப்ரபு:

அவன் மனிதனாக வந்து, மற்றவர்களைச் சார்ந்தவனாக தோன்றும்படி பிறந்தாலும் அவன் ப்ரபுவே ஆவான். அவன் தேவபதவி, மோக்ஷம் போன்ற பலன்களை அளிக்க வல்லவன் ஆவான். இது சிசுபாலன் விஷயத்திலும், சிந்தயந்தீ விஷயத்தில் தெளிவாகும்.

## 36. ஈச்வர:

அவன் பரமபதத்தில் உள்ளதைக் காட்டிலும் அவதாரம் எடுக்கும்போது வலிமை உள்ளவனாக இருப்பதால் ஈச்வரன் எனப்படுகிறான்.

- கீதை (9-11) - மாநுஷீம் தநும் ஆச்ரிதம் பரம் பாவம் அஜாநந்த: - நான் மனிதனாக சரீரம் எடுத்த போதிலும் எனது வல்லமை என்னிடமே உள்ளது என்பதை அறியாதவர்கள்.
- கீதை (4-6) - பூதாநாம் ஈச்வர: அபி ஸந் - மனிதனாகப் பிறந்தபோதிலும் நான் அனைவரையும் நியமிக்கும் வலிமை கொண்டவனாகவே உள்ளேன்.

## 37. ஸ்வயம்பூ:

இப்படியாக அவனது மேன்மைக்கு என்ன காரணம்? அவன் தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொள்கிறான் . அவன் தனது லீலை காரணமாக, தனது ஸங்கல்பம் காரணமாக, அவனுக்கே சொந்தமான தூய ஸத்வத்தால் ஆன ப்ரக்ருதியுடன் கூடியவனாக, தேவனாகவும் மனிதனாகவும் அவதரிக்கிறான். அவனுடைய பிறவி என்பது நான்முகன் முதலானவர்கள் போன்று கர்ம வசத்தால் அடையப்படுவது இல்லை.

- தைத்திரீய நாராயணவல்லீ (6-11) - ஸ்வயம்பூ ப்ரஹ்ம பரமம் கவீநாம் - தனது அடியார்களுக்காக பரப்ரஹ்மம் தன்மையே வெளிப்படுத்துகிறது.
- கீதை (4-6) - ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்மமாயயா – எனது யோக மாயை முலமாக நான் வெளிப்படுகிறேன்.

ஸத்வ, ரஜ, தாமஸ குணங்கள் நிறைந்த ப்ரக்ருதி, சேதனர்கள் நிறைந்த ப்ரக்ருதி ஆகியவை உள்ளபோதிலும், இந்த சுத்த ஸத்வ ப்ரக்ருதி “தனது ப்ரக்ருதி” என்று

அவனால், அவனுக்குச் சொந்தமாக உள்ளதால் முழங்கப்படுகிறது. ஹரி வம்சத்தில் வைதீக அந்தணனின் குழந்தைகளை ஸ்ரீவைகுண்டத்தில் இருந்து மீண்டும் அழைத்து வரும் நிகழ்ச்சி குறித்துக் கூறும்போது, அவனது லீலைக்கு நிலமாக உள்ள இரண்டு ப்ரக்ருதிகளை குறித்துக் கூறுகிறான். இந்த வரியானது, ஹரி வம்சம் - ப்ரஹ்மே தேஜா மயம் திவ்யம் ஆச்சர்யம் த்ருஷ்டவான் அஸி அஹம் ஸ பரதச்ரேஷ்ட மத் தேஜ: தத் ஸநாதனம் ப்ரக்ருதி: ஸா மம பரா வ்யக்தாவ்யக்தா ச பாரத தாம் ப்ரவிச்ய பவந்தீஹ முக்தா பரதஸத்தம - பரத குலத்தில் உயர்ந்தவனே! நீ பரப்ரஹ்மத்தின் வியப்பானதும் திவ்யமானதும் ஆகிய தேஜஸ்ஸைக் கண்டாய். அந்த தேஜஸ் நானே ஆவேன். என்றும் உள்ள அந்த தேஜஸ் என்னுடையது ஆகும். உயர்ந்த எனது ப்ரக்ருதி ஸ்தூலமாகவும் ஸூக்ஷ்மமாகவும் இரண்டு வகைப்படும். அதில் புகுந்த ஜீவன்கள் முக்தி அடைகின்றன – என்பதாகும்.

விஷ்ணுதத்வத்தில் ஐந்து சக்திகள் குறித்துக் கூறப்பட்ட பின் – மத்ஸ்ய கூர்ம வராஹாணாம் அவிர்பாவோ மஹாத்மந: அநந்யைவ த்விஜ ச்ரேஷ்ட நாந்யதா தத்விரோதத: - மத்ஸ்யம், கூர்மம், வராஹம் ஆகியவை சுத்தஸத்வம் என்பதால் ஆனவை; அவை, அதனைப் போன்று இருப்பவை என்று சொல்லக்கூடிய எதனாலும் ஆனவை அல்ல – என்று கூறப்பட்டது. விஷ்ணு புராணத்தில் (6-7-70) – ஸமஸ்தா: சக்தயச்ச ஏதா: - இந்த ஐந்து சக்திகளும் - என்பதன் மூலம் பகவானின் ஐந்து வெளிப்பாடுகள் குறித்துக் கூறப்பட்டு, அவை – தோற்றம், காரணம், காரியம், காலம், எண்ணிக்கை போன்றவற்றால் மேன்மையானவை எனப்பட்டது. மேலும் கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் யுத்தகாண்டம் (144-17) - ஸர்வ லோகேச்வர: ஸாக்ஷாத் லோகாநாம் ஹிதகாம்யயா - அனைத்து லோகங்களுக்கும் ஸர்வேச்வரனான அவன், உலகின் நன்மையின் பொருட்டு அரக்கர்களை அழித்தான்.
- இராமாயணம் அயோத்யாகாண்டம் (1-7) - ஸ ஹி தேவை: உதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணு ஸநாதந: - இராவணனின் முடிவை எதிர் நோக்கிய தேவர்கள் வேண்டியதால், என்றும் உள்ள விஷ்ணு இந்த உலகில் பிறவி எடுத்தான்.
- அஷ்டாத்யாயி (3-2-180) - ஸ ஏவ ஸ்வயம் உத்பபௌ – அவன் தன்னைதானே வெளிப்படுத்துகிறான்.

## 38. சம்பு:

அவன் தன்னுடைய அவதாரங்கள், அழகு, எளிமை போன்ற பல குணங்கள் மூலமாக அனைவரையும் மகிழ வைப்பதால் சம்பு எனப்படுகிறான் கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய நாராயணவல்லீ (6-11) – விச்வாக்ஷம் விச்வசம்புவம் - அவன் அனைத்தையும் நேரடியாகக் காண்கிறான், அனைத்தின் ஆனந்தத்தின் காரணமாக உள்ளான்.
- இராமாயணம் அயோத்யா காண்டம் (3-29) - ரூபௌ தார்ய குணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம் - தன்னுடைய அழகு, தாராள குணம் மற்றும் பல குணங்கள் மூலமாக இராமன் ஆண்களின் கண்களையும் இதயத்தையும் கவர்ந்து இழுக்கிறான்.
- இராமாயணம் அயோத்யா காண்டம் (3-28) - சந்த்ரகாந்தானனம் இராமம் அதீவ ப்ரியதர்சனம் - சந்திரனை விட அழகான முகம் கொண்ட இராமன் இன்பம் அளிக்கவல்ல தோற்றம் கொண்டவன்.

## 39. ஆதித்ய:

சூரியனில் உள்ள பரமபுருஷன் அடுத்து கூறப்படுகிறான். அவனுக்குச் சூரியன் இருப்பிடமாக உள்ளது. கீழே உள்ள வரிகளை காண்க:

- ப்ரஹ்மசூத்திரம் (1-1-21) - அந்தஸ்த தர்மோபதேசாத் – சூர்யனின் உள்ளே யார் காணப்படுகிறானோ அவனே பரப்ரஹ்மம்
- சாந்தோக்ய உபநிஷத் (1-6-6) - ய ஏஷ அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே – அந்தர்யாமியாக உள்ள அழகான புருஷன்
- தைத்திரீய ஆனந்தவல்லீ (2-8-5) - ஸ யச்சாயம் புருஷே யச்சாஸாவாதித்யே ஸ ஏக: - மனிதர்களின் இதயங்களில் உள்ள அதே பரமபுருஷன் சூரியனிலும் காணப்படுகிறான்.
- த்யேய: யதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தீ – சூரியனின் நடுவில் உள்ள அவனே த்யானிக்கபட வேண்டியவன்.

- சாந்தோக்ய உபநிஷத் (1-6-69) - தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணி - சூரியனின் ஒளி மூலமாக மலர்ந்த தாமரை மலர் போன்று அவனது இரண்டு கண்களும் உள்ளன.

## 40 புஷ்கராக்ஷ:

தாமரை போன்ற கண்களைக் கொண்டவன் என்று கூறுகிறது. இந்தத் தன்மை அவனே அனைத்தையும் ஆள்பவன் என்பதை விளக்குகிறது.

## 41. மஹாஸ்வந:

இது அவனது மற்றும் ஒரு முக்கியமான தன்மையைக் கூறுகிறது. மஹாந் என்றால் போற்றத்தக்க என்று பொருள். ஸ்வந: என்றால் சப்தம் என்று பொருள். ஆக, போற்றத்தக்க சப்தம் உடையவன்.

- சாந்தோக்ய உபநிஷத் (1-6-7) - தஸ்ய உத் இதி நாம - அவனது பெயரும் ரூபமும் சப்தத்தை அடிப்படையாக்க் கொண்டவை (அதாவது வேதங்கள்).
- தைத்திரீய நாராயணவல்லீ - ஸாஷா த்ரயீ ஏவ வித்யா தபதி ய ஏஷ: அந்தர் ஆதித்யே ஹிரண்மய: புருஷ: - அவனே மூன்று வேதங்கள் ஆவான். அவனே சூரியனில் உள்ள தங்கமயமான புருஷன் ஆவான். ஆக அவனது உருவம் மூன்று வேதங்களே ஆகும். அவன் ஸாவித்ரீ எனப்படும் காயத்ரியால் உபாஸிக்கப்படும் பரம்பொருள் ஆவான்.
- மஹாபாரதம் மோக்ஷதர்மம் – வித்யா ஸஹாயவந்தம் மாம் ஆதித்யஸ்தம் ஸநாதநம் – வித்யையுடன் தொடர்பு கொண்ட நானே சூரியனில் உள்ளேன்.

## 42. அநாதி நிதந:

இப்படியாகப் பல திவ்ய நாமங்களையும் ரூபங்களையும் உள்ள அவன், தொடக்கம் மற்றும் முடிவு அற்றவனாக உள்ளான். அவன் எப்போதும் இளமையானவனாக பிறப்பு, முடிவு அற்றவனாக உள்ளான். இத்தகைய தன்மைகள் அவனுடைய நித்யமாக உள்ள தன்மையை வெளிப்படுத்துகின்றன என்பதை கூறுவதாகக் கொள்ளக்கூடாது – காரணம்

இந்தத் தன்மைகள், நான்முகன் முதலானவர்களுக்கும் உண்டு. கீழே உள்ல பல வரிகள் காண்க:

- சாந்தோக்ய உபநிஷத் (3-14-2) - பாரூப: ஸத்யஸங்கல்ப: - தேஜஸ் மயமானவன், அசைக்க முடியாத உறுதி கொண்டவன்.
- சாந்தோக்ய உபநிஷத் (1-6-6) - தைத்திரீய நாராயணவல்லீ – ஹிரண்யமய: புருஷ: - தங்கமயமான பரமபுருஷன்
- தைத்திரீய நாராயணவல்லீ - வித்யுத: புருஷாததி - மின்னும் அந்தப் புருஷனிடமிருந்து அனைத்தும் வெளிவந்தன.
- புருஷஸூக்தம் – ஆதித்யவர்ண தமஸ: புரஸ்தாத் – சூரியன் போன்ற ஒளி வீசுபவன், தமஸ என்னும் ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவன்.
- சாந்தோக்ய உபநிஷத் – (3-14-2) - ஸர்வ காமாந் ஸர்வ கந்த: ஸர்வ ரஸ: - அவனது கர்மங்களாகவே அனைத்தும் உள்ளன. அனைத்து நறுமணமாகவும், சுவையாகவும் அவனே உள்ளான்.
- மனுஸ்ம்ருதி (12-122) - ருக்மாபம் ஸ்வப்நதீ கம்யம் வித்யாத் து புருஷம் பரம் – உயர்ந்த அந்தப் பரமபுருஷன், தேஜஸ்ஸுடன் தடையில்லாத ஞானத்துடன் உள்ளான். கனவு காண்பது போன்று தடையில்லாத ஞானத்தைக் கொண்டு மட்டுமே அவனை அடைய இயலும்.
- வராஹ புராணம் – புருஷ: புண்டரீகாக்ஷ: - தாமரை போன்ற அழகான கண்களைக் கொண்ட பரமபுருஷம்

இப்படியாக ஆயிரக்கணக்கான ஸ்ருதிகளும் ஸ்ம்ருதிகளும், எம்பெருமான் தன்னுடைய ஸங்கல்பம் மூலமாகத் திருமேனி எடுத்து கொள்கிறான்; இந்தத் திருமேனி மின்னல்களின் நடுவில் காணப்படும் நீல நிற ஆகாயம் போன்று உள்ளது, தோஷம் அற்றது, ஒளி மிகுந்தது, அழகு மற்றும் இளமை போன்ற உயர்ந்த தன்மைகள் கொண்டது என முழங்குகின்றன.

- விஷ்ணு புராணம் (1-2-1) - ஸவைக ரூப ரூபாய - எப்போது மாறாமலும் அழியாமலும் உள்ள திருமேனி கொண்டவன்.

- இராமாயணம் யுத்த காண்டம் (114-15) - ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ: - ஸ்ரீவத்ஸம் என்ற மச்சம் கொண்டவன், எப்போதும் ஸ்ரீயுடன் கூடியவன்.

- பராசரர் – ஸ ஏவ பகவான் கால: ஸர்வம் ஆத்மவசம் நயேத் - அவனே காலமாக உள்ளான். அனைத்தையும் தனது கட்டுப்பாட்டில் வைத்துள்ளான்.

- நாஸ்தி விஷ்ணு: பரம் தத்வம் தஸ்ய காலாத் பரா தநு: - விஷ்ணுவை விட உயர்ந்த தத்துவம் வேறு எதுவும் இல்லை, அவனது திருமேனி காலத்தின் பிடிகளுக்கு அப்பால் உள்ளது.

இப்படியாக உள்ள பல வரிகள் மூலம் ஸர்வேச்வரன் நித்யமாக உள்ளான் என்பதிலும், அவனது திருமேனி நித்யமாக உள்ளது என்பதிலும் எந்தவிதமான ஐயமும் இல்லை. இதற்கான காரணம் பின்வருமாறு – அந்தத் திருமேனி அனைத்திற்கும் காரணமான ஸர்வேச்வரனுடையது, அவனது ஸ்வரூபத்தை விளக்கும் ஞானம் போன்ற தன்மைகளில் ஒன்றாக உள்ளது, தமஸ் என்று அழைக்கப்படும் ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டது, பிறப்பு போன்ற மாறுபாட்டிற்கு அப்பாற்பட்டது, அழியாதது, காலத்தின் பிடிக்கு அப்பாற்பட்டது, அவனை அண்டும் அடியார்கள் அவனைப் போன்றே அழகான திருமேனியை அடைகின்றனர். இப்படியாக அவனது திருமேனி குறித்த பலமான ப்ரமாணங்களும் காரணங்களும் உள்ளன. ஒரு சிலர் அவனுக்குத் திருமேனி கிடையாது என்று வாதாடலாம். இந்த வாதமானது – மற்றவர்கள் போன்று சாதாரணமான திருமேனி உடையவன் என்ற வாதத்தை மறுப்பதாகவே கொள்ளவேண்டும். இதனைக் கீழே உள்ள வரிகளில் அறியலாம்:

- மஹாபாரதம் சாந்தி பர்வம் (206-60) - ந பூத ஸந்த ஸம்ஸ்தாநோ தேஹ: அஸ்ய பரமாத்மன: - அவனது உருவமானது நீர், பூமி முதலான பஞ்சபூதங்களால் ஆனது அல்ல.
- வராஹ புராணம் (75-44) – ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி: மாம்ஸ மேத: அஸ்தி ஸம்பவா – அவனது திருமேனி கொழுப்பு, சதை, எலும்பு முதலான சாதாரணப் பொருள்கள் இல்லை.

- ப்ரஹ்மசூத்திரத்தின் ஆசிரியரும், அதற்குப் பாஷ்யம் அருளிச்செய்தவர்களும் சூரியனுக்குள் இருக்கின்ற பரம்பொருளின் சரீரம் நித்யமானது என்றனர்.
- த்ரமிட பாஷ்யம் – ரூபம் வா அதீந்த்ரியம் அந்த:கரண ப்ரத்யக்ஷ நிர்தேசாத் - அவனது திருமேனி சாதாரணப் புலன்கள் கொண்டு அறிவதற்கு அப்பாற்பட்டது, அது ஞானம் என்ற கண் கொண்டு மட்டுமே காணத்தக்கது.
- அஞ்ஜஸைவ விஸ்வஸ்ருஜோ ரூபம் - இந்த உலகைப் படைத்தவனுடைய நித்யமான திருமேனி இப்படிப்பட்டது.

அவன் அவதாரங்கள் எடுக்கும்போது கூட, இந்த உலகில் உள்ள சரீரங்கள் போல அல்லாமல், தொடக்கமும் முடிவும் அற்றவனாகவே உள்ளான். அவன் பரமபதத்திலிருந்து ஒரு நாடக மேடைக்கு வந்து செல்லும் நடிகன் போன்றே அவதரித்துச் செல்கிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- மஹாபாரதம் மௌசல பர்வம் (5-34) - பூஜை: சதுர்பி: ஸமுபேதம் மம இதம் ரூபம் விசிஷ்டம் திவி ஸம்ஸ்திதம் ச பூமை கதம் பூஜயத அப்ரமேயம் - எனது இந்த நான்கு கரங்களுடன் கூடிய திவ்யமான ரூபம் பரமபதத்தில் உள்ளது, இத்தகைய எனது திருமேனியே இந்த உலகத்தில் அர்ச்சையாக உள்ளது. நான் அதில் எப்போதும் வாசம் செய்கிறேன்.
- இராமாயணம் பாலகாண்டம் (15-33) - ஸ்வர்கலோகம் ஆகச்ச கதஜ்வர: சிரம் ஸுரேந்த்ரகுப்தம் கததோஷ கில்பிஷம் – ஸர்வேச்வரனால் காப்பாற்றப்படுவதும், பாவங்களோ துன்பங்களோ அற்றதும், துயரம் என்ற ஜ்வரம் நீங்கப் பெற்றதும் ஆகிய உலகத்தை பெறுவாயாக.
- இராமாயணம் உத்தரகாண்டம் (110-12) – விவேச வைஷ்ணவம் தேஜ: ஸ சரீர: ஸஹானுக: - இராமன் தன்னுடைய திருமேனியுடனும், அடியார்களுடனும் தேஜோமயமான விஷ்ணுவின் உலகத்தில் புகுந்தான்.

## 43. தாதா

அனைத்திற்கும் காரணமாக உள்ளதால் நான்முகன் உள்ளிட்ட அனைவரைக் காட்டிலும் மஹாவிஷ்ணு உயர்ந்தவன் என்பதை தாதா என்ற பதம் உணர்த்துகிறது. அநிருத்தன்

வடிவம் எடுக்கும் பகவான், நான்முகனை அனைத்திற்கும் இருப்பிடமான ப்ரக்ருதியில் கருவாக விதைக்கிறான். இதுவே அசேதனமும் தோன்றுவதற்குக் காரணமாக உள்ளது.

- கீதை (14-3) - மம யோநி: மஹத் ப்ரஹ்ம தஸ்மிந் கர்பம் ததாம்யஹம் – நான்முகன் எனப்படும் என்னுடைய ப்ரக்ருதியானது எனது கருப்பையாகவே உள்ளது, அந்தக் கருப்பையில் நான் அனைத்து உயிர்களையும் விதைக்கிறேன்.
- மௌள ஸம்ஹிதை - தாதா க்ஷேத்ரே கர்ம பீஜ பூதம் கர்ப்பம் ததாதி – அனைத்துக் கர்மங்களுக்கும் விதையாக ப்ரக்ருதியில் தாதா விதைக்கிறான்.
- மனுஸ்ம்ருதி – அத ஏவ ஸஸர்ஜ ஆதௌ தாஸு வீர்யம் அபாஸ்ருஜத் – அவன் முதலில் தண்ணீரைப் படைத்தான், அதன் பின்னர் தனது வீர்யத்தைச் சேர்த்தான்.

## 44. விதாதா

அவன் கர்ப்பத்தை வளர்த்து, அதனை வெளிக்கொணர்வதால் விதாதா எனப்படுகிறான்.

- ஸ்வேதாச்வதர உபநிஷத் (6-18) - யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் – தொடக்கத்தில் நான்முகனைப் படைத்தான்.
- மஹோபநிஷத் – அத புநரேவ நாராயண: … தத்ர ப்ரஹ்மா சதுர்முகோ அஜாயத் - மீண்டும் நாராயணன் … நான்முகன் பிறந்தான்.
- தைத்திரீய நாராயணவல்லீ - ஹிரண்ய கர்ப்பம் பச்யத் ஜாயமாநம் – நான்முகன் பிறந்து கொண்டு இருக்கும்போதே, நாராயணன் அவனைப் பார்த்தான்.
- புருஷஸூக்தம் - தஸ்மாத் விராட் அஜாயத் - அவனிலிருந்து விராட் என்னும் நான்முகன் தோன்றினான்.
- மனுஸ்ம்ருதி (1-9) - தஸ்மிந் ஜ்ஜ்ஞே ஸ்வயம் ப்ரஹ்மா ஸர்வலோக பிதாமஹ: - அவனிலிருந்து உலகம் அனைத்திற்கும் பாட்டனான நான்முகன் தோன்றினான்.

## 45. தாதுருத்தம:

நான்முகனை விட உயர்ந்தவன். நான்முகனால் படைக்கப்பட்ட ப்ரஜாபதி ஆகியவர்களைக் காட்டிலும் உயர்ந்தவன். இது, "தாண்டா பூப" நியாயத்தினால் விளங்கும் (தாண்டா பூப ந்யாயம் என்றால் என்ன? ஒரு எலியை விரட்டும் குச்சியையும்,

தின்பண்டத்தையும் அருகருகே வைத்துள்ளோம் என வைப்போம். "குச்சியை எலி தின்று விட்டது", என்று ஒருவர் கூறுகிறார் என்றால், அதே எலியால் அருகில் உள்ள தின்பண்டமும் தின்னப்பட்டது என்று முடிவு செய்வோம் அல்லவா? இதன் காரணம் - இரண்டும் அருகில் இருந்தன). இது போன்று ஸர்வேச்வரன் ப்ரஜாபதிகளைப் படைத்த நான்முகனைக் காட்டிலும் உயர்ந்தவன் என்றால், அவன் அந்த ப்ரஜாபதிகளைக் காட்டிலும் உயர்ந்தவன் என்பது உண்மை அல்லவோ? கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய நாராயணவல்லீ - தத்வம் நாராயண: பர: - நாராயணனே உயர்ந்த தத்வம் ஆவான்.
- வராஹ புராணம் – ஏதேஷாம் கதமோ தேவ: பர: கோ வா அதவா அபர: - எந்த தெய்வம் அனைத்தையும் விட மிகவும் உயர்ந்தது? (விடை அடுத்த ச்லோகம் காண்க)
- வராஹ புராணம் – பரோ நாராயணோ தேவ: தஸ்மாத் ஜாத: சதுர்முக: - நாராயணனே உயர்ந்தவன், அவன் மூலமாகவே நான்முகன் பிறந்தான்.

## 46. அப்ரமேய:

அளவிட இயலாதவன். நான்முகன் உள்ளிட்ட தேவர்களின் இந்த்ரியங்கள் மூலமாகவும் அளவிட இயலாதவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- யம் நாமம் பகவாந் ப்ரஹ்மா ஜாநாதி புருஷோத்தமம் - உயர்ந்த புருஷனான நாராயணனை நான்முகனும் முழுவதுமாக அறியமாட்டான்.

- ந ஹி அதிமத்யாந்தம் அஜஸ்ய யஸ்ய வித்மோ வயம் ஸர்வமயஸ்ய தாதோ: ந ச ஸ்வரூபம் ந பரப்ரபாவம் ந சைவ ஸாரம் பரமேச்வரஸ்ய – நான்முகன், "அனைத்தையும் படைப்பவனும், பிறப்பற்றவனும் ஆகிய மஹாவிஷ்ணுவின் தொடக்கம், மத்தி மற்றும் இறுதி ஆகியவற்றை நான் அறிய மாட்டேன்; அவனது ஸ்வரூபம், மேன்மை, வலிமை ஆகியவற்றையும் நான் முழுவதுமாக அறியவில்லை", என்றான்.

- மஹாபாரதம் மௌஸல பர்வம் (179-4) - ந ஸ சக்ய: த்வயா த்ரஷ்டும் மயா அந்யைர்வா அபி ஸத்தம ஸகுணோ நிர்குணோ விச்வ: ஜ்ஞாநத்ருச்யோ ஹி அஸௌ ஸ்ம்ருத: - நான்முகனுக்கும் ருத்ரனுக்கு இடையே நடக்கும் உரையாடலில், "என்னாலோ உன்னாலோ, இந்த உலகத்தில் உள்ள வேறு யாராலுமோ அவனைக் காண இயலாது. அவன் இந்த ப்ரபஞ்சமாகவே உள்ளான். அவன் குணங்கள் கொண்டவன், குணங்களுக்கு அப்பாற்பட்டவன் என்று எப்படிக் கூறப்பட்டாலும், ஞானத்தால் மட்டுமே காணக்கூடியவனாக உள்ளான்", எனப்பட்டது.

- தவாந்தராத்மா மம ச யே சாந்யே தேஹிஸம்ஹிதா: ஸர்வேஷாம் ஸாக்ஷிபூத: அஸௌ ந ப்ராஹ்ய: கேநசித் கூசித் – அவன் உன்னிலும், என்னிலும், அனைவரிலும் அந்தர்யாமியாக இருந்தபடி பார்த்தபடி உள்ளான். அவனை எங்கும் யாராலும் எளிதாக அறிய இயலாது.

இதன் மூலம் அவன் புலன்களால் அறியப்படுவதற்கு அப்பால் உள்ளான் என்பதும், முழுவதுமாக அறிந்து கொள்வதற்கு இயலாதவன் என்பதும் விளங்குவதால், அளவிட இயலாதவன் என்றாகிறது.

## 47. ஹ்ருஷீகேச:

இந்த்ரியங்களை நியமிப்பவன். இவன் தேவர்களின் புலன்களையும் நியமிப்பதால் ஹ்ருஷீகேசன் எனப்படுகிறான்.

- ஹரிவம்சம் – ஹ்ருஷீகாணி இந்த்ரியாண்யாஹு: தேஷாம் ஈசோ யதோ பவாந் ஹ்ருஷீகேஷ: ததோ விஷ்ணு: க்யாதோ தேவேஷு கேசவ: - ஹ்ருஷீகா என்றால் புலன்கள் என்று கூறுகின்றனர். அவற்றை நீ நியமிப்பதால் ஹ்ருஷீகேசன் எனப்படுகிறாய். தெய்வங்களில் விஷ்ணுவே கேசவன் எனப்படுகிறான்.

- ஹர்ஷாத் ஸௌக்யாத் ஸுக ஐச்வர்யாத் ஹ்ருஷீகேசத்வம் அச்நுதே - மகிழ்வும் நிறைவும், சுகமும், ஐச்வர்யமும் உள்ளதால் ஹ்ருஷீகேசன் என்ற திருநாமம் கொண்டான்.

## 48. பத்மநாப:

மேலே கூறப்பட்ட பலவற்றையும் பத்மநாபன் என்ற திருநாமம் தொகுத்துக் கூறுகிறது. இவனே நான்முகனுக்குக் காரணமாக உள்ளான். தனது உந்தியில் தாமரையைக் கொண்டவன்.

- தாதோத்தாந: ஸம்விசதி பஞ்சவர்ஷ ச தாநி து – தனது முதுகைக் கீழ்ப்பக்கமாக வைத்து சயனித்துள்ள அவன், 500 ஆண்டுகள் கண்வளர்கிறான்.

- தாதுர்நாப்யம் புஷ்கரம் ப்ராதுர்பவதி புஷ்கரம் புண்டரீகம் ச பத்மம் சக்ரம் இத்யேஷ கால: - அவனது நாபியில் இருந்து தாமரை உதித்தது. அது புஷ்கரம் என்றும், புண்டரீகம் என்றும் கூறப்படும் வட்டவடிவில் உள்ளது, அது காலமாகவே உள்ளது.

- தைத்திரீய யஜுர் – அஜஸ்ய நாபாவத்யேகம் அர்ப்பிதம் – எம்பெருமானின் உந்தியில் வேறு எங்கும் காணப்படாத வஸ்து உள்ளது.

- அஜஸ்ய நாபாவத்யேகம் யஸ்மிந் விச்வம் ப்ரதிஷ்டிதம் – ப்ரளயகாலத்தில் பிறப்பற்ற ஸர்வேச்வரனின் உந்தியில் இந்த உலகம் வைக்கப்படுகிறது.

## 49. அமரப்ரபு:

படைத்தல் முதலான செயல்களைச் செய்யும்படி தேவர்களை நியமித்து, அவர்களை வழி நடத்துவதால், அமரப்ரபு எனப்படுகிறான்.

- இராமாயணம் உத்தரகாண்டம் (104-4) - மஹார்ணவே சயாநெள அப்ஸு மா த்வம் பூர்வம் அஜீஜந: ப்ரஜாபத்யம் த்வயா கர்ம ஸர்வம் மயி நிவேசிதம் – நான்முகன் ஸர்வேச்வரனிடம், "திருப்பாற்கடலின் நீரில் சயனித்தபடி நீ என்னை வெகுகாலம் முன்பு படைத்தாய். இந்த உலகைப் படைக்கும் செயல் என்பது உன்னால் எனக்கு அளிக்கப்பட்டது", என்றான்.

- மஹாபாரதம் மௌஸலபர்வம் (169-19) - ஏதௌ த்வௌ விபுதச்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜீ ஸ்ம்ருதௌ ததாதர்சித பந்தாநௌ ஸ்ருஷ்டி ஸம்ஹார காரகௌ - ஸர்வேச்வரனின் மகிழ்வு, கோபம் ஆகிய இரண்டின் வடிவமாக நான்முகன் மற்றும் ருத்ரன் ஆகியவர்கள் உள்ளனர். அவனது கட்டளைக்கு இணங்க, அவர்கள் படைத்தல் மற்றும் அழித்தல் ஆகியவற்றைச் செய்கின்றனர்.

## 50. விச்வகர்மா

இந்த உலகத்தின் அனைத்து இயக்கங்களின் அதிபதி. நான்முகனைப் படைத்த பின்னரும், அதற்கு முன்னரும் இந்த உலகங்களில் உள்ள செயல்பாடுகள் அனைத்தும் அவனாலேயே நிகழ்கின்றன.

- புருஷஸூக்தம் (19) - விச்வகர்மண: ஸமவர்த்ததாதி - அனைத்தையும் ஸ்ருஷ்டித்த அவனில் சென்றே உலகம் ஒடுங்குகிறது.
- புருஷம் விச்வகர்மாணம் ஆதிதேவம் அஜம் விபும் - முதல் தெய்வமாகவும், பிறப்பற்றவனாகவும், எங்கும் வ்யாபித்துள்ளவனாகவும், அனைத்துக் கர்மங்களுக்கு இயக்கமாகவும் உள்ளவன்.
- தைத்திரீய யஜுர் – ய இமா விச்வா புவநாநி ஜுஹ்வதே - இந்த உலகம் அனைத்தையும் யார் ஒருவன் தனது சரீரத்திலேயே அவிர்பாகமாக அளித்தானோ.
- சாந்தோக்ய உபநிஷத் (6-2-3) - ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயதே – நான் பலவாக ஆவேன் என்று ஸங்கல்பம் செய்தான், பலவாகப் பிறப்பேன்.
- ஐதரேய உபநிஷத் (1-1) - ஸ ஐக்ஷத லோகாந் நு ஸ்ருஜா - அனைத்தையும் உருவாக்குவேன் என்று ஸங்கல்பித்தான்.
- தைத்திரீய ஆனந்தவல்லீ (6) - ஸ: ஆகாமயத பஹு ஸ்யாம் ப்ரஜாயதே – நான் பலவாக ஆவேன் என்றும், பலவாகப் பிறப்பேன் என்று ஸங்கல்பம் செய்தான்.
- மஹோபநிஷத் – அத புநரேவ நாராயண: ஸ: அந்யம் காமம் மநஸா த்யாஸீத – அதன் பின்னர் நாராயணன் அனைத்தையும் மீண்டும் உருவாக்குவது பற்றி எண்ணினான்.
- யஜுர் அஷ்டகம் – ததஸதேஸ ஸத் மந: அகுருத அஸ்யாம் – ஸ்ருஷ்டியின் முன்பு சூக்ஷமமாக இருந்த ப்ரஹ்மம், ஸ்தூலமாக பல வடிவில் பரிமாணிக்க முடிவு செய்தது.

- மனுஸ்ம்ருதி (1-8) - ஸ: அபித்யாய சரீராத் ஸ்வாத் ஸிஸ்ருக்ஷி: விவிதா: ப்ரஜா: - தன்னுடைய சரீரத்திலிருந்தே அனைத்தையும் ஸ்ருஷ்டிப்பது என்று முடிவு செய்து, விருப்பமும் கொண்டது.
- ஸ ஸிஸ்ருக்ஷு: ஸஹஸ்த்ராம்சாத் அஸ்ருஜத் புருஷம் த்விதா - படைப்பது என்று முடிவு செய்த ஸர்வேச்வரன் இரண்டு புருஷர்களை (விராட், ஹிரண்யகர்ப்பன்) தனது ஆயிரத்தில் ஒரு பகுதியாகப் படைத்தான்.
- ப்ரஹ்மசூத்திரம் (1-1-19) - காமாச்ச நாநுமாநாபேக்ஷா - தனது ஸங்கல்பத்தால் படைத்தான், ப்ரக்ருதி முதலான எதனுடைய உதவியையும் எதிர்பார்க்கவில்லை.

## 51. மனு:

அனைவரும் அறிந்த அவனது ஸங்கல்பத்தின் ஒரு சிறு பகுதி மூலமாகவே அனைத்தும் படைக்கப்பட்டது. அவன் ஸங்கல்பம் செய்வதாலும், எண்ணுவதாலும் மனு எனப்படுகிறான். மன் என்ற பதம் சிந்திப்பது அல்லது அறிவதைக் குறிக்கும். இதிலிருந்தே மனு என்பது வெளிவந்தது.

## 52. த்வஷ்டா

தேவர்கள், மனிதர்கள் என்று பலவிதமான நாமரூபங்களுடன் கூடிய பலவற்றையும் படைத்தவன் என்பதைக் குறிக்கிறது. இந்தப் பதம் த்வக்ஷதே என்பதில் இருந்து (உளியால் செதுக்குதல்) உருவானதாகும். இலக்கண ரீதியாக த்வக்ஷதே என்பதில் உள்ள க என்பது விடப்பட்டு, த்வக்ஷதே என்பது த்வஷதே என்றானது. செதுக்குதல் என்றால் ஒரு குறிப்பிட்ட வடிவத்தில் உருவாக்குதல் என்பதாகும். அல்லது இந்தப் பதம் த்விஷ் என்பதில் இருந்து வந்ததாகவும் கொள்ளலாம். இதற்கு ஒளிர்தல் என்று பொருள்.

- யஜுர் – த்வஷ்டாரம் ரூபாணி விகுர்வந்தம் விபச்சிதம் - பலவிதமான ரூபங்களை அங்கங்களுடன் செதுக்குவதால் த்வஷ்டா எனப்படுகிறான்.
- யஜுர் அஷ்டகம் – வேதந ரூபே வ்யகரோத் ஸதாஸதீ ப்ரஜாபதி: - வேதங்கள் மூலமாக அவன் ஸத் மற்றும் அஸத் ஆகியவற்றைப் படைத்தான்.
- புருஷஸூக்தம் – ஸர்வாணி ரூபாணி விசித்ர தீர: - அனைத்தையும் படைத்த பின்னர் நாம ரூபங்களை அளித்தான்.

- விஷ்ணுபுராணம் (1-5-63) - நாமரூபம் ச பூதாநாம் க்ருத்யாநாம் ச ப்ரபஞ்சநம் – அனைத்திற்கும் நாமரூபங்களை அளித்த பின்னர், அவற்றின் கர்மங்களையும் அளித்தான்.

## 53. ஸ்தவிஷ்ட:

இஷ்டந் என்ற எச்சம் ஸ்தூல என்பதுடன் சேர்க்கப்பட்டுள்ளது. ஸ்தூல என்பதில் உள்ள ”ல” என்ற எச்சம் விடப்பட்டு, அதற்கு முன்பாக உள்ள பதம் குறைக்கப்பட்டு, ஸ்தவிஷ்ட என்றானது.

தைத்திரீய ஆரண்யவல்லீயில் – பஹு ஸ்யாம் - நான் பலவாக ஆவேன் – என்று ஸங்கல்பம் செய்தான். இதனை ஒட்டி அவன் விரிந்தான். ஸூக்ஷ்மமாகவும் வளராமலும் உள்ள நிலையில் இருந்த அனைத்தையும் விரியும்படி ஸங்கல்பித்தான். தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், தாவரங்கள் என பலவற்றின் இந்த்ரிய விஷயமாக உள்ள ஒலி முதலானவையாகவும் விரிந்தான். ப்ரம்மாண்டத்தில் பதினான்கு லோகங்களும் ப்ரசவிக்கும்படிச் செய்தான். இவற்றை அனைத்தின் இருப்பிடமாகவும் செய்தான். இப்படியாகத் தன்னைத் தானே வெளிப்படுத்திக்கொண்டான். இதற்கான ஆதார வரிகள் கீழே உள்ளன:

- கீதை (10-19) - நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே – எனது பரிணாமத்திற்கு எல்லை இல்லை.
- விஷ்ணுதர்மம் (4-3-6) - வ்யோமாம்பு வாய்வக்நி மஹீ ஸ்வரூபை: விஸ்தாரவாந் யோ அணுதார: அணுபாவாத் – அக்னி, வாயு, பூமி, நீர் மற்றும் ஆகாயம் ஆகிய வடிவத்தில் விரிந்தான். ஆயினும் அணுவை விடச் சிறியவனாகவும் உள்ளான்.
- விஷ்ணு புராணம் (1-7-84) – விஸ்தார: ஸர்வபூதஸ்ய விஷ்ணோ: ஸர்வமிதம் ஜகத் – இவை அனைத்தும் விஷ்ணுவின் விரிதலே ஆகும். இவை அனைத்தும் அவனே.
- த்வத்விஸ்தாரோ யதோ தேவ – தேவனே! உனது விரிதலே இவை அனைத்தும் ஆகும்.

## 54. ஸ்தவிர:

எப்போதும் உள்ளவன். இவன் அனைத்தின் காரணமாக உள்ளபோதிலும், மண் முதலான பலவற்றையும் விட இவன் வேறுபட்டவன் என்பதை இந்தத் திருநாமம் உணர்த்துகிறது, எப்போதும் உள்ளான் என்பதைக் குறிக்கிறது. இவன் காலம் முதலானவற்றின் உதவியை, ஸ்ருஷ்டித்தல் போன்றவற்றுக்கு லீலையாக மட்டுமே எடுத்துக்கொள்கிறான்; அதன் கட்டுப்பாட்டில் இவன் இல்லை. பால் தயிராக மாறுவதற்குக் காலத்தை எதிர்பார்த்து உள்ளது போன்று இவனுடைய தன்மை இல்லை. மாறாக, காலம் என்பது இவனுடைய கட்டுபாட்டில் உள்ளது. கீழே உள்ள வரிகள் காண்க:

- மஹாபாரதம் உத்யோக பர்வம் (67-13) - காலஸ்ய ச ஹி ம்ருத்யோச்ச ஜங்கம ஸ்தாவரஸ்ய ச ஈசிதா பகவாந் ஏக: தஸ்யமேதத் ப்ரவீமி தே – காலம், மரணம், நகரும் பொருள்கள், நகராப் பொருள் ஆகிய அனைத்தையும் பகவானே கட்டுப்படுத்துகிறான். இதுவே உண்மை.

- காலசக்ரம் ஜகத்சக்ரம் யுகசக்ரம் ச கேசவ: ஆத்மயோகேந பகவாந் பரிவர்த்தயதே அநிசம் - கால சக்கரம், உலகம் என்ற சக்கரம், யுகம் என்ற சக்கரம் ஆகியவற்றைக் கேசவன் தனது ஸங்கல்பம் மூலமாகவே சூழல வைக்கிறான்.

- மஹாபாரதம் மௌஸலபர்வம் (2-59) - காலம் ஸ பசதே தத்ர ந காலஸ்தத்ர வை ப்ரபு: - வைகுண்டத்தில் உள்ளபடி அவன் காலத்தைத் தனது விருப்பப்படி இயக்கி வைக்கிறான். அங்கு காலம் என்பது அவன் முன்பாக சக்தியற்று உள்ளது.

## 55. த்ருவ:

அவனுடைய ஸ்வரூபம் எப்போதும் மாறாமல் உள்ளதால் த்ருவ: எனப்படுகிறான். எல்லையற்ற அவதாரங்கள் போன்றவற்றை அவன் எடுத்தபோதிலும் மாறாதவனாக உள்ளான்.

- இராமாயணம் யுத்தகாண்டம் (114-15) - அஜஸ்ய: சாச்வதோ த்ருவ: – வெல்லப்பட இயலாதவன், நித்யமாக உள்ளவன், மாறாதவன்.
- விஷ்ணுபுராணம் (1-2-1) - அதிகாராய சுத்தாய - மாறாதவன், தூய்மையானவன்.
- விஷ்ணுபுராணம் (1-2-11) - அபக்ஷய விநாசாப்யாம் – அழிதல், மரணம் இல்லாதவன்.

## 56. அக்ராஹ்ய:

குயவனால் கட்டுப்படுத்தப்படும் மண், நெசவாளியால் பின்னப்படும் நூல் ஆகியவை போன்று அல்லாமல், இவன் யாராலும் கட்டுப்படுத்தப்படாதவனாக உள்ளான். கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய நாராயணவல்லீ (1-9) - நைநம் ஊர்த்வம் ந தீர்யஞ்சம் ந மத்யமே பரிஜக்ரபத் - அவனை மேலிருந்தோ, கீழிருந்தோ, பக்கத்திலிருந்தோ யாரும் கட்டுப்படுத்த இயலாது.
- யஜுர் அஷ்டகம் (2-6-2) - ப்ரஹ்மாத்யதிஷ்டத் – ஸ்ருஷ்டியை பரம்பரஹ்மமே மேற்பார்வை செய்கிறான்.
- ச்வேதாஸ்வதர உபநிஷத் (4-11) - அதிதிஷ்டதி ஏக: - அவன் மட்டுமே ஸ்ருஷ்டியை கட்டுப்பாட்டில் வைத்துள்ளான்.

## 57. சாச்வத:

இந்த உலகத்தின் இயக்கங்களை (ஸ்ருஷ்டி போன்றவை) அவன் தொடர்ந்து நடத்திவருவதால், இந்த திருநாமம் பெறுகிறான். விஷ்ணுபுராணம் (1-2-26) – அப்யுச்சிந்நா: ததஸ்து ஏதே ஸர்க்க ஸ்தித்யந்த ஸம்யமா: - ஸ்ருஷ்டி, காத்தல், அழித்தல், ஆகிய செயல்களை அவன் தொடர்ந்து நியமித்தபடியே உள்ளான் – என்றது.

## 58. க்ருஷ்ண:

படைத்தல், காத்தல் போன்ற தொழில்களைத் தனது விளையாட்டிற்காகவே செய்வதால் எல்லையற்ற ஆனந்தம் கொண்டவனாக உள்ளான். இதனால் இந்தத் திருநாமம்

கொண்டான். மஹாபாரதம் உத்யோகபர்வம் (69-5) – க்ருஷ்ணீ: பூவாசக: சப்த: ணச்வ நிவ்ருத்திவாசக: க்ருஷ்ணஸ்தத்பாவயோகாச்ச - க்ருஷ் என்றால் மகிழ்ச்சிக்கான காரணம், ந: என்றால் மகிழ்ச்சி, அவன் மகிழ்வின் இருப்பிடமாகவே உள்ளதால் க்ருஷ்ணன் எனப்படுகிறான்.

## 59. லோஹிதாக்ஷ:

தாமரை போன்ற சிவந்த அழகான கண்களை உடையவன். இந்தக் கண்களின் மூலம் தனது எல்லையற்ற ஆனந்தத்தை வெளிப்படுத்தியபடி உள்ளான்.

## 60. ப்ரதர்த்தன:

அனைத்தையும் ப்ரளயகாலத்தில் ஸம்ஹாரம் செய்பவன் என்று பொருள். தர்த்தி: என்றால் ஸம்ஹாரம் செய்தல் ஆகும். கீழே உள்ள வரிகள் காண்க:

- கட உபநிஷத் (2-24) - யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் ச உபே பவத: ஆதந: - நேர்மையான அந்தணர்கள், க்ஷத்ரியர்கள் பரமபதத்தை அடையக்கூடிய தகுதி பெற்றார்கள் என்றால், அவனால் உண்ணப்படுகின்றனர்.

- ப்ரஹ்மசூத்திரம் (1-2-9) - அத்தா சராசரக்ரஹணாத் – அனைத்தையும் தன்னிடம் ஈர்ப்பவன் என்பதால் அனைத்தையும் உண்பவன் ஆகிறான்.

## 61. ப்ரபூத:

அனைத்தையும் ஸம்ஹாரம் செய்பவன் என்றாலும், அனைத்தையும் நிரம்பப் பெற்றவன் (குறையாமல் உள்ளவன்) ஆவான். எல்லையற்ற ஆனந்தமும் நித்யமாக உள்ள தன்மையும் கொண்ட பரமபதத்தைத் தனது இருப்பிடமாக உடையதால் இவ்விதம் உள்ளான்.

## 62. த்ரிககுத்தாம:

மூன்று உலகங்களையும் தனது இருப்பிடமாகக் கொள்பவன். இந்தத் திருநாமத்தின் மூலம் தோற்றம் மற்றும் அழிவுடன் கூடிய இந்த உலகம் என்பது அவனது பரமபதத்துடன் ஒப்பிட்டால் ஒரு சிறிய அணு அளவே என்பதை அறியலாம். ஒரு சிலர் த்ரிககுப்ததாம

என்றும் கூறுவர். குத் அல்லது குப் என்ற இரண்டு பதங்களும் பாதத்தை உணர்த்துகின்றன. அவனது பரமபதம் என்பது நாம் அறிந்த இந்த உலகத்தைப் போன்று மூன்று மடங்கு பெரியது என்பதை த்ரிக என்ற பதம் உணர்த்துகிறது. கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷஸூக்தம் – பாத: அஸ்ய விச்வா பூதாநி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி - இந்த உலகில் உள்ள அனைத்தும் அவனது நான்கில் ஒரு பங்கே ஆகும். அவனது பரமபதம் இந்த உலகைக் காட்டிலும் மூன்று மடங்கு பெரிதாகும். த்ரிபாத் என்றால் மிகவும் பெரிது என்று பொருள், பாதம் என்றால் சிறிய அளவு என்று பொருள்.

- விஷ்ணுபுராணம் (1-9-53) - யஸ்ய ஆயுதாயுத அம்சாம்சே விச்வசக்தி: இயம் ஸ்திதா – அவனுடைய உருவத்தின் கோடிக்கணக்கில் ஒரு சிறிய பாகமே இந்த உலகம்.

- மேரோரிவ அணு: யஸ்யைத் - அவனுடைய பரமபதத்திற்கு முன்பாக உலகம் எப்படிப்பட்டது என்றால் உயர்ந்த மேரு மலைக்கு முன்பாக உள்ள அணு போன்றதாகும்.

அல்லது த்ரிக்குத் என்பது அவனுடைய ஞானம் உள்ளிட்ட ஆறு குணங்களைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். இவை இரண்டு இரண்டாக மூன்று பிரிவுகளாக உள்ளன. அவனுடைய ஸ்வபாவம் என்பது இந்த ஆறு குணங்களால் நிரம்பியது ஆகும். அவன் இவ்விதம் மூன்று ஜோடிக் குணங்களைக் கொண்டுள்ளதால் த்ரியுகம் எனப்படுகிறான்.

அல்லது வேறு ஒரு பொருளும் உரைக்கலாம். மஹாபாரதத்தில் தன்னைப் பற்றி பகவான் கூறும்போது - ததைவ ஆஸம் த்ரிககுதோ வாராஹம் ரூபம் ஆஸ்தித: த்ரிககுத தேந விக்யாத: சரீரஸ்ய ப்ரமாணபாத் – அதன் பின்னர் நான் மூன்று கொம்புகளுடன் கூடிய வராஹமாக நின்று அசுரனை அழித்தேன். இதனால் நான் த்ரிககுத என்று அழைக்கப்படுகிறேன். இப்படிக் கொள்ளும்போது தேஜஸ்ஸைக் குறிப்பதாக உள்ளது. தாம என்பது பரமபதத்தின் ஒளியைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

## 63. பவித்ராய:

இப்படியாக குணங்கள், ஐச்வர்யம், ரூபம் ஆகியவற்றைக் கொண்டவன் எம்பெருமான் என்று படிப்படியாக விளக்கினார். அதன் பின்னர், இவைகள் மூலமாக அறியப்படும் அவனது ஸ்வரூபத்தை விளக்கத் தொடங்குகிறார். இதனை இந்தத் திருநாமத்தால் தொடங்குகிறார்.

“அசி”, “த்ரை” போன்ற வினைப்பகுதிகளுக்குப் பின்னர் “இத்ர”, “அத்ர” என்னும் எச்சங்கள் பொதுவாகச் சேர்க்கப்படும். இங்கு “பூ” என்னும் வினைப்பகுதியுடன் “இத்ர” என்பது சேர்ந்து “பவித்ரம்” என்பது கிட்டியது. அல்லது, ரிஷி மற்றும் தேவதைகளைக் கூறும்போது “பூ” என்னும் வினைப்பகுதியுடன் “இத்ர” என்பது சேர்ந்து ”கர்த்தா” எனும் பொருளில் உள்ளது.

## 64. மங்களம் பரம்

மங்களம் என்னும் சொல்லானது, “செல்வது” என்னும் பொருளைக் கொண்ட “மங்கி” என்னும் தாதுவுடன் “அலச்” என்னும் எச்சம் சேர்வதால் உண்டாகிறது (மங்க் + அல = மங்கலம்). மங்கலங்கள் அல்லாத அனைத்திற்கும் எதிர்த்தட்டாக அவன் திருமேனி உள்ளது. இவனே அனைத்து சுபங்களுக்கும் இருப்பிடமாக உள்ளான். தன்னுடைய தேஜஸ் மற்றும் எல்லையற்ற ஆனந்தம் காரணமாக இவ்விதம் உள்ளான். இத்தகைய மங்களம் என்பது எல்லையற்றதாக உள்ளதைப் ”பரம்” என்பது கூறுகிறது. தனது இயல்பான, நித்யமான, எல்லையற்ற, எண்ணிக்கையற்ற திருக்கல்யாண குணங்கள் காரணமாக அவன் எப்போதும் ஆனந்தமாகவே உள்ளான். அனைத்தையும் அவன் கொண்டுள்ளதால் எப்போதும் த்ருப்தியுடன் உள்ளவனாகவும், எதனையும் விரும்பாதவனாகவும் உள்ளான். அலை வீசாத, அசையாத அமிர்தக்கடல் போன்று தனது உயர்ந்த ஸ்வபாவம் காரணமாக உள்ளான். தோஷங்கள் அற்றதாகவும், முடிவற்றதாகவும், ஒப்பற்றதாகவும் உள்ள தேஜஸ் காரணமாக எல்லையற்ற ஆனந்தம் கொண்டவனாக உள்ளான். இப்படியாகவே ப்ரஹ்மசூத்திரத்தில் கூறப்பட்டது. கீழே உள்ள பல வரிகள் காண்க:

- ப்ரஹ்மசூத்திரம் (1-1-13) – ஆனந்தமயோ அப்யாஸாத் – ஆனந்தங்கள் அனைத்தும் அவனில் சென்று முடிவதால், அவனே ஆனந்தமயன் எனப்படுகிறான்.
- ப்ரஹ்மசூத்திரம் (3-3-11) - ஆனந்தாதய: ப்ரதாநஸ்ய – த்யானத்தில் அவனது ஆனந்தம் போன்றவற்றை எடுத்துக்கொள்ளவேண்டும்.
- ப்ரஹ்மசூத்திரம் (3-3-33) - அக்ஷராதியாம் த்வவரோத: - அக்ஷரம் எனப்படும் ப்ரஹ்மத்திற்கு அனைத்து குணங்களும் படிக்கப்படுகின்றன.
- தைத்திரீய ஆனந்தவல்லீ (1) - ஸத்யம் ஞானம் அனந்தம் - உண்மையானது, ஞானமயமானது, எல்லையற்றது.
- தைத்திரீய ப்ருகுவல்லீ (6) - ஆனந்தோ ப்ரஹ்ம: - ப்ரஹ்மம் ஆனந்தமயமானது.
- தைத்திரீய சீக்ஷாவல்லீ (6) - சாந்தி ஸம்ருத்தம் அம்ருதம் – ப்ரஹ்மம் அமைதியானது, அமிர்தமயமானது.
- யோகசூத்திரம் – யத்ர லக்ஷயேத் சாந்தம் அநுத்வாதம் அந்தரங்கம் த்ருப்தம் அம்ருதம் பரம் ப்ரஹ்ம தத்ர தாரயேத் இதி ஏஷா நைஷ்டிகீ தாரணா - ப்ரஹ்மத்தை அமைதியாகவும், உறுதியாகவும், அசையாததாகவும், த்ருப்தியுடன் கூடியதாகவும், அமிர்தமயமாகவும், உயர்ந்ததாகவும் காணும்போது உயர்ந்த த்யானம் கைக்கூடுகிறது.
- அந்தரங்கம் அநிர்தேச்யம் அபதாநந்தலக்ஷணம் – உறுதியானது, வரையறுக்க இயலாதது, விவரிக்க இயலாதது, இப்படியாகவே அந்த ஆனந்தமயம் உள்ளது.

ப்ரஹ்மம் ஞானமயமானது மட்டுமே என்ற கருத்தானது "அகண்ட கண்டனம்" என்பதில் நூறு விதமாகக் கண்டிக்கப்பட்டுள்ளது. ப்ரஹ்மம் ஆனந்தமயமானது, ஞானமயமானது என்று மட்டுமே கூறப்படுவது ஏன் என்றால், அவன் ஆனந்தமயமானவன், ஞானமயமானவன் என்பதால் மட்டுமே அல்ல; அவன் ஞானம், ஆனந்தம், சக்தி, ஐச்வர்யம் போன்ற பல குணங்களையும் கொண்டதாலேயே ஆகும். அவன் தனக்காகத் தானாகவே ஒளிர்பவன் ஆவான். இரத்தினம், சூரியன், விளக்கு போன்றவை தங்களைத் தாங்களே ஒளியிட்டுக் காண்பிப்பது மட்டுமே அல்லாமல், தங்களது ஒளியானது எந்த பொருள்களின் மீது படுகிறதோ அந்தப் பொருளையும் காண்பிக்கின்றன. வேறு எதனுடைய உதவியும் இன்றி தாங்களாகவே ஒளிர்கின்றன. இதனால் இவை தேஜஸ் என்றும் தேஜஸ்வீ (ஒளி, ஒளியுடன் கூடியவை) என்று கூறப்படுகின்றன. இது போன்றே

பகவானும் ஞானம் என்ற தனது ஒளி மூலம் இந்த உலகில் உள்ள அனைத்துப் பொருள்களையும் அறியும்படிச் செய்கிறான்; மற்ற ஒளியுடன் கூடிய பொருளின் உதவியின்றி தானாகவே ஒளிர்கிறான். இதனால் இவன் ஞானம் என்றும், ஜ்ஞாதா (அறிவு, அறிபவன்) என்றும் கூறப்படுகிறான். இவன் ஞானம் என்று கூறப்பட்டால் அதற்கான கருத்து ப்ரஹ்மசூத்திரத்தில் உள்ளது:

- ப்ரஹ்மசூத்திரம் (2-3-29) - தத்குணா ஸாரத்வாத் தத்வ்யபதேச: ப்ரஜ்ஞவத் – ப்ரஹ்மத்தை விஜ்ஞானம் என்று அழைப்பதன் காரணம், அதற்கு விஜ்ஞானம் என்னும் குணம் உள்ளதால் ஆகும்.
- தைத்திரீய ஆனந்தவல்லீ - ஸத்யம் ஞானம் – அவன் உண்மை, ஞானம்.
- முண்டக உபநிஷத் (1-1-10) - ய: ஸர்வஜ்ஞ ஸர்வவித் - அவன் அனைத்தும் அறிந்தவன்.

என்பது போன்ற வரிகள் முரண்பாடு இல்லாமலேயே உள்ளன. வார்ஷ்ணேய அத்யாத்மத்தில் – யதா ஜீவ: ப்ரசாந்தாத்மா ஹ்ருஸ்வே வா யதி வா மஹாந் ஞானாத்மாநம் ததா வித்யாத் புருஷம் ஸர்வ ஜந்துஷு ஸ: அத்ரதேவயேத் வேத்யம் – மிகவும் பெரிதாகவோ சிறிதாகவோ உள்ள ஜீவன் அமைதியான நிலையில் எப்படி உள்ளதோ, அது போன்றே ப்ரஹ்மமும் ஞானமயமான நிலையில் உள்ளது. அறிய வேண்டிய அனைத்தையும் அறியும்படி அவனே செய்கிறான் – எனப்பட்டது.

## 65. ஈசாந:

இந்தப் பதமானது ஸர்வேச்வரனை பந்தஜீவன், முக்தஜீவன் முதலானவர்களிடம் இருந்து வேறுபடுத்துகிறது. அவர்களின் தன்மைகள் மறைக்கப்பட்டோ அல்லது வெளிப்பட்டபடியோ உள்ளது. இந்த உலகில் உள்ள அனைத்தையும் எந்த நிலையிலும் கட்டுப்பாட்டில் வைத்திருத்தல் என்பது இவன் இயல்பாகவே உள்ளது. கீழே உள்ள வரிகள் காண்க:

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-7) - தம் ஈச்வராணாம் பரமம் மஹேச்வரம் – அனைத்து தெய்வங்களையும் விட உயர்ந்தவன், அனைவருக்கும் ஈச்வரன்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-8) - ஸ்வபாவகீ ஜ்ஞாநபலக்ரியாச – ஞானம், பலம், செயல்பாடு ஆகியவை அவனுக்கு ஸ்வபாவமாக உள்ளன.
- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-9) - ந தஸ்ய கச்சித் பதிரஸ்தி லோகே ந சேசிதா ந ஏவ ச தஸ்ய லிங்கம் ஸ காரணம் கரணாதிபாதிப: ந சாஸ்ய கச்சித் ஜநிதா ந ச அதிப: - இந்த உலகில் உள்ள யாரும் அவனுக்கு எஜமானன் அல்ல; அவனை யாரும் ஆள்வதும் இல்லை; அவன் சரீரம் அற்றவன்; அவனே அனைத்தின் காரணம்; புலன்களின் எஜமானாகிய ஆத்மாவின் எஜமானன்; அவனுக்கு எஜமானனோ, பிறப்பித்தவர்களே யாரும் இல்லை.
- ப்ருஹத் உபநிஷத் (4-4-22) - ஸர்வஸ்ய வசீ ஸர்வஸ்ய ஈசாந: ஸர்வஸ்ய அதிபதி: ஸ ந ஸாதுநா கர்மணா பூயாந் நோ ஏவ அஸாதுநா கவீயாந் ஏஷ ஸர்வேச்வர: ஏஷ பூதாதிபதி: ஏஷ பூதபால: ஏஷ ஸேது: விதரண ஏஷா லோகாநாம் அஸம்பேதாய – அவனே அனைத்திற்கும் அதிபதி; தன்னுடைய உயர்ந்த செயல்களால் வளர்வதோ அல்லது தாழ்ந்த செயல்களால் தாழ்வதோ போன்ற தன்மைகள் அவனுக்கு இல்லை; அவன் அனைத்தின் எஜமானன், அதிபதி, பாதுகாப்பவன் ஆவன்; அனைத்து உலகங்களும் ஒன்றுடன் ஒன்று கலந்து குழம்பி விடாமல் தடுக்கும் அணை போன்றவன்.
- ப்ருஹத் உபநிஷத் (2-5-15) - ஸ வா அயமாத்மா ஸர்வேஷாம் பூதாநாம் அதிபதி: ஸர்வேஷாம் பூதாநாம் ராஜா - இந்த உயர்ந்த பரமாத்மாவே அனைத்து உயிர்களின் அதிபதி, அனைவருக்கும் அரசன் ஆவான்.
- தைத்திரீய யஜுர் (4-1-8) - ஏக இத்ராஜா ஜகதோ பபூவ – இந்த உலகம் முழுவதற்கும் ஒரே அரசன் மட்டுமே.
- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-17) - ஸ ஈச: அஸ்ய ஜகதோ நித்யமேவ நாந்யோ ஹேது: வித்யதே ஈசாநாய - இந்த உலகின் அரசன் எப்போதும் இவனே; வேறு யாரிடமும் இந்த ஆளும் வல்லமை இல்லை.
- கீதை (18-61) - ஈச்வர: ஸர்வபூதாநாம் – அனைத்து உயிர்களுக்கும் ஈச்வரன்.
- மஹாபாரதம் உத்யோகபர்வம் (67-13) - ஈசதே பகவாந் ஏக: ஸத்யமேதத் ப்ரவீமி தே – இந்த உலகம் முழுவதற்கும் ஒரே ஈச்வரன் மட்டுமே, இதுவே உண்மை ஆகும்.
- விஷ்ணுபராணம் (6-4-40) - பரமாத்மா ச ஸர்வேஷாம் ஆதார: பரமேச்வர: - அனைத்திற்கும் ஆதாரம் அந்தப் பரமாத்மா, அவனே உயர்ந்த ஈச்வரனும் ஆவான்.

இப்படியாகப் பரம்பொருளானவன் மாயை முதலான பல தோஷங்களால் பீடிக்கப்பட்டவன் என்று கூறுபவர்களுக்கும், ஈச்வரன் போன்றவை மாயை என்று கூறுபவர்களுக்கும் கண்டிக்கும் வகையில் பதில் உரைத்தார்.

## 66. ப்ராணத:

எஜமானன் என்ற தன்மைக்கு முதன்மையாக உள்ள குணத்தை இந்தப் பதம் கூறுகிறது. அவனே உயிர் அளிக்கிறான். அவன் நித்யசூரிகளுக்கு உயிரும் வலிமையும் அளித்து, தனது கைங்கர்யத்தில் அவர்களை ஈடுபடுத்திக் கொள்கிறான்.

- தைத்திரீய யஜுர் (4-1-8) - ய ஆத்மாதா: பலதா: - அவன் தன்னையே ஆத்மாவாகவும், வலிமையாகவும் அளிக்கிறான்.
- ப்ருஹத் உபநிஷத் (3-5-20) – ஸதைவ: ப்ராண ஆவிசதி – அவனே ப்ராணனாக அனைத்து உயிர்களிலும் புகுகிறான்.

## 67. ப்ராண:

தேவர்களுக்கும் ப்ராணனாக உள்ளவன்.

- தைத்திரீய யஜுர் (4-1-8) - ததோ தேவாநாம் நிரவர்த்தா ஸுரேக: - ஒரே உயிராக தேவர்களுக்கு அவனே இருந்தான்.
- தைத்திரீய ஆனந்தவல்லீ (7) - கோ ஹி ஏவ அந்யாத் க: ப்ராண்யாத் – அவன் இல்லை என்றால் இந்த உலகிலோ, அந்த உலகிலோ எப்படி ஆனந்தத்தை அனுபவிக்க இயலும்?
- யஜுர் அஷ்டகம் (2-5-1) - ப்ராணோ ரக்ஷதி விச்வம் ரஜத் – ப்ராணனாகிய அவனே பாதுகாக்கிறான்.
- ப்ரஹ்மசூத்திரம் (1-1-29) - ப்ராணஸ்ததா அநுகதாம் – அவனே ப்ராணன் என்பது உணரலாம்.
- அதைநம் ஏதே தேவா: ப்ராணா அம்ருதோ ஆவிசந்தி – அதன் பின்னர் இறவாமை பெற்ற தேவர்கள் ப்ராணன் எனப்படும் அவனுள் புகுந்தனர்.

- முண்டக உபநிஷத் (2-2-2) - தத் ஏதத் அக்ஷரம் ப்ரஹ்ம ஸ ப்ராண: தது வாங்மந: - அழியாத பரப்ரஹ்மமே ப்ராணன், வாக்கு, மனம் ஆகும்.
- தைத்திரீய சீக்ஷாவல்லீ (6-2) - ஸத்யாத்ம ப்ராணாராமம் மம ஆனந்தம் – முக்தர்களுக்கும் தேவர்களுக்கும் அவனே ப்ராணன் மற்றும் ஆனந்தமாக உள்ளான்.
- சாந்தோக்ய உபநிஷத் (3-14-2) – மநோமய: ப்ராண சரீரோ பாரூப: ஸத்யஸங்கல்ப: - மனதால் மட்டுமே உணரப்படக்கூடியவன், ப்ராணனைச் சரீரமாகக் கொண்டவன், ஸத்யஸங்கல்பன்.
- பௌஷ்கர ஸம்ஹிதை - அதோபகரணம் திவ்யம் பஞ்ச சக்தி உபலக்ஷிதம் கால ஞான க்ரியா இச்சாக்ய ப்ராண ஸம்ஜ்ஞும் மஹாமதே ப்ராண சக்தேஸ்து ச அத்யாத்மம் ஷாட்குண்யம் அகிலம் ஹி யத் அதிதேவதம் அப்ஜாக்ஷோ வாஸுதேவ: ஸநாதந: - காலம், ஞானம், செயல்பாடு, விருப்பம் மற்றும் ப்ராணன் என்னும் ஐந்து வகையான திவ்யமான சக்தியைக் கொண்டுள்ளான். இத்துடன் ப்ராணன் சேரும்போது, அவனிடம் ஆறு குணங்களாகின்றன. இப்படியாக உள்ள தாமரை போன்ற கண்கள் கொண்ட வாஸுதேவனே உயர்ந்தவன்.
- தௌம்ய ஸம்ஹிதை – ஞான க்ரியேச்சா ப்ராண ரூபம் சக்தி வ்யூஹம் த்விஜ அச்யுதம் – இரண்டுமுறை பிறப்புள்ள அந்தணரே! ஞானம், செயல்பாடு, விருப்பம், ப்ராணன் ஆகியவற்றை உடைய அவனை அச்யுதன் என்கின்றனர்.

## 68. ஜ்யேஷ்ட:

அனைவராலும் போற்றத்தக்கவன் அல்லது அனைவருக்கும் முதியவன். ”போற்றத் தக்கவன்” என்னும் பொருள் கொண்டதான ப்ரசஸ்ய என்ற பதத்துடன் “மிகவும் சிறந்தது” என்னும் பொருள் கொண்ட இஷ்டந் என்பது இணையும்போது, ப்ரசஸ்ய என்பதற்குப் பதில் ஜ்ய என்பது வருகிறது. அவனது ஐச்வர்யங்கள் எல்லையற்றதாகவே உள்ளன. அவன் தன்னாலும் நித்யஸூரிகளாலும் எப்போதும், எந்த நிலையிலும் அனுபவிக்கப்பட்டவனாகவே உள்ளபோதிலும், அத்தகைய அனுபவத்திற்கு எல்லை என்பதே இல்லை. இதனால் அவன் அதிகமாகப் போற்றத்தக்கவன் ஆகிறான்.

- பகவான் வாஸுதேவோ ஜ்யாயஸீ விபூதி: - வாஸுதேவனே பகவான் ஆவான்; அவனது செல்வங்கள் மிகவும் பெரியவை.

- யஜுர் அஷ்டகம் (2-8) - ப்ரஹ்ம ஏவ பூதாநாம் ஜ்யேஷ்டம் – அனைத்து உயிர்களில் ப்ரஹ்மமே உயர்ந்தது.
- அஷ்டாத்யாயீ (5-3-62) - வ்ருத்தஸ்ய ச – அனைவருக்கும் முன்பே உள்ளதால், முந்தியவன் என்று பொருள் கொள்ளலாம். அப்போதும் “மிகவும் அதிகம்” என்னும் பொருள் கொண்ட இஷ்டந் என்பது சேர்கிறது. இதனால் வ்ருத்த என்பது மறைந்து, ஜ்ய என்பது உண்டாகிறது எனலாம்.
- மஹாபாரதம் ஸபாபர்வம் (38-24) - ஏஷ ப்ரக்ருதி: அவ்யக்த: கர்த்தா சைவ ஸநாதந: பரச்வ ஸர்வபூதேப்ய: தஸ்மாத் வ்ருத்தமோச்யுத: - அவன் ஸூக்ஷ்மமாக உள்ளவன், அவனே கர்த்தா; அவன் என்றும் உள்ளான்; அனைத்து பூதங்களும் ஏற்படுவதற்கு முன்பே உள்ளான்; அனைவருக்கும் மூத்தவன்.

## 69. ச்ரேஷ்ட:

அவனது திருக்கல்யாண குணங்களையும், திவ்யமான திருமேனியையும் எப்போதும் அனுபவித்தப்படி உள்ளதால், நித்யஸூரிகள் அவனை எப்போதும் புகழ்ந்தபடி உள்ளனர். ”புகழத்தக்கவன்” என்னும் பொருள் கொண்ட ப்ரசஸ்ய என்பதுடன், ”மிகவும் சிறந்த” என்னும் பொருள் கொண்ட இஷ்டந் என்பது இணையும்போது, ப்ரசஸ்ய என்பதற்குப் பதிலாக ச்ர என்ற பதம் பயன்படுகிறது.

- ஸுபால உபநிஷத் – தத் விப்ராஸ விபந்யவ: ஜாக்ருவாம்ஸ: ஸமிந்ததே விஷ்ணோர்யத் பரமம் பரம் - அந்தப் பரமபதத்தில் நித்யஸூரிகள் எப்போதும் அவனைப் போற்றியபடியே உள்ளனர். விபந்யவ என்றால் அவனைத் துதித்து அவனுக்குக் கைங்கர்யங்கள் செய்பவர்கள் என்பதாகும்.
- தஸ்மை தேவா உபாஸதே – அவனுக்கு அடிமைகளாக நின்று அவனை ஆராதிக்கின்றனர்.

## 70. ப்ரஜாபதி:

நித்யஸூரிகளின் தலைவன். இப்படியாகப் பகவானை எப்போதும் புகழ்ந்தபடி உள்ளது யார்? அவர்களுக்கும் அவனுக்கும் உள்ள தொடர்பு என்ன? இப்படிப்பட்ட கேள்விகளுக்கு இந்தத் திருநாமம் விடை அளிக்கிறது. பத்தர் மற்றும் முக்தரைக் காட்டிலும்

உயர்ந்தவர்களாக உள்ளதால் நித்யஸூரிகளே ப்ரஜா: எனப்படுகின்றனர். கீழே உள்ள பல ச்ருதி வரிகளால் இதனை அறியலாம்:

- யஜுர் அஷ்டகம் (3-11) - ரச்மி ரச்மீநாம் மத்யே தபந்தம் ருதஸ்ய பதே கவயோ நிபந்தி – ஒளியுடன் கூடியவர்களின் நடுவில் அவர்களைக் காட்டிலும் ஒளி உடையவனாகவும், ஜ்யோதி ஸ்வரூபனாகவும், ஸத்ய ஸ்வரூபனாகவும் உள்ள பரமாத்மாவின் திருவடிகளில் அனைத்தும் அறிந்த நித்யஸூரிகள் எப்போதும் வணங்குகின்றனர்.
- தைத்திரீய நாராயணவல்லீ (3) – யமந்த: ஸமுத்ரே கவயோ வயந்தி ததக்ஷரே பரமே ப்ரஜா: - எந்த ஒன்றை அனைத்தும் அறிந்த நித்யஸூரிகள் ஸமுத்திரத்தின் நடுவில் உள்ளதாகவும் அழியாததாகவும் அறிகின்றார்களே அதுவே பரம்பொருள்.
- தைத்திரீய நாராயணவல்லீ (2) - யஸ்மிந் தேவா அதி விச்வே நிஷேது: – எந்த ஒருவனிடம் அனைத்து தேவர்களும் சென்று வாழ்கிறார்களோ அவனே பரம்பொருள்.
- அஷ்டாத்யாயீ (1-4-97) - அதிரீச்வரே – அதி என்பது ஒரு பெயர்ச் சொல்லுடன் இணையும்போது, ஸ்வாமி என்பதை உணர்த்துகின்ற பெயர் பெறுகிறது.
- அஷ்டாத்யாயீ (2-3-9) - யஸ் மாதிகம் யஸ்ய ச ஈச்வராசநம் தத்ர ஸப்தமீ – "யாருக்கு ஈச்வரத்தன்மை அதிகம் உள்ளதோ" என்னும் பொருளில் "அதி" என்பது இணையும்போது, அந்தப் பெயர்ச்சொல் ஏழாம் வேற்றுமையில் இருத்தல் வேண்டும். இதற்கு - அதிப்ரஹ்மதத்தே பாஞ்சாலா: - பாஞ்சால நாட்டிற்கு ஈச்வரன் ப்ரஹ்மதத்தன் – என்பது உதாரணம் ஆகும்.
- தைத்திரீய யஜுர் (4-1-8) – யோ தேவேஷு அதிதேவ ஏக ஆஸீத் – எந்த ஒருவன் அனைத்து தேவர்களுக்கும் அதிபதியாக உள்ளானோ.
- புருஷஸூக்தம் (14) - யத்ர பூர்வே ஸாத்யா: ஸந்தி தேவா: - நித்யமாக உள்ள எந்த பரமபதத்தில் ஸாத்யர்கள் என்ற பெயர் கொண்ட நித்யஸூரிகள் உள்ளார்களோ.
- அச்சித்ர – ஸதா பச்யந்தி ஸூரய: - நித்யமாக உள்ள அவர்கள் எந்தப் பரமபதத்தைப் பார்த்தபடி உள்ளனரோ.
- புருஷஸூக்தம் (14) - யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா: - எந்தப் பரமபதத்தில் அனைத்தும் அறிந்தவர்களும், அனைவருக்கும் முன்பே உள்ளவர்களும் ஆகிய நித்யஸூரிகள் உள்ளனரோ.

- கட உபநிஷத் (2-5-3) - மத்யே வாமநம் ஆஸிநம் விச்வே தேவா உபாஸதே – தங்களது இதயத்தில் உள்ளவனும் (வாமனன்), பூஜிக்கத்தக்கவனும் ஆகிய பரம்பொருளை ஸத்வகுணம் உள்ள தேவர்கள் உபாஸிக்கின்றனர்.

அனைத்தும் அறிந்தவர்களும், எல்லையற்ற காலம் பரமபதத்தில் வாசம் செய்பவர்களும் ஆகிய நித்யஸூரிகளே இங்கு ப்ரஜா: எனப்படுகின்றனர். அவர்களின் ஸ்வாமியாக உள்ளதால், அவர்களால் எப்போதும் கைங்கர்யம் செய்யப்படுகிறான். இதுவே ப்ரஜாபதி என்பதாகும்.

## 71. ஹிரண்யகர்ப்ப:

நன்மையை அளிப்பதான பரமபதத்தில் உள்ளவன். பல பெருமைகளுக்கு ஏற்றதான ஒரு உயர்ந்த லோகத்தில் அவன் உள்ளான். பரமபதம் என்னும் அந்த லோகம் சுத்த ஸத்வமயமானது, தோஷங்கள் அற்றது, நித்யமானது ஆகும். தங்கம் என்பது எவ்விதம் அனைத்திலும் மேம்பட்டது என்னும்படி உள்ளதோ அது போன்று, அந்தப் பரமபதமும் அனைத்திலும் மேம்பட்டதாகும். இதனால் ஹிரண்யம் என்றாகிறது. அல்லது ஹிதம் + ரமணீயம் என்று கொள்ளலாம். அதாவது நன்மையை அளிப்பதாகவும், காண்பதற்கு அழகாகவும் உள்ளது எனலாம். அவன் எப்போதும் அங்கு உள்ளதால், அது கர்ப்பத்துடன் உள்ளது என்பதை உணர்த்த கர்ப்ப எனப்பட்டது. கீழே உள்ள ச்ருதி வரிகள் காண்க:

- முண்டக உபநிஷத் (2-2-10) - ஹிரண்மயே பரே லோகே விரஜம் ப்ரஹ்ம நிஷ்கலம் தத் சுப்ரம் ஜ்யோதிஷாம் ஜ்யோதி: தத்யத் ஆத்மவிதோ விது: ந தத்ர ஸூர்யோ பாதி - பொன் போன்ற ப்ரகாசத்துடன் கூடிய அந்தப் பரமபதத்தில் ப்ரஹ்மம் உள்ளது; அது சுத்த ஸத்வமாக உள்ளது, தோஷங்கள் அற்றது; மற்றவற்றுக்கு ஒளியை அளிப்பதாகிய பொருள்களுக்கும் ஒளியை அளிப்பது; அந்த ப்ரஹ்மத்திற்கு எதிரே சூரியன் போன்றவை ப்ரகாசிப்பதில்லை. இப்படிப்பட்ட பரம்பொருளை ஞானிகள் அறிகின்றனர்.

- யஜுர் ஆரண்யகம் (1-27) - தேவாநாம் பூ: அயோத்யா தஸ்யாம் ஹிரண்மய: கோச: புரம் ஹிரண்மயீம் ப்ரஹ்மா விவேச அபராஜிதா - தேவர்களின் இருப்பிடம் அயோத்யை ஆகும். அங்கு உள்ள தங்கமயமான பொக்கிஷமாக பரம்பொருள்

உள்ளது. யாராலும் வெல்ல இயலாத காரணத்தினால் அபராஜிதா என்று பெயர் பெற்ற அந்தப் பொன்னுலகில் நான்முகன் புகுந்தான்.

## 72. பூகர்ப்ப:

பூமாதேவியைக் கர்ப்பத்தில் வைப்பது போன்று வைத்துக் காப்பாற்றுபவன். பூ என்றால் பூதேவி. இவளுக்குச் சாஸ்த்ரங்களில் ஹ்ரீ, க்ஷமா போன்றவையும் பெயர்களாகக் கூறப்பட்டன. தனது அனுபவத்தை அவளுக்கு எப்போதும் அளித்தபடி, கர்ப்பத்தில் காப்பது போன்று காப்பாற்றுகிறான். இதனை வேதங்கள் தெளிவாகக் கூறுகின்றன:

- யஜுர் அஷ்டகம் (3-1-2) - மஹீம் தேவீம் விஷ்ணுபத்நீம் அஜுர்யாம் – எப்போதும் இளமையுடன் உள்ளவளும், மஹாவிஷ்ணுவின் பத்தினியும் ஆகிய பூமாதேவியை நாம் வணங்குவோம்.
- தைத்திரீய நாராயணவல்லீ – உத்ருதா அஸி வராஹேண – பூமிப்பிராட்டியே! நீ வராஹ அவதாரம் செய்த பகவானால் மேலே எடுத்து வரப்பட்டாய்.

இதன் விரிவை ஸ்ரீவிஷ்ணு ஸ்ம்ருதியில் காணலாம்.

## 73. மாதவ:

மஹாலக்ஷ்மியின் கணவன். மாயா: = லக்ஷ்மியின்; தவ: = கணவன். இதனைக் கீழே உள்ள வரிகள் கூறுகின்றன:

- புருஷஸூக்தம் – அஸ்ய ஈசாநா ஜகதீ விஷ்ணுபத்நீ - இந்த உலகின் ஈச்வரியாகவும், மஹாவிஷ்ணுவின் பத்தினியாகவும் உள்ளவள்.
- விஷ்ணு புராணம் (1-18-17) - ஹ்ரீச்சதே லக்ஷ்மீம் ச பத்ந்யை – மஹாவிஷ்ணுவே! உனக்குப் பூமாதேவியும் மஹாலக்ஷ்மியும் பத்தினிகள்.

மஹாலக்ஷ்மியின் ஸ்வரூபம் தோஷம் அற்றதாகவும், ஞானம் மற்றும் ஆனந்தமயமாகவும் உள்ளது. அவளது ஐச்வர்யங்கள் உயர்ந்த்தாகவும், எல்லையற்றதாகவும் உள்ளது. இவளே அனைத்து உலகிற்கும் தாயாக உள்ளாள். இவளுக்குப் பரமாத்மாவுடன் உள்ள ஸம்பந்தம் எல்லையற்ற காலமாகவே உள்ளது. அது அழியாத ஸம்பந்தமாகும். இவை அனைத்தும் வேதங்கள், ஸ்ரீஸூக்தம், ச்ரத்தாஸூக்தம், மேதாஸூக்தம், உத்தர நாராயணம், கௌஷீதகீ ப்ராம்மணம் போன்ற பலவற்றிலும் ஓதப்பட்டுள்ளன. விஷ்ணுபுராணத்தில், அமிர்தம் பெறும் பொருட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்த நிகழ்வைக் கூறும் பகுதியில், இந்திரன் மஹாலக்ஷ்மியைத் துதிக்கும் வரியானது பின்வருமாறு தொடங்குகிறது (1-8-17) - நித்யைவ ஏஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீ: அநபாயிநீ யதா ஸர்வகதோ விஷ்ணு: ததைவ இயம் த்விஜோத்தம - அந்தணரே! உலகின் தாயான இந்த மஹாலக்ஷ்மி நித்யமாக இருப்பவள்; ஒரு நொடி கூட மஹாவிஷ்ணுவைப் பிரியாமல் உள்ளவள்; மஹாவிஷ்ணு எவ்விதம் எங்கும் வ்யாபித்து உள்ளானோ அது போன்று இவளும் எங்கும் வ்யாபித்து உள்ளாள் - என்று உள்ளது.

ப்ரஹ்மபுராணம் கிழே உள்ள வரிகளைக் கூறுகிறது:

> தச்சக்தி: துர்ஜயா பீமா விஷ்ணுசக்தி: இதி ஸ்ம்ருதா
> ஸர்வபூத ஹ்ருதப்ஜஸ்தா நாநாரூப தரா பரா
> ப்ராணாக்யா மந்த்ரமாயா ச விச்வஸ்ய ஜநநீ த்ருவா
> தேவீ பிந்நாஞ்ஜன ச்யாமா நிர்குணா வ்யோம ஏவ ஹி

இதன் பொருள் - மஹாலக்ஷ்மியின் சக்தியை யாராலும் வெல்ல இயலாது. அது அனைவரையும் நடுங்கச் செய்யும் தன்மை கொண்டது. மஹாவிஷ்ணுவின் சக்தி என்றே மஹாலக்ஷ்மியைச் சாஸ்த்ரங்கள் கொண்டாடுகின்றன. அனைத்து உயிர்களின் இதயங்களில் அவளும் எம்பெருமான் போன்று வீற்றுள்ளாள். உலகில் உள்ள பல பொருள்களின் ரூபங்களைத் தரித்துள்ளாள். இதனால் அவை அனைத்தையும் விட மேம்பட்டவளாக உள்ளாள். இந்த உலகை வாழ வைப்பதால் ப்ராணன் என்று பெயர் பெற்றாள். அனைத்து மந்திரங்களையும் பெற்று எடுத்த தாய் அவளே ஆவாள். அனைத்து உலகிற்கும் அவளே தாயாக உள்ளாள். அவள் குழைக்கப்பட்ட மை போன்ற நிறம்

கொண்டவள்; அனைத்து இடங்களிலும் வ்யாபித்துள்ள போதிலும், எந்தவிதமான தோஷமும் இல்லாத காரணத்தால் ஆகாயம் போன்று நிர்மலமாக உள்ளாள்.

தததைவ ஏகா பரா சக்தி: ஸ்ரீ : தச்ய கருணாச்ரயா
ஜ்ஞாநாதி ஷாட்குண்யமயீ யா ப்ரோக்தா ப்ரக்ருதி: பரா
ஏகைவ சக்தி: ஸ்ரீ: தஸ்ய த்விதீயா பரிவர்த்ததே
பராவரேண ரூபேண ஸர்வாகாரா ஸநாதநீ
அநந்த நாமதேயா ச சக்தி சக்ரஸ்ய நாஸிகா
ஜகத் சராசரம் இதம் ஸர்வம் வ்யாப்ய வ்யபஸ்திதா

இதன் பொருள் - அவளே உயர்ந்த சக்தியாக உள்ளாள். எம்பெருமானின் கருணைக்கு இருப்பிடமாக உள்ள ஒப்பற்ற சக்தி ரூபமாக உள்ளாள். ஞானம், சக்தி முதலான ஆறு குணங்களுடன் கூடியவளாக உள்ளாள். அவளே அனைத்திற்கும் முழு முதல் காரணமாக உள்ளதால், பராப்ரக்ருதி எனப்படுகிறாள்; சற்றும் மாறுபாடு அடையாத ஒரு சக்தி ஸ்வரூபமாகவே உள்ளாள்; இவளது மற்றோர் அம்சமான இரண்டாவது சக்தியானது ஜகத்ரூபமாகப் பரிணாமம் பெறும்போது மாற்றம் அடைகிறது. பரம், அபரம் (உயர்ந்தவை, தாழ்ந்தவை) என்று பலவிதமாக உள்ளாள். எல்லையற்ற திருநாமங்களைக் கொண்டவளாக உள்ளாள். அசையும் மற்றும் அசையாப் பொருள்கள் என்றும், சேதனம் மற்றும் அசேதனம் என்றும் அனைத்திலும் வ்யாபித்து உள்ளபோதும், எந்தவிதமான தோஷமும் இன்றி உள்ளாள்.

லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமம் கீழே உள்ளபடி உரைக்கிறது:

மஹாவிபூதே: ஸம்பூர்ண ஷாட்குண்ய வபுஷ: ப்ரபோ:
பகவத் வாஸுதேவஸ்ய நித்யேவ ஏஷா அநபாயிநீ
ஏகைவ வர்த்ததே பிந்நா ஜ்யோத்ஸ்நேவ ஹிமதீதிதே:
ஸர்வ சக்த்யாத்மிகா சைவ விச்வம் வ்யாப்ய வ்யவஸ்திதா
ஸர்வைச்வர்ய குணோபேதா நித்யம் தத்தர்ம தர்மிணீ
ப்ராணசக்தி: பரா ஹி ஏஷா ஸர்வேஷாம் ப்ராணிநாம் புவி
சக்தீநாம் சைவ ஸர்வாஸாம் யோநிபூதா பரா கலா

யஸ்மாத் லக்ஷ்ம்யம்ச ஸம்பூதா: சக்த்யோ விச்வகா: ஸதா
காரணத்வேந திஷ்டந்தி ஜகதி அஸ்மிந் ததாஜ்ஞயா
தஸ்மாத் ப்ரீதா ஜகந்மாநா ஸ்ரீ: யஸ்ய அச்யுதவல்லபா
ஸுப்ரீதா: சக்த்ய: தஸ்ய ஸித்திம் இஷ்டாம் நிசந்தி ச

இதன் பொருள் - நித்யவிபூதி, லீலாவிபூதி என்னும் இரண்டு பெரிய செல்வம் உடையவனும், பூர்ணமாக உள்ள ஆறு குணங்களை எப்போதும் ஸ்வாபாவமாக உள்ளவனும் ஆகிய வாஸுதேவனை எப்போதும் பிரியாமல் நித்யமாக உள்ளவள் மஹாலக்ஷ்மி ஆவாள். அவனுடன் உள்ளபோது சந்த்ரனும் நிலவும் போன்று வேறாகவும் உள்ளாள். அனைத்து உலகங்களையும் வ்யாபித்து, அனைத்து சக்திகளையும் கொண்ட ஸ்வரூபிணியாகவும் உள்ளாள். எம்பெருமானைப் போன்றே இவளும் ஐச்வர்யம் போன்ற குணங்களுடன் கூடியவள் ஆவாள். அவனது தர்மத்தையே தனது தர்மமாகவும் கொண்டவள் ஆவாள். இந்த உலகில் உள்ள அனைத்து உயிர்களின் ப்ராணசக்தியாகவும் உள்ளாள். அனைத்துவிதமான சக்திகளில் உயர்ந்த சக்தியாக இவளே உள்ளாள். இந்த உலகில் உள்ள அனைத்து சக்திகளும் இவளது அம்சமாகவே உள்ளான. இந்த உலகில் நடக்கும் செயல்கள் அனைத்திற்கும் அந்தச் சக்திகளே, அவளது ஆணைக்குக் கட்டுப்பட்டு காரணமாக உள்ளன. இப்படிப்பட்ட காரணத்தால் எம்பெருமானின் ப்ராணனாக உள்ள மஹாலக்ஷ்மி யார் ஒருவனிடம் ப்ரீதியுடன் உள்ளாளோ, அந்த ஒருவனிடம் இவளது அம்சங்களாகவே உள்ள அனைத்து சக்திகளும் ப்ரியத்துடன் உள்ளன. அவன் விரும்பும் பயனை அவை அளித்துவிடுகின்றன.

வைஷ்ணவ ஸ்ம்ருதி மற்றும் பல தர்ம சாஸ்த்ரங்களில் மஹாலக்ஷ்மியின் மேன்மைகளைப் பரிபூர்ணமாகக் காண இயலும். இராமாயணம் முழுவதிலும் இவளது சரிதமே கூறப்படுகிறது என்பதற்குப் பாலகாண்டம் (4-7) – காவ்யம் இராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயா: சரிதம் மஹத் – இராமாயணம் என்னும் காவியம் முழுவதும் மேன்மை உடைய சீதையின் சரிதமே கூறப்படுகிறது - என்ற வரியே சான்றாகும். மேலும் - ச்ரத்தயா தேவோ தேவத்வம் அச்நுத் – தேவன் என்று அனைவராலும் போற்றப்படும் பரமாத்மா, தனது அந்தத் தன்மையை ச்ரத்தை என்று போற்றப்படும் மஹாலக்ஷ்மியின் கடாக்ஷம் மூலமே பெறுகிறான் - என்று கூறியது காண்க. இந்த வரியானது லக்ஷ்மீதத்வத்தின் ரஹஸ்யங்கள் அனைத்தையும் விளக்குகிறது.

## 74. மதுஸூதந:

மது என்னும் அசுரனை அழித்தவன். அனைத்தையும் கட்டுப்படுத்துவதாலும், அசுரர்களை அழித்து எதிர்ப்பு இல்லாத ஐச்வர்யங்களை அளிப்பதாலும் அவன் மதுஸூதனன் எனப்படுகிறான். மகிழ்வித்தல் என்னும் பொருளுடைய "நந்தி" என்னும் வினையுடன், "ல்யு" என்பது இணையும்போது "நந்தன்" என்பது பிறக்கிறது. இதே போன்று அழித்தல் என்னும் பொருள் கொண்ட "ஸூத:" என்னும் வினையுடன், "ல்யு" என்பது சேர்வதால் "ஸூதன்", என்பது உண்டாகிறது. இது போன்றே நந்தந: (530), வர்த்தந: (262), மதந:, ஸங்கர்ஷண: (556), ஜநார்த்தன: (128) போன்ற திருநாமங்களும் இறுதியில் "ல்யு" என்பதைக் கொண்டவையே ஆகும். மகாபாரதம் உத்யோக பர்வம் (68-4) – ஸர்வ தத்வ ந்யாச்சைவ மதுஹா மதுஸூதந - அனைத்து தத்துவங்களையும் தன்னிடம் வைத்துள்ளதால் மதுஹா என்றும், மதுஸூதனன் என்றும் அழைக்கப்படுகிறான் – என்றது காண்க. அல்லது நித்யசூரிகளின் இந்த்ரியங்களை எந்தவிதமான தடையும் இல்லாமல் தன்வயப்படுத்தி வைத்துள்ளதாலும் அவனுக்கு மதுசூதனன் என்னும் பெயர் உள்ளதாகக் கூறுவார்கள். இதனை – மது: இந்த்ரியநாமா ஸ ததோ மதுநிஷூதன: - இந்த்ரியங்களுக்கு மது என்று பெயர். இவற்றைத் தன்பக்கம் இழுப்பதால் மதுஸூதனன் எனப்படுகிறான் – என்றது காண்க. அஸுரம் ஹந்தி - மதுவை அழிக்கிறான்.

## 75. ஈச்வர:

ஆள்கின்றவன். போக இடமாக உள்ள எல்லையற்ற விண்ணுலகில், தான் விரும்பும் அனைத்தையும் எந்தவிதமான தடையும் இல்லாமல் பெற்று மகிழ்ந்தபடி உள்ளவன். இதனால் ஈச்வரன் எனப்படுகிறான்.

- சாந்தோக்ய உபநிஷத் (8-1-5) – ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப: – அவனுடைய விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறுகிறது, தடையற்ற உறுதியுள்ளவன்.

- யத்ர காம அகமோ வசீ - தான் விரும்பும் இடங்கள் அனைத்திற்கும் செல்ல வல்லவன்; அனைவரையும் தன் வசம் வைத்துள்ளவன்.

## 76. விக்ரமீ

பராக்ரமம் மிகுதியாக உள்ளவன். தான் செய்ய நினைப்பதற்குத் தடை ஏற்பட்டது என்ற பேச்சுக்கே வாய்ப்பு இல்லாமல், தான் எண்ணியதைச் செய்து முடிக்கும் இயல்பு கொண்டவன். இதனால் இவன் விக்ரமீ எனப்படுகிறான். மிகுதி, அனைவராலும் போற்றப்படும் இயல்பு, நித்யம் என்னும் அர்த்தங்களை அளிக்கும் பெயர்ச் சொல்லுடன், எப்போதும் “இனி” என்பது சேர்க்கப்படும் என்றுள்ள விதிக்கு ஏற்றபடி இங்கு விக்ரமீ வந்துள்ளது (விக்ரம + இனி = விக்ரமீ). விஷ்ணுபுராணம் (5-22-15) – மனஸா ஏவ ஜகத் ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரம் கரோதி ய: தஸ்ய அரிபக்ஷ க்ஷபணே கியாந் உத்யம விஸ்தர: - எந்த ஒரு பகவான் தன்னுடைய ஸங்கல்பம் மூலம் மட்டுமே அனைத்தையும் படைத்து அழிக்கவும் செய்யவல்லவனோ, அவன் தனது விரோதிகளின் கூட்டத்தை அழிக்க என்ன பெரிய முயற்சி செய்ய வேண்டும்? நினைத்தவுடன் அழித்துவிடுவான் – என்றது.

## 77. தந்வீ

வில்லை ஏந்தியன். ஒப்பற்ற பராக்ரமம் அவனுக்கு உள்ளது என்ற திருநாமத்திற்கு ஏற்ப சார்ங்கம் என்னும் பெயர் கொண்ட தெய்வீகமான வில் எப்போதும் உள்ளது என்பதை தந்வீ என்னும் திருநாமம் கூறுகிறது. வ்ரீஹி என்று தொடங்கும் பதங்களின் வரிசையில் உள்ள சொற்களின் இறுதியில் “உடையவன்” என்னும் பொருளில், “இனி” என்பதுடன் வரும். மற்ற திவ்ய ஆயுதங்கள் போன்று வில்லையும் கொண்டவன். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- இராமாயணம் யுத்தகாண்டம் (120-15) - சார்ங்க தந்வா ஹ்ருக்ஷீகேச: புருஷ: புருஷோத்தம: அஜித: கட்க த்ருக் விஷ்ணு: க்ருஷ்ண: ச ஏவ ப்ருஹத் பல: - சார்ங்கம் என்ற வில்லை எப்போதும் உடையவன். அவனே ஹ்ருஷீகேசன், புருஷன், புருஷோத்தமன். அவன் கையில் கத்தியை வைத்துள்ளான். அவனை யாரும் வெல்ல இயலாது. மிகவும் வலிமையான விஷ்ணுவும், க்ருஷ்ணனும் அவனே ஆவான்.

- இராமாயணம் உத்தரகாண்டம் (107-9) - சரா: நாநாவித ஆகாரா: தனு: ஆயத விக்ரஹம் அநுவ்ரஜந்தி காகுத்ஸ்தம் ஸர்வே புருஷ விக்ரஹா: - காகுத்த

வம்ஸத்தில் அவதரித்த ஸ்ரீராமன் இந்த உலகை விட்டுத் தனது இருப்பிடம் திருப்பியபோது, பல வடிவங்களில் இருந்த அம்புகள் மற்றும் கோதண்டம் என்னும் நீளமான வில் ஆகியவை மனித உருவம் எடுத்து அவனைத் தொடர்ந்தன.

- ததோ ராஜன் பகவான் உக்ர தந்வா நாராயண: ப்ரபவ: ச அப்யய: ச - அரசனே! இதனால் பயங்கரமான வில்லை ஏந்திய உலகின் உற்பத்தி மற்றும் ஸம்ஹாரம் ஆகியவற்றின் காரணம் அவனே ஆவான்.

- விஷ்ணு புராணம் (1-22-70) - பூதாதிம் இந்த்ரியாதிம் ச த்விதா அஹங்காரம் ஈச்வர: பிபர்த்தி சங்க ரூபேண சார்ங்க ரூபேண ச ஸ்திதம் – பஞ்சபூதங்களின் காரணமான தாமஸ அஹங்காரம், இந்த்ரியங்களின் காரணமான ஸாத்விக அஹங்காரம் ஆகிய இரண்டையும் ஸர்வேச்வரன் சங்கு மற்றும் சார்ங்க வடிவில் வைத்துள்ளான்.

## 78. மேதாவீ

பேரறிஞன். எல்லையற்றதும், நித்யமாக உள்ளதும் ஆகிய தனது மேன்மைகளுக்கு ஏற்றபடி, எந்த ஓர் உதவியையும் எதிர்பாராமல் இயல்பாகவே அனைத்தையும் அறிந்துள்ளவன். அஷ்டாத்யாயீ (5-2-121) – அஸ் மாயாமேதா ஸ்ரஜோ விநி: - அஸ் என்று முடிகின்ற சொல்லான யசஸ், மாயா, மேதா, ஸ்ரக் போன்றவற்றின் இறுதியில் “உடையவன்” என்ற பொருளில் முன்னர் கூறியபடி “விநி” என்ற பதம் வரும் (மேதா + இனி = மேதாவீ).

## 79. விக்ரம:

கருடனில் ஸஞ்சாரம் செய்பவன். “வி” என்பது பறவைகளின் அரசனும், வேதங்களின் ஸ்வரூபனாகவும் உள்ள கருடனைக் குறிக்கும். க்ரமணம் = கருடன் மீது அமர்ந்தபடி, தனது பொருட்டு இங்கும் அங்குமாகச் ஸஞ்சாரம் செய்பவன், தைத்திரீய நாராயணவல்லீ (1-24) - தத் புருஷாய வித்மஹே ஸுவர்ணபக்ஷாய தீமஹீ தந்தோ கருட: ப்ரசோதயாத் – புருஷோத்தமான ஸ்ரீமந்நாராயணனுக்கு ஆட்பட்டவன், அழகான சிறகுகள் கொண்டவன், இப்படிப்பட்ட கருடனை உபாஸிக்கிறோம். இப்படிப்பட்ட த்யானத்தைக்

கருடன் மேலும் தூண்டுவானாக – என்றது. ஸௌபர்ணஸூக்தம் போன்ற க்ரந்தங்கள் மூலமாகக் கருடனைப் பற்றி மேலும் அறியலாம்.

## 80. க்ரம:

ஐச்வர்யம் நிறைந்தவன். இப்படியாக நித்யமான ஐச்வர்யம் உடையவன் என்பதால், பகவான் மிகப் பெரும் செல்வத்தின் அதிபதி ஆவான். க்ரம என்ற வினையானது ஆத்மநேபதி என்னும் பிரிவைச் சார்ந்தது. அப்போது அதற்குச் செல்வந்தனாக உள்ள நிலை என்னும் பொருள் கொண்ட தாயனம் என்று அர்த்தம்.

## 81. அநுத்தம:

தனக்கு மேல் உத்தமமாக ஏதும் இல்லாதன். அனைத்துவிதங்களிலும் சிறந்தவன். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- யஜுர் அஷ்டகம் (2-8-9) - தஸ்மாத் ஹ அந்யத் ந பரம் கிஞ்சந ஆஸ - இவனை விட மேம்பட்டது எதுவும் இல்லை.
- யஜுர் அஷ்டகம் (2-7) - தேந அர்ஹதி ப்ரஹ்மணா ஸ்பர்த்திதும் க: - பரம்பொருளுடன் யார்தான் போட்டியிட முடியும்?
- யஜுர் அஷ்டகம் (2-7) - தேந க: அர்ஹதி ஸ்பர்த்திதும் – அவனுடன் யாரால் போட்டியிட இயலும்?
- கீதை (7-7) - மத்த: பரதரம் ந அந்யத் கிஞ்சித் அஸ்தி தநஞ்ஜய – அர்ஜுனா! என்னை விட உயர்ந்தது என்று ஏதும் இல்லை. நானே உயர்ந்தவன்.
- பரம் ஹி அபரம் ஏதஸ்மாத் விச்வரூபாத் ந வித்யதே – அனைத்துமாக உள்ள பரமாத்மாவைக் காட்டிலும் மேம்பட்டது ஏதும் இல்லை.

## 82. துராதர்ஷ:

எதிர்த்து நிற்பவர்கள் என யாரும் இல்லாதவன். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- சாந்தோக்ய உபநிஷத் (3-14-2) - மனோமய: ப்ரணாசரீர: பாரூப ஸத்யஸங்கல்ப: ஆகாசாத்மா ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ: ஸர்வம் இதம்

அப்யாத்த அவர்சீ அநாதர: - தூய மனம் மூலம் மட்டுமே அறியத்தக்கவன்; உலகில் உள்ள ப்ராணன்களைத் தனது சரீரமாக உடையவன்; ஜ்யோதிரூபமாக உள்ளவன்; உறுதியான ஸங்கல்பம் கொண்டவன்; தான் ப்ரகாசமாக உள்ளது போன்று மற்றவர்களையும் ப்ரகாசிக்கச் செய்பவன்; அனைத்தும் இவனது செயலால் உண்டாகின்றன; விரும்பத்தக்க அனைத்தையும் உடையவன்; உயர்ந்த நறுமணம் கொண்டவன்; உயர்ந்த சுவை உடையவன்; கீழே கூறப்பட்ட அனைத்தையும் கொண்டு மங்களகரமாக உள்ளவன்; அனைத்தையும் கொண்டுள்ளதால், எதற்காகவும் மற்றவர்களை எதிர்பாரால் உள்ளவன்; மற்றவர்களை ஆதரிக்க வேண்டிய நிலை இல்லாதவன்.

- கம்பீர: பரமோ தேவ: - அனைவரிலும் மேம்பட்ட தேவன். கம்பீரம் உள்ளவன்.
- இராமாயணம் ஆரண்ய காண்டம் (47-32) - மஹோததிம் இவ அக்ஷோப்யம் – ஒன்றாலும் கலக்க இயலாத பெரிய ஸமுத்திரம் போன்றவன்.
- காம்பீர்யாத் ஸாகரோபமம் - கம்பீரம் காரணமாக கடல் போன்று ஆழங்காண இயலாதவன்.
- கட உபநிஷத் (3-9) - தத்விஷ்ணோ: பரமம் பதம் - அது விஷ்ணுவின் அனைத்திற்கும் மேம்பட்ட இடம்.
- தைத்திரீய நாராயணவல்லீ (1-2) - தத் அக்ஷரே பரமே வ்யோமன் – பரப்ரஹ்மமானது அழிவற்றதாகவும், பரமாகாசம் எனப்படுவதும் ஆகிய பரமபதத்தில் உள்ளது.
- புருஷஸூக்தம் (18) – தே ஹ நாகம் – அவர்கள் துக்கத்தின் தொடர்பு அற்ற பரமபதத்தை அடைகின்றனர்.
- கீதை (15- 6) - தத் தாம பரமம் மம – அந்தப் பரமபதம் எனது உயர்ந்த இடமாகும்.
- மஹாபாரதம் – திவ்யம் ஸ்தாநம் அஜரம் ச அப்ரமேயம் - அந்த ஸ்ரீவைகுண்டம் ஒளியுள்ளது, கிழத்தன்மை அற்றது, எல்லையற்ற மேன்மை உடையது.
- இராமாயணம் பாலகாண்டம் (15-33) – ஸ்வலோகம் ஆகச்ச கதஜ்வர: சிரம் - நீண்டகாலம் உலகில் இருந்து இதன் துன்பங்கள் நீக்கியதால், தாபம் இல்லாதவனாக, உனது லோகமான பரமபதத்திற்கு வருவாயாக.
- இராமாயணம் உத்தர காண்டம் (110-13) – விவேச வைஷ்ணவம் தேஜ: – அதன் பின்னர் ஒளிமயமான பரமபத்திற்குள் மீண்டும் புகுந்தான்.

- விஷ்ணு புராணம் (4-1-84) – காலாமுஹுூர்த்தாதி மய: ச கால: ந யத் விபூதே: பரிணாமஹேது: - முஹுூர்த்தம் போன்ற பிரிவுகள் கொண்ட காலம் என்பது பரமாத்மாவின் செல்வம் எனப்படும் லோகத்தில் எந்தவிதமான மாற்றங்களையும் உண்டு பண்ணுவதற்கான காரணமாக இருப்பதில்லை.
- தேஷாம் தத் பரமம் ஸ்தாநம் – முக்தர்களுக்கான உயர்ந்த இடம் ஸ்ரீவைகுண்டமே ஆகும்.

மேலே கூறப்பட்ட பல ப்ரமாணங்கள் மூலம் ஸ்ரீவைகுண்டம் என்பது காலத்திற்கு உட்பட்டதல்ல, அழிவில்லாதது, மாறுபாடுகள் இல்லாதது, மூலப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டது, நித்யமானது, அங்கு செல்பவர்கள் மீண்டும் திரும்பாத தன்மை கொண்டது, எம்பெருமானின் ஸ்வரூபம் மற்றும் குணங்கள் போன்று இதுவும் நித்யமானது என்று அறியலாம்.

- சாந்தோக்ய உபநிஷத் (6-2-1) – ஏக மேவ அத்விதீயம் – இது மட்டுமே இருந்தது, இரண்டாவது இல்லை.
- யஜுர் அஷ்டகம் (2-8-9) - ந அஸத் ஆஸீத் நே ஸத் ஆஸீத் ததாநீம் – அப்போது சேதனமும் இல்லை, அசேதனமும் இல்லை.

மேலே உள்ள வரிகளில் ப்ரஹ்மம் மட்டுமே இருந்தது என்று கூறப்பட்டதால், ஸ்ரீவைகுண்டம் என்பது ஒரு காலத்தில் இல்லையோ என்று சந்தேகம் எழலாம். அப்படி இல்லாமல், நித்யமாக உள்ள ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமான் ஸ்ரீதேவி மற்றும் பூதேவியுடன் கூடியவனாக உள்ளான் என்று அறியவேண்டும்.
பர்யங்கவித்யை என்ற கௌஷீதகீ உபநிஷத் பகுதியில் பின்வருமாறு உள்ளது - இரத்தினமயமான படுக்கை ஒன்று உள்ளது. அதில் எம்பெருமான் வீற்றுள்ளான். அவனது திருவடிகளில் அனந்தன், கருடன், விஷ்வக்சேநர் போன்ற பல நித்யஸூரிகள் எல்லையற்ற கைங்கர்யங்களைச் செய்தபடி உள்ளனர். அந்த எம்பெருமான் அனைத்து உலகிற்கும் சக்ரவர்த்தியாக வீற்றிருந்து, நன்மைகளைச் செய்தபடி உள்ளான். இப்படியாக வேதங்களில் உள்ள ரஹஸ்யங்களை நாம் அறியலாம் .

வாயு பகவான் உரைத்த சிவபுராணத்தில் கீழே உள்ள வரிகள் காணலாம்:

வைகுண்டே து பரே லோகே ஸ்ரீயா ஸார்தம் ஜகத்பதி:
ஆஸ்தே விஷ்ணு: அசிந்த்யாத்மா பக்தை: பாகவதை: ஸஹ

**இதன் பொருள்** - ஸ்ரீவைகுண்டம் எனப்படும் மிகவும் சிறந்த லோகத்தில் மஹாலக்ஷ்மியுடன் சேர்ந்தபடியே உலகின் அதிபதியாக உள்ளவனும், ஒப்பற்ற ஸ்வரூபம் கொண்டவனும் ஆகிய ஸ்ரீமந்நாராயணன் உள்ளான். அவன் பாகவதர்கள், பக்தர்கள் சூழ வீற்றுள்ளான். மேலும் விஷ்ணுதத்வம் – பஞ்சசக்திமயோ தேவ: பஹிர்லோகேச்வர: ஆஸ்தே ஸ்வாநந்தபாவேந பரமவ்யோம்நி ஸுஸ்தித: - உலகங்களுக்கு ஈச்வரர்களாக உள்ளவர்களின் ஈச்வரனாக இவன் உள்ளான்; எல்லையற்ற பேரானந்தத்தை அனுபவித்தபடி, பரமாகாசம் என்னும் ஸ்ரீவைகுண்டத்தில் வீற்றுள்ளான் - என்றது காண்க.

## 83. க்ருதஜ்ஞ:

நற்செயலை மறக்காமல் உள்ளவன். மனிதர்கள் தனக்குச் செய்த சிறிய நற்செயலையும் மகிழ்ந்து ஏற்றுக் கொண்டு, அதனை எப்போதும் மறக்காமல் உள்ளவன். அனைத்து உயிர்களும் எந்தவிதமான காரணமும் இன்றி அவனுக்கு இயல்பாகவே அடியார்களாக உள்ளன. மேலும் அஹங்காரம், மமகாரம் ஆகியவை இல்லாதவர்களாக இருக்கவேண்டும். இப்படி இருக்க வேண்டிய கட்டாயம் உள்ளபோதிலும், எல்லையற்ற காலமாகத் தங்களை பீடித்துள்ள அவித்யை போன்றவற்றால் தங்களைச் சுதந்திரமானவர்கள் என்று எண்ணிக்கொண்டு, தங்கள் இஷ்டப்படி செயல்கள் செய்கின்றனர். இப்படிப்பட்டவர்கள் எம்பெருமானுக்குச் சிறியதாக ஏதேனும் செய்தாலும், அதனைப் பெரிதாக எண்ணி மறக்காமல் உள்ளதால் க்ருதஜ்ஞன் எனப்படுகிறான். “ஆ” என்பதை இறுதியில் கொண்ட தாதுவுடன் (verbal root), உபஸர்க்கம் (preposition) ஏதும் வராமல் இருந்தால், அந்தத் தாதுவிற்கு “க” என்ற எச்சம் உண்டாகும். ப்ரஹ்மஜ்ஞ (674), ப்ராணத: (66, 323, 409, 956) ஆகியவை இந்த விதியில் உள்ளவை ஆகும். கீதையில் (9-30) – அபி சேத் ஸுதுராசார: … ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: - ஒருவன் மிகவும் தீய நடத்தை உள்ளவனாக இருக்கக்கூடும்; ஆயினும் அவன் வேறு எதனையும் விரும்பாமல் என்னையே அடைந்து பூஜிப்பவன் என்றால், அவன் ஸாதுவே ஆவான்; அவன் அனைவராலும் மதிக்கத்தக்கவன் – என்றது காண்க. இப்படியாக உள்ளவன் குறித்து,

அவனுடைய பாவங்களை எம்பெருமான் காண்பதில்லை, மாறாக தான் அவனுக்கு எந்த அளவிற்குப் பிரதி உதவி செய்தோம் என்று எண்ணிப் பார்த்தபடி இருப்பான். மேலும் மஹாபாரதம் உத்யோகபர்வம் (3-58-22) – கோவிந்த இதி யத் ஆக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம் ருணம் ப்ரவ்ருத்தம் இவ மே ஹ்ருதயாத் ந அபஸர்ப்பதி – மிகவும் தொலைவில் உள்ள த்வாரகையில் இருந்த என்னை த்ரௌபதியானவள் "கோவிந்தா" என்று அழைத்தாள். அந்த அழைப்பு மேலும் மேலும் வளரும் வட்டிக்கடன் போன்று எனது இதயத்தில் எப்போதும் நீங்காமல் உள்ளது - என்றான்.

## 84. க்ருதி:

செயல்களைச் செய்ய வைப்பவன். அவனைப் பூஜிக்கத்தக்க நினைவு அல்லது கைங்கர்யம் செய்தல் என்பது அவனது அனுக்ரஹத்தால் உண்டாகிறது. அஷ்டாத்யாயீ - அகர்த்தரி ச காரகே ஸஜ்ஞாயாம் - ஒரு வினைப்பகுதியுடன் "க்தின்" என்பது இணைந்தால் பெயர்ச்சொல் ஏற்படும். இப்படியாக உண்டான சொற்கள் பூதி(636), ஸித்தி (99) ஆகிய திருநாமங்கள் ஆகும். கௌஷீதகீ ப்ராம்மணம் ( 3-9) – ஏஷ ஏவ ஸாது கர்ம காரயதி தம் யம் ஏப்யோ லோகேப்யா: உந்நிநீஷதி - இந்த உலகில் இருந்து யாரைத் தன்னிடம் அழைத்துச்சொல்ல எம்பெருமான் விருப்பம் கொள்கிறானோ, அவனை நற்செயல்கள் புரியும்படி எம்பெருமான் தூண்டி விடுகிறான் - என்றது காண்க.

## 85. ஆத்மவாந்

ஆத்மாக்களைத் தனது உடைமையாகக் கொண்டவன். நற்செயல்கள் செய்பவர்களான அனைத்து ஆத்மாக்களின் ஸ்வரூபம் மற்றும் கர்மங்கள் போன்ற அனைத்தும், அவனுக்கு அடங்கியே உள்ளன. இதனால் அவர்களைத் தனது உடைமையாகக் கொண்டுள்ளான். இதனால் ஆத்மவாந் என்ற திருநாமம் கொண்டான்.

## 86. ஸுரேச:

தேவர்கள் அனைவருக்கும் தலைவன். அற்பமான பதவிகளை அடைய எண்ணும் நான்முகன் முதலான தேவர்களுக்கும் அவர்கள் விரும்பியதை இவனே செய்து

அனுக்ரஹம் செய்கிறான். இதனால் அவர்களுக்கும் ஈச்வரன் எனப்படுகிறான். இதனை நான்முகன் விஷ்ணுபுராணத்தில் (4-1-85) – யஸ்ய ப்ரஸாதாத் அஹம் அச்யுதஸ்ய பூத: ப்ரஜா ஸர்க்க்கர: அண்டகாரீ க்ரோதாச்ச ருத்ர: ஸ்திதி ஹேது பூத: - அடியார்களைக் கைவிடாத அச்யுதனின் அனுக்ரஹம் காரணமாக நான் அனைத்தையும் படைக்கும் கர்மம் இயற்றுபவனாக உள்ளேன்; எம்பெருமானின் போபத்தில் தோன்றியதால், அனைவரையும் அழிக்கும் கர்மத்தை ருத்ரன் செய்கிறான்; அனைத்தையும் காத்து நிற்பவனாக எம்பெருமான் உள்ளான் – என்று கூறியது காண்க.

## 87. சரணம்

அனைவருக்கும் உபாயமாக உள்ளவன். அனைத்து உயிர்களுக்கும் உபாயமாக உள்ளவன். ”காப்பாற்றும் செயல்” என்னும் பொருள் கொண்ட “ச்ரு” என்ற வினைப்பகுதியுடன் “ல்யுட்” என்பது சேர்ந்து சரணம் என்றாகிறது. இப்படியாகத் தோன்றியவை கரணம் (380), காரணம் (381), ப்ரமாணம் (432, 959) போன்ற திருநாமங்கள் ஆகும். வேறு எதனையும் எதிர்பாராமல், தன்னை அடைவதற்குத் தானே உபாயமாக உள்ளான். இதனைக் கீழே உள்ள வரிகளின் மூலம் உணரலாம்:

- ச்வேதாச்வதர உபநிஷத் (6-18) - தம் ஹ தேவம் ஆத்ம புத்தி ப்ரஸாதம் முமுக்ஷுர் வை சரணம் அஹம் ப்ரபத்யே - தன்னைப் பற்றிய ஞானம் உண்டாகும்படி எம்பெருமான் செய்தான். மோக்ஷத்தை விரும்பும் நான் அவனைச் சரணம் அடைகிறேன்.
- ஸுபால உபநிஷத் (3) - நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் கதி: நாராயண: - நாம் அடைய வேண்டிய இடம், சரணம் புகத்தக்கவன், நண்பன், கதி ஆகியவையாக ஸ்ரீமந் நாராயணனே உள்ளான்.
- இராமாயணம் யுத்தகாண்டம் (120-18) – சரண்யம் சரணம் ச த்வாம் அஹு: திவ்யா மஹர்ஷய: - அனைவரையும் ரக்ஷிப்பதில் வல்லவன், அனைவராலும் அடையப்பட வேண்டியவன் நீயே என்று திவ்ய ஞானம் கொண்ட பல மஹரிஷிகளும் கூறுகின்றனர்.

## 88. சர்ம

ஸுகரூபமாக உள்ளவன். அவன் ஆனந்தமயமாகவும், அடையத்தக்க பயன்களில் மிகவும் உயர்ந்த பயனாகவும் உள்ளதை இந்தத் திருநாமம் கூறுகிறது. சுகம் என்ற பொருள் தருகின்ற "ச்ரு" என்பதுடன் "மநின்" என்பது இணையும்போது "சர்ம" என்பது உண்டாகிறது.

- சாந்தோக்ய உபநிஷத் (3-14-2) – ஸர்வகந்த: ஸர்வரஸ: -- அனைத்து நறுமணங்களாகவும், அனைத்து சுவைகளாகவும் உள்ளான்.
- சாந்தோக்ய உபநிஷத் (4-10-5) - கம் ப்ரஹ்ம கம் ப்ரஹ்ம - பரப்ரஹ்மமாகிய அவனே அளவற்ற ஆனந்தமயமாக உள்ளான்.
- தைத்திரீய உபநிஷத் - ஆனந்தோ ப்ரஹ்ம - ஆனந்தமயமானது ப்ரஹ்மம்.

## 89. விச்வரேதா:

உலகிற்குக் காரணமாக உள்ளவன். எம்பெருமானே உபாயமாகவும், அடையத்தக்க பயனாகவும் உள்ளது எப்படி என்பது இப்போது கூறப்படுகிறது. இந்த உலகம் அவனது படைப்பாக உள்ளது. தனக்கு இந்த உயிர்கள் அனைத்தும் கைங்கர்யம் செய்தபடி வாழவேண்டும் என்ற காரணத்தினால் ஞானஇந்த்ரியங்களும் கர்மஇந்த்ரியங்களும் அவனால் அளிக்கப்பட்டன.

- முண்டக உபநிஷத் (2-1-3) - ஏதஸ்மாத் ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்த்ரியாணி ச கம் வாயு: ஜ்யோதி: ஆப: ப்ருதிவோ விச்வஸ்ய தாரிணோ - ப்ராணன், மனம், பத்து இந்த்ரியங்கள், ஆகாயம், வாயு, அக்னி, நீர், அனைத்தையும் தாங்கும் பூமி போன்ற அனைத்தும் அவனிடம் இருந்தே தோன்றுகின்றன.
- முண்டக உபநிஷத் (2-1-8) – ஸப்த ப்ராணா: ப்ரபவந்தி தஸ்மாத் – ஏழு இந்த்ரியங்கள் அவனிடம் இருந்தே உண்டாகின்றன (2 கண்கள், 2 காதுகள், 2 மூக்குத் துவாரம், நாக்கு).
- கீதை (10-5) - பவந்தி பாவா பூதாநாம் மத்த: ஏவ ப்ருதக்விதா: - அனைத்து உயிர்களின் நிலைகளும் என்னிடமிருந்தே உண்டாகின்றன.
- ஸ்ரீவிஷ்ணுதத்வம் – விசித்ரா தேஹஸம்பந்தி: ஈச்வராய நிவேதிதும் பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்த பாதாதி - உடல் என்ற இந்த வியக்க வைக்கின்ற உயர்ந்த

செல்வமானது, ஈச்வரனிடம் ஸமர்ப்பணம் செய்யப்பட வேண்டியது என்பதற்காகவே என்னால் உண்டாக்கப்பட்டது.

## 90. ப்ரஜாபவ:

ப்ரஜைகளுக்கு ஏற்ற இருப்பிடமாக உள்ளவன். அனைத்து உயிர்களும் அவன் அளித்த ஸாதனங்கள் கொண்டு அவனை அடையும் எண்ணம் கொண்டவர்களாகவும், அதற்கான தகுதி படைத்தவர்களாகவும் உள்ளார்கள். எனவே இவனே அவர்களின் இருப்பிடமாக உள்ளான். அஷ்டாத்யாயி - பும்ஸி ஸஜ்ஞாயாம் க: ப்ராயேண – இருப்பிடம் என்ற பொருளை உடைய "க" என்பது ஒரு வினையுடன் இணையும்போது அங்கு ஆண்பால் உள்ள ஒரு பெயர்ச்சொல் உண்டாகும். இப்படியே இந்தத் திருநாமம் உண்டானது. இது போன்று உண்டான மற்ற திருநாமங்கள் ஆச்ரம: (856), நியம: (163, 869), யம: (164,870) போன்றவை ஆகும்.

## 91. அஹ:

யாரையும் கைவிடாதவன். அவனால் கைவிடப்பட்டவர்கள் யாரும் இல்லை என்பதைக் கூறுகிறது. பழைய நிகண்டு – அஹ அஹீநம் – யாரையும் கைவிடாதவன் – என்று அஹ பதத்திற்குப் பொருள் தருகிறது. கீதையில் (6-40) - ந ஹி கல்யாண க்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி – அர்ஜுனா! மங்களகரமான செயலைச் செய்யும் யாரும் துர்க்கதியை அடையமாட்டான் – என்றது காண்க. அஹ என்றால் பகல் போன்றவன் என்றும் கூறலாம். எல்லையற்ற காலமாக அறியாமையில் உள்ள ஒருவன் விழித்துக் கொள்வது போல் ஞானம் பெறும்போது, அவனுக்கு எம்பெருமான் தன்னைப் பற்றிய ஞானம் அளித்து பகல் போல் நிற்கிறான்.

## 92. ஸம்வத்ஸர:

எப்போதும் வாழ்பவன். இப்படியாக அறியாமை நீங்கி விழித்துக் கொண்டவர்களுக்காக எப்போதும் வாழ்ந்தபடி உள்ளவன். அஷ்டாத்யாயீ – ஸம் பூர்வாத் சித்; வஸ்யார்த்த தாதுகே - வாழ்வது என்ற பொருளை அளிக்கின்ற "வஸ்" என்பதுடன் "ஸர" என்பது சேர்ந்து "வத்ஸர" என்றாகிறது. இதனுடன் "ஸம்" என்பது இணையும்போது, அந்த சொல்லானது சித் என்ற பிரிவை அடைகிறது. கீழே உள்ள வரிகள் காண்க:

- கீதை (10-10) - ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே - யார் என்னை அடைய வேண்டும் என்று ஆசை கொண்டு உபாஸிக்கிறார்களோ, அவர்களுக்கு என்னை அடைவதற்கான புத்தியை நானே அன்புடன் அளிக்கிறேன்.
- கீதை (12-7) - தேஷாம் அஹம் ஸமுத்தர்த்தா - பிறப்பு மற்றும் இறப்புடன் கூடிய இந்த ஸம்ஸாரம் என்ற கடலில் இருந்து அவர்களை நான் விரைவாக கரையேற்றுகிறேன்.

## 93. வ்யால:

தனது அடியார்களைத் தன்னிடம் சேர்த்துக் கொள்பவன். இராமாயணம் யுத்தகாண்டம் (18-34) – ஆநய ஏனம் ஹரிச்ரேஷ்ட தத்தம் அஸ்ய அபயம் மயா – சுக்ரீவனே! "இராமனைச் சரணம் அடைகிறேன்" என்று ஆகாயத்தில் வரும்போதே விபீஷணன் கூறினான்; அப்போதே என்னால் அவனுக்கு அபயம் அளிக்கப்படும் என்று ஸங்கல்பம் செய்து விட்டேன் – என்றது காண்க.

ஆகவே தன்னைச் சரணம் என்று அடைந்தவர்களை எம்பெருமான் அணைத்துக் கொள்கிறான் என்பதை இந்தத் திருநாமம் கூறுகிறது. அஷ்டாத்யாயீ - லா ஆதாநம், ஆதச்ச உபஸர்க்கே - என்றது. ஏற்பது என்ற பொருள் கொண்டதான "லா" என்பதில் இருந்து இந்தச் சொல் உண்டாகிறது. இதற்கு முன்னால் ஒரு சொல் இணையும்போது "க" என்பதை அந்த வினைச்சொல் உண்டாக்குகிறது. அப்போது லா என்பதில் உள்ள "ஆ" என்பது "அ" என்று குறைகிறது. அதாவது: வி+ஆ+லா+க = வி+ஆ+ல= வ்யால என்று கொள்ளவேண்டும்.

## 94. ப்ரத்யய:

தன்னிடம் வருபவர்களுக்கு நம்பிக்கையை வளர்ப்பவன். அவன் நம்பத்தக்கவனாக உள்ளான். தன்னிடம் வருபவர்களுக்குத் தான் காப்பாற்றுபவனாக உள்ள தன்மையை வெளிப்படுத்தி, நம்பிக்கையை வளர்ப்பவனாக உள்ளான்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-18) - தம் தேவம் ஆத்ம புத்தி ப்ரஸாதம் – தன்னைப் பற்றிய ஞானம் அளிந்த எம்பெருமானைச் சரணம் அடைகிறேன்.
- விஷ்ணு தத்வம் – பூயோ பூயோபி தே ப்ரஹ்மந் விச்வாஸ்ய: புருஷோத்தம: - அந்தணனே ! புருஷோத்தமனாகிய அந்த எம்பெருமானே உன்னால் மீண்டும் மீண்டும் நம்பப்பட வேண்டியவன்.
- மஹாபாரதம் ஸபாபர்வம் (20-7) - யதி தே ஹ்ருதயம் வேத்தி யதி தே ப்ரத்யயோ மயி பீமஸேநார்ஜுநௌ சீக்ரம் ந்யாஸ பூதௌ ப்ரயச்ச மே – உனது மனமானது எனது ஸ்வபாவத்தை அறிந்துள்ளது என்றால், உனக்கு என் மீது நம்பிக்கை உள்ளது என்றால், பீமன் மற்றும் அர்ஜுனன் ஆகிய இருவரையும் உடனே என்னிடம் அடைக்கலமாக அளிப்பாயாக.

## 95. ஸர்வதர்சந:

தனது மேன்மைகளை அனைவருக்கும் காண்பித்தபடி உள்ளவன். தன் மீது நம்பிக்கை வைத்துள்ளவர்களுக்கு எம்பெருமான் தனது மேன்மை முழுவதையும் எப்போதும் காண்பித்தபடி உள்ளான்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (3-20) - தம் அக்ரதும் பச்யதி வீதிசோக: தாது: ப்ரஸாதாத் மஹிமாநம் ஈசாம் - ஸர்வேச்வரன் கர்மதொடர்பு இல்லாதவன், மிகவும் மேன்மை உடையவன் என்று யார் ஒருவன் எப்போது காண்கிறானோ, அப்போதே அவன் துக்கம் இல்லாதவன் ஆகிறான்.
- முண்டக உபநிஷத் (3-2-3) - தஸ்ய ஏஷ: ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் – யாரை பரமாத்மா ஏற்பது என்று முடிவு செய்கிறானோ அவனால் பரமாத்மா அடையப்படுகிறான். அவனுக்குப் பரமாத்மா தனது ஸ்வரூபத்தைக் காட்டுகிறான்.

## 96.அஜ:

(206, 524) தடைகளை விலக்குபவன். எம்பெருமான் மீது மிகவும் ப்ரேமை உள்ளவர்களுக்கு, அவனை அடைய இடையூறாக உள்ள அனைத்துவிதமான தடைகளையும் நீக்கிவிடுகிறான். அஜ கதி க்ஷேபணயோ: - அஜ என்ற வினையானது செல்லுவது, விலக்குவது என்ற பொருளைக்கொண்டது.

- கீதை (10-11) - தேஷாம் ஏவ அநுகம்பார்த்தம் அஹம் அஜ்ஞாநஜம் தம: நாசயாமி ஆத்ம பாவஸ்த: ஜ்ஞாநதீபேந பாஸ்வதா - என்னிடம் கொண்ட ப்ரேமை காரணமாக ஒரு சிலர் எப்போதும் என்னிடம் தங்கள் மனம் வைத்தவர்களாக உள்ளனர். அவர்களிடம் தயை கொள்ளும் நான், ஒளி வீசும் ஞானம் என்னும் விளக்கு கொண்டு, அறியாமை என்ற இருளை நீக்குகிறேன்.

- கீதை (18-66) - அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி – நான் உன்னை அனைத்துப் பாவங்களில் இருந்தும் விடுவிக்கிறேன்.

## 97. ஸர்வேச்வர:

அனைவரையும் சென்று அடைபவன். தன்னைச் சரணம் என்று அடைந்த புருஷர்கள் சக்தியுள்ளவர்களாகவோ அல்லது சக்தியற்றவர்களாகவோ இருந்தார்கள் என்றாலும், அவர்களது ரக்ஷணத்தில் ஏற்படும் காலதாமதம் குறித்து அவர்கள் கலங்கி விடாமல் விரைவாகச் சென்று சேர்ப்பவன். அதாவது, தானாகவே அவர்களிடம் விரைவாகச் சென்று அவர்களைத் தன்னிடம் சேர்ப்பவன். இதனால் ஸர்வேச்வரன் என்று பெயர் கொண்டவன். அச்நோதே: ஆசுகர்மணி வரட் ச – அச் என்னும் தாது "செல்லுதல்" என்ற பொருள் கொண்டதாகும்; இதனுடன் "வர" என்னும் ப்ரத்யயம் சேரும்போது, "விரைந்து செல்லுதல்" என்ற பொருள் உண்டாகிறது. இராமாயணம் யுத்தகாண்டம் (18-39) – விபீஷணேன ஆசு ஜகாம ஸங்கமம் - இராமனைச் சரணம் அடைய விபீஷணன் வந்தபோது இராமன் விரைந்து சென்று அவனுடன் சேர்ந்தான் - என்றது காண்க.

## 98. ஸித்த:

எப்போதும் உள்ளவன். தன்னைச் சரணம் அடைந்தவர்களுக்காக எப்போதும் உள்ளவன். நிஷ்டை முதலானவற்றால் வலியச் சென்று தேட வேண்டாதபடி எப்போதும் உள்ளத்தில் இருப்பவன். ப்ரதித: (321), ஹித: முதலான திருநாமங்கள் இது போன்ற இறந்தகால வினையெச்சங்கள் ஆகும். தைத்திரீய நாராயணவல்லீ (50) – ந்யாஸ இத்யாஹு:

மநீஷிணோ ப்ராஹ்மணம் - புதையல் போன்று ப்ரஹ்மம் உள்ளேயே இருப்பதாக ஞானிகள் கூறுகின்றனர் - என்றது காண்க.

## 99. ஸித்தி:

பயனாக இருப்பவன். உபாயங்களைக் கடைப்பிடித்துப் பெறக்கூடிய பயனாக எம்பெருமான் உள்ளான் என்பதை இந்தத் திருநாமம் கூறுகிறது. கீழே உள்ள வரிகள் காண்க:

- கட உபநிஷத் (2-15) - யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி - பயனாக உள்ள என்னை அடையும் பொருட்டு யார் ப்ரம்மச்சர்யம் போன்றவற்றை அனுஷ்டிக்கிறார்களோ.
- யம் பருதக் தர்மசரணா: ப்ருதக் தர்ம பலைஷிண: ப்ருதக் தர்மை: ஸமர்ச்சந்தி தஸ்மை தர்மாத்மனே நம: - யார் ஒருவனை விசேஷமான தர்மத்தின் ஸ்வரூபம் என்றே ஞானிகள் உபாஸனை செய்கிறார்களோ, யாரை அத்தகைய அனுஷ்டானத்தின் பயனாக எண்ணி அடைய விரும்புகிறார்களோ, எவனைப் பயனில் எண்ணம் இல்லாமல் தர்மங்கள் கொண்டு பூஜிக்கிறார்களோ, தர்மமே ஸ்வரூபமான அவனை வணங்குகிறேன்.

## 100. ஸர்வாதி:

அனைத்திற்கும் காரணமாக உள்ளவன். தனது அடியார்கள் விரும்புகின்ற பயன் உயர்வாக இருந்தாலும், தாழ்வாக இருந்தாலும் அவற்றுக்குக் காரணமாக உள்ளான். இதனால் ஸர்வாதி: என்ற திருநாமம் கொண்டவன். இராமாயணம் யுத்தகாண்டம் (120-31) – யே த்வாம் தேவம் த்ருவம் பக்தா: புராணம் புருஷோத்தமம் ப்ராப்நுவந்தி ஸதா காமாந் இஹ லோகே பரத்ர ச – எல்லையற்ற காலமாக உள்ளவனும், புருஷோத்தமனும், உயர்ந்த தெய்வமாக உள்ளவனும் ஆகிய என்னை யார் ஒருவன் மனஉறுதி குலையாமல் உபாஸனை செய்கிறானோ, அவன் இந்த உலகிலும் அந்த உலகிலும் அனைத்துப் புருஷார்த்தங்களும் கிட்டப் பெறுகிறான் – என்றது. மேலும் – ஸர்வாந் காமாந் ப்ராப்நுவந்தே விசாலான் த்ரைலோக்யே அஸ்மிந் க்ருஷ்ண நாமாபிதாநாத் – க்ருஷ்ணனின் திருநாமத்தைக் கூறுவதன் மூலம் மட்டுமே மூன்று உலகங்களில் பெரியவையாக உள்ள புருஷார்த்தம் அனைத்தையும் அடைகிறான் - என்றது காண்க.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வனின் திருக்குமாரரும், ஸ்ரீரங்கநாதனின் தெய்வீக ஆணையால் ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச் செய்த பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், முதல் நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.

# இரண்டாவது நூறு தொடக்கம்

## 101. அச்யுத: (320, 557)

எப்போதும் பிரியாமல் உள்ளவன் தன்னைச் சரணம் அடைந்த அடியார்களை விட்டு எப்போதும் நீங்காதவன். இதனால் அச்யுதன் எனப்படுகிறான்.

- யஸ்மாத் ந ச்யுத பூர்வ: அஹம் அச்யுத: தேந கர்மணா – நான் எப்போதும் எனது பக்தர்களைக் கை விடுவதில்லை. இதனால் அச்யுதன் எனப்படுகிறேன்.
- கீதை (6-30) – தஸ்ய அஹம் ந ப்ரணச்யாமி – யார் என்னை எங்கும் காண்கிறானோ அவன் பார்வையில் இருந்து நான் மறைவதில்லை.
- இராமாயணம் யுத்தகாண்டம் (18-3) – ந த்யஜேயம் கதஞ்சன - நண்பன் என்று வந்தவனை நான் கைவிடமாட்டேன்.

## 102. வ்ருஷாகபி:

தர்மமே வடிவாக உள்ளவன் (வராஹன்). இதன் மூலம் தர்மமே வடிவம் எடுத்ததோ என்று வியக்கும்படியான வராஹரூபம் கூறப்பட்டது. இதற்கு இதுவே பொருள் என்பதைக் கீழே உள்ள வரி மூலம் அறியலாம். கபி: வராஹ: ச்ரேஷ்ட: ச தர்ம: ச வ்ருஷ உச்யதே தஸ்மாத்

வ்ருஷாகபிம் ப்ராஹ காச்யபோ மாம் ப்ரஜபேதி: - கபி என்ற பதம் மூலம் மிகவும் உயர்ந்த வராஹம் உணர்த்தப்படுகிறது; தர்மம் என்பது வ்ருஷம் எனப்படும்; எனவே தர்மமே வடிவமான என்னை வ்ருஷாகபி என்று காச்யப ப்ரஜாபதி கூறுகிறார்.

## 103. அமேயாத்மா

எல்லையற்ற பெருமைகள் உள்ளவன். தன்னை அண்டியவர்களிடம் அவன் வெளிப்படுத்தும் கருணை என்பது அளவிட இயலாமல் உள்ளது. கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷ ஸூக்தம் – அதோ ஜ்யாயான் ச புருஷ: - தனக்கு ஒப்பு யாரும் இல்லாத காரணத்தினால், அனைவரையும் விட உயர்ந்தவன் ஆவான்.

- பூயான் ச அத: ஜநார்த்தந: - எனவே ஜநார்த்தனன் அனைவரையும் விட உயர்ந்தவன்.

இந்த வரிகளின்படி பகவானின் ஸ்வரூபம் இப்படிப்பட்டது என்று அளவுபடுத்திக் கூற இயலாதபடியாக உள்ளது.

## 104. ஸர்வ யோக விநிஸ்ஸ்ருத:

அனைத்து உபாயங்களாலும் எளிதாக அடையக்கூடியவன். இவன் ஏன் இத்தனை உயர்ந்தவனாக உள்ளான்? இதற்கான விடை இந்தத் திருநாமம் ஆகும். சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டுள்ள யோகம் போன்ற ஸாதனங்கள், தன்னுடைய ஞானம் மூலம் ஒருவனால் அறியப் பெற்ற ஸாதனங்கள் ஆகியவை மூலம் இவன் எளிதாக அடையப்படுபவனாக உள்ளான். அதாவது வேதங்கள் கூறும் பரம இரகசியங்கள் போன்றே இவன் உணரப்படுகிறான்.

- ஸ்வபுத்தி மாத்ர நிர்ஜ்ஞாத: பரமாத்மா ஜகத்ப்ரபு: ஸ்வ ஐச்வர்ய அநுபவ ப்ரித: ஜ்ஞாதாரம் அநுஸேவதே - யார் ஒருவன் இந்த ஜகத்தின் நாயகனான பரமாத்மாவைத் தனது ஞானம் மூலம் உள்ளது உள்ளபடி அறிகிறானோ,

அப்படியாக அறிந்த பரமாத்மாவின் ஐச்வர்யத்தை தனது மனதால் அனுபவிக்கிறானோ, அப்படிப்பட்டவனின் செய்கை மூலம் எம்பெருமான் மகிழ்வு செய்கிறான். இத்தகைய ஞானம் பொருந்திய அவனுடன் பரமாத்மா எப்போதும் நின்று, அவனை வாழவைக்கிறான்.

- யஸ்மாத் ஸத்பக்தி யுக்தாநாம் ப்ரபந்நாநாம் க்ரமம் விநா
  ப்ரஸாதம் ஏதி மந்த்ரேச: து அசிராத் பாவிதாத்மநாம்
  கிம் புநர்வை க்ரியா ஜ்ஞான ஸம்பூர்ணாநாம் து பௌஷ்கர
  ச்ரத்தா பக்தி பராணாம்ச போதிதாநாம் ச தேசிகை:

**இதன் பொருள்** (பௌஷ்கர ஸம்ஹிதை) - ஒரு சிலர் சாஸ்த்ரங்கள் கூறப்பட்ட விதிமுறைகளை அறியாமல், தூய பக்தியை மட்டுமே கொண்டவர்களாக இருந்து அனைத்து உயிர்களுக்கும் ஈச்வரனான எம்பெருமானைச் சரணம் அடையக்கூடும். அவ்விதம் சரணம் புகுந்து, தங்கள் மனதில் மிகவும் அன்புடன் அவனை த்யானம் செய்தபடி இருக்கக்கூடும். இப்படிப்பட்டவர்களிடம் எம்பெருமான் விரைவாக ப்ரேமை கொள்கிறான். இப்படிப்பட்ட இவர்களிடமே எம்பெருமான் இத்தனை அன்பு கொள்கிறான் என்றால் – ஆசார்யனிடம் உபதேசம் பெற்ற, சிறந்த செய்கை மற்றும் அறிவுள்ளவர்கள் த்யானத்தில் ஆர்வமும் பக்தியும் கொண்டுள்ளனர் என்னும்போது அவர்களிடம் எம்பெருமான் மேலும் அதிகமான ப்ரேமை கொள்கிறான் என்று கூறவும் வேண்டுமா?

- நியுக்த மநஸா வாபி யதி க்ருஹ்ணாதி மாதவ:
  கிம் நு நோந்மூலிதம் துக்கம் ஏதாவத் இதி நிச்சித:

**இதன்பொருள்** – (விஷ்ணு தத்வம்) – மஹாலக்ஷ்மியை எப்போதும் தரித்த எம்பெருமானிடம் ஒருவன் தனது மனதை வைத்த நொடியிலேயே, அவனை எம்பெருமான் ஏற்றுக்கொள்கிறான். இப்படி உள்ளபோது, ஒருவன் எம்பெருமானின் பெருமைகளை முற்றிலுமாக உணர்ந்து த்யானம் செய்கிறான் என்றால், அவனது அனைத்துத் துன்பங்களும் வேருடன் நீக்கப்படும் என்று கூறவும் வேண்டுமா?

## 105. வஸு: (271,701)

வசிப்பவன். ஒரு ஸாதநத்தை அனுஷ்டித்தாலும் எம்பெருமான் அவனிடம் மிகுந்த ப்ரேமையுடன் வசிக்கிறான் என்பதை உணர்த்துகிறது. உணாதி சூத்திரம் – ச்ரு ஸ்வ்ரு ஸ்நிஹி த்ரபி அஸி வஸி ஹநி க்லிதி பந்தி மநிப்ய: ச – வஸி என்ற தாதுவுடன் "உ" என்பது இணையும்போது வஸு உண்டாகிறது.

## 106. வஸுமநா:

தனது அடியார்களை அவன் தனது உயர்ந்த நிதியாகக் கருதி தன்னுடைய மனதில் எப்போதும் வைக்கிறான். கீதை (7-19) – ஸ மஹாத்மா துர்லப: - இத்தகைய மனிதன் கிடைப்பது மிகவும் அரிது - என்றது காண்க.

## 107. ஸத்ய: ( 213, 873)

மேலே கூறப்பட்ட ஸத்புருஷர்கள் விஷயத்தில் எம்பெருமான் எப்போதும் ப்ரேமையுடன் உள்ளான். அஷ்டாத்யாயீ - தத்ர ஸாது: - ஏழாம் வேற்றுமையில் உள்ள சொல்லிற்கு பின்னர் "யத்" என்பது இணைந்து ஸத்ய: உண்டாகிறது.

## 108. ஸமாத்மனே

அனைவரிடமும் சமமான நிலை உடையவன். அடியார்களிடம் உள்ள குணம் முதலானவை ஏற்றத்தாழ்வுகளுடன் உள்ளபோதிலும், அவற்றைப் பெரிதாக எடுத்துக் கொள்ளாத மனம் உடையவன். கீதை (9-29) – ஸமோஹம் ஸர்வபூதேஷு – அனைத்து உயிர்களிடமும் நான் சமமாகவே உள்ளேன் - என்றது காண்க.

## 109. ஸம்மித:

தனது அடியார்களால் நன்கு உணரப்பட்டவன். எம்பெருமான் தங்களுக்குக் கட்டுப்பட்டவன் (அல்லது தங்களுக்கு அடங்கியவன்) என்று அடியார்கள் எண்ணும் படியாகவே நடந்து கொள்பவன். அஷ்டாத்யாயீ – த்யதி ஸ்யதி - நோ (த்யதி), ஸோ

(ஸ்யதி) போன்ற தாதுக்களின் இறுதியில் உள்ள உயிர் எழுத்தானது "இ" என்று மாறுகிறது.

நம்முடைய கைகளுக்கு இவன் எட்டுபவன் என்று உணரும்படியாக உள்ளான்.

- இராமாயணம் பாலகாண்டம் (20-2) - ஊந ஷோடச வர்ஷோ மே ராமோ ராஜீவலோசந: - தாமரை போன்ற கண்கள் உடைய எனது இராமன் பதினாறு வயது நிரம்பாத சிறுவன் ஆவான்.
- விஷ்ணு புராணம் (5-5-5) - மம அயம் தநயோ நிஜ: – இந்தக் கண்ணன் எனக்கு அடங்கிய எனது புத்திரன்.

## 110. ஸம:

சமமாக உள்ளவன். தனது பக்தர்களில் ஒரு சிலர் தன்னிடம் அதிகமான ஈடுபாட்டுடன் பழகுகிறார்கள், ஒரு சிலர் இவ்விதம் பழகுவதில்லை, தன்னிடம் ஒரு சிலருக்கு ஆர்வம் அதிகமாக உள்ளது, ஒரு சிலருக்கு ஆர்வம் குறைவாக உள்ளது என்பது போன்று அவன் ஆராய்வதில்லை. அனைவரிடமும் ஒரே போன்று கௌரவம் வைத்துள்ளவன் ஆவான். உணாதி சூத்திரம் – ஸம ஷ்டம அவைகல்யே - குழப்பம் இல்லாதவன் என்னும் பொருள் தருகின்ற ஸம என்னும் தாதுவிற்கு அகரம் சேர்ந்ததால் ஸம என்றானது.

## 111. அமோக: (156)

அவனது வழிபாடு என்பது பயனற்றுப் போகாதபடி உள்ளவன். அடியார்கள் அவனிடம் கொள்ளும் தொடர்பு வீணாகப் போகாதபடி உள்ளவன். இராமாயணம் யுத்தகாண்டம் (120-31) – அமோகம் தர்சநம் ராம ந ச மோக: தவ ஸ்தவ: அமோகாஸ்தே பவிஷ்யந்தி பக்திமந்த: ச யே நர: - இராமா! உனது தரிசனம் என்பது எப்போதும் பயனற்றுப் போவதில்லை. யார் உன்னிடம் பக்தியுடன் உள்ளனரோ அவர்ளுக்குப் பயன் கிட்டாமல் போவதில்லை – என்றது காண்க.

## 112. புண்டரீகாக்ஷ:

பரமபதத்தில் உள்ளவர்களின் கண் போன்றவன். மஹாபாரதம் உத்யோகபர்வம் (69-6) – புண்டரீகம் பரம் தாம நித்யம் அக்ஷரம் அவ்யயம் தத் பவாந் புண்டரீகாக்ஷ: - அழிவற்றதாகவும், குறைவற்றதாகவும், நித்யமாக உள்ளதாகவும் இருக்கின்ற பரமபதம் என்பது புண்டரீகம் எனப்படுகிறது; இதன் கண் போன்று உள்ளதால் நீ புண்டரீகாக்ஷன் எனப்படுகிறாய் - என்றது. ஆக இதன் மூலம் பரமபதத்தில் உள்ளவர்களின் கண் போன்றவன் என்றாகிறது. புருஷஸூக்தம் – திவி இவ சக்ஷு: - ஸ்ரீவைகுண்டத்தில் உள்ளவர்களின் கண் போன்றவன் – என்றது காண்க.

## 113. வ்ருஷகர்மா

தர்மரூபமாக உள்ள செயல்களைக் கொண்டவன். அனைத்திலும் மேம்பட்டவனாக உள்ள போதிலும் நம்மைப் போன்ற மனிதர்களுக்கு எப்போதும் நன்மையைச் செய்தபடியே உள்ளான். ஆகவே அவனது செயல்கள் அனைத்தும் தர்மத்தின் வழியே உள்ளன.

## 114. வ்ருஷாக்ருதி:

தர்மத்தின் வடிவமாகவே உள்ளவன். இவனது செயல்கள் அனைத்தும் தர்ம வடிவமாக உள்ளது போன்று இவனது ரூபமும் தர்மவடிவாகவே உள்ளது. அல்லது மூன்று வகையான துன்பங்களை (ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம் மற்றும் ஆதிதைவிகம்) நீக்கி அமிர்தமழையைப் பொழிகின்றது போன்ற குளிர்ந்த செயல்களையும், அழகான ரூபத்தையும் உடையவன் என்பதால் வ்ருஷகர்மா என்றும், வ்ருஷாக்ருதி: என்றும் கூறப்படுகின்றான். வ்ருஷ ஸேசநே – வ்ருஷ என்ற பெயர்ச்சொல்லுக்கு தர்மம் என்று பொருளாகும்; இதே வ்ருஷ என்ற பதம் வினைச்சொல்லாக வந்தால் பொழிதல் என்ற பொருளை அளிப்பதாகும். ஸாத்த்வத ஸம்ஹிதை - விச்வம் ஆப்யாயயன் காந்த்யா பூர்ணேந்த்வயுத துல்யயா - பல ஆயிரக்கணக்காண முழுமையான சந்திரன்களின் ஒளியை உடையவனாக இந்த உலகம் முழுவதையும் எம்பெருமான் குளிர்ச்சிப்படுத்தியபடி உள்ளான் - என்றது. பௌஷ்கர ஸம்ஹிதை கீழே உள்ளபடி கூறுகிறது:

வபுஷா ஸுந்தரேணைவ திவ்யேந அவிக்ருதேந ச
முஞ்சந்தம் அநிசம் தேஹாத் ஆலோகம் ஜ்ஞான லக்ஷணம்

பூர்வ கர்மாநலார்த்தாநாம் த்யாயிநாம் கேத காந்தயே
வதநேந்து சயோத்தேந ஹ்லாதயந் கோகணேந து

**இதன் பொருள்** – எந்தவிதமான மாற்றம் அடையாததும், அழகானதும் ஆகிய திவ்யமான ரூபத்துடன் எம்பெருமான் உள்ளான். இத்தகைய சரீரத்தில் இருந்து எப்போதும் ஞானம் என்ற ஒளியை வீசியபடி உள்ளான். முற்பிறவிகளில் செய்த தீவினைகள் என்ற அக்னியின் மூலம் துன்பம் கொண்டு, அதிலிருந்து மீள்வதற்காக எம்பெருமானைக் குறித்துப் பலர் த்யானித்தபடி உள்ளனர். அவர்களின் துன்பம் நீங்கும் பொருட்டு, பல பூர்ண நிலவுகளுக்கு ஒப்பான தனது அழகிய முகத்திலிருந்து வெளிப்படும் குளிர்ந்த கிரணங்கள் மூலம் மகிழ்வை ஏற்படுத்துகிறான்.

மஹாபாரதத்தில் உள்ள ராஜதர்மம் பகுதியில் – ததோ மஹதி பர்யங்கே மணி காஞ்சன சித்ரிதே ததர்ச க்ருஷ்ணம் ஆஸீநம் நீலம் மேரௌ இவ அம்புதம் – இரத்தினங்களாலும் பொன்னாலும் இழைக்கப்பட்ட அழகான கட்டிலில் க்ருஷ்ணன் வீற்றிருந்தான். இப்படியாக உள்ள அவனை மேரு மலையில் உள்ள நீலமேகம் போன்று கண்டார் - என்று கூறியது காண்க.

## 115. ருத்ர:

அடியார்களுக்கு மகிழ்ச்சி ஏற்படுத்தி ஆனந்தக்கண்ணீர் பெருகும்படிச் செய்பவன். தனது திவ்யமான வடிவத்தாலும் திவ்யமான லீலையாலும் அடியார்களின் உள்ளத்தை உருக வைத்து, ஆனந்தக்கண்ணீர் பெருகும்படிச் செய்பவன். இதனால் ருத்ரன் என்ற திருநாமம் பெற்றவன். உணாதி சூத்திரம் – ரோதேர்ணி லுக் ச – ரோதி என்ற வினையானது அழுதல் என்னும் பொருளை உடையது; இதனுடன் "ர" என்ற ப்ரத்யயம் சேர்கிறது. விஷ்ணுதத்வம் – ஆஹ்லாத சீத நேத்ராம்பு: புளகீக்ருத காத்ரவான் ஸதா பர குணாவிஷ்ட: த்ரஷ்டவ்ய: ஸர்வதேஹிபி: - பகவத் அனுபவத்தின் மூலம் உண்டான மகிழ்ச்சி காரணமாகப் பெருகி நிற்கும் குளிர்ந்த கண்ணீர் கொண்டவனும், மயிர்க்கூச்சல் எடுத்து எப்போதும் ஆவேசம் கொண்டவன் போன்று உள்ளவனும் ஆகிய ஒருவனையே சரீரம் கொண்ட அனைவரும் பார்க்கவேண்டும்; அவனே பார்க்கப்பட வேண்டியவன் - என்றது.

## 116. பஹுசிரா:

பல தலைகளைக் கொண்டவன் ஆயிரக்கணக்கான படங்களைக் கொண்ட ஆதிசேஷன் போன்று அநந்தன் என்ற ரூபத்தில் உள்ளவன்.

## 117. பப்ரு:

அனைத்தையும் தாங்குபவன். அனைத்து உலகங்களையும் அநந்தனாக நின்று தனது தலைகளால் தாங்குவதால் பப்ரு எனப்படுகிறான். உணாதி சூத்திரம் – குப்ரச்ச - ”தாங்குவது” என்ற பொருள் கொண்ட ப்ரு என்னும் தாது, ”கு” என்ற ப்ரத்யயத்துடன் சேர்கிறது. இது தவிர ”ப” என்பது இரண்டாகிறது. இதனால் பப்ரு என்றானது. விஷ்ணு புராணம் – யஸ்ய ஸா ஸகலா ப்ருத்வீ பணாமணிசிகாருணா - யாருடைய தலையில் உள்ள இரத்தினங்களின் ஒளி மூலமாக ஒளி பெற்ற இந்த உலகம், ஒரு மலர் மாலை போன்று உள்ளதோ - என்றது காண்க. விஷ்ணுபுராணம் – பிபர்தி மாலாம் லோகாநாம் – பூமியானது ஸர்ப்பங்களில் உயர்ந்த ஆதிசேஷனால் தாங்கப்படுகிறது – என்றது. மேலும் விஷ்ணுபுராணம் – யோ அநந்த: ப்ருதிவீம் தத்தே சேகர ஸ்திதி ஸம்ஸ்திதாம் – எந்த அனந்தன் இந்த உலகம் முழுவதையும் ஒரு மலர் மாலை போன்று தனது தலையில் தாங்கியபடி உள்ளானோ – என்றது.

## 118. விச்வயோநி:

அனைத்தையும் தன்னுடன் அணைத்துக் கொள்பவன். அனைத்து உலகங்களையும் தாங்கி நிற்கும் பொதுவான தன்மையானது, அடியார்கள் விஷயத்தில் தனியாக வெளிப்படுகிறது. இதனை இந்தத் திருநாமம் கூறுகிறது. பக்தியுடன் தன்னை அண்டியவர்களைத் தன்னுடன் ஒன்றாகச் சேர்த்து அணைத்துக் கொள்கிறான் என்பதைக் கூறுகிறது. உணாதி சூத்திரம் – யு மிச்ரணே - “சேர்த்துக் கொள்ளுதல்” என்ற பொருள் கொண்ட யு என்னும் தாதுவில் இருந்து யோநி என்பது வருகிறது. உணாதி சூத்திரம் - வஹி ச்ரி ச்ரு யு த்ரு க்லா ஹா த்வரிப்யோ நித் - வஹி, ச்ரி, ச்ரு, யு, த்ரு, க்லா, ஹா போன்ற தாதுக்களுடன் நி என்பது இணைந்து வஹ்நி, ச்ரேணி, ச்ரோணீ, யோநி, த்ரோணி, ச்லாநி, ஹாநி, தூர்ணி போன்றவை உண்டாகின்றன.

## 119. சுசிச்ரவா:

இனிமையாக உள்ள சொற்களைக் கேட்டபடி உள்ளவன். தனது அடியார்களின் சொற்களை எப்போதும் கேட்டபடி உள்ளதால் சுசிச்ரவா: என்ற திருநாமம் கொண்டவன். மஹாபாரதம் சாந்தி பர்வத்தில் க்ருஷ்ணன் – சுசீநி ச்ரவணீயாநி ச்ருணோமீஹ தநஞ்ஜய ந ச பாபாநி க்ருஹ்ணாமி ததாஹம் வை சுசீச்ரவா: - அர்ஜுனா! மிகவும் தூய்மையானதும், கேட்பதற்கு இனிமையானதும் ஆகிய அடியார்களின் சொற்களைக் கேட்டபடி உள்ளேன்; தீய சொற்களை நான் கேட்பதில்லை; இதனால் சுசிச்ரவா என்ற பெயர் கொண்டேன் - என்றான். மஹாபாரதம் உத்யோகபர்வம் (90-43) – விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச - தோஷங்கள் ஏதும் இல்லாதவையும், சிறந்த தன்மை கொண்டவையாயும் உள்ள விதுரரால் ஸமர்ப்பிக்கப்பட்ட உணவை க்ருஷ்ணன் உண்டான் - என்றது. மேலும் மஹாபாரதம் உத்யோக பர்வம் கூறுவது:

தர்ம்யா: ரம்யா: ச அர்த்தவதீ: விசித்ரார்த்த பதாக்ஷரா:
ச்ருண்வதோ விவிதா வாச: விதுரஸ்ய மஹாத்மந:
அகாமஸ்யைவ க்ருஷ்ணஸ்ய ஸா வ்யதீயாய சர்வரீ

இதன் பொருள் - விதுரரின் சொற்கள் தர்மங்கள் நிறைந்தவையாகவும், இனிய பொருள் உடையவையாகவும், இனிய சொற்களுடன் கூடியவையாகவும், மென்மையான எழுத்துக்கள் கொண்டவையாகவும் இருந்தன. இந்தச் சொற்களைக் கேட்டபடி இருந்த க்ருஷ்ணனுக்கு அவை இனிமையாகவும், வேண்டாத சொற்களே இல்லாமல் உள்ளதாகவும் இருந்தன. இதனால் நேரம் போனதே தெரியாமல் இரவு முழுவதும் அவற்றைக் கேட்டபடி இருந்தான்.

## 120. அம்ருத:

அமிர்தம் போன்று உள்ளவன். பக்தர்களுக்கு இனிய சுவையாக உள்ளான். அவர்களுக்கு பிறப்பும் இறப்பும் வராமல் தடுக்கவல்ல மோக்ஷத்தை அளிக்கிறான். எத்தனை வணங்கினாலும் மனநிறைவு கொள்ளாமல் உள்ள அடியார்களைக் கொண்டவனாக உள்ளான். இதனால் அம்ருதம் என்ற திருநாமம் அடைந்தான். அம்ருதஸ்ய இவ ந அத்ருப்யன் ப்ரேக்ஷமாணா ஜநார்த்தனம் – எம்பெருமானைக் கண்ட அவர்கள், அமிர்தம் பருகியது போன்று, “பார்த்து போதும்” என்ற நிலை உண்டாகாமல், பார்த்துக்கொண்டே நின்றனர்.

## 121. சாச்வத: ஸ்தாணு:

நித்யனாகவும் நிலையாகவும் உள்ளான். மரணத்திலிருந்து விடும்படிச் செய்தல், எத்தனை அனுபவித்தாலும் மனநிறைவு கொள்ளாத நிலை உண்டாகும்படிச் செய்தல் போன்ற தன்மைகள் எம்பெருமானிடம் உள்ளன. இதே தன்மைகள் ஓரளவிற்குத் திருப்பாற்கடலில் இருந்து வெளிப்படும் அமிர்தத்தில் உள்ளதலால், அது அமிர்தம் என்ற பெயர் பெற்றது. ஆனால் இந்த அமிர்தத்தைக் காட்டிலும் மேம்பட்டவனாகவே எம்பெருமான் உள்ளான். அவன் நிலையாகவும் உள்ளான். அவனது அடியார்களிடமிருந்து யாராலும் அவனைப் பிரிக்க இயலாதபடி உள்ளான். மீண்டும் இந்த ஸம்ஸார உலகிற்குத் திரும்ப வருதல் என்ற எண்ணம் இல்லாதவர்களால் அனுபவிக்கப்படுவதால் அவன் இவ்விதம் உள்ளான். மாறாகத் திருப்பாற்கடலில் இருந்து எடுக்கப்படும் அமிர்தம் ஒருமுறை பருகினாலே தீர்ந்துவிடும் தன்மை உடையது.

## 122. வராரோஹ:

தன்னை அடைதல் என்னும் மிகவும் உயர்ந்த புருஷார்த்தமாக உள்ளவன். வரம் என்றால் ”அனைத்திற்கும் மேம்பட்ட” என்பதாகும்; ஆரோஹணம் = தன்னை அடைதல் என்ற புருஷார்த்தம். அவனை அடைதல் என்ற நிலையைக் காட்டிலும் மற்றவற்றை அடைதல் என்ற நிலை தாழ்ந்ததே ஆகும். மஹாபாரதம் சாந்திபர்வம் (பீஷ்மர் யுதிஷ்டிரனிடம் கூறுவது) – ஏதே வை நிரயா: தாத ஸ்தாநஸ்ய பரமாத்மந: - பரமாத்மாவின் ஸ்ரீவைகுண்டத்தை ஒப்பிடும்போது, ஸ்வர்க்கம் உள்ளிட்ட பலவும் தாழ்வான நரகம் போன்றவையே – என்றது காண்க.

பகவத் சாஸ்த்ரங்களின்படி (பாஞ்சராத்ர ஆகமம்) பரப்ரஹ்மம் மூன்றுவிதமான ரூபங்களைக் கொண்டது. அவை – பரம், வ்யூஹம் மற்றும் விபவம் – என்பதாகும். இவற்றுள் ”பர” என்ற நிலை மற்ற எதனாலும் ஸ்ருஷ்டிக்கப்படாததாகவும், இயற்கையாகவே மேன்மை கொண்டதாகவும் உள்ளதாகும். இது ஞானம், ஐச்வர்யம் உள்ளிட்ட ஆறு குணங்களையும் பூர்ணமாகக் கொண்டதாகும். அலை வீசும் மிகப் பெரிய ஸமுத்திரம் போன்றதாகும். எல்லையற்றதும், நித்யமாகவும் உள்ள அந்தப் போக பூமியில்

ப்ரஹ்மம் ஒப்பற்ற தனிக்குடையின் கீழ் ஆட்சி செய்தபடி உள்ளது. இதுவே முக்தி பெற்றவர்களால் அடையப்படும் இலக்காக உள்ளது.

மோக்ஷத்தில் ஆசை உள்ளவர்களைப் படைக்கும் எண்ணம் கொண்ட ப்ரஹ்மம் அதற்காகத் தன்னை நான்காக வெளிப்படுத்தியது. இவையே – வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன் மற்றும் அநிருத்தன் என்பதாகும். இவர்களே ஸ்ருஷ்டி, காத்தல், அழித்தல் ஆகியவற்றுக்குப் பொறுப்பாவார்கள். அனைத்துவிதமான சாஸ்திரங்களை வெளிப்படுத்தி, அவற்றின் முக்கியத்வத்தை உணர்த்தி, அந்த விதிகளின்படி நடப்பவர்களுக்கு ஏற்ற பலன்களையும் இவர்களே அளிக்கின்றனர். எம்பெருமானான தங்களைத் த்யானிக்கும் வழிமுறைகளையும் இவர்களே வகுத்து அளிக்கின்றனர். தங்களை ஆராதிக்கும் முறைகளையும் வெளிப்படுத்துகின்றனர். தன்னுடைய லீலா விசேஷத்தையும் ப்ரஹ்மம் இப்படியாகவே வெளிப்படுத்துகிறது. பரரூபமானது தன்னுடைய ஆறு குணங்களையும், இந்த நான்கு வ்யூஹங்களுக்குப் பிரித்து அமைத்துக் கொடுக்கிறது. இந்த நான்கு ரூபங்களுக்கும் தனித்தனி உடைமைகளும் உள்ளன. இவையே மோக்ஷ உபாயங்களாக உள்ளன.

விபவம் என்பது எம்பெருமான் தனது இச்சையின் காரணமாக எடுப்பதாகும். இவையும் வ்யூஹம் போன்றே தேவன், மனிதன், விலங்கு போன்ற எண்ணற்ற உருவங்களாகும். இவையும் இவனது மேன்மையை உள்ளடக்கியவையே ஆகும். கீழே உள்ள ஸாத்த்வத ஸம்ஹிதை வரிகள் காண்க:

ஷாட்குண்ய விக்ரஹம் தேவம் பாஸ்வஜ்ஜ்வலந தேஜஸம்
ஸர்வத: பாணிபாதம் தத் இதி உபக்ரம்ய
பரம ஏதத் ஸமாக்யாதம் ஏகம் ஸர்வாச்ரயம் விபும்
ஏதத் பூர்வம் யத்ரயம் ச அந்யத் ஞானாத்யை: பேதிதம் குணை:
நாநாக்ருதி ச தத் வித்தி விபவம் புக்தி முக்திதம்

**இதன் பொருள்** – ஆறு முக்கியமான குணங்கள் உள்ளிட்ட பல குணங்களுடன் எம்பெருமானின் விக்ரஹம் உள்ளது. அவன் தனது புத்தி மற்றும் தேஜஸ் மூலமாக ஒளிர்ந்தபடி உள்ளான். அவனுக்கு எங்கும் கால்களும் கைகளும் உள்ளன. இதுவே ஒப்பில்லாத பரரூபம் ஆகும். இது அனைத்திலும் வ்யாபித்து, அனைத்தையும் தாங்கியபடி

உள்ளது. இதில் இருந்து மேலும் மூன்று ரூபங்கள் (ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன்) வெளிப்படுகின்றன. இவைகளுக்குத் தனித்தன்மை வாய்ந்த ஞானம் மற்றும் குணங்கள் உள்ளன. இவையே பலவிதமான பலன்களை அளிக்கின்றன. இவையே வ்யூஹம் எனப்படுகின்றன. விபவம் என்பது இரண்டு வகைப்படும். இவை முக்யம் மற்றும் அநுவ்ருத்தி என்பதாகும். இவையும் ஞானம் உள்ளிட்ட குணங்கள் கொண்டவையே ஆகும். இத்தகைய விபவம் என்பது பல ரூபங்கள் கொண்டதாகும். அவற்றின் ஆராதனை பலவிதமான பலன்களை அளிக்கவல்லதாகும்.

இவற்றில் மத்ஸ்யம், கூர்ம்ம் போன்றவை நேரடியாக வெளிப்பட்டவையாகும். ஒரு சில ரூபங்கள் முனிவர்களின் வடிவில் வெளிப்பட்டவையாகும் (உதாரணம் வ்யாஸர்). மேலும் சிலவற்றில் தனது சக்தியை ஒரு சில காலம், ஒரு சில புருஷர்களின் மூலமாக வெளிப்படுத்துகிறான் (உதாரணம் புரஞ்ஜயன் போன்றோர்). மேலும் சிலவற்றில் (அர்ச்சாவதாரம்) தன்னை விக்ரஹ வடிவத்தில் வெளிப்படுத்திக் கொள்கிறான். ஆக பரரூபம் தவிர நான்கு விதமாக வெளிப்படும் விதங்கள் உள்ளன.

இங்கு ஒரு சிலர் ஓர் ஆக்ஷேபம் எழுப்பக்கூடும் - நான்முகன் மற்றும் பரமாத்மா ஆகியோருக்கு இடையே எந்தவிதமான வேறுபாடுகளும் இல்லை என்று ஒரு சில ப்ரமாணங்கள் கூறுகின்றன. ஆகவே நான்முகன் முதலியவர்களையும் பகவானின் அவதாரமாகவே கொள்ளவேண்டும் - என்று இவர்கள் கூறலாம். இதற்குப் பதில் - இதனை ஏதும் அறியாதவர்களின் பிதற்றல்கள் என்றே கொள்ளவேண்டும். இப்படிக் கொண்டால் மனிதர்களாகிய நம்மைப் போன்றவர்கள் தொடக்கமாகப் புல்பூண்டு உள்ளிட்ட அனைத்தும் அவனது அவதாரங்கள் என்றே கொள்ளும்படி ஆகிவிடும் - காரணம் நம் போன்றவர்கள் தொடங்கி புல்பூண்டு உள்ளிட்ட பலவற்றுக்கும் நான்முகனுக்கும் எந்தவிதமான வேறுபாடும் இல்லை (அனைத்தும் ஜீவன்) என்றே பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. இதனைச் சாந்தோக்ய உபநிஷத் (3-14-1) - ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம - இவை அனைத்தும் ப்ரஹ்மம் - என்றது.

மேலும் பல ப்ரமாணங்களின்படி நான்முகன் உள்ளிட்ட யாரும் பகவானின் அவதாரங்கள் என்று கூறப்படவில்லை. இவர்களும் தேவர்கள், மனிதர்கள் போன்று படைக்கப்பட்டவர்களே என்று ஸ்ருஷ்டி பற்றிக் கூறும் பகுதிகளில் தெளிவாகவே

உள்ளது. மேலும் பகவத் சாஸ்திரம் எனப்படும் பாஞ்சராத்ர ஆகமத்தில் நான்முகன், ருத்ரன் போன்ற பலரும் ப்ராதுர்பாவங்கள் என்னும் பகவானின் அவதாரங்களைக் காட்டிலும் வேறுபட்டவர்கள் என்று கூறப்பட்டது. இவர்கள் பகவானின் மேன்மையில் ஒரு துளி மூலமாக உருவாக்கப்பட்டவர்கள் ஆவர். இவர்களது இருப்பு மற்றும் செயல்பாடுகள் அனைத்தும் பகவானின் மற்ற அவதாரங்களை நம்பியே உள்ளன. பௌஷ்கர ஸம்ஹிதை கீழே உள்ளது போன்று கூறுகிறது:

ஞானோபதேஷ்டா பகவாந் கபிலாக்ஷஸ்து அதோக்ஷஜ:
வித்யாபூர்த்தி: சதுர்வக்த்ரோ ப்ரஹ்மா வை லோகபூஜித:
ததம்சுபூதோ வை யஸ்ய விச்வ வ்யஞ்ஜன லக்ஷண:

**இதன் பொருள்** - சிவந்த கண்கள் கொண்ட அதோக்ஷஜன் என்னும் பகவான் அனைத்து ஞானங்களையும் போதிக்கும் ஆசானாக உள்ளான். ஞானமயமாகவும், அனைத்து உலகங்களால் பூஜிக்கப்படுபவனாகவும் உள்ள நான்முகன் இத்தகைய பகவானின் அம்சமாகவே உள்ளான். அவன் பகவானுக்கு அடங்கியவனாகவே உள்ளான். பகவானிடம் இருந்து பெறப்பட்ட ஞானத்தையே இவன் மீண்டும் அளிப்பவனாக உள்ளான்.

இங்கு உள்ள யஸ்ய என்ற பதம் பகவான் கபிலராக அவதரித்தபோது அந்த விஷ்ணுவின் ஒரு பகுதியாக மட்டுமே நான்முகன் உள்ளான் என்பதை உணர்த்துகிறது. “விச்வ வ்யஞ்ஜன லக்ஷண” என்பதன் மூலம் இவன் பகவானுக்கு உட்பட்டவன் என்பது விளங்குகிறது. பகவானின் அச்சம் என்பது மிகவும் முதன்மையான நிலை என்பதை ப்ரஹ்மசூத்திரம் (2-3-42) – அம்சோ நாநா வ்யபதேசாத் – என்கிறது.

இது போன்றே அனலசாயி (அக்னி மீது சயனித்துள்ளவன்) என்று போற்றப்படும் எம்பெருமானிடம் இருந்து மற்ற தெய்வங்கள் வெளிப்படுவது பற்றிக் கூறப்படுகிறது. உதாரணமாகக் கீழே உள்ள வரிகள் காண்க:

யுகாந்தரேஷு ச ஸம்ஹாரம் ய கரோதி ச ஸர்வதா
சங்கராக்யோ மஹாருத்ர: ப்ராதுர்பாவாந்தரம் ஹி தத்

தேவஸ்ய அலைசாயே: வை ஸர்வாத: ஸம்ஸ்திதஸ்ய ச

**இதன் பொருள் -** யுகங்களின் முடிவில் சங்கரன் என்று அழைக்கப்படும் மஹாருத்ரன் அனைத்து உலங்களையும் அழிக்கிறான். இவன், அனைத்திற்கும் ஆதாரமாக உள்ளவனும், அனலசாயி என்று அழைக்கப்படுபவனும் ஆகிய எம்பெருமானிடம் இருந்து வெளிப்பட்டவன் ஆவான்.

மேலே உள்ள "ப்ராதுர் பாவ அந்தர" என்பதில் உள்ள "அந்தர" என்ற பதம் கீழே உள்ள வரியில் காணப்படும் "அந்தர" என்ற பதத்தின் பொருளில் இருந்து மாறுபட்டதாகும்:

இக்ஷி க்ஷீர குடாநீநாம் மாதுர்யஸ்ய அந்தரம் மஹத்

ப்ராதுர்பாவம் என்பதும், ப்ராதுர் பாவாந்தரம் என்பதும் மாறுபட்டவை எனத் தெளிவாகவே கூறப்பட்டது. இதனைக் கீழே உள்ள வரிகளில் காணலாம்:

ப்ராதுர் பாவாஸ்து விஜ்ஞேயா: ஸ்வவ்யாபார வசாத்துவை
ப்ராதுர்பாவாந்தரா: தத்த்வத் அம்சஸ்ய து வசாதபி

**இதன் பொருள் -** எம்பெருமானின் செயல்களின் மூலம் மட்டுமே ஏற்படுவது ப்ராதுர்பாவம் எனப்படும். மற்ற அனைத்தும் (ப்ராதுர்பாவாந்தரம்) எம்பெருமானின் அம்சமாகவே உள்ளன (அவனுடைய ஒரு மிகச் சிறிய பகுதி).

மேலே உள்ள ச்லோகத்தில் காணப்படும் – ஸ்வவ்யாபார வசத் – எம்பெருமானின் செயல் மூலம் – என்பதன் வாயிலாக செயல்கள் அனைத்தும் தனித்தன்மை கொண்ட பகவானின் மூலம் என்பது உணர்த்தப்பட்டது. மேலும் அந்த ச்லோகத்தில் காணப்படும் "து" என்பதும், "அம்ச வச" என்பதும் மூலமாக ப்ராதுர்பாவத்திற்கும், ப்ராதுர்பாவாந்தரத்திற்கும் உள்ள வேறுபாடு உணர்த்தப்பட்டது. மேலும் ப்ராதுர்பாவாந்தரம் என்பது ப்ராதுர்பாவத்திற்குள் அடங்கியது ஆகும். இது போன்றே வேறு ஒரு இடத்திலும் காண்க:

ப்ராதுர்பாவந்தரை: ஸார்தம் ப்ராதுர்பாவை: த்விஜ அகிலை:

அப்யயை: ப்ரபவாக்யைஸ்து கௌணமுக்யை: ஸுரேச்வரை:

**இதன் பொருள்** - இது போன்றே முக்கியம் மற்றும் ஔபசாரிகம் (முதன்மையானது, இரண்டாம் பக்ஷமானது) ஆகிய இரண்டிற்கும் வேறுபாடு உள்ளதைக் காண்க. அந்தணரே! ப்ராதுர்பாவங்கள், ப்ராதுர்பாவாந்தரங்கள், ஸ்ருஷ்டி, ஸம்ஹாரம் போன்ற அனைத்தும் முதன்மையானது, சார்ந்தது என்று இருவகையில் உள்ளன - என்று கூறப்பட்டது.

ஸ்வபாவம் அஜஹத் சச்வத் ஆகாராந்தரம் ஆக்ருதே:
யத்தத்வம் அம்சஸம்பூதம் ப்ராதுர்பாவாந்தரம் து தத்

**இதன் பொருள்** - ப்ராதுர்பாவம் என்பது எம்பெருமான் தனது ஸ்வபாவத்தை விட்டுவிடாமல் மேலும் ஒரு சரீரம் கொள்வதாகும். எம்பெருமானின் அம்சம் என்பது ப்ராதுர்பாவாந்தரம் என்பதன் மூலமே வெளிப்படுகிறது.

இது போன்று முமுக்ஷுக்கள் ப்ராதுர்பாவத்தை மட்டுமே உபாஸிக்கவேண்டும் என்றும், ப்ராதுர்பவாந்தரத்தை உபாஸிக்கக்கூடாது என்றும் கூறப்பட்டது. இதனைக் கீழே உள்ள வரிகளில் காண்க:

யதைவ க்ருததீக்ஷாணாம் அதிகார: ஸமர்ப்பித:
அச்யுதாராதநாநாம் து நிச்ரேயஸ பதாப்தயே
ததைவ ப்ரதிஷித்வம் ச தேவதாந்தர பூஜநம்
வ்யூஹாத்வா விபவாக்யாத்வா ருதே நாந்யத் புரோதிதாம்
ஸ்கந்த ருத்ர மஹேந்த்ராத்யா: ப்ரதிஷித்வாஸ்து புஜநே
ஜ்ஞாத்வைவம் பக்தி ஸாகர்யம் ந குர்யாத் ஏவமேவ ஹி

இதன் பொருள் - மந்த்ரங்களின் உச்சாடனங்களுக்கு அதிகாரம் பெற்றவர்கள், மோக்ஷம் பெறுவதற்காக அச்யுதனை உபாஸிக்கும் தகுதி உள்ளவர்கள் அச்யுதனைத் தவிர்த்து வேறு யாரையும் உபாஸிக்கக்கூடாது என தடை விதிக்கப்பட்டுள்ளது. வ்யூஹமாகவும் விபவமாகவும் உள்ள அச்யுதனே உபாஸிக்கப்படவேண்டும் என்று முன்பே கூறப்பட்டது.

இவர்களுக்கு ஸ்கந்தன், ருத்ரன், இந்த்ரன் போன்றவர்களின் உபாஸனை தடுக்கப்பட்டுள்ளது. இதனை உணர்ந்த ஒருவன் இது போன்ற தவறான உபாஸனைகளில் ஈடுபடுதல் கூடாது.

ஸாத்த்வத ஸம்ஹிதையில் எம்பெருமானின் பிராட்டிகள், அவன் ஆபரணங்கள், அவனது ஸேவகர்கள் ஆகிய அனைவரும் எம்பெருமானின் ஆனந்தம் என்பதை அனுபவிக்கவும், அனுபவிக்க உதவுபவர்களும் ஆவர்; ஆகவே அவர்கள் அவனது சரீரம் ஆவர்; இவனது லீலைக்காகப் படைக்கப்படும் இந்த உலகத்தைப் பரிபாலிக்க உள்ளது காலம், நான்முகன், சிவன் போன்றோர் ஆவர் - என்று கூறப்பட்டது. இதனைக் கீழே உள்ள வரிகளில் காணலாம்:

இதி ஏதத் தேவதாசக்ரம் அங்க மந்த்ர கணாந்திதம்
விக்ரஹே தேவதேவஸ்ய ஸம்லீநம் அவதிஷ்டதே
வக்ஷ்யே பவோபகரண கீர்வாணகணம் உத்தமம்
நாநா விபவ மூர்த்திநாம் யோ அவதிஷ்டதே சாஸநே
காலோபி யந்நியந்தா ச சாஸ்த்ரம் நாநாங்க லக்ஷணம்
வித்யாதி பதயச்சைவ ஸமுத்ர: ஸகுண: சிவ
ப்ரஜாபதிஸம்மூஹஸ்து இந்த்ர: ஸபரிவாரக:
முநய: ஸப்த பூர்வேந்யே க்ரஹாஸ்தாராகணை: வ்ருத்தா:
ஜீமுதாச்ச அகிலா நாமா: து அப்ஸரோகண உத்தம:
ஔஷத்யச்சைவ பசவோ யஜ்ஞா: ஸாங்காகிஸாஸ்து யே
வித்யா சைவ அபரா வித்யா பாவச்கச்சைவ மாருத:
சந்த்ரார்கௌ வாரிவஸுதே இத்யுக்தம் அமலேக்ஷண
சதுர்விசதி ஸங்க்யம் ச பவோபகரணம் மஹத்
பவ: ஸாக்ஷாத் ப்ரதாநஸ்து வ்யபகோ ஜட லக்ஷண:
மந்த்ர மந்த்ரேச்வர ந்யாஸத் ஸோபி பூஜ்யத்வமேதி ச

இதன் பொருள் - இப்படியாக எண்ணற்ற தேவதைகள் மந்த்ரங்கள் மற்றும் அந்த மந்த்ரங்களின் அங்கங்கள் மூலம் மட்டுமே எம்பெருமானின் சரீரத்தில் உள்ளனர். இந்த உலகை ஸ்ருஷ்டிக்க உதவும் கருவிகளாக உள்ள தேவதைகளைப் பற்றி நான் இப்போது

கூறுகிறேன். இவர்கள் அற்புதமான சரீரம் கொண்டவர்கள், எம்பெருமானின் ஆணைகளை நிறைவேற்றுபவர்கள் ஆவர். அவனது கட்டுப்பாட்டில் உள்ளவை - அங்கங்களுடன் கூடிய சாஸ்த்ரங்கள், ஞானத்தின் அதிபதி தேவதைகள், ஸமுத்ரங்கள், பூதகணங்களுடன் கூடிய சிவன், ப்ரஜாபதிகள், தேவர்களுள் கூடிய இந்த்ரன், ஸப்தரிஷிகளும் மற்ற முனிவர்களும், நக்ஷத்ரங்களுடன் கூடிய அனைத்து கிரகங்கள், மேகங்கள், அனைத்து நாகங்கள், அனைத்து அப்ஸரஸ் பெண்கள், மூலிகைகள், விலங்குகள், அங்கங்களுடன் கூடிய யாகங்கள், அனைத்து வித்யைகள், உயர்ந்த வித்யைகள் மற்றும் தாழ்ந்த வித்யைகள், அக்னி, காற்று, சூரிய சந்த்ரர்கள், பூமி, நீர், இருபத்து நான்கு தத்துவங்கள், இந்த உலகில் உள்ள பொருள்களின் மூலப் பொருள்கள் – ஆகும். இந்த உலகம் என்பது எங்கும் பரவியுள்ளதும், அசித்தாகவும் உள்ள ப்ரதானம் ஆகும். ஆயினும் மந்த்ரங்கள் மூலமும், மந்த்ரங்களின் அதிபதியான ஸர்வேச்வரனை ஆராதிப்பதன் மூலமும் இது வழிபடத்தக்கதாக மாறுகிறது.

ஆகவே பௌஷ்கரரின் ஜன்மரஹஸ்யம் என்பதில் கூறப்பட்ட நான்முகன் மற்றும் பலரைப் பற்றிய பகுதிகள் அனைத்தும், அவர்கள் எம்பெருமானின் ப்ராதுர்பாவத்தைப் பெற்றதனால் மட்டுமே என்று கொள்ளவேண்டும். ஆகவே மும்மூர்த்திகளும் ஸமம் என்று கூறுபவர்கள், அவர்களின் அறியாமையால் இவ்விதம் கூறுகின்றனர் என்றாகிறது. இவை அனைத்தும் தகுந்த இடத்தில், தகுந்த ப்ரமாணங்களுடன் நிரூபிக்கப்படும்.

எம்பெருமானின் பரத்வம் என்பது இந்தத் திருநாமமாகிய வராரோஹா (122) என்பதில் பரக்கப் பேசப்பட்டது. இங்கு இரண்டு முக்கியமான கேள்விகளுக்கான பதில் முடிவு பெறுகிறது. இந்தக் கேள்விகள்:

- கிம் ஏகம் தைவதம் லோகே – எது உயர்ந்த ஒரே தெய்வம்
- கிம் வாபி ஏகம் பராயணம் – எது அடையப்பட வேண்டிய ஒரே உயர்ந்த இலக்கு

இனி ஸ்துவந்த: கிம் (யாரை ஆராதிப்பது) என்று கேள்விக்கான விடைகள் வ்யூஹ என்பதில் இருந்து தொடங்குகிறது. இந்த வ்யூஹம் என்பது நான்காக உள்ளது (வாஸுதேவன் போன்றவை). இவற்றில் பரத்வம் பற்றிக் கூறியபோதே

வாஸுதேவனைப் பற்றிக் கூறியதாகக் கொள்வோம். அடுத்து உள்ள மஹாதப: என்பதன் மூலம் ஸங்கர்ஷணன் பற்றிக் கூறப்பட உள்ளது.

## 123. மஹாதப:

அதிக ஞானம் கொண்டவன். அதிகமாக பூஜிக்கத்தக்க ஞானம் கொண்டவன். முண்டக உபநிஷத் (1-1) - யஸ்ய ஜ்ஞானமயம் தப: - ஞானமயமான தவம் கொண்டவன் – என்றது. தொடர்ந்து ஆறு குணங்களும் இங்கு கூறப்பட உள்ளன. இவற்றில் ஞானம் மற்றும் பலம் ஆகிய இரண்டும் ஸங்கர்ஷணனின் தன்மையாக உள்ளன. இங்கு ஞானம் என்பது - எல்லையற்ற காலமாக ஸம்ஸார சுழற்சியில் சிக்கித் தவிக்கும் ஜீவனுக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் அவனைக் கரை ஏற்றும் செயலாகவே கொள்ளவேண்டும்.

## 124. ஸர்வக:

அனைவரையும் சென்று அடைபவன். அனைத்தையும் ஆதாரமாகத் தாங்கும் பலம் கொண்டவன். ஆத்மவடிவில் அனைவரையும் சென்று அடைபவனாக உள்ளான். இதனால் ஸர்வக எனப்படுகிறான். அஷ்டாத்யாயீ (3-2-48) - அந்தாத்யந்தாத்வதூர பார ஸர்வாநந்தேஷு ட: - செல்லுதல் என்ற பொருள் கொண்ட "கம்" என்பது தன் பின்னே "ட" என்பதை இணைத்துக் கொள்கிறது; எப்போது என்றால் அந்த, அத்யந்த, அத்வ, தூர, பார, ஸர்வ, அநந்த போன்ற சொற்களுடன் கூடும்போது ஆகும். ஸங்கர்ஷம (556) என்ற திருநாமம் அவன் தன்னில் அனைத்தையும் வரவழைக்கிறான் என்பதன் மூலம் கிட்டப் பெற்றது.

## 125. ஸர்வவித்

அனைத்தையும் கொள்பவன், ப்ரளய காலத்தை முன்னிட்டு அனைத்தையும் தன்னில் கொள்கிறான். அதன் பின்னர் ப்ரத்யும்நனாக நின்று அனைத்தையும் ஸ்ருஷ்டிக்கிறான். அனைத்தையும் ஒரு லீலையாகவே படைக்கின்ற அவனது ஐச்வர்யம் மற்றும் பலம் இங்கு வெளிப்படுகிறது .

## 126. பாநு:

ஒளிர்பவன். அனைத்தையும் படைத்தபடி இருந்தாலும் அவன் சற்றும் மாற்றாமல் அதே ஒளியுடன் உள்ளான். உணாதி சூத்திரம் – தாபாப்யாம் நு: - ஒளிர்தல் என்னும் பொருள்

கொண்ட "பா" என்பதுடனும், அளித்தல் என்னும் பொருள் கொண்ட "தா" என்பதுடனும் "நு" என்பது சேர்கிறது. மேலும் ஸ ஏஷ ஸ்வயம் உத்வபௌ - அவன் தானாகவே ஒளிர்கிறான் - என்பதும் காண்க. தனது வீர்யம் காரணமாக அவன் எதனாலும் மாறுபடாமல் உள்ளான்.

## 127. விஷ்வக்ஸேந:

அனைத்துத் திக்குகளிலும் உள்ள அனைத்தையும் பாதுகாப்பதற்காக ஒரு பெரும் ஸேனையை வைத்துள்ளவன். அனைத்தையும் காப்பாற்றுபவனான அநிருத்தன் என்னும் அவனே விஷ்வக்ஸேநன் எனப்படுகிறான். அவன் எஜமானனுடன் உள்ளதால் ஸேநன் ஆகிறான். இந்த உலகில் உள்ள அனைத்து உயிர்களும் தங்களைக் காப்பாற்றுபவனை அவனில் கொண்டுள்ளன. இங்கு இவனது சக்தி என்ற குணம் வெளிப்படுகிறது.

## 128. ஜநார்த்தந:

தனது அடியார்களை வருத்துபவர்களை அழிப்பவன். தன்னுடைய அடியார்களைத் துன்புறுத்துபவர்கள் யாராக இருந்தாலும், அவர்களை யாருடைய உதவியும் இன்றி அழிப்பதால், ஜநார்த்தனன் என்ற திருநாமம் பெற்றான். மஹாபாரதம் உத்யோக பர்வம் (71-6) – தஸ்யு த்ராணாத் ஜநார்த்தன: - தீயவர்களிடமிருந்து காப்பதால் ஜநார்த்தனன் எனப்படுகிறான் – என்றது. இதன் மூலம் யாருடைய உதவியும் இன்றி எதிரியை அழிக்கும் வல்லமையான தேஜஸ் என்பது வெளிப்படுகிறது. வாஸுதேவன் உள்ளிட்ட வ்யூஹங்களில் வெளிப்படும் குணங்களானவை, அவை மட்டுமே அந்தந்த வ்யூஹங்களில் வெளிப்படுகின்றன என்பதையும், மற்ற குணங்கள் மறைவாக உள்ளன என்பதையூம் உணர்த்துகிறது. ஆனால் அவனுடைய குணங்கள் எப்போதும் தடைபடுவதில்லை.

மூலஸம்ஹிதை – ஞானேந ஐச்வர்யேண சக்த்யா இதி ஸர்வே பகவத: அநூநா: பூர்ணா: - ஞானம், ஐச்வர்யம் மற்றும் சக்தி ஆகிய அனைத்தும் பகவானிடம் குறைவாக இல்லை, பூர்ணமாக உள்ளது - என்று கூறியது. அந்தப் பரமாத்மா நான்கு நிலைகளில் உள்ளான். அவன் அனைத்தையும் அறிந்தவனாக உள்ளான். அனைத்தையும் பார்த்தபடி உள்ளான். அவன் பந்தங்களுக்கு அப்பாற்பட்டவனாக, ஏதும் தேவை இல்லாதவனாக உள்ளான். அனைவரின் நம்பத்தகுந்த நண்பனாக உள்ளான். அவன் அனைத்தையும் தன்

கட்டுப்பாட்டில் வைத்துள்ளவனாகவும், யாருடைய கட்டுப்பாட்டிலும் தான் இல்லாதவனாகவும் உள்ளான். தொடக்கம் மற்றும் முடிவு அற்றவனாக உள்ளான். அவனுக்கு உறக்கம், பயம், கோபம் மற்றும் சோம்பல் போன்றவை இல்லை. அவன் அறியாமை, ஆசை, நோய்கள் போன்ற எதுவும் இல்லாதவன். அவன் தோஷங்களுக்கு எதிர்த்தட்டாக உள்ளவன். இப்படிப்பட்ட தன்மைகள் கொண்டவனாக எம்பெருமான் உள்ளான் என்பதை உணர்ந்தவர்கள் அவனைச் சரியாகப் புரிந்து கொண்டவர்கள் ஆவர்; இதனை உணராதவர்கள் அவனை அறியாதவரே ஆவர். ஆக வாஸுதேவன் தொடக்கமும் முடிவும் இல்லாதவன் ஆவான். இப்படியாக எல்லையற்ற தன்மையாலும், பந்தப்படாமல் உள்ள தன்மையாலும் அனைத்தையும் விட உயர்ந்தவனாக உள்ளான்.

## 129. வேத:

வேதங்களை அளித்தவன். இதன் மூலம் வேதங்களை அளித்தவன் ஸங்கர்ஷணன் என்றாகிறது. ச்வேதாச்வதர உபநிஷத் (6-18) – யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை – நான்முகனுக்கு வேதங்களை உபதேசித்தவன் – என்றது. ஆக ஸங்கர்ஷணனே உபாயமாகவும், ஆகம விதிகளாகவும், மார்க்கமாகவும், எஜமானனாகவும், அந்தணனாகவும், ஆசார்யனாகவும் உள்ளான்.

## 130. வேதவித்

வேதங்களின் ஆழ்பொருளை எந்தவிதமான சந்தேகமும் இன்றி அறிந்தவன். இதனைக் கீதையில் (15-1) – வேதவிதேவ ச அஹம் – வேதங்களில் வல்லவன் நான் – என்றான்.

## 131. அவ்யங்க:

சந்தஸ், கல்பம் போன்ற பல அங்கங்களுடன் வேதங்களைத் தானே கற்பிப்பதால் அவற்றால் குறைவற்றவன் ஆவான்.

## 132. வேதாங்க:

பல சாகைகளுடன் கூடிய வேதங்களைத் தனது சரீரமாகக் கொண்டவன். இதன் காரணம், அவை பகவானின் ஆழ்பொருளை உணர்த்துவதால் ஆகும். கீழே உள்ள வரிகள் காண்க:

- காடகம் (3-9) - நாவேதவித் மநுதே தம் ப்ருஹந்தம் – வேதங்களை அறியாதவன் ப்ரஹ்மத்தை அறியாதவன்.
- விஷ்ணு புராணம் (1-4-29) - விதூநுதே வேதமயம் சரீரம் – வேதமயமான தனது சரீரத்தை உதறுகிறான்.

அல்லது வேதாங்க என்பதன் மூலம் ச்ருதியும், ஸ்ம்ருதியும் அவனது கட்டளைக்காகவே உள்ளதால் அவனது சரீரங்களாக அவை உள்ளன எனலாம். இதனைக் கீழே உள்ள வரிகளில் காண்க:

- விஷ்ணு தர்மம் (76-31) – ச்ருதி ஸ்ம்ருதி மமைவ ஆஜ்ஞா - ச்ருதியும் ஸ்ம்ருதியும் எனது கட்டளைகளாகவே உள்ளன.
- தைவம் பித்ரயம் ச கர்த்தவ்யம் – பகவானுக்கும் பித்ருக்களுக்கும் உரியதைச் செய்தே தீரவேண்டும்.
- இதி தஸ்ய அநுஸாநம் – இது இவனது கட்டளை.

## 133. வேதவித்

வேதங்களின் மூலம் அறியப்படுபவை வேதங்கள் எனப்படும். இது தர்மம் என்பதாகும். வேதம் என்கின்ற இந்த வேத அர்த்தங்களை உணர்த்தி, அதனைத் தொடர்ந்து மற்றவர்களை அந்த வழியில் நடத்துகிறான். இது ப்ரத்யும்நனைக் குறிக்கும். ஆகவேதான் இவனைத் தர்மம் என்றும், ப்ரகாசப்படுத்துபவன் என்றும், ப்ரவர்த்திப்பவன் என்றும் கூறுகிறோம்.

## 134. கவி:

இனிமையாக உள்ளவற்றைக் காண்பவன். மேலும் சாதாரணமாகப் பார்வையில் சிக்காதவற்றைக் காண்பவன். காண்பது என்ற பொருளை அளிக்கும் “கு” என்பதுடன், “இன்” என்பது சேர்க்கப்பட்டது.

## 135. லோகாத்யக்ஷ:

## 136. ஸுராத்யக்ஷ:

## 137. தர்மாத்யக்ஷ:

"லோக" என்பது தர்ம அநுஷ்டானத்திற்குத் தகுதியான அதிகாரிகளைக் குறித்தது. "ஸுர" என்பது அப்படிப்பட்ட அதிகாரிகள் ஆராதிக்கும் தெய்வங்களைக் குறித்தது. "தர்ம" என்பது அவர்கள் ஆராதிக்கும் தெய்வங்களை ஆராதிப்பதற்கான வழிமுறைகளைக் குறித்தது. இவைகளுக்கு எல்லாம் "அத்யக்ஷ" என்று அத்ருஷ்ட ஸ்தானத்தில் நின்று பலனை அளிக்கின்ற அநிருத்தனைக் கூறினார். மேலும் அநிருத்தன் செய்வது – தர்மத்தின் வழி நடக்காதவர்களுக்குச் சரியான பலன் கிட்டாதபடியும், அதன் வழியில் நடப்பவர்களுக்குப் பலன் பொய்த்துப் போகாதபடியும் பார்த்துக் கொள்வதாகும். இதனால் இவன் தர்மஜ்ஞன் (தர்மங்களை அறிந்தவன்), உபாயஜ்ஞன் (உபாயங்கள் அறிந்தவன்), அத்யக்ஷன் (ப்ரதான தேவதை), ஸத்யஸந்தன் (ஸத்யமயம்), ஞானம் அளிப்பவன் என்று கொண்டாடப்படுகிறான்.

## 138. க்ருதாக்ருத:

இங்கும் அங்கும் பலன்களை அளிப்பவன். தர்மங்கள் என்பவை ப்ரவர்த்திக தர்மம், நிர்வர்த்திக தர்மம் என இருவகைப்படும். இதில் ப்ரவர்த்திக தர்மம் என்பது அழியக்கூடிய பலன்களை அளிப்பதாகும். நிர்வர்த்திக தர்மம் என்பது அழியாத மோக்ஷ பலனை அளிப்பதாகும். அவன் ப்ரவர்த்திக தர்மத்தைப் பின்பற்றுபவர்களுக்கு அதற்கேற்ற பலனை அளிப்பதால் க்ருத என்றும், நிர்வர்த்திக தர்மத்தைப் பின்பற்றுபவர்களுக்கு அதற்கேற்ற பலனை அளிப்பதால் அக்ருத என்றும் கூறப்படுகிறான். இதனால் அவன் க்ருதாக்ருத எனப்படுகிறான்.

## 139. சதுராத்மா

இப்படியாக அவன் வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன் மற்றும் அநிருத்தன் என்று நான்கு விதமாக உள்ளான்.

## 140. சதுர்வ்யூஹ:

ஒருவன் எப்படி நான்குவிதமாக இருக்கமுடியும்? இந்தத் திருநாமம் இதனை விளக்குகிறது. கீழே கூறப்பட்ட ப்ரயோஜனங்களுக்காகவும், த்யானம் செய்யப்பட வேண்டிய ஸ்வரூபம் இப்படிப்பட்டது என்று உணர்த்துவதற்காகவும் தன்னுடைய ஆறு திருக்கல்யாண குணங்களை மொத்தமாகவும், பிரித்தும் உணர்த்துகிறான். அந்தந்த குணங்களை வெளிப்படுத்துவதற்காக உண்டான அவயவம், வர்ணம், ஆபரணம், ஆயுதம், வாகனம், கொடி போன்றவற்றை நான்காகவும்; ஜாக்ரத் உள்ளிட்ட நான்கு நிலைகளாகவும் பிரிக்கப்படுகிறான்.

**குறிப்பு** – நான்கு நிலைகள் என்பது ஜாக்ரத் (விழிப்பு நிலை), ஸ்வப்நம் (கனவு நிலை), ஸுஷுப்தி (ஆழ்நிலை உறக்கம்) மற்றும் துரியம் (மயக்கம்) என்பதாகும்.

## 141. சதுர்தம்ஷ்ட்ர:

இந்த வ்யூஹங்களுக்குக் காரணமான பரஸ்வரூபத்தில் நான்கு பற்களை உடையவன். நான்கு பற்கள் உள்ளது என்பது மஹாபுருஷ லக்ஷணம் என்று இராமாயணம் கூறுகிறது. இதனை இராமாயணம் ஸுந்தரகாண்டம் (35-19) - சதுர்தச ஸம த்வந்த்வ: சதுர்தம்ஷ்ட்ர சதுர்கதி: - பதினான்கு உறுப்புகளும் சமமாக ஒன்று போன்று மற்றொன்று உள்ளபடி இருப்பவன், நான்கு பற்களை உடையவன், நான்குவிதமான நடைகள் கொண்டவன்.

**குறிப்பு**

- நான்குவிதமான நடைகள் – சிங்கம், புலி, யானை, காளை
- பதினான்கு உறுப்புகள் – புருவங்கள், நாசித் த்வாரம், கண்கள், காதுகள், உதடுகள், திருமார்புகள், கை முஷ்டிகள், இரண்டுபட்ட இடுப்புகள், கால் முஷ்டிகள், மணிக்கட்டுகள், திருக்கரங்கள், திருவடிகள் மற்றும் கால்கள்.

## 142. சதுர்புஜ:

நான்கு தோள்கள் கொண்டவன். இது போன்றே பரஸ்வரூபம் உள்ளது. இதனைக் கீழே உள்ள வரிகளில் காண்க:

- விஷ்ணுபுராணம் – சதுர்புஜம் உதாராங்கம் சக்ராத்யாயுதமூஷ்ணம் – நான்கு தோள்களோடு கம்பீரமாக உள்ள அத்திருமேனிடன் கூடியவனாக, சக்கரம் போன்ற ஆயுதங்களை ஆபரணமாகத் தரித்தவன்.

- இராமாயணம் யுத்தகாண்டம் (114-15) - தமஸ: பரமோதாதா சங்கசக்ரகதாதர: - இவனுக்கு அப்பால் உள்ள பரமபதத்தில் சங்கு, சக்கரம், கதை போன்றவற்றை ஏந்தியபடி உள்ளவன்.

- மஹாபாரதம் – புஜைச்சதுர்பி: ஸமேதம் – நான்கு புஜங்களுடன் கூடியவன்.

## 143. ப்ராஜிஷ்ணு:

தன்னை உபாஸிப்பவர்களுக்கு இவை அனைத்துடன் கூடிய ப்ரகாசமாக உள்ளவன். "இத்தகைய தன்மை உடையவன்" என்ற பொருள் கொண்ட "இஷ்ணுக்" என்பது, "ப்" என்ற தாதுவுடன் சேர்ந்தது.

## 144. போஜநம்

தன்னை ஆராதிப்பவர்களால் சுகமாக அனுபவிக்கப்படுபவன்.

## 145. போக்தா:

அடியார்கள் தனக்கு அளிப்பதை அமிர்தம் என்று கொண்டாடி மகிழ்பவன். இதனைக் கீதையில் கீழே உள்ளபடி அருளிச் செய்தான்:

- (9-26) - அச்நாமி ப்ரயதாத்மந: - தூயமனதுடன் உள்ள ஒருவன் அளிப்பதை மகிழ்வுடன் ஏற்கிறேன்.

- (5-29) - போக்தாரம் யஜ்ஞதபஸாம் – அனைத்து யஜ்ஞம் மற்றும் தவங்களை ஏற்று மகிழ்கிறேன்.

## 146. ஸஹிஷ்ணு:

சகித்துக் கொள்ளும் தன்மை உள்ளவன். மனிதர்கள் முன்னும்பின்னுமாகச் சேர்த்துக் கொண்டவைகள், அறிந்தும் அறியாமலும் எப்போதும் அனைத்து வழிகளிலும் சேர்த்துக் கொண்டவைகள், எம்பெருமானுடைய கட்டளைகளை மீறிச் செய்யக்கூடாததைச் செய்தும் செய்யவேண்டியதைச் செய்யாமலும் இருந்து சேர்த்துக் கொண்டவைகள், சாதாரணமாகவும் அசாதாரணமாகவும் உள்ளவைகள், தன்னை (எம்பெருமானை) அவமானம் செய்தல் நிந்தித்தல் மூலமாகச் சேர்ந்தவைகள், அனைத்தையும் பொறுத்துக் கொள்ளவல்ல தன்னாலும் (எம்பெருமான்) பொறுத்துக் கொள்ள இயலாதவைகள், தனது அடியார்கள் விஷயத்தில் செய்யப்பட்ட அபராதங்கள் போன்ற பலவறையும் தனது இயல்பான ஆதரம் காரணமாகப் பொறுத்து, மன்னிக்கிறான். இதனால் இந்தத் திருநாமம் கொண்டான். “இஷ்ணுச்” என்பது அலங்க்ரு, ஸ என்ற பதங்களின் பின்னே வரும்போது “இவன் இத்தகைய தன்மை கொண்டவன்” என்று பொருளை உணர்த்துகிறது. இவனுக்கு இத்தனை பொறுமையும் தாராள மனமும் எப்படி உள்ளது என்ற கேள்வி எழலாம். சந்த்ரன், தண்ணீர் ஆகியவற்றுக்குக் குளிர்ச்சி எப்படி இயல்பானதோ அது போன்று இவனுக்கும் பொறுமை போன்ற தன்மைகள் இயல்பானது என்பதை “ஷ்ணு” என்ற விகுதி உணர்த்துகிறது. இப்படியாக இதுவரை வ்யூஹங்கள் பற்றிக் கூறப்பட்டது.

## 147. ஜகதாதிஜ:

இந்த உலகிற்கு அதிபதியாய் நிற்கும் மூவருள் ஒருவன். இனி விபவம் பற்றிக் கூறப்பட உள்ளது. முதல் மூன்று மூர்ட்திகளில் ஒன்றான விபவமான விஷ்ணு பற்றிக் கூறுகிறார். உற்பத்தி என்ற பொருளில் உள்ள “ஜந்” என்பதன் பின்னே “ட” என்பது வரும்போது, இறந்த காலத்தில் நடந்ததை வர்ணிப்பதாக உள்ளது. மேதஜ (759), கடாக்ரஜ (770) போன்ற திருநாமங்கள் இந்த விதியில் அமைந்தவை ஆகும். விஷ்ணுபுராணத்தில் (4-1-39) நான்முகன் கீழே உள்ளது போன்று கூறுவதைக் காண்க:

யஸ்ய ப்ரஸாதாத் அஹம் அச்யுதஸ்ய
பூத ப்ரஜா ஸர்க்கரோ அந்தகாரீ

க்ரோதாச்ச ருத்ர: ஸ்திதிஹேது பூதோ
யஸ்மாச்ச மத்யே புருஷ: பரஸ்மாத்

இதன் பொருள் - எந்த அச்சுதனின் அநுக்ரஹம் காரணமாக நான் உயிர்களின் ஸ்ருஷ்டியில் ஈடுபடுகிறேனோ, எந்த அச்சுதனின் கோபத்தால் ருத்ரன் அனைத்தையும் அழிப்பவனாக உள்ளானோ அந்தப் பரமபுருஷனே எங்கள் இருவரின் நடுவில் (விஷ்ணுவாக) நின்று அனைத்தையும் காப்பாற்றுகிறான். இதனையே மஹாபாரதம் உத்யோகபர்வம் (12-11) – கதிச்ச நஸ்த்வம் தேவேஷு பூர்வஜோ ஜகத்: ப்ரபு: ரக்ஷார்த்தம் ஸர்வபூதாநாம் விஷ்ணத்வம் உபஜக்மிவாந் - அனைத்து தேவர்களுக்கும் முன்னே நீ விஷ்ணுவாக நின்று அனைத்தையும் காப்பாற்றும் செயலைக் கைக்கொண்டாய். நீயே எங்கள் புகலிடலம் ஆவாய் - என்றது.

## 148. அநக:

இப்படியாக இவன் ஸம்ஸார மண்டலத்தில் அவதரித்தாலும் பாவங்கள் அற்றவன். அனைத்து தோஷங்களுக்கு எதிர்த்தட்டாக உள்ளவன்.

## 149. விஜய:

விஜயம் (வெற்றி) அளிப்பவன். எப்படி என்றால், நான்முகன் மற்றும் ருத்ரன் ஆகிய இருவரும் தங்களது செயல்களான படைத்தல் மற்றும் அழித்தலை இவன் உதவி கொண்டே செய்கின்றனர் என்பதால் ஆகும். மஹாபாரதம் – ததா அதர்சித பந்தாநௌ ஸ்ருஷ்டி ஸம்ஹாரகாரகௌ - இவன் காண்பித்த வழியைக் கொண்டே படைப்பு மற்றும் ஸம்ஹாரம் ஆகியவற்றைச் செய்கின்றனர் - என்றது.

## 150. ஜேதா

நான்முகன், ருத்ரன் உள்ளிட்ட பலரையும் தனது இஷ்டப்படி அவர்கள் நடக்குமாறு அவர்களை வெற்றி கொள்பவன்.

## 151. விச்வயோநி:

அவர்கள் மூலமாக கார்யமாக உள்ள ப்ரபஞ்சத்தின் காரணமாக உள்ளவன்.

## 152. புநர்வஸு:

ப்ரம்மன், ருத்ரன் உள்ளிட்ட தேவர்களின் அந்தராத்மாவாக வசிப்பவன். இதனைக் கீழே உள்ள வரிகளில் காண்க:

- மஹாபாரதம் மோக்ஷ பர்வம் (169-19) - தேவாநாம் பந்து நிஹிதம் குஹாஸி – தேவர்களின் நன்மைகளைக் கருத்தில் கொண்டு அவர்களின் இதயம் என்ற குகையில் நிலையாக இருப்பவன்.

- ததாந்தராத்மா மம ச யே சாந்யே தேஹி ஸஜ்ஞ்ஞிதா: - நான்முகன் ருத்ரனிடம், "அவனே எனக்கும், உனக்கும், மற்ற தேவர்களுக்கும் அந்தராத்மாவாக உள்ளவன்", என்றான்.

## 153. உபேந்த்ர:

இந்த்ரனின் தம்பியாவான். அதிதியின் புத்திரர்களான 12 ஆதித்யர்களில் இறுதியாகப் பிறந்தவன். இதனைக் கீழே உள்ள வரிகளில் காண்க:

ஜகந்யஜ: ஸ ஸர்வேஷாம் ஆதித்யாநாம் குணாதிக:
த்வாதசைவ அதிதே: புத்ரா: சக்ரமுக்யா நராதிப
தேஷாம் அவரஜோ விஷ்ணு: யத்ர லோகா: ப்ரதிஷ்டிதா:

இதன் பொருள் - அதிதியின் புத்திரர்கள் அனைவருக்கும் கடைசியாகத் தோன்றியவன், தனது குணத்தினால் அவர்கள் அனைவரையும் விஞ்சியவன், மனிதரில் உயர்ந்தவரே! அதிதியின் புத்திரர்கள் இந்திரன் தொடக்கமாக உள்ள பன்னிருவர் ஆவர். அவர்களில் கடைசியாகப் பிறந்தவன் யார் என்றால், அனைத்து லோகங்களுக்கும் ஆதாரமாக உள்ள பூமி போன்ற விஷ்ணுவே ஆவான். இதனையே - விஷ்ணு: இந்த்ராமுஜோ அபவத் – விஷ்ணு இந்த்ரனின் இளையவன் ஆனான் – என்றது காண்க.

## 154. வாமந:

மஹாபலியின் வேள்வியின்போது இந்த்ரனைக் காப்பாற்றும் பொருட்டு வந்தவன். இதனை ச்ருதியானது – த்ரஷ்ட்ட்ருந் ஸ்வகாந்த்யா வாமாநி ஸுகாநி நயாதி - தன்னைக் காண்பவர்களுக்கு தனது சரீரத்தின் ஒளி மூலமாக மிகுந்த சுகத்தை அளிக்கிறான் - என்றது. மேலும் – ஸ வாமாநி திவ்ய சரீர த்ருக் – அந்த வாமனன் திவ்யமான இனிய திருமேனி உடையவன் - என்றது காண்க.

## 155. ப்ராம்சு:

அதே இடத்தில் ஓங்கி உயர்ந்து நிற்பவன். அவனைப் பற்றிய மந்த்ரங்களில் – அனைத்து இடங்களிலும் வ்யாபித்துள்ளவன் – என்று போற்றப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- விஷ்ணுதர்மம் (79-52) - தோயே து பதிதே ஹஸ்தே வாமநோ பூதவாமந: தஸ்யா விக்ரமதோ பூமிம் சந்த்ராதித்யௌ ஸ்தநாந்தரே நம: ப்ரக்ரம மாணாஸ்ய நாப்யாம் தௌ ஸமாவஸ்திதௌ - நீர் கையில் விழுந்த நொடியிலேயே வாமனனாக நின்றவன், மிகவும் உயர்ந்து நின்றான். இப்படியாக அவன் அனைத்தையும் ஆக்கிரமிக்கும் நேரத்தில் சந்த்ரனும் சூரியனும் அவனுடைய திருமார்பில் விளங்கினார்கள்.

- விஷ்ணுபுராணம் (5-5-17) - வாமநோ ரக்ஷது ஸதா பவந்தம் ய: க்ஷணாதபூத் த்ரிவிக்ரம: க்ரமாக்ராந்த த்ரைலோக்ய ஸ்புரதாயுத: - யார் ஒருவன் ஒரு நொடியில் விக்ரமனாக உயர்ந்தானோ, தனது திருவடிகள் கொண்டு மூன்று உலகங்களையும் அளந்தானோ, திவ்ய ஆயுதங்கள் கொண்டு நின்றானோ, அப்படிப்பட்ட வாமனன் உன்னைக் காப்பானாக.

இவனுடைய மேன்மைகளை வேதங்கள் பின்வருமாறு கூறுகின்றன:

- இதம் விஷ்ணுர் விசக்ரமே – இந்த உலகை விஷ்ணு அளந்தான்.
- த்ரீணி பதா விசக்ரமே விஷ்ணு: - மூன்று அடிகளால் விஷ்ணு அளந்தான்.
- விசக்ரமே ப்ருதிவீமேஷ ஏதாம் க்ஷேத்ராய விஷ்ணு: - இந்த்ரனுக்காக இந்தப் பூமியைப் பெறும் பொருட்டு விஷ்ணு அளந்தான்.

- த்ரிர்தேவ: ப்ருதிவீம் – தேவாதிதேவன் மூன்று அடிகளால் அளந்தான்.
- ப்ரவிஷ்ணு: - அவனே உயர்ந்த விஷ்ணு.

## 156. அமோக: (111)

அவனது செயல்கள் வீணாகப் போகாதபடி செயல் புரிபவன். அவனைப் பற்றிய மந்த்ரவர்ணனம் – அபரிமித ப்ரபாவாய - எல்லையற்ற ப்ரபாவம் அவனுடையது ஆகும் - என்றது காண்க . மேலும் கீழே உள்ள வரிகள் காண்க:

- விஷ்ணுதர்மம் (43-35) – அநுக்ரஹம் சாபி பலேரதுத்தமம் சகார யச்சேந்த்ர பதேபமம் க்ஷணாத் துராச்ச யஜ்ஞாம்சுபுஜ: - யார் ஒருவன் ஒரு நொடிப்பொழுதில் பலிச்சக்ரவர்த்திக்கு, இந்த்ர பதவிக்கு நிகரான உத்தமபதம் அளிக்கப்பட்டு, தேவர்களையும் யஜ்ஞத்தின் அவிர்பாகத்தைப் புசிக்கும்படிச் செய்தானோ.

- விஷ்ணுபுராணம் (5-17-30) - யத்ராம்பு விந்யஸ்ய பலிர்மநோஜ்ஞாம் அவாப போக்யாந் வஸுதா தலஸ்த: ததா அமரத்வம் த்ரிதசாதி பத்யம் மந்வந்தரம் பூர்ணமபேத சத்ரு – வாமனனின் திருக்கரத்தில் நீரைச் சேர்த்தவுடன் மஹாபலி எல்லையற்ற இன்பம் பெற்றான். இந்த உலகில் இருந்தபோதிலும் அவன் தேவர்களுக்கு நிகரான அந்தஸ்தை அடைந்தான். தனது விரோதிகள் அனைவரும் ஓடும்படியாக ஒரு மந்வந்தரம் முழுவதும் தேவர்களின் ஒருவனாகவே நின்றான்.

## 157. சுசி: (252)

தூய்மையானவன். இப்படியாகப் பல உதவிகள் செய்தபோதிலும் எந்தவிதமான பிரதி உபகாரமும் எதிர்பாராமல் உள்ளவன். ரிஷி, ருசி போன்றவை இதே அடிப்படையில் அமைந்த சொற்களாகும். அஸ்பர்சச்ச மஹாந் சுசி: - தோஷங்களால் தீண்டப்படாததால் தூய்மையாக உள்ளான் - என்றது காண்க.

## 158. ஊர்ஜித:

திடமான பலம் கொண்டவன். இவன் நமுசி முதலான எதிரிகளை அழிப்பதால் பலம் நிறைந்தவன் . “இதச்” என்ற எச்சம் ஊர்ஜ என்பதுடன் இணைந்தது.

## 159. அதிந்த்ர:

இந்தரனுக்குத் தம்பியாகத் தோன்றியபோதிலும் தனது ஐச்வர்யம் மற்றும் எஜமானத் தன்மை ஆகியவற்றால் அவனைக் காட்டிலும் மேன்மை பெற்றவன். இதனைக் கீழே உள்ள வரிகளில் காண்க:

- மந்த்ரவர்ணனம் – அவிதித விபவாய – யாருடைய மேன்மையை அறிய இயலாதோ
- அதிவாரிதவந்த்ர கர்மாணம் – வாயு, இந்த்ரன் ஆகியவர்களின் செயல்களை விஞ்சியிருப்பவன்.

## 160. ஸங்கரஹ

இப்படியாக மேன்மையுடன் உள்ளபோதிலும் பக்தர்களால் எந்தவிதமான வருத்தமும் (அவனை அடைய இயலாமல் போவதில் வருத்தம்) இன்றி வணங்கப்படுபவன். அஷ்டாத்யாயீ – க்ரஹவ்ருத்ருநிச்சிகமச்ச - அப் என்பது க்ரஹ, வ்ரு, த்ரு, நிச்சி மற்றும் கம் ஆகியவற்றின் பின்னே வரும்.

## 161. ஸர்க:

த்ரிவிக்ரமனாக உலகம் எங்கும் வ்யாபித்தபடியுள்ள தனது திருவடிகளுடன் அவன் அனைவருக்காகவும் தன்னாலே தானே ஸ்ருஷ்டிக்கப்பட்டவன் ஆவான். இதனை இராமாயணம் யுத்தகாண்டம் (17-36) - நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸி ச – தனது நண்பர்களுக்காகத் தன்னையே தானே படைத்துக் கொள்பவன் – என்றது.

## 162. த்ருதாத்மா

இப்படியாகத் தன்னையே அளித்து அனைத்து ஆத்மாக்களையும் தாங்குபவன்.

## 163. நியம:

ஆத்மாக்களுக்கு விரோதியாக உள்ள பலிச்சக்ரவர்த்தி போன்றவர்களை அடக்குபவன். அஷ்டாத்யாயீ – யம: ஸமுபநிவிஷு ச – யம் என்பது ஸம், உப, நி, வி போன்றவற்றுடன் இணையும்போது அப் சேர்க்கப்படுகிறது (நி + யம் + அ = நியம).

## 164. யம:

அனைவரையும் துன்பம் ஏதும் இல்லாதபடி, மகிழ்வுடன் இருக்கும்படி அடக்கி ஆள்வதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- ப்ருஹத் உபநிஷத் (3-7-3) – ய: ப்ருதிவீம் அந்தரோமயதி – யார் பூமியின் உள்ளே புகுந்து நியமிக்கின்றானோ.
- ப்ருஹத் மாத்யந்தினம் – ய: ஆத்மாநம் அந்தரோ யமயதி – யார் ஜீவனின் உள்ளே புகுந்து நியமிக்கிறானோ.

இப்படியாக அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் பூமி தொடங்கி ஒவ்வொரு தத்துவமாகக் கூறப்படுகிறது. அவற்றில் இவன் புகுந்து நியமிப்பதாக உள்ளது. மேலும் மநுஸ்ம்ருதி (8-92) – ய மோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவ ஏஷ ஹ்ருதி ஸ்தித: தேந சேத் அவிவாத: தே மா காங்காம் மாகுரூந் கம: - சூரியமண்டலத்தில் இருந்தபடி அனைவரையும் நியமனம் செய்வதால் சக்ரவர்த்தியாக உள்ளவனும், உன் இதயத்தில் உள்ளவனும் ஆகிய ஸர்வேச்வரனோடு உனக்கு எந்தவிதமான் விரோதமும் இல்லை என்றால், புண்ணியம் தேடும் விதமாக நீ கங்கை முதலானவற்றை நாடவேண்டாம், குருக்ஷேத்ரமும் செல்லவேண்டாம் – என்றது.

## 165. வேத்ய:

அறியக்கூடியவன். இப்படியாக இவன் பல அவதாரங்களில் அவதரிப்பதால் நமது புலன்களுக்கு எட்டாத மேன்மைகளை வெளிப்படுத்துகிறான். ஆகவே அனைவராலும் அறிந்து கொள்வதற்கு எளியவன். இதனால் வேத்ய என்ற திருநாமம் பெற்றான்.

## 166. வைத்ய:

அனைத்து வித்யைகளும் அறிந்தவன். தன்னையே த்யானம் செய்தபடி உள்ளவர்களின் ஸம்ஸார தொடர்பை நீக்கும் வித்யையை அறிந்தவன். அஷ்டாத்யாயீ (4-2-59) – தத் அதீதே தத் வேத – "அதனை ஓதுகிறான்", "அதனை அறிகிறான்" என்று இரண்டாம் வேற்றுமையில் உள்ள "வேத" என்ற பதத்தின் பின்னே "அண்" என்பது உண்டாகும் – என்றது. மேலும் விஷ்ணுதர்மம் (69-110) – மேரு மந்தர மாத்ரோபி - ஒருவனின் பாவங்கள் என்பது மேருமலை போன்று பெரிதாக இருக்கலாம் (ஆனால் கேசவன் மூலம் அவை அழியும்) - என்றது.

## 167. ஸதாயோகீ

எப்போதும் விழித்திருப்பவன். அடியார்களின் விஷயத்தில் எப்போதும் விழிப்புடன் உள்ளதால் இந்தத் திருநாமம் கொண்டான். கட உபநிஷத் (5-8) - ய ஏஷு ஸுப்தேஷு ஜாகர்த்தி – அனைவரும் உறங்கும்போது இவன் விழித்திருப்பான் - என்றது.

## 168. வீரஹா (747, 927)

அசுர ஸ்வபாவம் கொண்டவர்களை அழிப்பவன். அதாவது தங்களது குதர்க்கமான வாதங்கள் மூலம் பரமாத்மா பற்றிய ஞானத்தைக் கெடுப்பவர்களை அழிப்பவன். அஷ்டாத்யாயீ (3-2-87) – ப்ரஹ்ம ப்ரூண வ்ருத்ர – இந்தச் சொற்களுடன் "அழித்தல்" என்ற பொருள் தருகின்ற "ஹத்" என்பது வரும்போது, "கவிப்" என்பது சேர்கிறது. இந்த விதியானது வேறு சில பதங்களுடன் "ஹந்தி" என்பது இணையும்போது செயல்படுகிறது. இதன் மூலம் உண்டான திருநாமங்கள் காமஹா (295), க்ரோதஹா (315), பகஹா ( 564) போன்றவை ஆகும்.

இப்படிப்பட்டவர்கள் (பரமாத்மா பற்றிய ஞானத்தைக் கெடுப்பவர்கள்) கூறுவதைக் கீதையில் (16-8) – அஸத்யம் – இந்த உலகமே பொய்யானது, இந்த உலகிற்கு ஆதாரம் ஏதும் இல்லை, ஈச்வரன் இல்லை – என்று உரைத்தான். அதன் பின்னர் இவர்களைத் தான் என்ன செய்யப் போவதாகக் கீதையில் (16-19) – தான் அஹம் – இப்படியாக உரைக்கும்

கொடியவர்களும், நன்மை என்பது சிறிதும் இல்லாதவர்களும் ஆகிய அந்தத் தாழ்ந்தவர்களை அசுரப்பிறவிகளாக நான் தள்ளுகிறேன் – என்றான்.

## 169. மாதவ: (73, 741)

பரமாத்மா பற்றிய ஞானத்தை எங்கும் பரப்புபவன். தன்னைப் பற்றிய விஷயமான பரமாத்ம ஞானத்தைப் பரப்புவதால் மாதவன் எனப்படுகிறான். மாவித்யா ச ஹரே: ப்ரோக்தா தஸ்யா ஈசோ யதோ: பவாந் தஸ்மாத் மாதவ நாமா அஸி தவ: ஸ்வாமீ இதி சப்தித : - ஸ்ரீஹரியின் வித்யை என்பது மா எனப்படுகிறது; தவ: என்றால் ஸ்வாமி என்ற பொருள் தரும்; வித்யைக்கு ஈச்வரன் என்பதால் மாதவ: எனப்படுகிறாய் - என்றதுகாண்க. மஹாபாரதம் உத்யோக பர்வம் (69-4) – மௌநாத் த்யாநாத் ச யோகாச்ச வித்தி பாரத மாதவம் - பரதவசத்தில் உதித்தவனே! மௌனம், த்யானம், யோகம் போன்றவற்றால் எம்பெருமானை மாதவன் என்கின்றனர் என அறிவாயாக - என்றது.

## 170. மது:

தேன் போன்று உள்ளவன். பரவித்யை அறிந்தவர்களுக்குத் தேன் போன்று உள்ளதால் மது எனப்படுகிறான். உணாதி பாதம் (1-18) – பலி பாடி நமி – "உ" என்பதும் "கு" என்பதும் பல், பாட், நம் போன்றவற்றின் பின்னே வந்து பல்கு, படு, நாகு என்று மாறுகிறது - என்றது காண்க. மது என்ற பதம் எப்படிப் பிறக்கிறது என்றால் "அறிதல்" என்ற பொருள் கொண்ட "மத்" என்ற பதம், "விரும்பத்தக்கது" என்ற பொருள் கொண்ட "உ" என்பதை இணைத்துக் கொண்டதால் உண்டானதாகும். விஷ்ணுஸூக்தம் – மத்வ உத்ஸ: - மஹாவிஷ்ணு தேன் ஊற்றாக உள்ளான் - என்றது. மேலும் கீதையில் (7-17) – ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோ அத்யர்த்தம் - அவர்களில் ஞானியானவன் எனக்கு மிகவும் ப்ரியமானவன் – என்றான்.

## 171. அதீந்த்ரிய:

புலன்களால் அறிந்து கொள்வதற்கு அப்பாற்பட்டவன். இனிமையான தேன் போன்ற ஸ்வரூபம் கொண்டவனாகிய எம்பெருமான் அனைத்து குணங்களும் பூர்ணமாகக் கொண்டவனாக உள்ளான். மேலே கூறப்பட்ட பரம், வ்யூஹம், விபவம் போன்ற

அவதாரங்களுக்கு இதயம் போன்றுள்ள முக்கியமான ஆறு குணங்களைக் கூற எண்ணுகிறார். முதலில் பரமாத்மாவின் ஸ்வரூபத்தை அதீந்த்ரிய என்றார். அவன் ஞானேந்த்ரியங்களுக்கு அப்பாற்பட்டவன்.

## 172. மஹாமாய:

அவன் புலன்களுக்கு எட்டாதவன் என்று எவ்விதம் கூறப்படுகிறான்? தன்னைச் சரணம் என்று புகாதவர்கள் அனைவரையும் மயக்க வைப்பதும், தனது ஸ்வரூபத்தைக் காண இயலாமல் மறைப்பதும் ஆகிய மாயை என்ற ஸங்கல்பம் கொண்டவன் என்பதால் இவ்விதம் கூறப்பட்டான். ஜிதந்தே ஸ்தோத்ரம் – குணமாயா ஸமாவ்ருத: - குணங்கள் என்ற மாயை மூலம் மறைத்தபடி – என்றது காண்க. இந்த மாயை என்பது "பொய்" என்ற பொருளை அளிக்கவில்லை என்பது பின்னே கூறப்பட உள்ளது.

## 173. மஹோத்ஸாஹ:

ஸாங்க்ய மதம் என்பதில் ஈச்வரன் ஞானமயமானவன் என்பதை ஒப்புக் கொண்ட போதிலும் அவன் எந்தவிதமான செயல்களையும் செய்யாமல் உள்ளான் என்றே கூறுகின்றனர். இந்தத் திருநாமம் அந்தக் கருத்தை மாறுபடுத்தி உணர்த்துகிறது. அவன் "செயல் புரிதல்" என்ற ஐச்வர்யத்தைக் கொண்டவன் ஆவான். இப்படிப்பட்ட தன்மை உள்ளதால் அவன் எந்தவிதமான தடைகளும் இல்லாமல், தன்னை ஏவுவதற்குத் தனக்கு மேல் யாரும் இல்லாமல், அனைத்தையும் தனது சிறிய ஸங்கல்பத்தின் மூலமே செய்பவனாக உள்ளான். இந்த உலகில் வாழ்கின்ற பல ஜீவன்களும் தங்களது புண்ணியபாவ கர்மபலன்களின் விளைவான கர்மங்களை அனுபவித்து வருகின்றனர். இப்படி அவர்கள் அனுபவிப்பதற்கு ஏதுவாக எல்லையற்ற, எண்ணற்ற புதிதுபுதிதான வஸ்துக்களை அவன் ஸ்ருஷ்டி செய்கிறான். இவற்றை ஜீவன்கள் தங்களது சிறிய கர்மபலன், பெரிய கர்மபலன், பலன் தரத் தொடங்கிவிட்ட கர்மங்கள் (ப்ராரப்த கர்மம்), பலன் தரத் தொடங்காத கர்மங்கள் போன்றவற்றுக்கு ஏற்ப அனுபவிக்கின்றனர். அவன் அனைத்தையும் தான் நினைத்தபடி செய்யவல்லவனாக உள்ளபோதிலும், முழுச் சுதந்திரம் கொண்டவனாக உள்ளபோதிலும், அந்தந்த ஜீவன்களின் கர்மங்களுக்கு ஏற்றபடி பலன் அளிப்பது என்ற நிலையை மாற்றாமல் உள்ளான். நான்முகன் உள்ளிட்ட பலரில் காணப்படும் சக்திகள் அனைத்தும் ஸர்வேச்வரனின் சக்தியில் ஒரு துளியில் ஓர் அணுவை மட்டுமே பெற்றுக்கொண்டு இயங்குகின்றன. நான்முகன் உள்ளிட்ட பலரில் காணப்படும்

சக்தி என்பது அணிமா உள்ளிட்ட பல ஆகும் (அணிமா என்றால் அணு போன்று மாறுதல்).

## 174. மஹாபல:

மிகுந்த வலிமை கொண்டவன். மற்றவர்களின் உதவியை எதிர்பார்த்து நின்று மட்டுமே செயல்களைப் புரிகின்றவர்களின் பலத்தை விட மிகவும் அதிக பலம் ஸர்வேச்வரனுக்கு உண்டு. இதனை இந்தத் திருநாமம் உணர்த்துகிறது. இந்தப் பலம் காரணமாகவே, வியக்க வைக்கின்ற அரிய செயல்கள் பலவற்றை அவன் செய்கின்றபோதிலும், சற்றும் சோர்வு அடையாமல் உள்ளான். தன்னுடைய மேன்மை என்பதை மட்டுமே அவன் ஆதாரமாகக் கொண்டு நின்று, அனைத்தையும் தனது சரீரம் போன்று தானே தாங்கி நிற்கிறான். மௌல ஸம்ஹிதை - பஹுளயன் பஹுளம் – பல பொருள்கலையும் உண்டாக்கி - என்கின்றனர். நீர், வாயு, பூமி ஆகியவற்றில் காணப்படுகின்ற சக்தியானது இவனது சக்தியில் ஒரு சிறிய அளவே ஆகும்.

## 175. மஹாபுத்தி:

ஞானமயமானவன். அனைத்துவிதமான ஞானம் அற்ற ஒருவனையே இந்த உலகின் காரணமாக ஒரு சில மதங்கள் கூறி வருகின்றன. இதனை இந்தத் திருநாமம் தள்ளுகிறது. அனைத்து இடங்களிலும் உள்ளவை, அனைத்துக் காலங்களிலும் உள்ளவை அனைத்தின் ஸ்வபாவம், தூரம் மற்றும் அருகில் உள்ளவை என்று பலவற்றையும் எம்பெருமான் அறிவான். அவனது ஞானம் என்பது ஐயம் மற்றும் தோஷம் ஆகியவை அற்றதால் ஸத்யமானது ஆகும். அவனது ஞானம் என்பது எந்தவிதமான தோஷம் இல்லாததாலும், அது அவனுக்கு இயற்கையாகவே உள்ளதாலும் நித்யமானது ஆகும். அவன் அனைத்தையும் அறிந்து கொள்வதற்கு நம்மைப் போன்று கண் உள்ளிட்ட இந்த்ரியங்களை உபயோகிப்பதில்லை, அவற்றை எதிர்பார்ப்பதும் இல்லை. மாறாக அவற்றை உபயோகிக்கிறான் என்றால், தனது ஸங்கல்பம் காரணமாகவே ஆகும். தாமரை போன்ற கண்கள் கொண்டவன்; எந்தக்காலத்திலும் நல்லதை மட்டுமே பார்த்துக் கொண்டும், கேட்டுக்கொண்டும் உள்ளவன்; காண்பதற்குக் கண்கள், ருசியை அறிவதற்கு நாக்கு என்னும் இந்த்ரியங்களின் கட்டுப்பாடு அவனுக்கு இல்லை. அனைத்துப் புலன்களாலும், அனைத்தையும் செய்கின்ற சக்தி கொண்டவன் ஆவான். பாம்புகள் தங்கள் கண்களால் பார்ப்பதும் கேட்பதும் செய்கின்றன என்பதை நாம் அறிவோம். இவ்விதம் அற்பமான விலங்குகளுக்கே அந்தத் திறன் உள்ளபோது ஸர்வேச்வரனால் ஏன்

செய்ய இயலாது? இதனை ஜயாக்ய ஸம்ஹிதை – ஸர்வத: ச்ருதிமான் லோகே யதா த்ருக் ச்ரோத்ரகோரக: - பாம்பு தனது கண் மூலமே காண்பதையும் கேட்பதையும் செய்வது போன்று எம்பெருமான் அனைத்தையும் தனது இந்த்ரியமான காது மூலம் மட்டுமே செய்ய இயலும் – என்றது காண்க.

அவன் அனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனி போன்று தெளிவாக அறிகிறான். அவன் எதனையும் செய்யவல்ல திறன் கொண்டவன் என்பதால் அவனது எந்த முயற்சியும் வீணாவதில்லை. கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய நாராயணவல்லீ (1-12) - விச்வத: சக்ஷு: உத விச்வதோ முக: - அவன் தனது கண்களை எங்கும் கொண்டவன், தனது முகங்களை எங்கும் கொண்டவன்.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (3-19) - பச்யதி அசக்ஷு: ஸ ச்ருணோதி அகர்ண: - கண்களின் உதவியின்றி அனைத்தையும் காண்கிறான், காதுகளின் உதவியின்றி அனைத்தையும் கேட்கிறான்.

- கீதை (13-13) – ஸர்வத: அக்ஷிசிரோமுகம் – எங்கும் கண்களும், தலையும், முகமும் உள்ளது.

ஆசார்யர்களில் உயர்ந்தவரான ஸ்வாமி நாதமுனிகள் ந்யாய தத்வத்தில் – யோ வேந்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத: – எந்த ஒரு ஸ்ரீஹரி அனைத்தையும் ப்ரத்யக்ஷமாக தனது ஸ்வபாவம் மூலம் அறிகிறானோ – என்றார்.

அனைத்தும் அறிந்தவனான ஸர்வேச்வரன் குறித்து ஒரு சிலர் ஏளனம் தொனிக்கப் பேசினர். அவர்கள் கூறுவது என்னவெனில் – ஏகே து ப்ரமாணேந ஸர்வஜ்ஞோ யேந கல்ப்யதே நூநம் ஸ: சக்ஷுஷா ஸர்வந் ராஸாதீந் ப்ரதிபத்யதே – ஒரு ப்ரமாணத்தின் மூலம் மட்டுமே அனைத்தும் அறிந்த ஸர்வேஸ்வரன் என்று ஒருவன் உள்ளான் என அறிய முடிகிறது என்றால், அப்படிப்பட்டவன் தனது கண்கள் மூலமாகவே ருசி பார்ப்பது மற்றும் மற்ற இந்த்ரியங்களின் செயல்களைச் செய்பவனாகக் கொள்ளலாம் - என்பதாகும். இது பௌத்தர்கள் உள்ளிட்டவர்களால் தங்கள் அனுமானம் மூலம் ஒப்புக் கொள்ளப்பட்ட அனைத்தும் அறிந்தவனான ஈச்வரன் குறித்தே ஆகும். இதன் காரணம் அங்குள்ள

ப்ரகடனம் அப்படிப்பட்டது, இல்லையேல் சாஸ்த்ரங்களுக்கு முரணாகிவிடும். மேலும் - நித்ய: சேத அர்த்தவாதத்வம் தத்பரே ஸ்யாத் அநித்யாத - ஸர்வேச்வரன் நித்யமாக உள்ளவன் - என்று கூறுவது வெறும் புகழ்ச்சியான அர்த்தவாதம் மட்டுமே என்று கூறினால், அவன் நித்யம் அல்லன் என்று கூறியதாக ஆகிவிடும் அல்லவோ – என்றது காண்க. ஆகவே ஸர்வேச்வரன் அனைத்தும் அறிந்தவன் என்று சாஸ்த்ரங்கள் கூறுவதை மறுப்பது போன்றாகிவிடும்.

ஆக இது போன்றவர்களுக்கு உள்ள மறைமுகக் கருத்து வேறுபட்டது என்று கொள்ளவேண்டும். இது தவிர "ஸர்வேச்வரன் அனைத்தும் அறிந்தவன்" என்று கூறுகின்ற சாஸ்த்ரமானது சற்றும் பொருந்தாத விஷயங்களைக் கூறுகிறது என்று உரைப்பதும் தவறாகும். இதன் காரணம், இந்த உலகில் உள்ள பலவற்றுக்கு சிறப்பான சக்திகள் உள்ளது என்பதை நாம் காணலாம் - நாகங்கள் (கண்களால் கேட்பவை), காகம் (ஒரே போன்று காணும் திறன்), ஆந்தை (இரவிலும் காண்கின்ற திறன்), கழுகு (தூரத்தில் இருந்தே காணும் திறன்) - போன்றவை காண்க. மேலும் மந்த்ரங்கள் மூலம் வியக்க வைக்கும் செயல் செய்பவர்கள், எப்படிப்பட்ட நோயையும் குணப்படுத்தவல்ல மருந்துகளின் திறன், தவ வலிமையால் செய்வதற்குச் சிரமான செயல்களை மிகவும் எளிதாகச் செய்பவர்கள் – என்று தங்கள் இந்த்ரியங்களின் திறனில் ஏற்றத்தாழ்வுகள் கொண்டபடியே உள்ளனர். இது போன்று மற்ற குணங்களிலும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கலாம் அல்லவோ? கர்மவசப்பட்டுள்ள மனிதர்கள், முக்தர்கள், நித்யஸூரிகள் போன்ற பலருக்கும் உள்ள ஞானம் என்பது எம்பெருமானின் அனைத்தும் அறிந்த தன்மை என்பதின் ஓர் அணு அளவு மட்டுமே என்று அறியவேண்டும்.

## 176. மஹாவீர்ய:

எம்பெருமானின் வீர்யம் என்பது மிகவும் அதிகமாகவே உள்ளது. அதனைச் சிறிதளவு குறைப்பதற்குக் கூட யாருக்கும் திறன் இல்லாத காரணத்தினால், அது மாறுபடாமல் அப்படியே உள்ளது. இதனால் இந்தத் திருநாமம் பெற்றான். தயிராக மாறிவிடும் இயல்பு கொண்ட பால் போன்றவற்றின் தன்மைகளைக் காட்டிலும் இவனது தன்மைகள் வேறுபட்டவை என்பதை இந்தக் குணம் உணர்த்துகிறது. கஸ்தூரி மானில் இருந்து வெளிப்படும் நறுமணம், மலர்களின் நறுமணம் ஆகியவை அந்தந்த உயிர்களுக்குத் தெரியாமலேயே வெளிப்படுவது போன்று எம்பெருமானும் எந்தவிதமான பெரும் முயற்சி இன்றியே எல்லையற்ற செயல்களைச் செய்யவல்லவன் ஆவான். தஸ்ய ஸந்நிதி

மாத்ரேண கந்த: க்ஷோபாய ஜாயதே மனஸோ ந உபகர்த்ருத்வாத் ததா அஸௌ பரமேச்வர: - நறுமணம் என்பது மனிதனின் அருகில் உள்ளபோது அவனை இழுக்கிறது; இது போன்று எம்பெருமான் மிகவும் கடினப்படாமல் தனது இருப்பு மூலம் மட்டுமே செயல் புரிகிறான் – என்றது காண்க. மிகவும் பெரிய யோகிகள் பலரும் ஸர்வேச்வரனின் இந்தத் திறனில் ஓர் அணுவின் அளவு அவர்களிடம் உள்ளதால் எந்தவிதமான குழப்பமும் அற்றவர்களாக உள்ளனர்.

## 177. மஹாசக்தி:

மிகுந்த சக்தி உடையவன். பசுபதியைத் தேவதையாகக் கொண்டுள்ள பாசுபதமதம் என்பது கூறுவது என்னவென்றால் – பசுபதியின் ஸங்கல்பம் மூலமாக உலகம் உண்டாவதால், பசுபதியே நிமித்த காரணம் ஆவான்; ஆனால், அவன் உலகமாக ஆகாத காரணத்தால் உபாதானக் காரணம் ஆக மாட்டான் என்பதாகும். (ஒரு குயவன் பானை ஒன்றை ஒரு சக்கரம் கொண்டு செய்கிறான். இங்கு குயவன் = நிமித்த காரணம், மண் என்பது பானையாக மாறுவதால் அதுவே உபாதானக் காரணம், சக்கரம் முதலானவை ஸஹகாரி காரணம்). ஆனால் எம்பெருமான் மஹாசக்தி என்பதால் இவனே நிமித்த காரணம் மற்றும் உபாதானக் காரணமாக உள்ளான். இவன் தனக்கு உதவியாக எந்த சாதனங்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும், எப்போதும் எதனையும் படைக்கும் திறன் கொண்டுள்ளான். தனது சரீரத்தின் ஒரு பகுதியான ப்ரக்ருதியை உலகமாக மாற்றவும், சாதனங்களைச் சரிவர உபயோகம் செய்வதற்குத் திறன் கொண்டவனாகவும் உள்ளான். சிலந்தியானது தன்னுள்ளிருந்து வெளிப்படும் எச்சிலையே தனது வலையாகப் பின்னுவதால் சிலந்தியே உபாதானக் காரணமும், நிமித்த காரணமுமாக உள்ளது என்று கூறுவர். அற்பமான சிலந்தியையே இவ்விதம் இரண்டுமாகக் கூறும்போது, அனைத்து விதமான சக்தியையும் கொண்ட ஸர்வேச்வரன் இவ்விதம் அனைத்துவிதமான காரணங்களாக உள்ளான் என்பதை மட்டும் ஏன் ஆக்ஷேபிக்க வேண்டும்? மூலப்ரக்ருதி, பால், தயிர் போன்ற பலவும் நொடிக்கொரு முறை மாறுபடுதல் என்பது எம்பெருமானின் சக்தியில் ஒரு துளியால் மட்டுமே ஆகும்.

## 178. மஹாத்யுதி:

மிகுந்த ஒளியுடன் கூடியவன். மற்றவர்களின் உதவிகளை எதிர்பார்த்தபடி உள்ள காரணங்களைக் காட்டிலும் இவன் வேறுபட்டவன் என்பதும், யாருடைய உதவியையும் எதற்கும் எதிர்பாராதவன் என்பதும் இந்தத் திருநாமம் மூலம் உணர்த்தப்பட்டது. இந்த

ஒளியானது உள்ளும்புறமும் இருக்கின்ற இருவிதமான இருளையும் நீக்கவல்லதாகும். இந்த ஒளியானது அவனை அண்டும் அடியார்களுக்கு இனிமையாகவும், அவனது விரோதிகளுக்குப் பயத்தை அளிப்பதாகவும் உள்ளது. சூரியன், மாணிக்கக்கல் போன்றவற்றில் காணப்படும் ஒளி என்பது இவனது ஒளியில் ஒரு சிறு பகுதி மட்டுமே ஆகும்.

திருநாமங்கள் 173 முதல் 178 முடிய உள்ள ஆறு திருநாமங்களில் "மஹா" என்ற விசேஷமான அடைமொழி உள்ளது காண்க. இதன் மூலம் உணர்த்தப்படுவது என்ன? எப்பெருமானின் இந்தக் குணங்கள் அனைத்தும் தங்களது சிறிய பகுதி மூலம் மட்டுமே எத்தனை பெரிய செயல்களாக இருந்தாலும், எத்தனை அற்பமான செயலாக இருந்தாலும் முடிக்கவல்லவை ஆகும்; இவ்விதம் எளிதாகச் செய்து முடித்த பின்னர், தங்களது திறமைக்கு ஏற்ப மேலும் செயல்கள் ஏதும் இல்லாத காரணத்தால் அவை த்ருப்தி அடையாமல் இருக்கின்றன - என்பதை உணர்த்துகின்றன. மேலும் பெரிய கடல் ஒன்றில் பெரிய நதிகள் உள்ளது போன்று, எல்லையற்ற குணங்கள் கொண்ட எம்பெருமானிடம் இந்தக் குணங்களும் உள்ளன என்பதும் உணர்த்தப்பட்டது. இப்படியாக எம்பெருமானிடம் குணங்கள் உள்ளன என்பது பல ப்ரமாணங்களில் கீழே உள்ளபடி காணப்படுகின்றன:

- ச்வேதாச்வதர உபநிஷத் (6-8) - பரா அஸ்ய சக்தி: விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஞாந பல க்ரியா ச – இவனுடைய சக்தி என்பது உயர்ந்தும், பல விதமாகவும் காணப்படுகிறது; இவை இவனுக்கு இயற்கையாகவே உள்ளது. இப்படியாகவே இவனுக்கு ஞானம், பலம், ஸ்ருஷ்டிக்கும் திறன் போன்ற பலவும் உள்ளன.
- விஷ்ணுபுராணம் (6-5-85) - தேஜோ பல ஐச்வர்ய மஹாவபோத ஸுவீர்ய சக்தியாதி குணைகராசி: - தேஜஸ், பலம், ஐச்வர்யம், ஞானம், வீர்யம் மற்றும் சக்தி ஆகிய பலவற்றுக்கும் இவனே இருப்பிடம் ஆவான்.

- விஷ்ணுபுராணம் (6-5-79) – ஞான சக்தி பல ஐச்வர்ய வீர்ய தேஜாம்ஸி அசேஷத: பகவச்சப்த வாச்யாநி விநா ஹேயை: குணாதிபி: – தாழ்வான குணங்கள் என்பதற்கு எதிர்த்தட்டாகவும்; பூரணமாக உள்ள ஞானம், பலம், சக்தி, ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்பதாகவும் உள்ள குணங்களே பகவான் என்ற பதம் மூலம் உணர்த்தப்படுகின்றன.

பகவத் சாஸ்த்ரம் என்பவை அனைத்தும் பகவானுக்கு இந்த ஆறு குணங்களும் பரிபூர்ணமாக உள்ளன என்பதை உணர்த்துவதை மட்டுமே தங்கள் நோக்கமாகக் கொண்டுள்ளன. சௌசீல்யம் போன்ற குணங்கள், இந்த அடிப்படையான ஆறு குணங்களுக்குள்ளேயே உள்ளவை என்று ஓர் அடிப்படையாகக் கூறப்படுகின்றன.

## 179. அநிர்தேச்ய வபு: (662)

"இப்படிப்பட்டது" என்று வர்ணிக்க இயலாதபடியான திருமேனி கொண்டவன். ஆறு குணங்களுடன் கூடியதாக இவன் திருமேனி உள்ளதால் இந்தத் திருநாமம் கொண்டான். மௌல ஸம்ஹிதை - ஷாட்குண்ய விக்ரஹம் தேவம் பாஸ்வஜ் ஜ்வலந தேஜஸம் – ஆறு குணங்களுடன் கூடிய திருமேனி, கொழுந்து விட்டு எரியும் அக்னி போன்ற தேஜஸ் ஆகியவற்றுடன் எம்பெருமான் உள்ளான் - என்றது. இதனை மேலும் – புத்தி மந: அங்க ப்ரயங்கவத்தாம் பகவதி லக்ஷயாமஹே சாஸ்த்ர சப்தேப்யோ புத்திமாந் அங்க ப்ரத்யங்கவாந் - எம்பெருமானிடம் சிறந்த புத்தி, உயர்ந்த மனம், உன்னதமான சரீரம் நேர்த்தியான அங்கங்கள் ஆகியவை உள்ளன என்று சாஸ்த்ரங்களின் இருந்து அறிகிறோம்; ஆகவே எம்பெருமான் புத்திமான், மனம் கொண்டவன், சரீரம் கொண்டவன் மற்றும் அங்கங்களுடன் கூடியவன் என்று அறிகிறோம் - என்றது காண்க.

நிருக்தம் – யே புத்தி மநோ அங்கப்ரத்யங்கவந்தோ பவந்தி ஸாப்தமஹாபௌதிகாஸ்தே பவந்தி - யார் ஒருவர் புத்தி, மனம், அங்கங்களுடன் கூடியவர்களாக உள்ளனரோ அவர்கள் ஏழு மஹாபூதங்களால் ஆனவர்கள் ஆவர் – என்றது. அப்படி எனில் எம்பெருமானின் சரீரம் எதனால் ஆனது என்ற கேள்வி எழலாம். இந்தக் கேள்வியை எழுப்பி அதற்குப் பின்வருமாறு பதில் அளிக்கப்படுகிறது:

பகவதாத்மிகைவ ஏஷா பகவதோ வ்யக்தி:
யதாத்மகோ ஹி பகவாந் ததாத்மி கைவைஷா
கிமாத்மகச்ச பகவாந்?
ஞானாத்மக: ஜச்வர்யாத்மக: சக்த்யாத்மக:
யதா அங்கார: காதிர: சால்பலோ வா ஸுப்ரதீப்த:
ஸர்வதோ அக்நிரேவ ஸ்யாத் யதா வா மது
மாத்ரம் ப்ரபீயமாநம் ஸர்வதோ மதுரமேவ ஸ்யாத்
யதா வா ஸர்வணாபிண்டோ நித்ருஷ்யமாண:

ஸர்வத: ஸுவர்ணமேவ ஸ்யாத் ஏவம் பகவாந்
ஸர்வதோ ஞானமேவ: ஸர்வத: ஐச்வர்யமேவ:
ஸர்வத: சக்திரேவ: யதிச்சேத் தத்பவேத்

இதன் பொருள் – எம்பெருமானின் சரீரம் பகவத் ரூபமாகவே உள்ளது. அவன் எந்த ரூபமாக உள்ளானோ அவன் சரீரம் அந்த ரூபமாகவே உள்ளது. அவன் எந்த ரூபமாக உள்ளான்? ஞானரூபன், ஐச்வர்யரூபன், சக்திரூபன் என உள்ளான். இது எப்படி சாத்தியம்? காதிரம், சால்மலி என்று எந்த மரம் தீப்பிடித்தாலும் ஒரே அக்னியே உண்டாகிறது; தேனைப் பருகும்போது அதன் அனைத்துப் பகுதிகளும் ஒரே போன்று இனிமையாகவே உள்ளன; தங்கத்தை உரைத்துப் பார்த்தால் அதன் பல்வேறு பாகங்களில் இருந்து வரும் தங்கம் ஒரே தங்கமாகவே உள்ளது; ஓர் அரண்மனை எந்தத் திக்கிலிருந்து பார்க்கப்பட்டாலும் ஒரே போன்று அழகுடன் கூடியதாகவே உள்ளது. இது போன்று எம்பெருமான் முற்றிலுமாக ஞானமயம், முற்றிலுமாக ஐச்வர்யமயம், முற்றிலுமாக சக்திமயம் என்று எவ்விதம் தான் விரும்புகிறனோ அப்படியே உள்ளான்.

இதனையே பஞ்சோபநிஷத் – சுத்த ஸத்வமயேந ஹி அநேந கநகதலேந இவ ரத்நம் உந்மீல்யதே ஷட்குணீ ச து த்ரிகுணமயேந இவ நிமீல்யதே – ஒளி வீசும் இரத்தினத்தைத் தங்கத்தில் வைத்து இழைக்கும்போது அது மேலும் ஒளிர்கிறது; அது போன்று ஆறு குணங்கள் கொண்ட எம்பெருமான் தனது சுத்தஸத்வமயமான ரூபம் மூலம் மேலும் ப்ரகாசம் கொண்டவனாக உள்ளான் – என்றது. விஷ்ணுபுராணம் (1-2-10) – ரூபவர்ணாதி நிர்தேச விசேஷண விவர்ஜித: - தனது ரூபம் மற்றும் வர்ணம் ஆகியவற்றால் எம்பெருமான் ஒப்பில்லாதவனாக உள்ளான் - என்றது. நிர்தேச விசேஷணம் = உபமானமாகக் கூறப்படும் பொருள், தத்வர்ஜித: = அப்படி தனக்கு உபமானமாக ஏதும் இல்லாதவன். அதாவது ஒப்பற்ற சரீரம் உடையவன்.

## 180. ஸ்ரீமாந் (22, 222)

தனது திருமேனிக்கு ஏற்றதான திவ்யமான ஆபரணங்களின் ஐச்வர்யத்துடன் கூடியவன்.

## 181. அமேயாத்மா (103)

இப்படியாக உள்ள குணங்கள் மற்றும் ரூபங்கள் ஆகியவற்றுக்கு ஏற்றபடி ஆழமான ஸமுத்திரம் போன்று கம்பீரமாக உள்ளவன்.

## 182. மஹாத்ரித்ருத்

மிகப் பெரிய மலையைத் தாங்கியவன். இதுவரை கூறப்பட்ட அளவிட இயலாத தன்மைகளுக்கு ஏற்றபடியாக, தனது விருப்பப்படி பலவிதமான லீலைகள் செய்பவன். திருப்பாற்கடலைக் கடைந்தபோது மந்தர மலையைத் தாங்கி நின்றவன்.

## 183. மஹேஷ்வாஸ:

வலிமையான அம்புகளைத் தொடுப்பவன். கீழே கூறியபடியான, மனம் கவரும்படியாக அம்புகளை எய்பவன், இலங்கைக்குச் சென்று பத்துத் தலைகளுடன் கூடிய இராவணனை அழிப்பதற்காக வருணனைக் கட்டி நிறுத்தி, அம்புகள் எய்து பாலம் கட்ட முனைந்தபோது இந்த கம்பீரம் காணலாம்.

## 184. மஹீபர்த்தா

இந்தப் பூமியைத் தாங்கி நிற்பவன். கூர்மமாக நின்று எப்போதும் தாங்குபவன்.

## 185. ஸ்ரீநிவாஸ:

மஹாலக்ஷ்மியின் இருப்பிடம். திருப்பாற்கடலானது கடையப்பட்டபோது அதிலிருந்து அவதரித்த மஹாலக்ஷ்மியைத் தனது மார்பில் வைத்துக் கொள்ளுதல் முதலான லீலைகளை இந்தத் திருநாமம் கூறுகிறது.

## 186. ஸதாம் கதி:

பக்தியுடன் உள்ளவர்களுக்குப் புகலிடமாக உள்ளவன். ஸர்வேச்வரன் சுதந்திரமாக, தனது விருப்பத்தின்படி செயல்கள் புரிபவன். ஆயினும் தன்னைச் சரணம் அடைந்தவர்களைப் பொறுத்தவரையில் அவனது செயல்கள் அவர்களுக்கு இன்பத்தை அளிப்பவையாகவே இருக்கும்.

## 187. அநிருத்த: (644)

எந்த இடையூறும் இல்லாதவன். தனது ஸ்ருஷ்டிகளைக் காப்பதற்காக எல்லையற்ற திவ்யமான செயல்களை எந்தவிதமான தடையும் இன்றிச் செய்பவன். இதனை மௌஸல ஸம்ஹிதை - அபரிமித சேஷ்டோ பகவான் அநிருத்த: - அநிருத்தனின் செயல்கள் அனைத்தும் அபரிமிதமானவை – என்றது.

**குறிப்பு:** அடுத்த சில திருநாமங்களில் எம்பெருமானின் ஹம்ஸாவதாரம் விவரிக்கப்படுகிறது.

## 188. ஸுராநந்த:

தேவர்களுக்கு மிகுந்த ஆனந்தம் அளிப்பவன். இங்கு ஸர்வேச்வரன் எடுத்த அனைத்து அவதாரங்களுக்கும் மூலகாரணமாக உள்ள அநிருத்தனின் ஹம்ஸாவதாரம் உரைக்கப்பட்டது. தேவர்களின் ஆபத்துக் காலங்களில் அவர்களுக்குத் துணையாக நின்று, அவற்றை நீக்கி ஆனந்தம் அளிக்கிறான்.

## 189. கோவிந்த:

புகழப்படும் சொற்களை அடைந்தவன். தங்களது ஆபத்து நீங்கியதால் தேவர்களின் புகழ்ச்சி என்னும் சொற்களைப் பெற்றவன். அஷ்டாத்யாயீ – கவாதிஷு விந்த: ஸம்ஜ்ஞாயாம் – “வாக்கு” என்பதைக் குறிக்கும் கோ என்னும் சொல், அடைதல் என்ற பொருள் கொண்ட ”விந்த்” என்பதுடன் சேர்ந்து ஒரு பெயரைக் குறிக்கும்போது - என்றது காண்க. தேவர்கள் தன்னைத் துதிக்கும்படியான உதவிகள் செய்தவன்.

## 190. கோவிதாம் பதி:

அறிஞர்களுக்கு ரக்ஷகன். காவ என்றால் வேதங்களின் சொற்கள். த்விதாம் என்றால் அந்தச் சொற்களை நன்கு அறிந்தவர்களின் ஞானம் என்ற யஜ்ஞம் மூலம் ஆராதிக்கப்படுபவன். இதனால் கோவிதாம் பதி: எனப்படுகிறான். ஹம்ஸ மூர்த்திம் அத ஆத்மானம் ஜ்ஞான யஜ்ஞ புஜம் ஸ்மரேத் – தான் செய்கின்ற ஞானம் என்னும் வேள்வியை ஏற்றுக்கொண்டு அதனை அனுபவிப்பவனும், அன்னம் போன்று உருவம் எடுத்தவனும் ஆகிய எம்பெருமானை ஒருவன் தியானிப்பானாக – என்றது காண்க.

## 191. மரீசி:

ப்ரகாசமாக உள்ளவன். பிறவியில் குருடர்களாகப் பிறந்தவர்கள் கூட தன்னைக் காணும்படியாக பிரகாசிக்கின்ற ரூபம் கொண்டவன். இதனால் மரீசி: எனப்படுகிறான். உணாதி சூத்திரம் - ம்ரு கணிப்யாம் ஈசி: - ஒளிருதல் என்னும் பொருள் கொண்ட "ம்ரு" மற்றும், மலர்தல் என்றும் பொருள் கொண்ட "க" என்னும் பதங்களுடன் "ஈசி" என்ற எச்சம் சேரும். "ம்ருங்" என்றால் ப்ரகாசத்துடன் இருத்தல் என்பதாகும். குந்தேந்துஸ்நிக்த காந்திச்ச - குருக்கத்தி மலர், சந்த்ரன் போன்று அழகான ரூபம் கொண்ட எம்பெருமான் உன்னான் - என்றது காண்க.

## 192. தமன:

அடக்குபவன். மந்தாகினி என்னும் கங்கை போன்று வேகத்துடன் ஓடிவரும் தனது சரீர ஒளி மூலம் ஸம்ஸாரம் என்ற துன்பத்தை நீங்குபவன். இதனால் தமன் என்ற திருநாமம் அடைந்தான்.

## 193. ஹம்ஸ:

அன்னமாக நின்றவன். யார் மேலே உள்ள திருநாமங்கள் மூலம் கூறப்பட்டவன் என்றால் அன்னமாக நின்ற எம்பெருமானே ஆவான். மௌல ஸம்ஹிதை - ஹந்தா ஸங்கானாம் – பந்தங்களை அழிப்பவன் – என்றது. ஹம்ஸ என்ற பதத்திற்கு மநோஹரம் (அழகு), ஹந்தி – கச்சதி (நடப்பவன்), ஸ்மயதே (புன்னகை) என்று பொருள் உண்டு. அதாவது அழகாக நடப்பவன் அல்லது புன்னகை செய்பவன் என்பதாகும். ப்ருஷத் மற்றும் உதர ஆகிய இரண்டும் சேரும்போது ப்ருசோதர என்று மாறுவது போன்று, ஹந் என்பதும் ஸ என்பதும் இணையும்போது ஹம்ஸ என்றாகிறது. மேலும் - ஸத் ஸத்த்வ சுப ஆச்ரய பரமஹம்ஸாய – சுத்தமான ஸத்வமயமான மங்களகரமான திருமேனியுடன் கூடிய அன்னமான பரம்பொருளுக்கு – என்றது காண்க.

## 194. ஸுவர்ண: (859)

அழகான சிறகுகள் கொண்டவன். அழகிய சிறகுகள் கொண்டவன் அல்லது ஸம்ஸாரம் என்ற பெரும் கடலில் இருந்து மீட்பவன் என்று ஸுபர்ண பதம் பொருள் தரும். இதனால் இவன் ஸுபர்ண என்ற திருநாமம் பெற்றான்.

**குறிப்பு:** அடுத்து உள்ள சில திருநாமங்கள் பத்மநாப ரூபத்தைக் குறிப்பவை ஆகும்.

## 195. புஜகோத்தம:

ஸர்ப்பங்களின் எஜமானன். பத்மநாப (48) மற்றும் அமரப்ரபு (49) ஆகிய திருநாமங்கள் மூலம் வ்யூஹ அவதாரங்களில் ஒன்றான அநிருத்தன் பற்றிக் கூறப்பட்டது. இங்கு விபவ அவதாரங்களில் முதன்மையான பத்பநாப அவதாரம் உரைக்கப்படுகிறது. புஜகஸ்ய என்றால் ஆதிசேஷன், உத்தம என்றால் "மேம்பட்டவன்" – ஆக ஆதிசேஷனுக்கு எஜமானன் என்பதாகும். அனந்தன் என்னும் ஆதிசேஷனைத் தனது படுக்கையாகக் கொண்டு சயனித்துள்ளவன். மானஸே அநந்த சயநே திவ்ய போத தநு: விபு: - மனோமயமான அனந்தன் என்ற சயனத்தில் திவ்யமான ஞானத்துடன் கூடியவனாக உள்ளவன் - என்று அவனைத் த்யானிக்கும் முறை கூறப்பட்டது. மஹாபாரதம் – ஸுஷ்வாப பகவான் விஷ்ணு: அப் சய்யாம் ஏக ஏவ ஹி நகஸ்ய போகே மஹதி சேஷஸ்ய அபித தேஜஸ: - அளவற்றதும், தேஜஸ் கொண்டதும் ஆகிய ஆதிசேஷன் என்ற நாகத்தின் மீது ஈடில்லாத பகவான் விஷ்ணு திருப்பாற்கடலில் சயனித்துள்ளான் - என்றது காண்க. ஸ்ரீவிஷ்ணுபுராணம் - போகி சய்யாகத: சேதே த்ரைலோக்ய க்ராஸ ப்ரும்ஹித: – மூன்று உலகங்களையும் உண்ட த்ருப்தியுடன் ஆதிசேஷன் என்னும் படுக்கையில் சயனித்துள்ள பகவான் – என்றது காண்க.

## 196. ஹிரண்ய நாப:

தங்கமயமான நாபியைக் கொண்டவன்.

## 197. ஸுதபா:

மிகவும் உயர்ந்த ஞானம் கொண்டவன். தப = ஞானம், அனைத்தையும் காண்கின்ற திறன் (ஞானம்) கொண்டவன். திவ்யபோததநு: விபு: - திவ்யமான ஞானமே வடிவாக உள்ளவனும் எங்கும் நிறைந்தவனும் – எனப்பட்டான்.

## 198. பத்மநாப: (48, 348)

நாபியில் தாமரையை உடையவன். பத்மநாபனைக் குறித்து முன்பு கூறப்பட்டவை அனைத்தும் இங்கு பொருந்தும். ஹிரண்யநாபன், பத்மநாபன் குறித்து ப்ராஹ்மபுராணம்

கீழே உள்ளவாறு உரைக்கிறது. கதாசித் தஸ்ய ஸுப்தஸ்ய நாப்யாம் காமாத் அஜாயத திவ்யம் அஷ்டதளம் பூரி பங்கஜம் பார்த்திவம் மஹத் யஸ்ய ஹேமமயீ திவ்யா கர்ணிகா மேரு: உத்யதே - யோகநித்திரையில் உள்ள எம்பெருமானின் ஸங்கல்பம் மூலம் அவனுடைய திருநாபியில் இருந்து இந்த பூமியின் ரூபமாக, அழகான எட்டு இதழ்களுடன் கூடிய தாமரை வெளிப்பட்டது; அதன் தங்கமயமான காயானது மேரு என்பதாகும்.

## 199. ப்ரஜாபதி:

அனைத்திற்கும் தலைவன். தனது திருநாபியில் பிறந்த நான்முகன் உட்பட அனைத்திற்கும் தலைவனாக உள்ளவன். இங்கு நைமித்திகம் என்னும் ஸ்ருஷ்டி மற்றும் ப்ரளயம் கூறப்பட்டது.

**குறிப்பு:** அடுத்த சில திருநாமங்களில் நரஸிம்ஹ அவதாரம் உரைக்கப்படுகிறது.

## 200. அம்ருத்யு:

மரணத்தின் எதிரியாக உள்ளவன். அடுத்து நரஸிம்ஹ அவதாரம் இங்கு கூறப்படுகிறது. ம்ருத்யு என்றால் மரணம் எனப்படும். அம்ருத்யு என்பதற்கு மரணத்தின் விரோதி என்று பொருள். ம்ருத்யுவிற்கே ம்ருத்யுவாக உள்ளவன்.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வனின் திருக்குமாரரும்தெய்வீக ஆணையால் ஸ்ரீரங்கநாதனின் , ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச் செய்த பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ,இரண்டாம் நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம் .

### மூன்றாவது நூறு தொடக்கம்

## 201. ஸர்வத்ருக்

அனைவரையும் காண்பவன். தனக்கு அடியார்களாகவோ, விரோதிகளாகவோ, நடு நிலைமையில் உள்ளவர்களாகவோ இருப்பவர்கள் அனைவரையும் காண்பவன். அவர்களை அவர்களின் தகுதிக்கு ஏற்ப நடத்துவதற்காகக் காண்பவன். அனைத்து திசைகளிலும் காண்பவன். உணாதி சூத்திரம் – த்ருசேச்ச இதி வக்த்வ்யம் – த்ருச் என்ற

தாதுவில் ஒரு பெயர்ச்சொல் தோன்றும்போது, அதனுடன் சேரும் ப்ரத்யயம் ஒன்று "க" என்று மாறுகிறது.

## 202. ஸிம்ஹ:

நரஸிம்ஹரூபம் கொண்டவன். இப்படியாக உள்ள அவன் யார்? உயர்ந்த ஸிம்ஹரூபம் கொண்டவன். உணாதி சூத்திரம் – ஸிசே: ஸம்ஜ்ஞாயாம் – ஸி என்பது பெயர்ச்சொல்லாக மாறும்போது ச் என்பது ஹ என்றாகிறது.

## 203. ஸந்தாதா

அடியார்களைத் தன்னுடன் சேர்த்துக் கொள்பவன். விரோதிகளை அழிக்கும்போது அவர்களை மதம் கொண்ட யானையாகக் கருதி, அவற்றின் ஜன்ம விரோதியான சிங்கமாக நிற்கிறான். ஆனால் அதே சிங்கவடிவில் அவன் உள்ளபோதும் ப்ரஹ்லாதன் போன்ற அடியார்களிடம் அன்புடன் உள்ளான்.

## 204. ஸந்திமாந்

அடியார்களிடம் சேர்ந்து உள்ளவன். ப்ரஹ்லாதன் போன்ற அடியார்களுடன் எப்போதும் சேர்ந்தே உள்ளவன்.

## 205. ஸ்திர:

உறுதியுடன் கூடியவன். தனது அடியார்கள் ஏதேனும் தவறுகள் செய்தால் கூட அவர்களிடம் அசைக்கமுடியாதபடி அன்புடன் உள்ளவன். உணாதி சூத்திரம் – அஜிர சிசிர - "நிற்பது" என்னும் பொருளைக் கொண்ட ஸ்தா என்ற பதம், கிரச் என்ற ப்ரத்யயத்தை இணைத்துக் கொள்ளும்போது, ஸ்தா என்பதன் இறுதியில் உள்ள "ஆ" என்பது மறைகிறது. மந்த்ரவர்ணனம் – பத்ரம் - மங்களம் அளிப்பவன் – என்றது.

## 260. அஜ: (96, 524)

பிறப்பற்றவன். மற்றவர்கள் போன்று பிறக்காமல், தூண் ஒன்றில் அவதரித்தவன். இதனால் அஜ: என்ற திருநாமம் கொண்டவன். அஷ்டாத்யாயீ - அந்யேஷு அபி த்ருச்யதே- என்றது. மேலும் – ந ஜாயதே ஜநித்ரயாம் யத் அஜ: தஸ்மாத் அநேகஜித் -

தாயின் வயிற்றிலிருந்து அவன் பிறக்கவில்லை என்பதால் அஜன் எனப்படுகிறான்; அவன் அனைவரையும் வெற்றி கொள்பவன் – என்றது காண்க.

## 207. துர்மர்ஷண:

இவனை எதிர்த்து வெல்வது என்பது இவனது விரோதிகளால் இயலாது. இதனால் துர்மர்ஷண என்ற திருநாமம் பெற்றான். இவனது த்யான ச்லோகம் – ரதாங்க சங்க தாதாரம் ப்ரஹ்ம மூர்த்திம் ஸுபீஷணம் – சக்கரம், சக்கு ஆகியவற்றை வைத்தபடியும், பரப்ரஹ்மமாகவும் பயங்கரமாகவும் உள்ளவன் – என்பதாகும்.

## 208. சாஸ்தா:

அனைவரையும் அடக்குபவன். நல்லவர்களுக்கு முள் போன்று துன்பம் அளிக்கின்ற தீயவர்களை நன்கு அடக்கி ஆள்பவன். இதனால் சாஸ்தா என்ற திருநாமம் பெற்றான். அடக்கி ஆளுதல் என்பதை "த்ருஷ" என்பது உணர்த்தும். உணாதி சூத்ரம் – த்ருந்த்ருசௌ சம்ஸிக்ஷதாதிப்ய: ஸம்ஜ்ஞாயாம் ச அநிஷ்டௌ – "துதிப்பது" என்ற பொருள் கொண்ட சம்ஸ் என்பதுடன் த்ருத் என்பதும், "சிதைப்பது" என்ற பொருள் தருகின்ற க்ஷரத் என்பதுடன் த்ருக் என்பதும் இணைகின்றன – என்றது. மேலும் விஷ்ணுதர்மம் – நிநாத வித்ராஸித தாநவ: - தனது கர்ஜனை மூலம் மட்டுமே யார் அசுரர்களை நடுங்க வைக்கிறானோ – என்றும், த்ரவந்தி தைத்யா: - யாருடைய திருநாமத்தை உச்சரித்தவுடன் அசுரர்கள் ஓடிச் செல்கின்றனரோ - என்றும் கூறியது காண்க.

## 209. விச்ருதாத்மா

அனைத்து இடங்களிலும், எப்போதும், அனைவராலும் வியப்புடன் தன்னைப் பற்றிக் கூறும்படியும், கேட்கும்படியும் அற்புதமான லீலைகளை நரஸிம்ஹனாக அவதரித்துச் செய்தான். விஷ்ணுதர்மம் - அசேஷ தேவேச நரேச்வர ஈச்வரை: - யாருடைய திவ்யசரிதம் எப்போதும் அனைவராலும், தேவர்களாலும், மனிதர்களாலும், ஈச்வரர்களாலும் கேட்கப்படுகிறதோ – என்றது.

## 210. ஸுராரிஹா

தேவர்களின் விரோதியான ஹிரண்யகசிபுவை அவன் மார்பைப் பிளந்து அழித்தவன். இவனது த்யான ச்லோகம் – ஸத் ஸத்த்வ கரஜ ச்ரேணி தீப்தேன உபயபாணிநா ஸம்யச்சதே யதா ஸம்யக் பயாநாம் ஸ: அபயம் பரம் – வலிமையுடன் கூடிய நகங்களின் வரிசையால் ஒளிர்கின்ற இரண்டு கைகள் மூலமாக நரஸிம்ஹமூர்த்தி நமது ஸம்ஸார பயம் அனைத்தையும் நீக்கி, நமக்கு முழுவதுமான அபயம் அளிக்கிறான் – என்றது.

## மத்ஸ்யாவதாரம்

## 211. குருர்குருதம:

அனைத்து ஆசார்யர்களிலும் மேம்பட்டு உள்ள ஆசார்யனாக உள்ளவன். அனைத்து வித்யைகளையும் அளிக்கவல்ல ஆசார்யனாக உள்ளதால் பரமச்சார்யன் ஆவான். இதனால் இவனே குரு ஆவான். ஸ: பூர்வேஷாம் அபி குரு: இதி ஹைரண்ய கர்ப்பா: - இவனே பழமையான குரு என்று ஹிரண்யகர்ப்பன் கூறினான் - என்றது காண்க. உணாதி சூத்திரம் - குரோருச்ச – "செய்வது" என்ற பொருள் தருகின்ற க்ரு, "பேசுதல்" என்ற பொருள் அளிக்கின்ற க்ரு ஆகிய இரண்டில் உள்ள "உ" என்ற ப்ரத்யயம் – என்றது காண்க. குருதம: என்பது தனியான சொல் அல்ல. இது குரு என்ற பதத்தை மேலும் விவரிக்கவல்லதாகும். அதாவது அனைவரையும் விட உயர்ந்த குரு என்பதாகும். கீதை (11-43) – பூஜ்ய: ச குரு: கரீயாந் - அனைவரையும் விட மேம்பட்ட பூஜிக்கத்தக்க குருவாக நீயே உள்ளாய் – என்றது.

## 212. தாம:

ப்ரளயத்தின்போது அழிந்துவிடுகின்ற அனைத்து சராசரங்களின் விதைகளுக்கு வித்தாக உள்ள பூமி என்ற கப்பலை வழிநடத்துபவன். அனைத்திற்கும் அண்டும் இடமாக உள்ளான். உணாதி சூத்திரம் - ஸர்வதாதுப்ய: மநிந் – "தாக்குவது" என்ற பொருள் கொண்ட "தா" என்பது அனைத்து வினைகளுடனும் உள்ளபோது, அத்துடன் "மநிந்" என்பது இணையும் (தாம + மந் + இந் = தாமந்).

## 213. ஸத்ய: (107, 873)

ப்ரளய காலத்தில் தன்னை அண்டி நின்ற மனு உள்ளிட்ட அனைத்து ஸத் புருஷர்களுக்கும் நன்மை அளித்தான். இதனால் ஸத்ய என்ற திருநாமம் பெற்றான்.

## 214. ஸத்யபராக்ரம:

மேலே கூறப்பட்ட ஸத் புருஷர்கள் விஷயத்தில் இவன் உண்மையான தீரச் செயல்களைச் செய்தான்.

## 215. நிமிஷ:

மேலே கூறப்பட்ட தன்னை அண்டிய ஸத் புருஷர்களுக்கு பகைவர்களாக உள்ளவர்களைப் பார்க்காமல் உள்ளவன். இதனால் நிமிஷ என்ற திருநாமம் அடைந்தான்.

## 216. அநிமிஷ:

இப்படியாக உள்ளவன் யார்? தன்னை அண்டியவர்களைச் சற்றும் கண் இமைக்காமல் எப்போதும் பார்த்தபடி உள்ள எம்பெருமான் ஆவான். இவன் திவ்யமான மீன் உருவத்தைக் கொண்டவன் (மீன் போன்று கண் இமைக்காமல் தனது அடியார்களைப் பார்வையால் வளர்க்கிறான் என்று கருத்து).

## 217. ஸ்ரக்வீ

மீனாக அவதரித்தபோதும், இவனுடைய எஜமானத் தன்மையை உணர்த்துகின்றபடி, கழுத்தில் தனது வைஜயந்தீ என்ற மாலையை அணிந்தபடியே உள்ளான். அந்த மாலை இவனுடன் எப்போதும் உள்ளதாகும். அஷ்டாத்யாயீ – அஸ்மாயாமேதாஸ்ரஜ: விநி: – மாயா, மேதா, ஸ்ரத் என்பதுடன் "சேர்ந்த்திருத்தல்" என்பதை உணர்த்தும் விநி என்பது உண்டாகும் – என்றது.

## 218. வாசஸ்பதி: (579)

மத்ஸ்யாவதாரத்தின்போது மறைவாக இருந்த வேதங்களின் ஆழ்ந்த பொருளைப் பலரும் அறிந்து கொள்ளும்படிச் செய்தான்.

## 219. உதாரதீ:

அனைவரும் தன்னை அண்டி வாழும்படியாக உள்ள தாராளமான ஞானம் கொண்டவன். இதனால் அவன் அனைத்தும் அறிந்தவனாக உள்ளான்.

மூன்றாவது நூறு தொடக்கம்

## 220. அக்ரணீ:

உயர்ந்த பரமபதத்திற்கு நம்மை அழைத்துச் செல்பவன். தனது அடியார்களை உயர்ந்த இடமான மோக்ஷத்திற்கு அழைத்துச்செல்பவன் என்பதால் அக்ரணீ என்ற திருநாமம் கொண்டான்.

## 221. க்ராமணீ:

பரம்பதத்தில் உள்ள நித்யசூரிகளின் கூட்டத்தை நியமித்து நடத்திச் செல்பவன். இதனால் க்ராமணீ என்ற திருநாமம் பெற்றான். அஷ்டாத்யாயீ – ஸத்ஸூத்விஷ - ஸத், ஸூ, த்விஷ என்பதுடன் க்விப் என்பது இணையும் – என்றது, மேலும் – அக்ர க்ராமாப்யாம் நயதே: - அக்ர, க்ராம என்பதன் பின்னர் வருகின்ற நீ என்பதில் உள்ள ந என்பது, ண என்று மாறும் – என்றது காணக (உதாரணம்: அக்ர + நீ = அக்ரணீ).

## 222. ஸ்ரீமான் (22, 180)

மீனாக இவன் அவதரித்தபோதிலும் தாமரை போன்று கண்கள் கொண்டபடி இருந்தான். இதனால் இவனே அனைத்து ஐச்வர்யங்களும் கொண்ட பரமாத்மா என்றாகிறது.

## 223. ந்யாய:

தன்னுடைய அடியார்களுக்கு எந்தவிதமான அபவாதமும் ஏற்படாமல் இருப்பதற்கு எது ஏற்றதோ அதனைச் செய்பவன். இதனால் ந்யாய என்ற திருநாமம் கொண்டான்.

## 224. நேதா

தன்னை எதனைச் செய்யவேண்டும் என்று தனது அடியார்கள் கேட்டுக் கொள்கின்றனரோ அதனைச் செய்பவன். ஆக, இவன் அனைவரின் வேண்டுகோளுக்கு இணங்க ஸமுத்திரத்தில் மீனாகக் குதித்து வேதங்களை மீட்டது இதனாலேயே ஆகும்.

## 225. ஸமீரண:

அவனுடைய செயல்கள் அனைத்தும் அவனாலும், அவனது அடியார்களாலும் விரும்பத்தக்கபடி உள்ளன. ஈர கதௌ கம்பதே ச - ஈர என்பதற்குச் செல்வது, நடுங்குவது என்று பொருள். அஷ்டாத்யாயீ - சலந சப்தார்த்தாத் அகர்மகாத் யுச் - சலநம் மற்றும் சப்தம் போன்றவற்றுடன் யுச் என்பது இணைகிறது. இது போன்றுதான் பவந: (292) போன்ற பதங்கள் உண்டாகின்றன. கீழே உள்ள பல வரிகள் காண்க:

- க்ருத்வா மீனமயீம் ஸத்ய: ப்ரவிலேச ரஸாதலம் வேதமூர்த்தி: ததோ வேதான் ஆநிந்யே ப்ரஹ்மனோ அந்திகம் - வேத மூர்த்தியான ஸர்வேச்வரன் உடனடியாக மீன் போன்ற உருவம் எடுத்து நீருக்கு அடியில் உள்ள ரஸாதலம் என்ற லோகம் சென்றான். வேதங்களை அபகரித்துச் சென்ற அசுரர்களை அங்கு கொன்றான். அவற்றை மீட்டு, மீண்டும் நான்முகனிடம் அளித்தான்.

- ஞாநாநி குண ப்ருந்தேந பக்ஷ பூதேந பூஷிதம் ஸ்வோத்த ப்ரஹ்ம மதம் ச்ருங்க நிஸ்ஸ்ருதேந விராஜிதம் – அவனது பல குணங்களும் ஞானமும் செதில்களாக நின்றன. மேலும் தனது கொம்பு மூலம் ப்ரகாசத்துடன் காணப்பட்டான் இப்படியாக மீனாக வெளிப்பட்ட அவன், பரப்ரஹ்மத்தின் மேன்மையுடன் கூடியவனாகவே இருந்தான்.

- கல்பாவஸாந ஸமயே வஹந்தம் சைவ சிந்தயேத் நௌரூபாம் விததாம் க்ஷோணீம் ப்ரஜாபதி குணாந்விதாம் – இப்படியான திவ்யமான திருமேனியை கல்பத்தின் இறுதியில் கொண்டவனும், நான்முகனுடன் உள்ளவனும், படகு போன்றவனும், பரந்த இந்தப் பூமியை இழுத்துச் செல்பவனும் ஆகிய மஸ்த்யமூர்த்தியை த்யானம் செய்யவேண்டும்.

- முக்தாபல நிபேஷைவ வபுஷா நிர்மலேஷ ச அநிமீலித நேத்ர: ச மீனாத்மா யதாவாக் ததா - தூய்மையான முத்துப் போன்ற களங்கம் அற்ற திருமேனி கொண்டவனும், இமைக்காத கண்கள் உடையவனும், மூடிய திருவாய் கொண்டவனும், இப்படியான மீன் வடிவைக் கொண்டவன் .

## 226. ஸஹஸ்ரமூர்த்தா:

ஆயிரம் தலைகள் கொண்டவன். ஆயிரம் தலைகள், கண்கள், பாதங்கள் ஆகியவை ஏன் கொள்கிறான் என்றால், அனைத்தையும் அறிந்தவன் என்பதை உணர்த்தவே ஆகும். இது போன்று மற்ற இந்த்ரியங்களையும் கொள்ளவேண்டும். இங்கு உள்ள ஆயிரம் என்பது ஓர் ஆயிரம் என்பதை உணர்த்தவில்லை. மாறாக, எண்ணிக்கை அற்றவை என்பதையே உணர்த்துகிறது. தைத்திரீயம் – விச்வத சக்ஷு: விச்வதோமுகம் - அனைத்து பக்கங்களிலும் கண்களும் முகங்களும் உள்ளவன் - என்றது. ஸ்ரீமத் பகவத் கீதை (13-13) - - ஸர்வத: பாணீ பதம் தத் – அனைத்து திசைகளிலும் தனது கைகளையும் கால்களையும் ப்ரஹ்மம் கொண்டுள்ளது – என்றது காண்க. ஆயிரம் தலைகள், கண்கள், பாதங்கள் ஆகியவற்றின் செயல்களான அறிதல், செயல் புரிதல் போன்றவற்றைச் செய்ய எம்பெருமானின் திறனுக்கு எல்லையே இல்லை என்பதே இங்கு உணர்த்தப்படுவதாகப் பெரியவர்கள் கூறுவர்.

## 227. விச்வாத்மா

எங்கும் வ்யாபித்து நிற்பவன். தனது ஞானம் மற்றும் சக்தி மூலம் எங்கும் பரவி உள்ளதால் இவன் விச்வாத்மா எனப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷஸூக்தம் – ஸ பூமிம் விச்வதோ வ்ருத்வா - அவன் அனைத்து திசைகளிலும் பூமியை வ்யாபித்து.

- தைத்திரீயம் – யேந ஏஷ பூத: திஷ்டதி அந்தராத்மா - யார் எங்கும் வ்யாபித்துள்ளானோ, அவனே அனைத்தின் அந்தர்யாமியாக உள்ளான்.

- தைத்திரீயம் – யே ந ஸர்வம் இதம் ப்ரோதம் – ப்ரக்ருதி, காலம், ஸம்ஸாரஜீவன், முக்தஜீவன் மற்றும் நித்யசூரிகள் போன்ற பலருக்கும் இவனே அந்தராத்மா ஆவான். அனைத்தும் இவனால் பரவப்பட்டு உள்ளன.

- கீதை (10-20) - அஹமாத்மா குடாகேச ஸர்வபூதா - சோம்பலை வென்ற அர்ஜுனா! அனைத்து உயிர்களின் இதயத்தில் நானே உள்ளேன்.

## 228. ஸஹஸ்ராக்ஷ :

ஆயிரம் கண்கள் கொண்டவன்

## 229. ஸஹஸ்ரபாத்

ஆயிரம் பாதங்கள் கொண்டவன்

## 230. ஆவர்த்தன:

ஸம்ஸாரத்தை இடைவிடாமல் சுழற்றியபடி உள்ளான். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- மஹாபாரதம் – தேநேதம் ப்ராம்யதே ப்ரஹ்ம சக்ரம் – ஸம்ஸாரம் என்ற சக்கரம் அவனால் சுழற்றப்படுகிறது.

- கீதை – (18-6) - ப்ராமயன் ஸர்வபூதானி – தனது சக்தியால் இயந்திரம் போன்று சுழற்றுகிறான்.

- மஹாபாரதம் – காலசக்ரம் ஜகத்சக்ரம் யுகசக்ரம் ச கேசவ: ஆத்ம யோகேந பகவான் பரிவர்த்தயதே அநிசம் – தனது யோகசக்தி மூலம் எம்பெருமான் காலம் என்ற சக்ரம், உலகம் என்ற சக்கரம், யுகம் என்ற சக்கரம் ஆகியவற்றை இடைவிடாது சுழற்றியபடி உள்ளான்.

- புருஷஸூக்தம் – தஸ்மாத் விராட் அஜாயத – இவனிடமிருந்து விராட் புருஷன் தோன்றினான்.

## 231. நிவ்ருத்தாத்மா

ப்ரக்ருதியைக் கடந்து நிற்பவன். பரமாத்மாவின் ஸ்வரூபம் என்பது ப்ரக்ருதி, நித்ய விபூதி ஆகியவற்றைக் கடந்து உள்ளது. கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷஸூக்தம் – த்ரிபாத் ஊர்த்வம் உதேத்புருஷ: - ஸம்ஸார மண்டலத்தைக் காட்டிலும் மூன்று மடங்கு பெரிதாக உள்ள பரமபதத்தில் வீற்றுள்ளான்.

- தைத்திரீயம் – பராத் பரம் யத் மஹதோ மஹாந்தம் – உயர்ந்தவற்றை விட உயர்ந்தவனாக, புகழப்படும் அனைத்தையும் விட உயர்ந்தவனாக.

## 232. ஸம்வ்ருத:

மறைவாக உள்ளவன். பரமபதத்தில் ஸர்வேச்வரன் உள்ளபோது, தமஸ் என்று கூறப்படும் ப்ரக்ருதியின் குணம் காரணமாக ஞானம் குறைவுபட்டு உள்ள ஜீவன்களின் பார்வையில் புலப்படாமல் உள்ளான். புருஷஸூக்தம் – தமஸ: பரஸ்தாத் – தமஸ் என்னும் இருளுக்கு அப்பால் உள்ளவன் – என்றது.

## 233. ஸம்ப்ரமர்தன:

அறியாமை என்ற இருளை நீக்குபவன். தன்னை யார் உபாஸனை செய்கின்றார்களோ அவர்களது அறியாமை என்ற இருளை, வித்யை எனப்படும் உபாஸனை மூலம் நீக்குகிறான். இதனால் ஸம்ப்ரமர்தன எனப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷஸூக்தம் – தம் ஏவம் வித்வான் அம்ருத இஹ பவதி – இப்படியாக யார் எம்பெருமானை உபாஸனை செய்கிறானோ அவன் இங்கேயே இறவாமை அடைகிறான்.

- ப்ருஹத் உபநிஷத் – ய ஏவம் விது: அம்ருதா: தே பவந்தி அத இதரே துக்கம் ஏவ அபியந்தி – இப்படியாக உபாஸிப்பவர்கள் முக்தி அடைகின்றனர்; உபாஸனை செய்யாதவர்கள் துன்பமான ஸம்ஸாரத்தை மீண்டும் அடைகின்றனர்.

## 234. அஹ: ஸம்வர்த்தக:

பகல் இரவு என்னும் பிரிவுகளுடன் உள்ள காலம் என்ற சக்கரத்தினை எப்போதும் சுழல வைப்பவன். அஷ்டாத்யாயீ - யுவோ: அநாகௌ – யு மற்றும் வு என்பதில் அந மற்று அக என்பது சேர்க்கப்படும் - என்றது போல் இங்கு உள்ளது. கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய நாராயணவல்லீ – ஸர்வே நிமேஷா ஜக்ஞிரே வித்யுத: புருஷாத் அதி – மின்னல் போன்று ஒரு நொடிக்குள்ளும் தோன்றி மறைகிற அனைத்தும் கூட மின்னல் போன்ற ஒளியுடைய பரம்பொருளிடமிருந்தே உண்டாகின்றன.

- மஹாபாரதம் உத்யோகபர்வம் – கால சக்ரம் - காலம் என்ற சக்கரத்தை அவனே சுழற்றுகிறான்.

- மஹாபாரதம் உத்யோகபர்வம் – காலஸ்ய ஹி ச – காலம் போன்ற பலவற்றைத் தன் வசம் வைத்துள்ளான்.

காலம் என்பது எப்போதும் ஸர்வேச்வரனின் லீலைக்குக் கருவியாகவே உள்ளது. இறந்தகாலம், நிகழ்காலம் மற்றும் எதிர்காலம் என்ற பிரிவுடன் கூடிய காலம் என்பது அனைத்தைப் பற்றியுமான ஞானத்தை ஏற்படுத்துகிறது. ஆறுவிதமான மாறுபாடுகளை (பிறத்தல், வாழ்தல், மாறுதல், வளர்தல், குறைதல், மறைதல்) ஏற்படுத்துகிற ப்ரக்ருதி மற்றும் புருஷன் ஆகிய இரண்டையும் வைத்து விளையாடுகின்ற காலத்தைத் தன் கட்டுப்பாட்டில் வைத்துள்ளான்.

இப்படியாக உள்ள காலம் என்பது ப்ரக்ருதியினுடையது, தொடர்ந்து மாறுபாடுகளை ஏற்படுத்துவது என்று சிலர் கூறுவர். இவை பரமாத்மாவின் செயல்கள் என்று சிலர் கூறுவர். காலம் என்பது சுதந்திரமானது என்றும் சிலர் கூறுவர். பௌஷ்கர ஸம்ஹிதை கீழே உள்ளது போல் கூறுகிறது:

அத்யாத்மம் காலதத்வீயம் அதிதைவதம் அஸ்ய வை
ப்ரபவ அப்யய மூர்த்தி: வை விச்வாத்மா பரமேச்வர:
அதிபுதம் பரிஜ்ஞேயம் த்ரைலோக்யம் பூத பூர்வகம்
கால: ச அவ்யக்த தத்வஸ்ய ஹி அத்யாத்மத்வேன வர்த்ததே

அதிதைவதம் இஜ்யா ச தத்போகம் அதிபூததா

இதன் பொருள் - அத்யாத்மம் என்றால் காலதத்வம் ஆகும். காலத்தின் தோற்றம் மற்றும் அழிவு ஆகிய இரண்டிற்கும் காரணமாக உள்ளவனும், அனைத்து உயிர்களுக்கும் ஆத்மாவாக உள்ளவனும் ஆகிய பரமாத்மா அதிதைவதம் ஆகிறான். பஞ்சபூதங்களால் ஆன மூன்று உலகங்களும் காலத்தின் அதிபூதம் என்றாகிறது. காலம் என்பதே அத்யாத்மம் என்ற ரூபத்தில் உள்ளது. அதிதைவதம் என்பது வணங்கப்படவேண்டும், அதுபூதம் என்பது அனுபவிக்கப்படவேண்டும்.

## 235. வஹ்நி:

தேசம் எனப்படும் ஸ்தானம் என்ற ரூபத்தில் உள்ள அனைத்தையும் எம்பெருமான் தாங்குகிறான். உணாதி சூத்திரம் – வஹி ச்ரி ச்ரு யுத்ருச்லாஹாத்வரிப்யோ நித் – வஹி, ச்ரி, ச்ரு, யுத்ரு, க்லை போன்ற தாதுக்களுடன் நித் என்பது இணையும் (உதாரணம்: வஹ் + நி = வஹ்நி). முதலாவதாக உள்ள தேசம் என்பது பரமாகாசம் என்னும் பரமபதம் ஆகும். அத்துடன் ஒப்பிடும் திசைகள் போன்ற பலவும் அதன் மூலையில் உள்ள மற்றொரு தேசம் ஆகும். கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷஸூக்தம் – அஸ்ய அம்ருதம் திவி - அவனது பரமபதம் அழியாமல் நித்யமாக உள்ளது
- விஷ்ணு தர்மம் (72-2) - ஸ்வே மஹிம்நி ஸ்திதம் – மேன்மை கொண்ட தனது பரமபதம் என்ற இடத்தில் உள்ளான்.
- புருஷஸூக்தம் (4) - பாதோஸ்ய இஹ அபவாத் புந: - அநிருத்தன் என்ற நான்காவது ரூபத்தில் இந்தப் பரமபதத்தில் எம்பெருமான் தோன்றினான்.

"இந்தப் பொருள்", "இங்கே உள்ளது" என்பது போன்று ஒன்றைக் குறிப்பிட்டுக் கூற ஏதுவாக தேசம் என்பது உள்ளது. இந்த இடம் அவனால் பக்தர், முக்தர், நித்யர் ஆகிய மூவருக்கும் அளிக்கப்பட்டதாகும்

## 236. அநில: (818)

ப்ராண வடிவமாக உள்ளவன். அனைவரும் வாழ்வதற்குத் தேவையான ப்ராணவாயுவாக அவனே உள்ளான். இப்படியாகக் காப்பதால் அநில: எனப்படுகிறான். உணாதி சூத்திரம் – ஸலி கலி அநி - ஸலி, கலி, அநி ஆகிய தாதுக்களுடன் இலச் என்பது இணைகிறது. நம்மிடம் காணப்படும் அநில என்னும் சுவாசக் காற்றானது இந்த அநிலன் எனப்படும் எம்பெருமானின் சிறு பகுதியே ஆகும். கீழே உள்ள வரிகள் காண்க:

- புருஷஸூக்தம் – ப்ராணாத் வாயு: அஜாயத - இவனிடமிருந்து ப்ராணனும், அதிலிருந்து வாயுவும் தோன்றினர்.

- தைத்திரீயம் – கோ ஹி ஏவ அந்யாத் க: ப்ராண்யாத் - அவனைத் தவிர வேறு யார் அளிக்க இயலும்? ப்ராணன் இன்றி எவ்விதம் மூச்சுவிட இயலும்?

## 237. தரணிதர:

இந்த உலகைத் தங்குபவன். அனைத்தையும் தாங்கும் பூமி உள்ளிட்ட அனைத்தையும் எம்பெருமான் தாங்கி நிற்கிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய காடகம் (4-1-8) - ஸ தாதார ப்ருதிவீம் த்யாம் உத இமாம் - பூமி, ஸ்வர்க்கம் உள்ளிட்ட அனைத்தையும் அவனே தாங்குகிறான்.

- தைத்திரீயம் – அத்ருதா அஸி வராஹேண – வராஹ வடிவில் பூமியை உயர்த்தினான்

- மஹாபாரதம் - ப்ருதிவீம் ச அந்தரிக்ஷம் சத்யாம் சைவ புருஷோத்தம: மநஸா இவ வீஸ்ருக்ஷ்டாத்மா நயதி ஆத்மவசம் வசீ - அந்தப் புருஷோத்தமன் தன்னுடைய ஸங்கல்பம் மூலம் மட்டுமே பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் போன்ற அனைத்தையும் அடக்கி, தன் வசத்தில் வைத்துள்ளான்.

## 238. ஸுப்ரஸாத:

தனது அடியார்களுக்கு ஏற்றது செய்பவன். தனக்கு அநுகூலமாக உள்ள அடியார்களுக்கு மிகுந்த அருள் புரிந்தபடி உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (3-20) – தம் அக்ரதும் பச்யதி வீதசோக: தாது: ப்ரஸாதாத் – இந்தப் பரமபுருஷனை யார் ஒருவன் எப்போது காண்கிறானோ அப்போது அவன் அருள் மூலம் துன்பங்கள் அற்று உள்ளான்.

- விஷ்ணுபுராணம் (5-19-21) - ப்ரஸாத பரமௌ நாதௌ மம கேஹம் உபாகதௌ - அனைவருக்கும் அருள் புரிகின்ற க்ருஷ்ணனும் பலராமனும் எனது இல்லத்திற்கு வந்துள்ளனர்.

## 239. ப்ரஸந்நாத்மா

தெளிவான சிந்தை கொண்டவன். அனைவருக்கும் ஏற்றபடி அருள் செய்வதன் காரணம் என்னவென்றால் எந்தவிதமான ஆசையும் இன்றி தெளிந்த மனம் கொண்டதால் ஆகும். கீழே உள்ள வரிகள் காண்க:

- சாந்தோக்ய உபநிஷத் (8-1-5) - அவிஜிதத்ஸோ அபிபாஸ: ஸத்யகாம ஸத்ய ஸங்கல்ப: - அவன் பசி, தாகம் போன்ற எந்தவிதமான தேவையும் அற்றவன்; தனது விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறப் பெற்றவன்; உறுதியான மனம் கொண்டவன்.

- தைத்திரீயம் – சாந்தி ஸம்ருத்தம் அம்ருதம் – பரிபூர்ணமான அமைதி உள்ளவன், அமிர்தம் போன்றவன்.

## 240. விச்வஸ்ருட்

இந்த உலகைப் படைப்பவன். யாருடைய குணத்தையும் குற்றத்தையும் ஆராயாமல், தனது அன்பு காரணமாக இந்த உலகைப் படைப்பவன்.

## 241. விச்வபுக் விபு:

இந்த உலகம் எங்கும் பரவி நின்று இதனைக் காப்பாற்றுபவன். இது ஒரே திருநாமம் ஆகும் (ஒரு சிலரது பாஷ்யங்களில் விச்வபுக் என்பதும், விபு என்பதும் இரு திருநாமங்களாகக் கொள்ளப்படுவதை மறுக்கிறார்). புருஷஸூக்தம் – ஸர்வாணி ரூபாணி

விசித்ய தீர: நாமாநி க்ருத்வா அபிவதன் யதாஸ்தே - தனது ஸங்கல்பம் மூலம் படைக்கப்பட்ட அனைத்திற்கும் பெயர்கள் இட்டு, அவற்றை அந்தப் பெயர் கூறி அழைத்து, அவற்றுடன் உரையாடியபடி யார் உள்ளானோ – என்றது.

## 242. ஸத்கர்த்தா:

அனைவரையும் கௌரவம் செய்பவன். அனைவரையும் காப்பாற்றும் இயல்பு கொண்டதால் தண்டபூபிகா நியாயம் காரணமாக அனைவரையும் கௌரவிப்பவன். இராமாயணம் – ஸஜ்ஜந: ப்ரதி பூஜக: - சாதுக்களை ஆதரித்து மரியாதை செய்பவன் - என்றது (**குறிப்பு**: தண்டபூபிகா ந்யாயம் என்றால் என்ன? உணவைச் சமைத்து இரவில் வைக்கும்போது அதன் அருகில் ஒரு குச்சியை வைப்பது வழக்கம். இது எலிகள் அண்டாமல் இருப்பதற்கு ஆகும். காலையில் பார்க்கும்போது குச்சியே இல்லாமல் எலி தின்றுவிட்டது என்றால், உணவையும் எலி தின்றிருக்கும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை அல்லவா? இது போன்று இவன் அனைவரையும் காக்கும்போது, ஸாதுக்களை மேலும் கௌரவிப்பான் என்பதில் சந்தேகம் இல்லை).

## 243. ஸத்க்ருத:

ஸாதுக்களால் பூஜிக்கப்படுபவன். தனது அடியார்கள் எத்தனை சிறிய வஸ்துவைத் தனக்குச் சமர்ப்பணம் செய்தாலும், தனது மேன்மைக்கு ஏற்றபடி அவர்கள் மிகப் பெரியதாகவே சமர்ப்பணம் செய்ததாக எண்ணி மகிழ்கிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸாத்த்வத ஸம்ஹிதை – அஹோ ஹி ஏகாந்திந: ஸர்வாந் பரீணாத பகவான் ஹரி: விதி ப்ரயுக்தாம் புஜாம் ச க்ருஹ்ணாதி சிரஸா ஸ்வயம் – தன்னிடம் மட்டுமே நின்று மற்ற தெய்வங்களை நாடாமல் உள்ளவர்கள் அனைவரையும் ஸ்ரீஹரி மகிழ்விக்கிறான். அவர்கள் செய்யும் பூஜையைத் தனது திருமுடியால் ஏற்றுக்கொள்கிறான்.

- இராமாயணம் பாலகாண்டம் (1-59) - சபர்யா பூஜித: ஸம்யக் – சபரியால் நன்றாகவே பூஜிக்கப்பட்டான்.

- விஷ்ணுபுராணம் (5-19-29) - மாலாகாரணே பூஜித: - மாலை கட்டுபவரால் வணங்கப்பட்டான்.

## 244. ஸாது:

தனது அடியார்களின் விருப்பத்திற்கும் வேண்டுகோளுக்கும் ஏற்ப தூது செல்லுதல், தேர் ஓட்டுதல் போன்ற செயல்களைக் கூட செய்பவன். இதனால் ஸாது எனப்பட்டான். உணாதி சூத்திரம் – க்ரு வா பா ஜி ஸாத் - போன்ற தாதுக்களின் இறுதியில் "உ" என்பது சேர்க்கப்பட்ட வேண்டும் – என்றது.

## 245. ஜஹ்நு:

தனது பக்தர்களாக இல்லாதவர்களிடம் தனது மேன்மைகள் அனைத்தையும் மறைத்துக் கொள்பவன். இதனையே ஜஹ்நு என்ற பதம் கூறுவதாக நிருக்தம் படித்தவர்கள் பொருள் உரைப்பார்கள். மஹாபாரதம் உத்யோகபர்வம் (6-72) – சக்ரம் தத் வாஸுதேவஸ்ய மாயயா வர்த்ததே விபோ ஸாபஹ்நவம் பாண்டவேஷு சேஷ்டதே ராஜஸத்தம் – வாஸுதேவனின் வியக்கவைக்கும் சக்தி மூலமாக அவனது சக்கரம் யாருடைய கண்களுக்கும் புலப்படாமல் இருக்கும்; ஆக பாண்டவர்கள் உள்ளிட்ட அவனுடைய அடியார்களுக்கு அனைத்தையும் செய்கிறான் – என்றது காண்க.

## 246. நாராயண:

இது ஒரு ப்ரத்யேகமான திருநாமம் ஆகும். இது ஸஹஸ்ரநாமத்தில் ஒருமுறை மட்டுமே கூறப்பட்டது. அவனது மேன்மையை உணர்த்த உபநிஷத்துக்களில் மீண்டும் மீண்டும் இந்தத் திருநாம்ம் பலமுறை கூறப்படுகிறது. இது மற்ற தேவதைகளைக் குறிப்பிடாத திருநாமம் ஆகும். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- தைத்திரீய நாராயணவல்லீ (6-1-26) - நாராயணாய வித்மஹே – நாராயணனை உபாஸனை செய்கிறோம்
- தைத்திரீயம் (6-11) – நாராயண பரம் ப்ரஹ்ம: - நாராயணனே பரப்ரஹ்மம்
- மஹோபநிஷத் - ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் - நாராயணன் மட்டுமே முதலில் இருந்தான்

- மஹோபநிஷத் – அத புந: ஏவ நாராயண: - அதன் பின்னர் மீண்டும் நாராயணன்
- ஸுபால உபநிஷத் (6) - சக்ஷு: ச த்ரஷ்டவ்யம் ச நாராயண: - காண்கின்ற கண்களும், அந்தக் கண்களால் காணப்படும் பொருளும் நாராயணனே
- ஸுபால உபநிஷத் (6) - அத திவ்யோ தேவ: ஏக: நாராயண: - திவ்யமான ஒருவன் நாராயணனே

உபநிஷத்தில் நாராயண என்ற பதத்திற்குப் பின்வருமாறு பொருள் கூறப்பட்டது. தைத்திரீயம் – யத் ச கிஞ்சித் – இந்த உலகில் எவை பார்க்கப்பட்டும், கேட்கப்பட்டும் உள்ளனவோ அவை அனைத்தின் உள்ளும் புறமும் நாராயணன் வ்யாபித்துள்ளான் – என்றது. இப்படியாக இந்தத் திருநாமத்தின் பல விளக்கங்கள் உள்ளன. இந்தத் திருநாமம் ஆறு கண்கள் மூலம் அறியக்கூடாது என்பதால் நாம் இதற்கு மேல் விளக்கவில்லை (ஆறு கண்கள் என்றால் என்ன? உபதேசிக்கும் ஆசார்யனின் இரண்டு கண்கள், உபதேசம் பெற வந்துள்ள சிஷ்யனின் இரண்டு கண்கள். இப்படியாக நான்கு கண்களால் மட்டுமே அறிந்து கொள்ளவேண்டும் என்பதால், நான்குக்கு மேற்பட்ட கண்கள் மூலம் அறிய இயலாது என்று கருத்து).

## 247. நர:

(அடுத்து உள்ள 25 நாமங்கள் மூலம் நாராயணன் என்ற திருநாமத்தின் மேன்மையை அருளிச்செய்கிறார்). இத்தனை மேன்மைகள் கொண்ட நாராயண என்பதை மறைமுகமாக நர: என்ற திருநாமம் மூலம் விளக்குகிறார். அதாவது அழிவில்லாமல் உள்ள சேதனம், அசேதனம் என்ற இரு செல்வங்களைக் கொண்டவன்.

## 248. அஸங்க்யேய:

அவனுக்கு கட்டப்பட்ட சேதனம் மற்றும் அசேதனம் ஆகியவை எண்ணில் அடங்காதவை ஆகும். இதனால் இவனும் எண்ணற்றவன், அளவற்றவன் ஆகிறான்.

## 249. அப்ரமேயாத்மா

சேதனமும் அசேதனமும் எண்ணற்றவை என்பதால், அவற்றின் உள்ளும் புறமும் வ்யாபித்துள்ள இவனும் எண்ணற்றவன் ஆகிறான்.

## 250. விஷிஷ்ட:

எல்லையற்ற சேதனம் மற்றும் அசேதனம் ஆகியவற்றின் உதவியை நாட வேண்டாதபடி தானே மிகுந்த மேன்மை கொண்டவனாக அவன் உள்ளான்.

## 251. சிஷ்டக்ருத்

தந்து அடியார்கள் அனைவரும் தன்னுடன் சேர்வதற்கு ஏற்ற உயர்ந்த குணங்கள் கொண்டவர்களாகச் செய்கிறான்.

## 252. சூசி: (157)

தோஷங்கள் ஏதும் இல்லாத தனது தூய்மையான ஸ்வபாவம் மூலம் அவன் ஒளிர்ந்தபடி உள்ளதால் மற்றவர்கள் அளிக்கின்ற ஒளி மூலம் ப்ரகாசிக்கின்ற அவசியம் இல்லாமல் தானாகவே ஒளிர்கிறான்.

## 253. ஸித்தார்த்த:

தான் விரும்பும் அனைத்தும் தாமாகவே வந்து அமையும்படி உள்ளவன். இதனால் ஸித்தார்த்தன் என்ற திருநாமம் கொண்டான். தனக்கு வேண்டியது அனைத்தும் முன்னரே கொண்டவன் ஆவான்.

## 254. ஸித்தஸங்கல்ப:

தான் மற்றவர்களுக்கு அடிபணிந்து நிற்கவேண்டிய அவசியல் இல்லாமல் சுதந்திரமாகச் செயல் புரியும் தன்மை கொண்டவன். தனது விருப்பம் மூலம் மட்டுமே நிறைவேறியுள்ள சிந்தனை கொண்டவன். சாந்தோக்ய உபநிஷத் (8-1-5) - ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப: – விரும்பியவற்றை உடனே அடைபவன், இதனால் ஸத்யஸங்கல்பனும் ஆவான் – என்றது.

## 255. ஸித்தித:

அணிமா, கரிமா உள்ளிட்ட எட்டு வகையான சித்திகளை அளிப்பவன். இதனால் ஸித்திதன் எனப்படுகிறான்.

## 256. ஸித்திஸாதந:

அவனது உபாஸனம் என்பதே அவன் போன்று இன்பமாக உள்ளதால், அவன் ஸித்திஸாதநன் எனப்படுகிறான். கீதையில் (12-20) – யே து தர்ம்ய - என்னையே பலனாக எண்ணி உபாஸனை செய்பவர்கள் எனக்கு ப்ரியமாக உள்ளனர் - என்றான்.

## 257. வ்ருஷாஹீ

அவனை அண்டிய அந்த நாள் முதலாகவே அனைத்துவிதமான மங்களங்களுக்கும் விதை இடுவது போன்று தர்மத்தை அளிக்கின்ற ரூபமாகவே உள்ளான். அஷ்டாத்யாயீ - ராஜ அஹஸ் ஸகிப் யஷ்டச் - ராஜன், அஹன், ஸகின் என்ற பதங்களில் ஏதேனும் ஒன்று இறுதியில் வந்தால் டச் என்பதைத் தன்னுடன் சேர்த்துக்கொள்ளும். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- விஷ்ணுபுராணம் – (5-17-3) - அத்ய மே ஸபலம் ஜன்ம ஸுப்ரபாதா ச மே நிசா – இன்று எனது வாழ்க்கையின் பலன் அடந்தேன். எனது வாழ்வின் இரவு நீங்கியது.

- விஷ்ணுபுராணம் – தா: நிசா: தே ச திவஸா - நான் என்றெல்லாம் க்ருஷ்ணனைக் காணவில்லையோ அன்று அனைத்தும் இரவே, இனி அவனுடன் உள்ள நாட்கள் மட்டுமே பகல் பொழுதுகள்.

- தைத்திரீயம் – யதாஹி ஏவ ஏஷ: ... அதஸ: அபயம் கதோ பவதி – எப்போது உபாஸகன் காண இயலாத அவனைக் குறித்த நினைவிலேயே உள்ளானோ, அப்போதே அவன் ஸம்ஸார பயம் நீங்கப் பெறுகிறான்.

## 258. வ்ருஷப:

ஸம்ஸாரம் என்ற நெருப்பினால் எரிக்கப்பட்டு, தன்னிடம் பக்தியுடன் வந்தவர்களைத் தனது குளிர்ந்த கடாக்ஷம் என்னும் அமிர்த மழையால் வாழச் செய்கிறான். இதனால் வ்ருஷப: என்ற திருநாமம் பெற்றான். உணாதி சூத்திரம் - ருஷி: வ்ருஷிப்யாம் கித் - ருஷி, வ்ருஷி என்பதால் பின்னால் அப் என்ற ப்ரத்யயமும், கித் என்ற ப்ரத்யயமும் சேர்கிறது – என்றது (வ்ருஷ் + அபச் + அ = வ்ருஷப:)

## 259. விஷ்ணு: (2, 663)

கருணை என்னும் மழையை இடைவிடாமல் பொழிந்தபடி, அனைத்திலும் வ்யாபித்தபடி, எதனையும் பிரியாமல் உள்ளதால் விஷ்ணு என்ற திருநாமம் பெற்றான். உணாதி சூத்திரம் – விஷே: கித்ச இதி ணு: - வ்யாபித்தபடி இருத்தல் என்னும் பொருள் அளிக்கின்ற விஷல்

என்பதுடன், ணு மற்றும் இத் ஆகியவை சேர்கின்றன - என்றது. அனைத்திற்கும் இவனுடன் உள்ள ஸம்பந்தம் என்பது விட இயலாமல் உள்ளதால், அனைத்திற்கும் ஏற்ற உபாகரங்களைச் செய்தபடியும், அவற்றுக்கு மேற்பட்டவனாகவும் எம்பெருமான் உள்ளான். இப்படியாகத் தன்னைக் காட்டிலும் தாழ்ந்தவை அனைத்தையும் விட்டுப் பிரியாமல் உள்ளான். தர்க்க சாஸ்த்ரத்தில் நெருப்பு மற்றும் புகை ஆகிய இரண்டிற்கும் பிரியாத தொடர்பு உள்ளது என்று கூறுவது போன்று, மற்ற பொருள்களுக்கும் இவனுக்கும் பிரியாத தொடர்பு உள்ளது. இதனைக் கீதையில் (10-39) - ந தத் அஸ்தி விநா யத் ஸ்யாத் மயா பூதம் சராசரம் - இந்த உலகத்தில் உள்ள எந்த வஸ்து என்னைப் பிரிந்து உள்ளதோ, அப்படியான வஸ்து ஏதும் இல்லை; நான் இல்லாத பொருளே இல்லை; நான் எங்கும் உள்ளேன் – என்றான்.

## 260. வ்ருஷபர்வா

தன்னை அடைபவர்கள் தன்னிடம் வருவதற்கான படிக்கட்டுக்களாக தர்மத்தையே வைத்துள்ளவன். இங்கு தர்மங்கள் என்றால் வர்ணாச்ரம தர்மங்கள் ஆகும். இத்தகைய படிக்கட்டைப் பின்பற்றினால் மட்டுமே அவனை அடைய இயலும்.

## 261. வ்ருஷோதர:

தர்மத்தையே தனது வயிறாகக் கொண்டவன். அவனது அடியார்கள் மூலம் தனக்கு அளிக்கப்பட்ட அவிர்பாகம் மூலம் எளிதாக நிரம்பும்படியான வயிறு கொண்டவன் அல்லது துன்பம் கொண்டவர்கள் அனைவரையும் தனது வயிற்றில் வைத்துக் காப்பாற்றுபவன்.

## 262. வர்த்தந:

அனைவரையும் போஷிப்பவன். தனது அடியார்களைத் தனது கர்ப்பத்தில் வைத்துக் காப்பாற்றுபவன். தாய் தனது குழந்தையை எவ்விதம் போஷித்துக் காப்பாற்றுவாளோ அவ்விதம் செய்பவன்.

## 263. வர்த்தமாந:

அவன் தானும் வளர்ந்தபடி இருந்து, மற்றவர்களும் வளரும்படிச் செய்பவன். இதனால் இந்தத் திருநாம்ம் கொண்டான். அனைவரையும் மேன்மேலும் செழிக்கச் செய்பவன்.

## 264. விவிக்த:

அவனுடைய செயல்கள் அனைத்தும் தனித்தன்மை கொண்டவை; அவன் செய்கின்ற அனைத்தும் மற்றவர்களின் செயல்களைக் காட்டிலும் மேன்மையானது ஆகும்.

## 265. ச்ருதிசாகர:

வேதங்கள் என்னும் நதிகள் வந்தடையும் ஸமுத்திரம் போன்றவன். அவனுடைய திருக்கல்யாண குணங்கள் அனைத்தையும் விவரித்துக் கூறுகின்ற வேதங்கள் அனைத்தும் இவனில் வந்தே முடிகின்றன. நதிகள் எவ்விதம் கடலைச் சென்று அடைகின்றனவோ அது போன்று வேதங்கள் அனைத்தும் அவனைச் சென்று அடைகின்றன. கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீமத் பாகவதம் (2-5-25) – நாராயணபரா வேதா: - வேதங்கள் நாராயணனையே பேசுகின்றன
- கீதை (15-15) - வேதைச்ச ஸர்வை: அஹம் ஏவ வேத்ய: - அனைத்து வேதங்களாலும் அறியப்படுபவன் நானே ஆவேன்.

## 266. ஸுபுஜ:

கருணை பொங்கும் பரந்த, மங்களகரமான திருக்கரங்கள் உடையவன். தன்னிடம் அடைக்கலம் புகுந்தவர்கள் பொருட்டு, அவை எப்போதும் அவர்களின் பாரத்தைத் தாங்கத் தயாராக வளைந்தபடியே உள்ளன.

## 267. துர்த்தர:

வலிமையும், தவறு இழைக்காத தன்மையும் பொருந்திய திருக்கரங்களில் அபார வலிமை கொண்டவன். ப்ரளய காலத்தில் பொங்கி எழுகின்ற ஸமுத்திரங்களைக் கடற்கரையில் சிறுவர்கள் பொழுது போக்கிற்காகக் கட்டிய அணை எவ்விதம் தடுக்க இயலாதோ அது போன்று எழுகின்ற இவனது வலிமையை எதனாலும் தடுக்க இயலாது.

## 268. வாக்மீ

அவனது வாக்குகள் அனைத்தும் மிகுந்த போற்றதலுக்கு உரியவை என்பதால் வாக்மீ எனப்படுகிறான். ஏன் இத்தனை புகழ் உள்ளது என்றால், வேதங்களே அவன் வாக்குகளாக உள்ளதால் ஆகும். அவனது சொற்கள் இனிமையும், கம்பீரமும், ஆறுதல் அளிக்கும் தன்மையும் கொண்டவையாகப் பல அவதாரங்களில் காணப்படுகின்றன. கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (1-17) - உத்தரோத்தரயுக்தௌ ச வக்தா வாசஸ்பதிர்யதா - மற்றவர்களின் வாதங்களுக்கு ஏற்ற பதில் அளிக்க இராமன் வல்லவன், இத்தகைய நிலையில் அவன் வாசஸ்பதியே ஆவான்.
- வாக்விவ்ருதாச்ச வேதா: - வேதங்கள் அனைத்தும் அவனது வாக்குகளே ஆகும்.
- கீதை (10-18) - பூய: கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மே அம்ருதம் – மேலும் பேசுவாயாக, உனது அமிர்தம் போன்ற சொற்கள் எவ்வளவு கேட்டாலும் நான் த்ருப்தி அடையமாட்டேன்.
- இராமாயணம் அயோத்யாகாண்டம் (1-13) - புத்திமாந் மதுராபாஷீ பூர்வபாஷீ ப்ரியம்வத: - இராமன் புத்திமான், இனிமையான சொற்கள் கொண்டவன், முதலில் பேசத் தொடங்கியவன், அனைத்துவிதமான சொற்களும் பேசக்கூடியவன்.
- ஐரயந்தம் பாரதீம் பாரதாநாம் அநீர்யாம் கங்கரீம் ஸ்ருஞ்ஜயாநாம் விபூஷப்தி: க்ரஹணீயாமநிந்தாம் பராஸுநாம் அக்ரஹணீயரூபாம் – அவன் பாரதர்கள் மற்றும் ஸ்ருஞ்ஜயர்கள் ஆகியவர்களின் மேன்மையான சரிதங்களை உரைக்கிறான், அவை மகிழ்வை அளிப்பதாகும், அவை உயர்ந்தவையாகும், மோக்ஷத்தை விரும்புபவர்களுக்கு ஏற்றது, துன்பம் கொண்டவர்களுக்கு ஏற்றது.
- அமேத மேதஸ்வந: காலே ப்ரக்ருஹா விபுலம் புஜம் அநர்மக்ருதம் ஆத்ரஸ்தம் அநிரஸ்தம் அஸம்குலம் ராஜீவ நேத்ரோ ராஜாநாம் ஹேதுமத்தாக்யம் அப்ரவீத் - தாமரை போன்ற அழகிய கண்கள் கொண்ட க்ருஷ்ணன் நீளமான கைகள் கொண்ட அரசனின் கரங்களைப் பிடித்துக் கொண்டான். சரியான காலத்தில் மழை அளிக்கவல்ல மேகங்களின் இடி முழக்கம் போன்று அவன் குரல் இருந்தது. அவை அச்சம் விளைவிப்பதாக இல்லை. அவை தெளிவாகவும், ஏற்கும்படியாகவும் இருந்தன.

## 269. மஹேந்த்ர:

எங்கும் பரவியுள்ளதால் அனைத்திலும் எஜமானத்தன்மையுடன் அவன் உள்ளான். ஆகவே கொண்டாடுபடியான உயர்ந்த ஐச்வர்யங்களுடன் உள்ளான்.

## 270. வஸுப்ரத:

இப்படியாக ஒருவராலும் அசைக்க இயலாத உயர்ந்த மஹிமைகள் கொண்டுள்ள போதிலும், தன்னிடம் தனம் போன்ற அற்பமானவற்றை வேண்டி நிற்கும் அற்பர்களுக்கு அவற்றை அளிப்பவன். இவன் மூலமாகவே இந்த்ரன் மூன்று உலகங்களுக்கும் அதிபதியாக உள்ளான்.

## 271. வஸு:

உயர்ந்தவர்களுக்குத் தானே செல்வமாக உள்ளான். கீதையில் (7-19) - வாஸுதேவ: ஸர்வம் இதி – வாஸுதேவனே அனைத்தும் – என்று உள்ளவனுக்குத் தானே பெருஞ்செல்வம் ஆகிறான் – என்றது காண்க.

## 272. நைகரூப:

அவரவர்களின் சிந்தனைக்கு ஏற்றபடி பலவிதமான ரூபங்களைத் தரிப்பவன். இதுவரை கூறப்பட்ட பலவிதமான மேன்மைகளுக்கு ஏற்றபடியான பல ரூபங்கள் கொண்டவன்.

- நிருக்தி - விச்வரூபாய – அனைத்தையும் தனது ரூபமாகவே கொண்டவன்.
- கீதை - பச்யாமி த்வா ஸர்வத: அநந்த ரூபம் – அனைத்தையும் உனது ரூபமாகவே கொண்டனே ! உன்னை இப்படியே நான் காண்கிறேன்.

## 273. ப்ருஹத் ரூப:

தனது ரூபங்களில் ஆகாயம் போண்றவற்றையும் வ்யாபித்தபடி உள்ளதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீதை (11-20) - த்யாவா ப்ருதிவ்யோ: இதம் அந்தரம் ஹி வ்யாப்தம் த்வயா ஏகேந திசச்ச ஸர்வா: - இந்த உலகம், ஆகாயம், இவற்றின் நடுவில் உள்ள ப்ரதேசம், அனைத்து திசைகள் என்பன அனைத்தும் உன் ஒருவனால் வ்யாபிக்கப்பட்டுள்ளது – என்றது காண்க.

## 274. சிபிவிஷ்ட:

சிபய: என்றால் கிரணங்கள் ஆகும். அதற்குள்ளும் வ்யாபித்து நிற்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். இதனை – சிபய: ரச்மய: உச்யந்தே தை: ஆவிஷ்ட: - என்பதன் மூலம் அறியலாம். இது யாஸ்கர் என்பவரின் நிருக்தத்தில் உள்ளது. இதனை மஹாபாரதம் சாந்திபர்வம் (343-41) – சிபிவிஷ்ட இதி யச்ச அஸ்ய பீதம் ரோம ச யத் பவேத் தேந அபி விஷ்டம் யத் கிஞ்சித் சிபிவிஷ்டம் ஹி தத் ஸ்ம்ருதம் – எம்பெருமானின் திருமேனியில் மஞ்சள் நிற ரோமங்கள் உள்ளன; இந்த உலகத்தில் உள்ள அனைத்தும் இப்படிப்பட்ட ரோமங்கள் கொண்ட அவன் திருமேனியால் வ்யாபிக்கப்பட்டுள்ளன - என்றது. இதனையே உத்யோகபர்வம் – ரோம கூபேஷு ச ததா ஸூர்யஸ்ய இவ மரீசய: சூரியனின் கதிர்கள் எவ்விதம் எங்கும் பரவி நிற்கிறதோ – அது போன்று ரோமங்கள் உள்ள சரீரத்தில் எம்பெருமான் ப்ரவேசித்துள்ளான் - என்றது. கீதை (11-30) – தேஜோபி: ஆபூர்ய ஜகத் ஸமஸ்தம் பாஸ: தவ உக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ - உன்னில் இருந்து வெளிப்படும் பயங்கரமான ஒளியானது தங்கள் தேஜஸ் மூலம் அனைத்து உலகங்களிலும் பரவி அவற்றை நடுங்க வைக்கின்றன - என்றது.

## 275. ப்ரகாசந:

(ப்ரதர்சந: என்றும் பாடம் உண்டு) இத்தகைய திவ்யமான ரூபத்தைத் தாங்கள் காணவேண்டும் என்று ஆசைப்பட்ட அர்ஜுனன் முதலானவர்களுக்குத் தனது திவ்யமான ரூபத்தை வெளிப்படுத்தியவன். கீதையில் கீழே உள்ள வரிகள் காண்க:

- (11-8) - திவ்யம் ததாமி தே ச க்ஷு: பச்ய மே யோகமைச்வரம் - அர்ஜுனா! எனது இந்த திவ்ய ரூபத்தைக் காண நான் உனக்குத் திவ்யமான கண்களை அளிக்கிறேன்.

- (11-52) – ஸுதுர்தர்ஷமிதம் ரூபம் த்ருஷ்டவாந் அஸி யந மம – நீ எனது இந்த விச்வரூபத்தைக் கண்டாய். இது யாருக்கும் காண்பது அரிதாகும்.

## 276. ஓஜ: தேஜ: த்யுதிர:

பலம், வெல்லும் திறமை, கீர்த்தி, காந்தி ஆகியவற்றைத் தரிப்பவன். இது ஒரே திருநாமம் ஆகும். பின்வரும் கீதை வரிகள் காண்க:

- (11-29) – யதா ப்ரதீப்தம் ஜ்வலநம் பதங்கா: விசாந்தி நாசாய ஸஸ்ருத் வேகா: - நெருப்பைக் கண்டவுடன் வீட்டில் பூச்சிகள் வேகமாக ஓடி வந்து விழுவது போன்று எனது வாயில் வந்து விழுகின்றனர்.
- (11-36) – ஸ்தாநே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்தயா - ஹ்ருஷீகேசனே! இந்த உலகம் உனது மேன்மைகளைக் கண்டு உன்னிடம் இழுக்கப்படுவது பொருத்தமே
- (11-12) - திவி ஸூர்ய ஸஹஸ்த்ரஸ்ய பவேத் யுகபதுத்விதா - ஆயிரம் சூரியன்கள் உதித்தால் அவை ஒருவேளை க்ருஷ்ணனின் ஒளிக்குச் சற்று ஈடாகலாம் .

## 277. ப்ரகாசாத்மா

மூர்க்கர்கள் கூட ஒப்புக்கொள்ளும்படியான ப்ரகாசம் நிறைந்தவன். த்ருதராஷ்ட்ரன் மஹாபாரத்தில் – த்வமேவ புண்டரீகாக்ஷ ஸர்வஸ்ய ஜகத் ப்ரபு: தஸ்மாத் மே யாதவ ச்ரேஷ்ட ப்ரஸாதம் கர்த்தும் அர்ஹஸி - தாமரை போன்ற கண்கள் கொண்டவனே! நீயே அனைத்து உலகிற்கும் ப்ரபுவாக உள்ளாய். யாதவர்களில் சிறந்தவனே! உன்னை நான் வணங்குகிறேன். எனக்கு அருள்வாயாக – என்றான்.

## 278. ப்ரதாபந:

நெருப்பு எவ்விதம் சுட்டெரிக்குமோ அது போன்று தனது பகைவர்களுக்கு உக்கிரமான ஒளியுடன் விளங்குபவன்.

## 279. ருத்த:

பௌர்ணமி நாளன்று ஓங்கி வீசும் கடல் போன்று நிறைவாக உள்ளவன். மஹாபாரதம் உத்யோகபர்வம் – தத: ஸ புருஷவ்யாக்ர: ஸம்ஜகாத புந: ஸ்வயம் தாம் திவ்யாம் அப்துதா சித்ராம் ருத்தமத்தாம் அரிந்தம – அடுத்து புருஷோத்தமன் மீண்டும் தனது திவ்யமான திருவாய் மலர்ந்தருளினான்; திவ்யமாக, வியப்பு அளிக்கவல்ல, விசித்ரமாக, நிறைவானதாக இருந்த அந்த மொழிகளை - என்றது காண்க.

## 280. ஸ்பஷ்டாக்ஷர:

இவ்விதம் நிறைவாக உள்ள தன்மை காரணமாக வேதவரிகளுக்கும் பொருள் உண்டாக்குவதால், வேத அக்ஷரங்களைப் படைப்பவன்.

## 281. மந்த்ர:

தன்னை த்யானம் செய்பவர்களைக் காப்பாற்றுபவன். நைருக்தர்கள் – தந் மந்தாரம் த்ராயதே இதி மந்த்ர: - தன்னை த்யானம் செய்பவர்களைக் காப்பாற்றுவது மந்த்ரம் - என்றனர். துஷ்டர்களை விரடுவது பற்றி ப்ராஹ்ம புராணத்தில் நாரதர் எம்பெருமானிடம் கேட்பது - ப்ராண ப்ரயாணே க: ஸ்மர்த்தும் சக்த: ஸ்யாத் மதுஸூதன: - மது என்ற அரக்கனை அழித்தவனே! இந்த உடலை விட்டு உயிர் பிரியும் நேரத்தில் உன்னை நினைக்கும் திறன் கொண்டவன் யார் - என்றார். இதற்குப் பதிலாக பகவான் கூறுவது - த்ருஷ்ணா தோய ஸமாகீர்ணாத் கோராத் ஸம்ஸார ஸாகராத் அபராத் பாரம் ஆப்நோதி யோமாம் ஸ்மரதி நித்யச: - ஸம்ஸாரம் என்ற கடலானது பேராசை என்னும் நீரால் நிரம்பியுள்ளது; எல்லை காண இயலாமல் பயங்கர ஆழமாக உள்ளது, என்னையே த்யானம் செய்து கொண்டிருக்கும் ஒருவன் அந்தக் கடலைத் தாண்டுகிறான் - என்றான். இது போன்று வராஹ சரம ச்லோகம் பின்வருமாறு கூறுகிறது:

ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்தே கோராத் ஸம்ஸார ஸாகராத்
தாது ஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தோ விச்வரூபம் ச மாம் அஜ:
ததஸ்தம் ப்ரியமாணம் து காஷ்டாபாஷாண ஸந்நிபம்
அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்

இதன் பொருள் – தனது உடலும் மனமும் ஸ்திரமாக உள்ளபோது என்னை ஒருவன் நினைத்தபடி இருக்கட்டும், அதன் பின்னர் அவன் இறந்தபோது கட்டை போன்றும் கல் போன்றும் அசையாமல் உள்ளபோது, என்னை அவன் நினைக்கவேண்டிய அவசியம் இல்லை, அவனுக்குத் துணையாக நான் நின்று அவனை வழி நடத்துவேன் – என்பதாகும்.

## 282. சந்த்ராம்சு:

சந்த்ரன் போன்று குளிர்ந்த கிரணங்கள் உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- உணாதி சூத்திரம் – சதி ஆஹ்லா தநே – மகிழ்ச்சி என்னும் பொருளை அளிக்கவல்ல "சதி" என்பதில் இருந்து "சந்த்ரன்" என்ற பதம் உண்டானது

- இராமாயணம் ஆரண்ய காண்டம் – தே தம் ஸோமம் இவ உத்யந்தம் த்ருஷ்டவா வை தர்மசாரிண: - இருளைப் போக்க உதிக்கும் சந்திரன் போன்று அங்கிருந்த முனிவர்கள் இராமனைக் கண்டனர்.

## 283. பாஸ்கர த்யுதி

சூரியனின் தேஜஸ் போன்ற ஒளி கொண்டவன். தனது சத்ருக்கள் அனைவரையும் வெல்லக்கூடிய பெருமையும் தேஜஸ்ஸும் கொண்டவன்.

- கீதை (11-36) - ரக்ஷாம்ஸி பீதாநி திசோ த்ரவந்தி - உன்னைக் காணப் பயந்தவர்களாக அரக்கர்கள் அனைத்து திசைகளிலும் ஓடுகின்றனர்.

- இராமாயணம் ஸுந்தரகாண்டம் – சர ஜால அம்சுமான் சூர: கபே ராம திவாகர: சத்ரு ரக்ஷோமயம் தாயம் உபசோஷம் நயிஷ்யதி - அனுமனே! இராமன் எனப்படும் சூரியன் மிகவும் திறன் கொண்ட சூரன் ஆவான். கிரணங்கள் கொண்ட சூரியன் தண்ணீரை வற்ற வைப்பது போன்று, தனது கிரணங்கள் போன்ற கூர்மையான அம்புகளால் இராமன் அரக்கர்களை இருந்த சுவடு இல்லாமல் அழிக்கிறான்.

- மஹாபாரதம் சபாபர்வம் – எவம் ஏஷ: அஸுராணாம் ச ஸுராணாம் ச ஏவ ஸர்வச: பயாபயகர: க்ருஷ்ண: ஸர்வலோகேச்வரே ப்ரபு: - ஈச்வரனாகவும் சக்தியுடன் கூடிய ப்ரபுவாகவும் உள்ள க்ருஷ்ணன் துன்பம் அளிக்கின்ற அசுரர்களுக்கு அச்சத்தை ஏற்படுத்துகிறான். தன்னிடம் அன்பு கொண்ட தேவர்களுக்கு அருள் புரிந்து அபயம் அளிக்கிறான்.

## 284. அம்ருத அம்சு உத்பவ:

அமிர்தம் போன்ற க்ரணங்களைக் கொண்ட சந்த்ரனின் சீர்மைக்கு இவனே காரணம். அனைத்து உயிர்களின் தாபங்களையும் போக்குவதாகவும் குளிர்ச்சி அளிப்பதாகவும் சந்த்ரனின் க்ரணங்கள் உள்ளன. இறந்தவற்றைக் கூட சந்த்ரன் உயிர் பெறச் செய்கிறான். இப்படிப்பட்ட அமிர்தமயமான க்ரணங்கள் சந்த்ரனுக்கு எப்படி வந்தன என்றால், அவன் எம்பெருமானின் மனதிலிருந்து வெளிப்பட்டவன் என்பதால் கிட்டியது. இதன் மூலம் அவன் எம்பெருமானின் அனைத்து குணங்களையும் பெற்றான். இதனால் எம்பெருமான்

அம்ருத சூத்பவன் ஆகிறான். புருஷஸூக்தம் – சந்த்ரமா மனஸோ ஜாத: - மனதிலிருந்து சந்த்ரன் வெளிப்பட்டான் – என்றது.

## 285. பானு:

மிகுந்த ப்ரகாசம் கொண்டவனும், ஆயிரக்கணகான கதிர்களைக் கொண்டவனும் ஆகிய சூரியன் எம்பெருமானின் ஒளி மூலமாகவே தனது ஒளியைப் பெற்று ப்ரகாசத்துடன் உள்ளான். இப்படிப்பட்ட ஒளியுடன் கூடியவன் என்பதால் பானு: என்ற திருநாமம் கொண்டான். யஸ்ய ஆதித்யோ பாம் உபயுஜ்ய பாதி – யாருடைய ஒளியைக் கொண்டே சூரியன் விளங்குகிறானோ – என்றது காண்க.

## 286. சச பிந்து:

தீய வழியில் நடப்பவர்களை ஒதுக்குபவன். சச என்றால் தீயநெறி என்று பொருள். பிந்து என்னும் பதம் "விரும்பாத" என்னும் பொருள் கொண்ட பிதி என்பதிலிருந்து தோன்றியதாகும். ஆக தீய வழியில் நடப்பவர்களை விரும்பாதவன் என்று கருத்து.

## 287. ஸுரேச்வர:

தேவர்களுக்கு ஈச்வரன் ஆவான். நல்வழியில் நடக்கும் தேவர்களைக் காக்கும் பொறுப்பைத் தான் ஏற்கிறான். அதன் பின்னர் அவர்கள் நல்லவழியை விட்டு அகலாதபடி பார்த்துக் கொள்கிறான். மஹாபாரதம் சாந்திபர்வம் (79-22) – ஸர்வம் ஜிஹ்மம் ம்ருத்யுபதம் ஆர்ஜவம் ப்ரஹ்மண: பதம் – ஒழுக்கம் இல்லாதவை அனைத்தும் மரணம் என்பதுடன் கூடிய ஸம்ஸாரத்திலே சேர்க்கும், ஒழுக்கத்துடன் கூடிய அனைத்தும் ப்ரஹ்மத்திடம் சேர்க்கும் – என்றது.

## 288. ஔஷதம்

ஸம்ஸாரம் என்னும் தீவிரமான நோய்க்கு ஏற்ற மருந்தாக உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- தேவா தேவர்ஷயச்சைவ யம் விது: துக்கபேஷஜம் – துன்பம் நிறைந்த ஸம்ஸாரம் என்பதற்கு ஏற்ற மருந்தாக யாரை தேவர்களும் ரிஷிகளும் அறிகின்றார்களோ

- ஏகாக்ரதா மூல்ய பலேந லப்யம் பவெளஷதம் த்வம் பகவந் கிலைக: - பகவானே! தாழ்ந்த சுகங்களை மட்டுமே நாடித் திரிகின்ற மனதை ஒருநிலைப்படுத்தி, ஸத் விஷயத்தை த்யானம் செய்தபடி இருந்தால் மட்டுமே ஸம்ஸாரம் என்னும் நோய்க்கான மருந்தை ஒருவன் பெற இயலும். அந்த மருந்து நீயே ஆவாய்.

## 289. ஜகத ஸேது:

உலகில் உள்ள ஸத் அஸத் ஆகிய பலவும் ஒன்றுடன் ஒன்று கலவாமல் தடுப்பதற்கு விரோதியாக உள்ள அணை போன்றவன். உணாதி சூத்திரம் – ஷிங் பந்தநே - பிரித்து வைத்தல் என்னும் பொருள் கொண்ட ஷிங் என்பதிலிருந்து ஸேது என்பது உண்டானது, ஸிதநிகம இத்யாதிநா துன் – ஸித் என்பதன் இறுதியில் உ சேர்க்கப்பட்டது – என்றது. ப்ருஹத் உபநிஷத் (6-4-22) – ஏஷ ஸேது: விதரண ஏஷாம் லோகாநாம் அஸம்போதய – நன்மை மற்றும் தீமை ஆகியவற்றுக்கு இடமான இந்த உலகங்களெல்லாம் ஒன்றுடன் ஒன்று கலந்துவிடாமல் அவற்றை பிரித்துக் காக்கும் அணை போன்று உள்ளான் – என்றது. ஸர்வேச்வரன் அனைத்தையும் இப்படியாகப் பிரித்துக் காப்பாற்றுவதால் ஒருவன் செய்யாத செயலுக்கான பலன் அவனை அடைந்துவிட்டது என்றும், செய்த செயலுக்கான பலன் கிட்டாமல் போனது என்றும் இந்த உலகினர் பேசுவதற்கே இடம் இல்லை. யதா தேநு ஸஹஸ்ரேஷு வத்ஸோ விந்ததி மாதரம் ததா பூர்வக்ருதம் கர்ம கர்த்தாரம் அநுவிந்ததி – ஆயிரக்கணக்கான பசுக்களில் தனது தாய் எது என்று கன்றுக்குட்டி சரியாக அறிந்து எவ்விதம் பால் பருகுமோ அது போன்று, பூர்வகர்மங்களின் பலன்கள் ஒரு ஜீவனைச் சரியாக அடைந்து பலன் அளிக்கின்றன. இராமாயணம் யுத்தகாண்டம் (114-25) – சுபக்ருத் சுபம் ஆப்நோதி பாபக்ருத் பாபம் அச்நுதே – புண்ணியம் செய்தவன் புண்ணிய பலனையும், பாவம் செய்தவன் பாவ பலனையும் அடைகிறான் – என்றது காண்க.

## 290. ஸத்ய தர்ம பராக்ரம:

கீழே கூறப்பட்டபடியே, தர்மா: - திருக்கல்யாண குணங்கள், பராக்ரமா: - நற்செயல்கள் ஆகியவற்றை உண்மையாகவே கொண்டவன். இதனால் இந்தத் திருநாமம் கொண்டவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- கீதை (10-14) – ஸர்வம் ஏதத் ருதம் மந்யே யந்மாம் வதஸி கேசவ – கேசவா! நீ கூறிய உண்மைகள் அனைத்தும் வேதங்களும் ரிஷிகளும் கூறியவையே
- இராமாயணம் யுத்தகாண்டம் – விஷ்ணு: ஸத்யபராக்ரம: - விஷ்ணு பராக்ரமம் உள்ளவன்
- யம் வாகேஷு அநுவாகேஷு ச நிஷத்ஸு உபநிஷத்ஸு ச க்ருணந்தி தஸ்ய கர்மாணம் ஸத்யம் ஸத்யேஷு ஸாமஸு – புராணங்கள், புராணங்களின் அடிப்படையில் உள்ள ஸ்ம்ருதிகள், வேதங்களுடைய பூர்வபாகங்கள், வேதங்களின் உத்தரபாகமான உபநிஷத்துக்கள் ஆகிய அனைத்திலும் எம்பெருமானைக் கூறும்போது மங்களகரமான குணங்கள் கொண்டவன் என்றும் ஆராதிக்கத்தக்கவன் என்றுமே கூறுகின்றனர்.

## 291. பூத பவ்ய பவந் நாத:

முன்பு இருந்தவை, இப்போது உள்ளவை, இனி வர உள்ளவை ஆகிய அனைத்திற்கும் ஸ்வாமியாக உள்ளவன். இப்படியாக அனைத்தையும் உடையவனாக இருத்தல், அனைத்தையும் நியமித்தபடி இருத்தல் ஆகிய தன்மைகள் எம்பெருமானிடம் இப்போது மட்டும் உள்ளவை அல்ல. இந்தத் தன்மைகள் மூன்று காலங்களிலும் உள்ளன. மஹாபாரதம் ஸபாபர்வம் (31-11) – பூத பவ்ய பவந்நாத: கேசவ: கேசிஸூதந: ப்ரகாரா: ஸர்வ வ்ருஷ்ணீநாம் ஆபத்ஸு அபயதோ அரிஹா – அனைத்துக் காலங்களிலும் உள்ள அனைத்திற்கும் க்ருஷ்ணனே ரக்ஷகன்; அவனே கேசி என்னும் அசுரனை அழித்தவன்; வ்ருஷ்ணி வம்சத்தில் ஆபத்து உண்டான காலங்கள் அனைத்திலும் இவனே அபயம் அளித்தவன் – என்றது காண்க.

## 292. பவந:

அனைத்து இடங்களிலும் அனைத்துக் காலங்களிலும் இயல்பாகவே இவன் செல்வதால் இந்தத் திருநாமம் பெற்றான். பவி: கத்யர்த்த: - செல்லுதல் என்னும் பொருள் தருகின்ற "பூ" என்பதிலிருந்து செல்பவன் என்னும் பொருள் கொண்ட "பவந:" என்னும் பதம் உண்டானது.

## 293. பாவந:

அனைத்தையும் தூய்மைப்படுத்தவல்ல கங்கை உள்ளிட்ட நதிகளுக்கு, அவை தன்னுடன் ஸம்பந்த கொண்டுள்ளதால், அவைகளுக்குத் தூய்மைப்படுதவல்ல திறனை அளிப்பவன். இதனால் பாவனன் என்று திருநாமம் பெற்றான். அகஸ்த்யர் இராமாயணம் உத்தரகாண்ட்த்தில் (32-9) – பாவந: ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தன: - இராமா! அனைத்து உலகங்களுக்கும் தூய்மையை அளிப்பவன் நீ மட்டுமே ஆவாய் – என்றது காண்க.

## 294. அநல:

தன்னுடைய அடியார்களின் பலவிதமான துன்பங்களை நீக்குகிறான், பலவிதமான இன்பங்களை அளிக்கிறான், இப்படியாகப் பல உபகாரங்களைச் செய்த பின்னரும், "நான் இவர்களுக்குச் செய்தது போதாது, இன்னமும் செய்யவேண்டும்", என்று எண்ணியபடி உள்ளான். இதனால் அநல என்னும் திருநாமம் பெற்றான். நமக்கு உதவுவதில் சோம்பல் இல்லாதவன். இந்த உலகில் நெருப்பிற்கு "அநல்" என்று பெயர் உண்டு. எம்பெருமானின் தொடர்பால் வந்த பெயர் இதுவாகும். எம்பெருமான் எவ்விதம் தான் செய்த உபகாரங்கள் போதாது என்று உள்ளானோ அது போன்று, நெருப்பும் தன்னில் இடப்படும் எரிபொருட்கள் போதாது என்றே எரிக்கும் தன்மை கொண்டதால் அந்தப் பெயர் பெற்றது. ஸ்ரீவிஷ்ணுபுராணம் (4-10-3) – ஹவிஷா க்ருஷ்ணவர்த்மா பூய ஏவ அபிவர்த்ததே – யாகத்தில் உள்ள அக்னியானது அப்படி அனைத்தையும் எரித்து ஓங்கியபடி உள்ளதோ அது போன்று சிற்றின்பம் என்னும் தீயானது அனுபவிக்க அனுபவிக்க ஓங்கியபடியே உள்ளது – என்றது காண்க.

## 295. காமஹா:

இப்படியாகப் பலவிதமாக உபகாரம் செய்தல் உள்ளிட்ட எம்பெருமானின் குணங்களை யார் அனுபவித்தபடி இருக்கவேண்டும் என்று விரும்புகிறார்களோ அவர்களுக்கு இந்த

உலகியல் பொருட்களை அனுபவிக்கவேண்டும் என்னும் ஆசையை அழித்துவிடுகிறான். இதனால் காமஹா என்று திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஜிதந்தே ஸ்தோத்ரம் (13) – ந காம கலுஷம் சித்தம் மம தே பாதயோ: ஸ்திதம் – உனது திருவடிகளில் ஈடுபட்ட எனது மனம் மற்ற விஷயங்களில் அலை பாயாமல் உள்ளது.

- தைத்திரீய ஆனந்தவல்லீ (8) – ச்ரேரத்ரி யஸ்ய ச அகாமஹதஸ்ய – சிற்றின்பத்தால் கவரப்படாமல் உள்ளவன் முக்தன் அனுபவிக்கும் ஆனந்தம் அடைகிறான்.

- கடவல்லி (2-15) – யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி – அடையப்படவேண்டிய வஸ்து குறித்து ப்ரஹ்மச்சர்யம் கைக்கொள்கின்றனர்.

## 296. காம க்ருத்

இந்த உலகியல் இன்பங்களின் மீது உள்ள நாட்டங்களை விலக்கவும், உயர்ந்த மோக்ஷ இன்பத்தின் மீது நாட்டத்தை உண்டாக்கவும் எம்பெருமான் செய்வது என்னவென்றால் – இங்கு உள்ளபோதே பகவத் அனுபவம் என்னும் இன்பத்தையும், அங்கு மோக்ஷ ஆனந்தம் என்பதையும் உண்டாக்குகிறான். இதனால் காமக்ருத் என்று திருநாமம் பெற்றான்.

## 297. காந்த:

தனது திருமேனியின் மென்மை மற்றும் அழகு உள்ளிட்ட பலவற்றாலும் இயற்கையாகவே கவர்கின்ற தன்மை கொண்டவன்.

## 298. காம:

சீலம், தாராளம், தயை உள்ளிட்ட பல ஆத்மகுணங்கள் எம்பெருமானிடம் இயல்பாகவே உள்ளன. இதனால் அவன் அனைவராலும் விரும்பப்படுபவனாக உள்ளான். இவனது இந்தத் தன்மைகளில் ஒரு சிறிய துளி பெற்ற மதனன் என்னும் மன்மதன் தனது அழகால் உலகையே மயக்குகிறான்.

## 299. காமப்ரத:

தன்னை மட்டுமே அடைய விரும்புபவர்களுக்குத் தன்னையும், தன்னைத் தவிர்ந்த உலகியல் பொருட்களை அடைய விரும்புபவர்களுக்கு அவர்களை விரும்பியதையும், அவரவர்கள் கேட்பதைக் காட்டிலும் அதிகமாகவே அளிப்பவன்.

## 300. ப்ரபு:

இப்படியாக அனைவராலும் விரும்பத்தக்க தன்மைகள் கொண்டதால், அனைவரின் இதயங்களையும் மனதையும் தன்னிடம் ஈர்க்கின்ற சக்தி கொண்டவனாக உள்ளான். இதனால் ப்ரபு என்று திருநாமம் பெற்றான். இராமாயணம் ஸுந்தரகாண்டம் (35-8) – ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வ மநோஹர: - தாமரை போன்ற கண்கள் கொண்ட இராமன் அனைவரது மனதையும் தன்பால் ஈர்க்கவல்லவன் – என்றது காண்க.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், ஸ்ரீரங்கநாதனின் தெய்வீக ஆணையால் ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச்செய்த பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், மூன்றா நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.

நான்காவது நூறு தொடக்கம்

ஆலந்தளிரில் சயனித்த பாலகன் வடபத்ரசாயீ அவதாரம்

## 301. யுகாதிக்ருத்

யுகங்கள் தொடங்குவதற்கான ஸ்ருஸ்ஹ்டியைச் செய்பவன். அடுத்து எம்பெருமானின் மற்றுமொரு ஆச்சர்யம் கூறப்படுகிறது. இது எம்பெருமான் ஆலிலை மீது சயனித்த வடபத்ரசாயீ அவதாரமாகும். யுகத்தின் முடிவு காலத்தில் மற்றும் ஒரு தொடக்கத்தைச் செய்கிறான் என்றதால் யுகாதிக்ருத் என்னும் திருநாமம் பெற்றான். ப்ரளயம்

உண்டானபோதும், அந்த ப்ரளயத்தால் எந்தவிதமான பாதிப்பும் இல்லாதபடி அனைத்தையும் மீண்டும் அளித்தான்.

## 302. யுகாவர்த்த:

நான்கு யுகங்களிலும் நிலையாக உள்ள தர்மத்தின் இருப்பைக் குறித்தே சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. அப்படியே அந்தந்த யுகங்களின் தர்மங்களை நிலையாக இருக்கும்படியாக அந்தந்த யுகங்களை மீண்டும் சுழலவைக்கிறான். இதனால் யுகாவர்த்த: என்னும் திருநாமம் பெற்றான்.

## 303. நைகமாய:

ஏதும் அறியாத குழைந்தை ரூபத்தில் உள்ளபோதே எண்ணற்ற உலகங்களை அனைத்தையும் விழுங்குவது, பற்றிக்கொள்ள ஏதும் இல்லாமலேயே ப்ரளய காலத்தில் நீரில் உள்ள சிறிய இலையில் சயனித்தபடி இருப்பது என்பதான மறுக்க இயலாத வியப்பான செயலைச் செய்தவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். இங்கே உள்ள "மாயா" என்னும் பதம் "பொய்" என்னும் பொருளை அளிக்கவில்லை. அந்தப் பதம் "உண்மை" என்னும் பொருளிலும் பல இடங்களில் காணப்படுவதைக் கீழே உள்ள வரிகளில் அறிக:

- ச்வேதாஸ்வதர உபநிஷத் – மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாத் – ப்ரக்ருதி என்பதே மாயை என்னும் பதம் மூலம் கூறப்படுகிறது. அனைத்திற்கும் காரணமான ப்ரக்ருதி மாயை என்று கூறப்படுவதைக் காண்க.

- நிருக்தம் – மாயா வயுநம் ஞானம் – மாயா, வயுநம், ஞானம் ஆகிய மூன்றும் அறிவு என்னும் பொருள் அளிக்கவல்லவை.

- யஜுர் அஷ்டகம் – ஸங்க்யாதா தேவமாயயா – பகவானின் ஞானத்திற்கு ஒப்பு

- ஈசாவாஸ்ய உபநிஷத் (18) – விச்வாநி தேவ வயுநாநி வித்வாந் – அக்னியைச் சரீரமாக உடைய எம்பெருமானே! உன்னை அடையும்விதமான செல்வத்தை நாங்கள் பெறும் விதம் முழுவதும் நீ அறிவாய்.

- விஷ்ணுபுராணம் (1-9-20) – தேந மாயா ஸஹஸ்ரம் தத் சம்பரஸ்ய ஆசுகாமிநா பாலஸ்ய ரக்ஷதா தேஹம் ஏகைகச்யேந ஸூதிதம் – சம்பரன் என்னும் அசுரன் ப்ரஹ்லாதன் மீது ஆயிரக்கணக்கான ஆயுதங்களை ப்ரயோகம் செய்தான். எம்பெருமானின் சக்கரம் அந்தச் சிறுவனின் சரீரத்தைக் காக்கும் பொருட்டு அவனைச் சுற்றி நின்ற அனைத்தையும் தூளாக்கியது.

வராஹ புராணத்தில் "மாயா" என்னும் பதமானது எம்பெருமானின் ஆச்சர்யம் அளிக்கவல்ல செயல்களைக் குறிக்கும் என்பதைக் இந்த ச்லோகம் மூலம் அறியலாம் – மேகோதய: ஸாகர ஸந்நிவ்ருத்தி: இந்தோர்விபாக: ஸ்புரிதாநி வாயோ: வித்யுத் விபங்க: கதிர் உஷ்ணரச்மே: விஷ்ணோர் விசித்ரா: ப்ரபவந்தி மாயா: - மேகங்கள் உண்டாவது, கடலின் அலைகள் மேலே எழும்பாமல் கடலுக்கு திரும்புவது, சந்த்ரன் வளர்வது மற்றும் தேய்வது, காற்று வீசுவது, மின்னல் உண்டாவது, சூரியன் ஆறு மாதம் ஒரு பக்கமும் மற்றொரு ஆறு மாதம் வேறு பக்கமும் நகர்வது போன்ற அனைத்தும் விஷ்ணுவின் வியக்கவைக்கும் மாயையால் ஆகும் – என்றது காண்க. இவ்விதம் "மாயை" என்னும் பதம் "ஆச்சர்யம் உண்டாக்க வைக்கும் செயல்கள்" என்று அறிந்தவர்கள் கூறுவதைக் காணலாம்.

மஹாபாரதத்தின் ஆரண்யபர்வத்தில் மார்க்கண்டேய மஹரிஷி தர்மபுத்திரரிடம் எம்பெருமான் ஏதும் அறியாத பாலகனாக சிறிய ஆலிலையில் வியப்பை அளிக்கும் வகையில் சயனித்திருந்ததைத் தான் கண்டது பற்றிக் கூறுகிறார் – ததோ மே ப்ருதிவீபால விஸ்மய: ஸுமஹாந் அபூத் த்ருஷ்ட்வா லோகம் ஸமஸ்தம் ச .... இத்யுக்த்வா அந்தர்ஹித: தாத ஸ தேவ: பரமாத்புத: ஆச்சர்ய பரதச்ரேஷ்ட: - பரத குலத்தில் சிறந்தவனே! அந்தக் குழந்தையின் வயிற்றில் நான் அனைத்து உலகங்களையும் கண்டேன்; என்ன வியப்பாக அந்தக் குழந்தை ஏதும் அறியாதவன் போன்று உறங்கியபடி உள்ளது – என்றார்.

இப்படியாக மாயை என்னும் வஸ்துவானது தோஷங்களால் சூழப்படாத காணவல்ல ப்ரமாணங்கள் மூலமாக வியக்கவல்ல பொருளில் தோன்றுகிறது.

## 304. மஹாசந:

ப்ரளய காலத்தில் அனைத்து உலகங்களையும் தனது உணவாக உட்கொள்பவன் என்பதால் மஹாசந என்னும் திருநாமம் பெற்றான். மஹாபாரதம் வனபர்வம் (191-122) – யச்ச கிஞ்சித் மயா லோகே த்ருஷ்டம் ஸ்தாவர ஜங்கமம் ததபச்யந் அஹம் ஸர்வம் தஸ்ய குக்ஷெள மஹாத்மந: - இந்த உலகில் உள்ள அசையும் பொருட்கள், அசையாத பொருட்கள் என்று எவை எவை உள்ளனவோ அவை அனைத்தையும் அந்தக் குழந்தையின் வயிற்றில் நான் கண்டேன் – என்றது.

## 305. அத்ருச்ய:

மனதினால் நினைத்துப் பார்க்க இயலாத செயல்களையும் செய்தபடி உள்ளவன். மஹாபாரதம் வனபர்வம் (191-94) – கதம் நு அயம் சிசு: சேதே லோகே நாசுமுபாகதே தபஸா சிந்தயம்ச்சாபி தம் சிசும் நோபலக்ஷயே – இந்த உலகம் முழுவதும் அழிந்த பின்னரும் இந்தக் குழந்தை மட்டும் எப்படி இவ்விதம் உள்ளது என்று எனது தவவலிமை மூலம் ஆராய்ந்தபோதிலும், அந்தக் குழந்தையின் ஸ்வரூபம் பற்றி அறிய இயலவில்லை – என்று மார்க்கண்டேயர் உரைத்தார்.

## 306. வ்யக்தரூப:

தெளிவாக உள்ள ரூபத்தைக் கொண்டவன். பக்தியுடன் செல்கின்ற மார்க்கண்டேயர் போன்றவர்களுக்குத் தெளிவாகத் தோன்றவல்ல திவ்யமான ரூபம் கொண்டவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- மஹாபாரதம் வனபர்வம் (191-96) – அதஸீ புஷ்ப ஸங்காச: ஸ்ரீவத்ஸ க்ருத லக்ஷண: ஸாக்ஷாத் லக்ஷ்ம்யா இவ ஆவாஸ: ஸ ஸதா ப்ரதிபாதி மே – காயாம்பூ

போன்ற நிறம் கொண்டவனும், ஸ்ரீவத்ஸம் என்னும் மருவினால் அலங்கரிக்கப்பட்ட திருமார்பை உடையவனும் ஆகிய மஹாவிஷ்ணு தனது திருமார்பின் மஹாலக்ஷ்மியைத் தரித்தவனாகவே எனக்குக் காட்சி அளித்தான்.

- மஹாபாரதம் வனபர்வம் (191-13) – தஸ்ய தாம்ரதலெள தாத சரணௌ ஸுப்ரதிஷ்டதோ ஸுஜாத ம்ருத்ரு ரக்தாபி: அங்குலீபி: அலங்க்ருதெள ப்ரணதேன மயா மூர்த்னா க்ருஹீத்வா ஹி அபிவந்திதெள – பிரியமான தர்மரே! சிவந்த நிறத்தில் உள்ளவையும், அழகு – மென்மை - சிவந்த நிறம் ஆகியவற்றுடன் கூடிய கால்விரல்களால் நன்றாக அலங்காரம் செய்யப்பட்டவையும் ஆகிய எம்பெருமானின் இரண்டு திருவடிகளும் எனது மனதில் உறுதியாக நிலைநின்றன. அவை எனது தலையால் வணங்கப்பட்டன.

## 307. ஸஹஸ்ரஜித்

ஆயிரம் யுகங்களுக்கு மேலாக நீடிக்கும் ப்ரளய காலத்தைக் கூட தனது யோக நித்திரை நிலையில் இருந்தபடியே வெல்பவன். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான். மஹாபாரதம் வனபர்வம் (192-40) – யாவத் யுகாநாம் விப்ரர்ஷே ஸஹஸ்ரம் பரிவர்த்ததே தாவத் ஸ்வபிமி – மார்க்கண்டேயரே! யுகங்களின் ஆயிரம் என்பது கழிவதற்கு எத்தனை காலம் உள்ளதோ அத்தனை காலம் நான் யோக நித்திரையில் உள்ளேன்.

## 308. அநந்தஜித்

எம்பெருமான் அந்த ஆலிலையின் மீது சிறு குழந்தையின் உருவத்தில் இருந்தபோதிலும் அவனது மேன்மைக்கு அப்பாற்பட்ட எதுவும், எப்போதும், எங்கும் கிடையாது. இதனால் இந்தத் திருநாமம் பெற்றான். மஹாபாரதம் வனபர்வம் (192-25) – அந்த: சரீரே தஸ்யாஹம் வர்ஷாணாம் அதிகம் சதம் ந ஹி பச்யாமி தஸ்யாஹம் அந்தம் தேவஸ்ய கர்ஹிசித் ஆஸாதயாமி நைவாந்தம் தஸ்ய ராஜன் மஹாத்மன: - மார்க்கண்டேய மஹரிஷி தர்மரிடம், “அரசனே! அந்தக் குழந்தையின் வயிற்றில் நான் நூறு ஆண்டுகள் இருந்தேன். ஆனால் அவனது மேன்மையின் எல்லையை என்னால் காணவே இயலவில்லை. அவனது எல்லையை நான் பெறாதவனாகவே இருந்தேன்”, என்றார்.

## 309. இஷ்ட:

ப்ரளயத்தின்போது தனது வயிற்றில் அனைத்து உயிர்களையும் தாயானவள் வேறுபாடு காணாமல் பாதுகாப்பது போன்று வைத்துக் கொண்டான். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 310. அவிசிஷ்ட:

அனைவரிடமும் எந்தவிதமான வேறுபாடும் இல்லாமல் ஒரே போன்று இருப்பவன்.

## 311. சிஷ்டேஷ்ட:

பண்டிதர்களில் சிறந்தவர்களான மார்க்கண்டேய மஹரிஷி போன்றவர்களால் தங்களது உயர்ந்த புருஷார்த்தம் என்று விரும்பப்படுகின்றவன். மஹாபாரதம் வனபர்வம் (192-16) – ஸத்வஸ்தா நிரஹங்காரா: நித்யம் அத்யாத்ம கோவிதா: மாமேவ ஸததம் விப்ரா: சிந்தயந்த உபாஸதே – ஸாத்விகமாக உள்ளவர்களும், அஹங்காரம் சிறிதும் அற்றவர்களும், ஆத்மாவின் ஸ்வரூபத்தை நன்றாக அறிந்தவர்களும் ஆகிய அந்தணர்களில் சிறந்தவர்கள், எப்போதும் என்னையே எண்ணியபடி த்யானம் செய்கின்றனர் – என்றது காண்க.

## 312. சிகண்டீ

மஹாபாரதம் வனபர்வம் (191-129) – ஆஸீநம் தம் நர வ்யாக்ரம் பச்யாமி அமித தேஜஸம் – எல்லையற்ற தேஜஸ் கொண்டவனும், புருஷர்களில் சிறந்தவனும் ஆகிய அவனை நான் கண்டேன் – என்றது. யாராலும் வெற்றி கொள்ள இயலாத எல்லையற்ற மேன்மை (சிகண்டம்) என்னும் ஐச்வர்யம் எம்பெருமானிடம் உள்ளது. இதனால் சிகண்டீ என்னும் திருநாமம் பெற்றான்.

## 313. நஹுஷ:

தனது மாயை மூலமாக அனைத்து உயிர்களையும் கட்டுகிறான். இதனால் இவனுக்கு நஹுஷன் என்னும் திருநாமம் உள்ளதாக நிருக்த சாஸ்த்ரம் தெரிந்தவர்கள் கூறுகின்றனர்.

ச்வேதாஸ்வதர உபநிஷத் (4-9) – தஸ்மிந் ச அந்ய: மாயயா ஸந்நிருத்த: - ஜீவன் இந்த மாயை மூலம் கட்டப்பட்டுள்ளான் – என்றது.

## 314. வ்ருஷ:

கடல் அலைகளால் அலைக்கழிக்கப்பட்டு களைத்து நின்றவரான மார்க்கண்டேய முனிவரைத் தனது அமிர்தம் போன்ற ஒளி மூலமாகவும், இனிமையான சொற்கள் மூலமாகவும் இளைப்பாறச் செய்து அவரை நனைத்தவன் என்பதால் வ்ருஷ: என்னும் திருநாமம் பெற்றான். வ்ருஷ என்றால் பொழிந்தபடி உள்ளவன் என்பதாகும். மஹாபாரதம் வனபர்வம் (191-97, 98) – ததோ மாம் அப்ரவீத் பால: ஸ: பத்மநிப லோசந: ஸ்ரீவத்ஸதாரீ த்யுதிமான் வாக்யம் ச்ருதி ஸுகாவஹம் ஜாநாமி த்வாம் பரிச்ராந்தம் ததா விச்ராம காங்க்ஷிணம் – அப்போது தாமரை போன்ற அழகிய கண்கள் கொண்டவனும், தனது திருமார்பில் ஸ்ரீவத்ஸம் கொண்டவனும், ஒளிவீசும் திருமேனியுடன் கூடியவனும், குழந்தையாக இருந்தவனும் ஆகிய எம்பெருமான் என்னை நோக்கினான்; பின்னர் கேட்பதற்கு இனிமையான சொற்களை உரைத்தான்; “எங்கும் அலைந்து களைப்புற்று உள்ள நீ ஓய்வெடுக்க விரும்புவதை நான் அறிவேன்”, என்றான்.

பரசுராம அவதாரம்

## 315. க்ரோதஹா

மூவேழுமுறை (இருபத்துஒன்று) க்ஷத்ரிய அரசர்களைத் தனது கோபம் காரணமாக வதம் செய்தான். அதன் பின்னர் காச்யபரிஷியின் வேண்டுகோளை ஏற்று, தனது கோபத்தைக் கைவிட்டான். இதனால் பரசுராமனாகிய எம்பெருமான் க்ரோதஹா என்னும் திருநாமம் பெற்றான்.

## 316. க்ரோதக்ருத்

காச்யபரிஷியின் வேண்டுகோளை ஏற்றுத் தனது கோபத்தைக் கைவிடுவதற்கு முன்பாக க்ஷத்ரியர்களிடம் கோபமான செயல்களைச் செய்தவன்.

## 317. கர்த்தா

இப்படியாகத் தனது கோபத்தை உண்டாக்கியதற்குக் காரணமான கார்த்த வீர்யாஜுனனை அவனது குலத்துடன் அழித்தவன். இதனை விஷ்ணுதர்மம் (43-37) – நி:க்ஷத்ரியாம் யச்ய சகார மேதிநீம் – இந்த உலகைச் க்ஷத்ரியர்களே இல்லாதபடி யார் செய்தானோ – என்றது.

## 318. விச்வபாஹு:

முள் போன்ற விரோதிகளைக் களைவதன் மூலம், தனது இரண்டு திருக்கரங்களையும் இந்த உலகின் நன்மைக்காகவே வைத்துள்ளான். இதனால் பரசுராமனாகிய எம்பெருமான் விச்வபாஹு என்னும் திருநாமம் பெற்றான்.

## 319. மஹீதர:

இப்படியாக இந்தப் பூமிக்குப் பாரமாக உள்ள விரோதிகளை அழிப்பதன் மூலம், இந்தப் பூமியை நிலையாக வைப்பவன். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 320. அச்யுத: (101, 557)

ச்யவநோத்பத்தி யுக்தேஷு ப்ரஹ்மேந்த்ர வருணாதிஷு யஸ்மாத் ந ச்யவாத ஸ்தாநாத் தஸ்மாத் ஸங்கீர்த்யதே அச்யுத: - நான்முகன், இந்த்ரன் மற்றும் வருணன் போன்ற தேவர்கள் தங்களது பதவியிலிருந்து நழுவி விழுதல் என்பது உண்டு; ஆனால் தன்னுடைய இடத்தில் இருந்து நழுவுதலே இல்லை என்பதால் எம்பெருமான் அச்யுதன் எனப்பட்டான் – என்றது காண்க. நான்முகன் போன்றவர்களுக்கு உற்பத்தி என்பது உள்ளது போன்றே எம்பெருமானுக்கு அவதாரம் என்பது உள்ளது; ஆயினும் அனைவருக்கும் ஈச்வரனாக உள்ள தனது நிலையிலிருந்து அவன் மாறாமல் உள்ளான் என்று கருத்து.

## 321. ப்ரதித:

நிலைமாறாத மேன்மைகளைக் கொண்டவன் என்பதால் ப்ரதித என்னும் திருநாமம் பெற்றான். தைத்திரீயம் நாராயணவல்லீ (1-10) – தஸ்ய நாம மஹத்யச: - மிகவும் புகழ் பெற்றவன் என்பது ப்ரஸித்தம் – என்றது. இராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் (15-19) – யசஸச்ச ஏகபாஜனம் – அனைவருக்கும் நன்மைகளைச் செய்வதால் பெருமைகள் என்பதற்கு ஒரே இடமாக உள்ளவன் – என்றது.

## 322. ப்ராண:

தன்னை மட்டுமே அண்டி நிற்பவர்களுக்கு அவர்களுடைய உயிராக உள்ளதால் ப்ராண என்னும் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- கௌஷீதகீ உபநிஷத் – ப்ராணா: அஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மாம் ஆயு: அம்ருதம் இதி உபாஸ்ஸ்வ – ஞானமயமான ஆத்மாவாக உள்ள நான் ஜீவனைச் சரீரமாகக் கொண்டுள்ளேன்; இப்படியாக உள்ள நான் ஆயுஸ் என்றும், அமிர்தம் என்றும் உபாஸிக்கப்படுகிறேன்.

- அம்ருதம் தேவாநாம் ஆயு: ப்ரஜாநாம் – நான் தேவர்களுக்கு அமிர்தமாகவும், மனிதர்களுக்கு ஆயுளாகவும் உள்ளேன்.

- ப்ரஹ்மஸூத்ரம் (1-1-9) – ப்ராண: ததா அநுகமாத் – அவன் மற்றவற்றுக்கு ப்ராணன்.

கூர்மாவதாரம்

## 323. ப்ராணத:

அடுத்து கூர்மாவதாரத்தைக் கூறுகிறார். திருப்பாற்கடலைக் கடைவதற்காக தேவர்களுக்கு ஏற்ற வலிமையை அளிப்பவன். அநந்த பல சக்தயே – எல்லையற்ற பலம் மற்றும் சக்தி கொண்டவன் – என்றது காண்க.

## 324. வாஸவாநுஜ:

அமிர்தம் பெற விரும்பிய வாஸவனுக்கு (இந்த்ரன்), அதனை அவனுக்கு அளிப்பதற்காக அவனுடைய தம்பியாகப் பிறந்தவன். இதனால் வாஸவாநுஜன் என்னும் திருநாமம் பெற்றான்.

## 325. அபாம் நிதி:

திருப்பாற்கடல் கடையப்பட்டபோது அதற்கு ஆதாரமாக நின்றபடி, அதனைத் தாங்கியவன். இதனால் அபாம்நிதி என்னும் திருநாமம் பெற்றான்.

## 326. அதிஷ்டாநம்

விஷ்ணுபுராணம் (1-9-98) – மந்தராத்ரே: அதிஷ்டாநம் ப்ரமத: அபூத் மாஹாமுனே – மஹாமுனிவரே! திருப்பாற்கடலில் சுழன்றபடி இருந்த மந்தர மலைக்குத் தானே ஆதாரமாக இருந்தான் – என்பதால் அதிஷ்டாநம் என்னும் திருநாமம் பெற்றான்.

## 327. அப்ரமத்த:

இப்படியாகத் தன்னை அண்டியவர்களைக் காப்பாற்றுவதில் மிகவும் கவனத்துடன் உள்ளவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 328. ப்ரதிஷ்டித:

மற்ற யாரையும் எதிர்பார்க்காமல், தன்னுடைய மஹிமையை மட்டுமே தனக்கு ஆதாரமாகக் கொண்டதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- சாந்தோக்ய உபநிஷத் (7-24-1) – ஸ பகவ: க்வ ப்ரதிஷ்டித இதி ஸ்வே மஹிம்நி – அந்த பகவான் எதனைத் தனது ஆதாரமாகக் கொண்டுள்ளான்? தனது மஹிமையையே ஆகும்.

- விஷ்ணுதர்மம் (72-2) – ஸ்வே மஹிம்நி ஸ்திதம் தேவம் – தனது மஹிமையால் உறுதியாக நிற்கும் ஸர்வேச்வரன்.

## 329. ஸ்கந்த:

தானே அசுரர்களை அழித்துவிடுவதால், இந்தத் திருநாமம் பெற்றான். ஸ்கந்தயதி என்றால் வற்றச் செய்தல் என்னும் பொருள் கொண்ட சோஷயதி என்னும் பொருளையும் அளிக்கும்.

## 330. ஸ்கந்த தர:

இப்படியாக அசுரர்களின் படைகளை அழிப்பது ஸ்கந்தன் என்னும் முருகன் ஆவான். அவனையும் ஸர்வேச்வரனே தாங்குவதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீதையில் (10-24) – ஸேநாநீனாமஹம் ஸ்கந்த: - ஸேனைத் தலைவர்களின் நான் ஸ்கந்தன் ஆவேன் – என்றான்.

## 331. துர்ய:

புவநப்ருதே – உலகங்களைத் தாங்குபவன் – என்று எம்பெருமானைப் பற்றிய மந்த்ரம் உண்டு. இதனால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 332. வரத:

இந்த உலகின் பல்வேறு செயல்களை ஏற்று நடத்தும் தேவர்களுக்கு, அவர்களுக்கு வேண்டிய வலிமையை வரங்கள் மூலம் அளிப்பவன். இதனால் வரதன் என்னும் திருநாமம் பெற்றான்.

## 333. வாயு வாஹந:

இந்த உலகில் உள்ள உயிர்கள் வாழ்வதற்கு ப்ராணவாயு அவசியமானது. அத்தகைய வாயுவை வழிநடத்திச் செல்பவன்.

### வாஸுதேவ சப்தார்த்தம்

**குறிப்பு:** அடுத்த பன்னிரண்டு திருநாமங்கள் மூலம் வாஸுதேவனையும் அவனது குணங்கள் குறித்தும் விளக்குகிறார். இந்தத் திருநாமம் பன்னிரண்டு அக்ஷரங்களைக் கொண்டதாகும்.

## 334. வாஸுதேவ:

தாயானவள் தனது குழந்தையை எவ்விதம் கர்ப்பத்தில் வைத்துக் காப்பாளோ அது போன்று எம்பெருமான் இந்த உலகைத் தனது வயிற்றில் வைத்துக் காப்பாற்றுகிறான். ஒரு பறவையானது தனது இறகுகளை விரித்துவைத்து எவ்விதம் தனது குஞ்சுகளைக் காக்குமோ அது போன்று எம்பெருமான் இந்த உலகில் எழுந்தருளி காக்கிறான். "வாஸு"

என்னும் பதம் “நெருக்கமாக அணைத்துக் கொள்ளுதல்” என்னும் பொருள் கொண்ட “வஸ்” என்னும் வினைச்சொல்லில் இருந்து வந்ததாகும். ”தேவ:” என்பது “விளையாடுதல்” என்ற பொருளை அளிப்பதாகும். கீழே உள்ள பல வாக்கியங்கள் காண்க:

- மஹாபாரதம் – சாதயாமி ஜகத் ஸர்வம் பூத்வா ஸூர்ய இவ அம்சுபி: ஸர்வபூதாதி வாஸச்ச வாஸுதேவ: தத: ஸ்ம்ருத: - சூரியனின் கதிர்கள் எவ்விதம் உலகம் முழுவதும் பரவுகிறதோ அது போன்று நான் எங்கும் வ்யாபித்து, அனைத்து உயிர்களையும் தாங்குகிறேன். இதனால் நான் வாஸுதேவன் எனப்படுகிறேன்.

- மஹாபாரதம் – வஸநாத் ஸர்வபூதாநாம் வஸுத்வாத் தேவயோநித: வாஸுதேவஸ்ததோ ஜ்ஞேய: ஸர்வேஷாமபி பச்யதே – அனைத்து உயிர்களும் வாசம் செய்வதற்கு ஏற்ற இடமாக நான் உள்ளேன், அனைத்து உயிர்களுக்குள்ளும் நான் உள்ளேன். இதனால் நான் வாஸுதேவன் எனப்படுகிறேன்.

- விஷ்ணுபுராணம் (1-2-12) – ஸர்வத்ர அஸௌ ஸமஸ்தம் ச வஸத்யத்ரேதி வை யத: தத: ஸ வாஸுதேவேதி வித்வத்பி: பரிபட்யதே – ”பர” என்ற ரூபம் வாஸுதேவன் என்றே அழைக்கப்படுகிறது. இதன் காரணம் அனைத்திற்குள்ளும் இவன் உள்ளான் எனவும், இவனுக்குள் அனைத்தும் உள்ளன என்றும் அறிஞர்கள் உரைக்கின்றனர்.

வாஸுதேவ மந்த்ரம் என்பது பரமரஹஸ்யமானது என்பதால், இதன் ஆழ்பொருளைத் தகுந்த ஆசார்யனிடம் கற்கவேண்டும்.

## 335. ப்ருஹத்பாநு:

மேலும் விவரிக்கிறார். தன்னுடைய போகவிபூதியான பரமபதத்தின் மூலமாக மேலும் அதிகமாக ஒளிர்கிறான். நித்யமாக, அதிகமான ஒளி வீசுகின்ற கதிர்கள் கொண்டவனாக உள்ளான்.

## 336. ஆதிதேவ:

முதலில் உலகங்களுடன் விளையாடுபவன். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸம்ப்ரயோஜ்ய வியோஜ்யாயம் காமகாரகர: ப்ரபு: க்ரீடதே பகவாந் – சேர்த்தும் பிரித்தும் இந்த ஜகத்தின் நாயகனான இவன் விளையாடுகிறான்,

- அப்ரமேயோ அநியோஜ்யச்ச யத்ரகாமகமோ வசீ மோததே பகவாந் விஷ்ணு: பால: க்ரீடநகைரிவ – அவன் யாருக்கும் அடங்காதவன். யாராலும் கட்டளையிட இயலாதவன். அவன் தனது விருப்பப்படி எங்கும் செல்ல இயலும். அனைத்தையும் தனது கட்டுப்பாட்டில் வைத்துள்ளவன். ஒரு குழந்தை எவ்விதம் விளையாட்டுச்சாமானை வைத்து விளையாடுமோ அது போன்று இவன் உலகை வைத்துக் கொண்டு விளையாடுகிறான்.

## 337. புரந்தர:

இந்த நாமம் தொடங்கி அடுத்த நான்கு நாமங்களால் அசுரர்கள் உள்ளிட்டவர்களிடமிருந்து இந்த உலகைக் காப்பது கூறப்பட்டுள்ளது. அஸுர்ரூபமாக உள்ள அஸுரர்களின் இருப்பிடம் உள்ளிட்ட பலவற்றையும் அழிப்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். இதன் மூலம் அசுரர்கள், பிசாசுகள், இடி, சாபம் போன்ற ஆதிதைவிகங்களிடமிருந்து ரக்ஷிக்கும் விதம் கூறப்பட்டது.

## 338. அசோக:

ஆத்யாத்மிகம் எனப்படும் சோகம், மோஹம், பசி போன்றவற்றிலிருந்து, அவைகளின் விரோதியாக நின்று காப்பதால் அசோக என்னும் திருநாமம் பெற்றான்.

## 339. தாரண:

ஆதிபௌதிகம் என்பதான சத்ருக்கள், கள்ளர்கள் போன்றவற்றிலிருந்து காப்பதால் தாரண என்னும் திருநாமம் பெற்றான்.

## 340. தார:

அனைத்துவிதமான ஸம்ஸார பயங்களிலிருந்தும் ஜீவராசிகளைக் காப்பவன். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- அதர்வசிரஸ் – கர்ப்ப ஜந்ம மரண ஸம்ஸாரஸாகர மஹாபயாத் தாரயதீதி தஸ்மாத் உச்யதே தார: - கர்ப்பம், பிறப்பு, இறப்பு, ஸம்ஸாரம் என்னும் மிகவும் பயங்கரமாக உள்ளவற்றிலிருந்து வெளியேற்றுபவன் என்பதால் தாரயந் எனப்படுகிறான்.

- சாந்தோக்ய உபநிஷத் (8-1-5) – அபஹதபாப்மா விஜாரோ விம்ருத்யு: - அவன் பாவங்கள் அற்றவனாக, கிழத்தன்மை அற்றவனாக, மரணம் அற்றவனாக உள்ளான்.

## 341. சூர:

வெல்லக்கூடிய தன்மை கொண்டவன் என்பதை இந்தத் திருநாமம் உணர்த்துகிறது. வெல்லும் ஸாமர்த்யம் கொண்டவன்.

## 342. சௌரி:

அவன் எந்தத் தன்மை காரணமாக தனது அடியார்களிடம் ஓடுகிறானோ அதனை உணர்த்துகிறது (அல்லது தனது மேன்மைகள் முழுவதையும் அடியார்களிடம் காண்பிக்கும் பொருட்டு அவர்களிடம் செல்வதைக் கூறுவதாகவும் கொள்ளலாம்). சூரனாகிய வஸுதேவரின் புத்திரன்.

## 343. ஜநேச்வர:

அனைத்தையும் முழுகும்படியாக ஜ்வலிக்கின்ற ஐச்வர்யம் என்னும் பிரவாகம் உடையவன். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 344. அநுகூல:

இப்படியாகப் பல மேன்மைகளைக் கொண்டுள்ளபோதும், இயல்பாகவே பெரியவனாக உள்ளதால் கர்வம், மதம், அபிமாநம் போன்றவை இல்லாமல் உள்ளான். இதனால் கரைபுரளாமல் உள்ளான். இதனை இராமாயணம் அயோத்யாகாண்டம் (1-13) – வீர்யாத் ந ச வீர்யேண மஹதா ஸ்வேந விஸ்மித: பவதபவ்யோ வா அநுகூல: - வீரனாக உள்ளபோதிலும் தனது வீரத்தைக் கண்டு இறுமாப்புடன் இருப்பதில்லை – என்பதன் மூலம் அறியலாம். தனது பக்தர்களிடம் இனிமையுடன் உள்ளவன் எனலாம். கீழே உள்ள வரிகள் காண்க:

- விஷ்ணுதர்மம் (3-23) – ஹஸ்தாவலம்பநோ ஹ்யேகோ பக்திக்ரீதோ ஜநார்தந: - பக்தியைக் கொண்டு விலைக்கு வாங்கப்பட்ட ஜநார்த்தனன், அதன் பின்னர் எதனையும் செய்வதாக இருப்பான்.

- விஷ்ணுபுராணம் (5-6-15) – யதி சக்நோஷி கச்ச த்வம் அதி சஞ்சல சேஷ்டித – யசோதை க்ருஷ்ணனிடம், “உனக்கு வலிமை இருந்தால் இந்தக் கட்டிலிருந்து உன்னை விடுவித்துக் கொள்”, என்றாள்.

## 345. சதாவர்த்த:

நூறு சுழிகளை உடையவன். ஆவர்த்த என்னும் பதம் மூலம் வெள்ளம் சுழிபடுவது போன்று இவனிடம் ஐச்வர்யங்கள் நிரம்பியுள்ளன என்பது கூறப்படுகிறது. அதாவது கரைபுரண்டு ஓடும்படியாக உள்ள தனது ஐச்வர்யங்களைக் கரைபுரளாமல் தடுத்துள்ளதன் காரணமாக, அந்த வெள்ளத்தில் உண்டாகும் சுழிகள் போன்று ஐச்வர்யங்கள் உள்ளன. சாந்தோதிதவிஜ்ஞாநப்ராணாய – சலனம் அற்ற நிலையும், ஓங்குகின்ற ஞானமும், ப்ராணனும் அவனுக்கே – என்றது காண்க.

## 346. பத்மீ

**குறிப்பு** – இதுவரை வாஸுதேவனின் குணங்கள் விவரிக்கப்பட்டன. இனி அவனது ரூபம் என்பது விவரிக்கப்படுகிறது.

தனது விளையாட்டிற்காகத் தாமரை மலரை வைத்துள்ளான். இதனால் பத்மீ எனப்படுகிறான்.

## 347. பத்மநிபேக்ஷண:

அழகும் தூய்மையும் நிறைந்த தாமரை அசைவது போன்று, தன்னுடைய அடியார்களின் துயரங்கள் தீரும்விதமாக குளிர்ந்த பார்வையைக் கொண்டுள்ளான்.

## 348. பத்மநாப: (48, 198)

அழகான தாமரை மலர் போன்ற திருநாபியைக் கொண்டவன்.

## 349. அரவிந்தாக்ஷ:

தாமரை போன்ற சிவந்த அழகான கண்கள் கொண்டவன்.

## 350. பத்மகர்ப்ப:

தனக்கு ஏற்றதான அழகான மென்மையான தாமரையில் வீற்றுள்ளவனாக த்யானிக்கப்படுகிறான். தன்னை உபாஸனை செய்பவர்களின் இதயம் என்னும் தாமரையில் வீற்றுள்ளான். கீழே உள்ள வரிகள் காண்க:

- தஹரம் விபாப்மம் பரவேசமபூதம் யத் புண்டரீகம் – எந்த ஒரு இதயத்தில் உள்ள தஹர ஆகாசம் என்னும் தாமரையானது பாவங்கள் இல்லாமல் அவன் அமர்கின்றதாக உள்ளதோ
- தஹரம் புண்டரீகம் வேச்ம – தஹர ஆகாசம் என்னும் தாமரை அவனது இருப்பிடமாக உள்ளது
- ஸரஸிஜாஸன ஸந்நிவிஷ்ட: - தாமரையைத் தனது இருப்பிடமாகக் கொண்டான்.

## 351. சரீரப்ருத்

இப்படி சுபமான அண்டத்தக்கதாக விளங்குகின்ற தனது குணங்கள் மூலம், தன்னுடைய சரீரமாகவே உள்ள தனது அடியார்களைப் போஷிப்பவன். தங்களால் உபாஸிக்கப்படும் அவனது குணங்கள் அல்லவோ அந்த அடியார்களுக்கு ஏற்றதாக உள்ளது? கீழே உள்ள வரிகள் காண்க:

- விஷ்ணுபுராணம் (3-7-24) – வஸதி ஹ்ருதி ஸநாதநே ச தஸ்மிந் பவதி புமாந் ஜகதஸ்ய ஸௌம்யரூப: - அந்தப் புராணபுருஷன் தனது இதயத்தில் வசிக்கும்போது, உபாஸகன் தனது இனிய உருவத்தை உலகிற்குக் காண்பிப்பான்.

- சாந்தோக்ய உபநிஷத் (4-14-2) – ப்ரஹ்மவித இவ ஸோம்ய தே முகம் பாதி – உனது சிஷ்யனின் முகமானது ப்ரஹ்மத்தைக் கண்டவன் முகம் போன்று ஜ்வலிக்கிறது.

உபாஸகன் ஒருவன் எம்பெருமானின் ஆத்மாவும் சரீரமும் போன்றே உள்ளான். ரக்ஷதே பகவாந் விஷ்ணு: பக்தாந் ஆத்மசரீரவத் – விஷ்ணு தனது அடியார்களைத் தன்னுடைய சரீரமும் ஆத்மாவும் போன்றே காக்கிறான் – என்றது காண்க.

விபூதியின் மேன்மை

(அடுத்த பத்து திருநாமங்கள்)

## 352. மஹர்த்தி:

அடியார்களின் யோகத்திற்கும் க்ஷேமத்திற்கும் பொருந்தும்படியான எல்லையற்ற விபூதிகளை (ஐச்வர்யங்கள்) உடையவன். இதனால் மஹர்த்தி எனப்பட்டான்.

## 353. ரித்த:

தனது அடியார்கள் செழித்தால் மட்டுமே தான் செழிப்படைந்ததாக எண்ணுபவன். இதனை இராமாயணம் - அபிஷிச்ய ச லங்காயாம் – இலங்கையில் விபீஷணன் முடிசூட்டிக் கொண்ட பின்னரே மகிழ்ச்சி அடைந்தான் – என்றது.

## 354. வ்ருத்தாத்மா

இப்படியாக உள்ள உயர்ந்த மேன்மைகளை ஒரே இடத்தில் அடக்கிக் கொள்ளும்படியாக மிகவும் வளர்ந்த திவ்யாத்ம ஸ்வரூபம் கொண்டவன். இதனால் வ்ருத்தாத்மா எனப்படுகிறான்.

## 355. மஹாக்ஷ:

பூஜிக்கத்தகுந்த ரதத்தின் அவயவத்தை உடையவன். இதன் மூலம் கூறப்படுவது என்ன? ரதத்தின் அவயவத்துடன் ஒத்தபடி உள்ளதால், அக்ஷம் என்று கூறப்படும் வேதமயனான கருடன் கூறப்படுகிறான். அந்தக் கருடனைத் தனது வாகனமாகக் கொண்டவன்.

## 356. கருடத்வஜ:

கருடனைத் தனது கொடியாகக் கொண்டவன். ஸர்வேச்வரன் என்பதற்கு இது முக்கியமான அடையாளம் ஆகும்.

## 357. அதுல:

மற்றவர்களின் உதவி ஏதும் இன்றி தானே ஒப்பற்றவனாக உள்ளான். ந தஸ்ய ப்ரதிமா அஸ்தி – அவனுடன் ஒப்பிட யாரும் இல்லாதவன்.

## 358. சரப:

சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள விதிகளை மீறுபவர்களைத் தண்டிப்பவன். க்ருச்ருசலிகலிகர்திப்யோ அபச் – சிதைப்பது என்னும் பொருள் கொண்ட க்ரு, அழிப்பது என்னும் பொருள் கொண்ட ச்ரு, அசைதல் என்னும் பொருள் கொண்ட சலி, ஒலிப்பது என்னும் பொருள் கொண்ட கல் ஆகியற்றுடன் அபச் என்பது சேர்கிறது.

## 359. பீம:

இப்படியாக விதிகளை மீறுபவர்களுக்கு அச்சத்தை உண்டாக்குவதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய ஆனந்தவல்லீ – பீஷா அஸ்மாத் வாத: பவதே – அவனிடம் உள்ள பயம் காரணமாகவே வாயுபகவான் காற்று வீசுகிறான்.

- கட உபநிஷத் (2-6-2) – யதிதம் கிஞ்ச ஜகத் ஸர்வம் ப்ராண ஏஜதி நிஸ்ஸ்ருதம் மஹத்பயம் வஜ்ரம் உத்யதம் – என்கும் வீசுகின்ற ப்ராணவாயு அனைத்தையும் வாழும்படி செய்கிறது. இவ்விதம் செய்யாவிட்டால் காப்பதற்காக வஜ்ராயுதம் ஓங்கியபடி உள்ளது.

- கட உபநிஷத் - பயாத் ஏவ அக்னிஸ்தபதி பயாத் தபதி ஸூர்ய: பயாத் இந்த்ரச்ச வாயுச்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம: - அவனிடம் உள்ள பயம் காரணமாகவே அக்னி, சூரியன், இந்த்ரன், வாயு, யமன் ஆகியோர் தங்கள் கடமைகளைச் சரிவர செய்கின்றனர்.

- ப்ரஹ்மஸூத்ரம் (1-3-40 – கம்பநாத் – சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதைச் செய்யவில்லை என்றால் பகவனால் தண்டனை உண்டாகும் என்ற எண்ணம் காரணமாகவே உலகம் நடுங்கியபடி உள்ளது.

## 360. ஸமயஜ்ஞ:

அக்னி முதலான வஸ்துக்கள் எப்போதும் மேல்நோக்கியே ஜ்வாலையை வீசும் என்பது போன்று, அனைத்து வஸ்துக்களின் தன்மைகளை உணர்ந்தவன். இதனால் ஸமயஜ்ஞன் எனப்படுகிறான். ஸூர்யசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வம் அகல்பயத் – சூரியன் மற்றும் சந்த்ரன்களை ஸ்ருஷ்டிக்கும்போது அவை முன்பு இருந்த ஒளியுடனே படைத்தான் – என்றது காண்க. அல்லது தனது அடியார்களுக்குத் தன்னையே அளிக்கின்ற ஸங்கல்பம் கொண்டவன்; அவர்களுக்கு அபயம் அளிப்பது என்னும் விரதம் பூண்டவன்.

## 361. ஹவிர் ஹரி:

பக்தர்கள் அளிக்கும் அவிர்பாகத்தை ஏற்பவன். சாந்தோக்ய உபநிஷத் (6-14-2) – தஸ்ய தாவத் ஏவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே – ஒருவன் எம்பெருமானை அடைவதில் உள்ள காலதாமதம் என்பது அவனது கர்மங்கள் முடியும்வரை மட்டுமே

ஆகும்; அதன் பின்னர் என்னை வந்து அடைகிறான். ச்ருதியில் ஒருவன் எந்தக் காலம் முடிய உலகில் வாழவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது என்பதை ஸர்வேச்வரன் அறிவான். அப்போது அவனை கர்மங்களிலிருந்து மீட்டு தன்னிடம் சேர்த்துக் கொள்கிறான். ஹரி என்றால் அடியார்களின் பாவங்களை அகற்றுபவன் என்று பொருள். ஹரியஷ்டகம் – ஹரிர்ஹரதி பாபாநி த்ருஷ்ட சித்தைரபி ஸ்ம்ருத: அநிச்சயா அபி ஸம்ஸ்ப்ருஷ்டோ தஹத்யேவ ஹி பாவக: - தீயமனம் கொண்டவர்களாக இருந்தாலும் ஸ்ரீஹரியை அண்டும்போது அவர்களின் பாவங்களை அவன் நீக்குகிறான்; தன்னை விருப்பதுடன் தொட்டாலும் அக்னி சுடுகின்றது அல்லவோ – என்றது காண்க. இங்கு "ஹரிர் ஹரி:" என்பது ஒரே திருநாமமாகக் கொள்ளப்படுகிறது. மஹாபாரதம் சாந்திபர்வம் (342-39) – இடோபஹூதம் கேஹேஷு ஹரே பாகம் க்ரதுஷு அஹம் வர்ணச்ச மே ஹரி: ச்ரேஷ்ட: தஸ்மாத் ஹரி: அஹம் ஸ்ம்ருத: - யாகங்கள் இயற்றும்போது "இட" என்னும் மந்த்ரத்தை உச்சரித்து அக்னியில் ஹோமம் செய்யும்போது, அந்த அவிர்பாகத்தைத் தனக்கு அளிக்கப்பட்டதாகவே ஸ்ரீஹரி ஏற்கிறான்; "ஹரி" என்னும் அக்ஷரங்கள் கொண்ட மந்த்ரங்கள் எனக்குப் பிரியமானவை; இதனால்தான் நான் எப்போதும் "ஹரி:" என்று நினைக்கப்படுகிறேன்.

லக்ஷ்மீ பதித்வம்

**குறிப்பு:** அடுத்து உள்ள 24 திருநாமங்கள் மூலம் ஸர்வேச்வரன் ஸ்ரீய:பதியாக உள்ள தன்மை கூறப்பட உள்ளது.

## 362. ஸர்வ லக்ஷண லக்ஷண்ய:

ஸாக்ஷாத் மஹாலக்ஷ்மியே எம்பெருமானை எப்போதும் ஆலிங்கனம் செய்தபடி உள்ளாள். இப்படிப்பட்ட ஸௌபாக்யம் அவனுக்கு உள்ளது. இதன் மூலமாக அவனது பெருமைகளை உணரவைக்கும் ஞானம் உண்டாகிறது. ஆகவே அவனது பெருமைகள் புரிகின்றன. கீழே உள்ள வரிகள் காண்க:

- த்யாயேத் கமலகர்ப்பாபம் தேவம் லக்ஷ்மீபதிம் தத: கமலாலய ஹேதீச விபூஷித கரத்வயம் – தாயின் கர்ப்பத்தை விட்டு அகலாமல் ஒரு சிசு எவ்விதம் தாய்க்கு

“தாய்மை” என்னும் தேஜஸ்ஸை அளிக்ககுமோ அது போன்று, எம்பெருமான் எப்போதும் மஹாலக்ஷ்மியுடன் உள்ளான் என்றே த்யானிக்கவேண்டும்; ஒரு திருக்கரத்தில் அவளது இருப்பிடமான தாமரை மலரையும், மற்றொரு திருக்கரத்தில் சக்கரத்தாழ்வானையும் ஏந்தியவனாக எம்பெருமானை த்யானிக்கவேண்டும்.

- தந்மநௌ ச புண்டரீகாக்ஷ ஸகலஸுக ஸௌபாக்ய வாரிதே – தாமரை போன்ற கண்கள் கொண்டவனே! அனைத்துவிதமான ஸௌபாக்யங்களுக்கும் கடல் போன்றவனே!

## 363. லக்ஷ்மீவான்

மஹாலக்ஷ்மியோடு அவன் எப்போதும் ஸம்பந்தம் கொண்டவனாகவே உள்ளான். கீழே உள்ளது காண்க:

த்வயம் தேவீபரிணயோ லீலயைவ ஸமர்ப்பயன்
ப்ரகாசயந் அநாதித்வம் ஆத்மநா ப்ரக்ருதே: ஸஹ
மத்கரை: அநுவித்தேயம் ப்ரக்ருதி: ப்ராக்ருதே: அஹம்
யத: அம் ஆச்ரிதச்ச அஸ்யா மூர்த்தி: மயி ஏததாத்மிகா

**பொருள்** – எம்பெருமான் மஹாலக்ஷ்மியை மணந்து கொள்ளும்போது இரண்டு சீர்வரிசைகளை அளித்தான். நீலமேகம் போன்ற நிறம் கொண்ட எம்பெருமான் யாருக்கும் கூறாத தனது தத்துவத்தை வெளியிட்டான். ”எனக்கு முடிவும் முதலும் இல்லை, நான் அநாதி; இது போன்று அனைத்து உலகிற்கும் காரணமான ப்ரக்ருதி என்பதற்கும் முடிவும், முதலும் இல்லை, அதுவும் அநாதி”.

## 364. ஸமிதிஞ்ஜய:

இது போன்றே இந்த உலகின் தந்தையான எம்பெருமான் ஜீவன்கள் விஷயத்தில் செய்கிறான். தனது புத்திரர்களுக்கு இடையே எவ்விதம் தந்தை ஒருவன் ஒற்றுமை உண்டாக்குவானோ அது போன்று ஜீவன்கள் விஷயத்தில் ஸுகம் அளித்து, தனது அடியார்கள் என்னும் விஷயத்தில் அவர்களுக்கு இடையில் மனஸ்தாபம் உண்டாகி

துயரம் விளைந்தால், அவற்றை விலக்குகிறான். அகில துக்க ஜய: - அனைவரின் துயரங்களையும் விலக்கி ஜயசீலனாக உள்ளான்.

## 365. விக்ஷர:

அடியார்களின் விஷயத்தில் தனது அன்பானது சிறிதும் குறையாமல் உள்ளதால் விக்ஷர: என்னும் திருநாமம் கொண்டான்.

## 366. ரோஹித:

தாமரைமலரின் உள்ளே இருக்கின்ற இதழ்களின் நிறத்தில், சிவந்த திருமேனியுடன் உள்ளான்.

## 367. மார்க்க:

உபாஸகர்கள் தன்னை எந்த நிறம் கொண்டவனாக த்யானிக்கிறார்களோ அந்த நிறத்தில் அவர்களுக்குத் தோன்றுபவன். வாஞ்சித: ஸித்தி ப்ரத: - அடியார்களின் விருப்பத்தை உடனே செயலாக்குபவன்.

## 368. ஹேது:

அடியார்கள் வேண்டிவற்றைச் செய்வதற்குக் காரணமாக உள்ளவன்.

## 369. தாமோதர:

வயிற்றின் மீது கட்டப்பட்ட கயிற்றை உடையவன் என்பதால் தாமோதரன் எனப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- தாமாநி லோகநாமாநி பாந்தி யஸ்யோதராந்தரே தேந தாமோதரோ தேவ – யாருடைய வயிற்றில் “தாம” எனப்படும் லோகங்கள் அனைத்தும் ப்ரகாசமாக உள்ளனவோ அந்தத் தேவனே தாமோதரன் எனப்படுகிறான்.

- மஹாபாரதம் உத்யோக பர்வம் (71-9) – தேவாநாம் ஸுகசம்ஸித்வாத் தாமாத் தாமோதரம் விது: - தேவர்களுக்கு எப்போதும் சுகம் (தாம) என்பதை அளிப்பதால் இவன் தாமோதரன் எனப்படுகிறான்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-6-20) – தத: ஸ தாமோதரதாம் ப்ரயயௌ தாம பந்தநாத் – யசோதையால் கயிறு கொண்டு வயிற்றில் கட்டப்பட்டதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

மஹாலக்ஷ்மியும் வியக்கும்படியாக இவனிடம் சாதுர்யங்கள் உள்ளபோதிலும், தனது அடியார்களிடம் கொண்டுள்ள வாத்ஸல்யம் காரணமாக யசோதையின் கயிற்றுக்குக் கட்டுப்பட்டான் என்று கருத்து.

## 370. ஸஹ:

அடியார்களால் கட்டப்படுவது (யசோதை), அதட்டப்படுவது (கம்ஸன்) மற்றும் நிந்திக்கப்படுவது (சிசுபாலன்) போன்ற பலவற்றையும் பொறுத்துக் கொள்பவன்.

## 371. மஹீதர:

இந்தப் பூமியின் பாரத்தை அவனே நீக்குவதால், இந்தப் பூமியைத் தாங்குபவன்.

## 372. மஹாபாக:

மிகுந்த ஸௌபாக்யம் கொண்டவன். நீளாதேவி தொடக்கமாக பதினாறாயிரம் தேவிமார்களும், திவ்யகன்னிகையான ருக்மிணியும், ஸத்யபாமாவும், ஜாம்பவதி தொடக்கமான நாய்ச்சிமார்களும் தாம் ஆசைப்பட்டு அடையும்படியான ஸௌபாக்யம் கொண்டவன் என்று கருத்து.

## 373. வேகவாந்

மனிதர்களைப் போன்று குழந்தையாக விளையாடுகின்ற நேரத்திலும் தனது உயர்ந்த ஐச்வர்யங்களுடன் கூடியவன். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 374. அமிதாசந:

எவ்விதம் கடந்த திருநாமத்தில் கூறப்பட்டபடி உள்ளான் எனலாம்? இந்திரனுக்கு என்று இடையர்கள் வைத்த பெருத்த ஆகாரத்தை அப்படியே கோவர்த்தன பர்வதமாக நின்று உட்கொண்டதால் ஆகும். விஷ்ணுபுராணம் (5-13-121) – தேவோ வா தாநவோ வா த்வம் – நீ தேவனா அல்லது அசுரனா – என்றது காண்க.

## 375. உத்பவ:

"தாமோதரம் பந்தஹரம்" என்று கூறுவற்கு ஏற்ப தன்னுடைய பந்தம் பற்றி (அதாவது இவன் கயிற்றால் கட்டப்பட்டது குறித்து) எண்ணுபவர்களின் ஸம்ஸார பந்தத்தை உடனே நீக்குவதால் ஸம்ஸாரம் நீக்கியவன் ஆகிறான்.

## 376. க்ஷோபண:

பந்தம் உண்டாகக் காரணமானவர்களையும் (அல்லது பந்தத்துக்கு உரியவர்களையும்), பந்தம் ஏற்படுத்துகின்ற ப்ரக்ருதியையும் திக்குமுக்காடச் செய்பவன்.

## 377. தேவ:

மாயை என்னும் பாசம் மூலமாக ஜீவர்களைக் கட்டுப்படுத்தி, காட்டில் கரடி – புலி – பன்றி போன்றவற்றை இழுத்துக் கொண்டு விளையாடுவது போன்று விளையாடுகிறான்.

## 378. ஸ்ரீகர்ப்ப:

இப்படியாக இன்பமான விளையாட்டுகளுடன் உள்ளவனாக, பெரியபிராட்டியாரை மனம் உவக்கும்படியாகச் செய்பவன். விஷ்ணோ: ஏஷா அநபாயிநீ – விஷ்ணுவை விட்டுப் பிரியாதவள் – என்றது காண்க.

## 379. பரமேச்வர:

இப்படியாகப் பெரியபிராட்டியார் தன்னுடன் மனம் மகிழ்ந்து இருக்கும் நிலையைப் பெற்றதால், தனது உயர்ந்த ஐச்வர்யங்களுக்கான பயனை அடைந்தவன். இராமாயணம் பாலகாண்டம் (77-33) – அதீவ ராம: சுசுப: அபிராமயா விபு: ஸ்ரீயா

விஷ்ணுரிவாமரேச்வர: - எங்கும் உள்ளவனாய் தேவர்களுக்கெல்லாம் ஈச்வரனான விஷ்ணு, பெரியபிராட்டியாருடன் கூடியவனாய் உள்ளது போன்று, இராமன் சீதையுடன் கூடியபடி இருந்தான் – என்றது காண்க.

## 380. கரணம்

தன்னை ஒருவன் அடைவதற்குத் தானே சிறந்த ஸாதனமாக உள்ளதால் கரணம் எனப்படுகிறான். அறிந்து கொள்வதற்குத் தேவையான காது, கண் முதலான இந்த்ரியங்களுக்கும், செயல்களைச் செய்வதற்குத் தேவையான கைகள், கால்கள் முதலானவற்றுக்கும் வேண்டிய திறன்களை அவன் அளித்துள்ளதால் கரணமாக உள்ளவன் என்றாகிறான். ஸுபால உபநிஷத் – சக்ஷுச்ச த்ரஷ்டவ்யம் ச நாராயண: ச்ரோத்ரம் ச ச்ரோதவ்யம் ச நாராயண: - கண்களும் கண்களால் காணப்படுபவையும் நாராயணனே; காதுகளும் காதுகளால் கேட்கப்படுவது நாராயணனே – என்றது.

## 381. காரணம்

மேலே கூறப்பட்ட இந்த்ரியங்களைக் கொண்ட ஒருவன், அந்த இந்த்ரியங்கள் மூலமாகத் தனது செயல்களைச் செய்ய உதவியாக உள்ளதால் இந்தத் திருநாமம் கொண்டான்.

## 382. கர்த்தா

அனைத்துச் செயல்களையும் செய்கின்ற கர்த்தாவாகிய எம்பெருமான் சுதந்திரமானவன் ஆவான். அந்தச் செயலைப் புரிவதற்கான அதிகாரமும், பலனைப் பெறுபவனும் ஜீவாத்மா ஆவான். ஜீவன் எவ்விதம் ஒரு செயலைச் செய்யும்போது, அதனால் உண்டாகின்ற இன்பத்தையும் துன்பத்தையும் தன்னுடையது என்று கொள்கிறானோ அது போன்றே எம்பெருமானும் ஜீவனின் நிலையைத் தனதாகவே கொள்கிறான். இதனைக் கீழே உள்ள வரிகளில் காணலாம்:

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (2-40) – வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துக்கித: உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி – தனது பிரஜைகளுக்கு உண்டாகும் துன்பத்தைக் கண்டு இராமன் அவர்களைக் காட்டிலும்

அதிகமாக வருந்தினான்; அவர்களுடைய இன்பத்தைக் கண்டு அவர்களின் தந்தையர்களைக் காட்டிலும் மகிழ்ந்தான்.

- தைத்திரீய ஆநந்தவல்லீ – பஹு ஸ்யாம் ப்ரஜாயேய – மகிழ்வுடன் கூடிய பிரஜைகளாக நான் பலவாகப் பிறப்பேன்.

எம்பெருமான் பிரஜைகளுடன் பொருந்தவில்லை என்றால், "நான் பிரஜையாக" என்பது பொருந்தாது.

## 383. விகர்த்தா

தன்னை ஆத்மாக்கள் பற்றவேண்டும் என்பதால் அவர்கள் போன்றே தன்னை ஆக்கிக் கொள்கிறான். இதனால் அவர்களைப் போன்றே தானும் சுகமும் துக்கமும் அடைவதாக்க் காண்பித்துக் கொள்கிறான். ஆனால் இதன் காரணமாக அவனது பெருமைக்கு எந்தவிதமான குறையும் உண்டாவதில்லை. அவனது சுகமும் துக்கமும் மற்றவர்களுக்காக உண்டாவதாக இருப்பதால் அவனுக்கு எந்தவிதமான குறையும் இல்லை. இவ்விதம் கொள்ளவில்லை என்றால், அவனது சுகத்துக்கோ துக்கத்துக்கோ என்ன மேன்மை உண்டாகும்?

## 384. கஹந:

இப்படியாக அனைவருடைய ஞானத்திற்குக் காரணமாகவும், சுகதுக்கங்களுக்கு ஸாதனமாகவும், அவர்களைக் காட்டிலும் வேறுபடாதவனாகவும், அவர்கள் போன்றே தன்னை அவர்கள் எண்ணும்படியான சாமர்த்யம் உள்ளவனாகவும், அறிந்து கொள்ள இயலாத குணங்களைக் கொண்டவனாகவும் உள்ளதால் கஹந எனப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய ஆரண்யகம் (3-2-4) – ஸஹைவ ஸந்தம் ந விஜாநந்தி தேவா: - தேவர்கள் எப்போதும் எம்பெருமானுடனேயே உள்ளபோதிலும் அவனது மேன்மைகளை முழுமையாக உணர்வதில்லை.

- ய: ப்ருதிவ்யாம் திஷ்டந் – யாரை இந்த ப்ரக்ருதி அறியாமல் உள்ளதோ என்பதான பல வரிகள் காண்க

- ஸுபால உபநிஷத் - சக்ஷுச்ச த்ரஷ்டவ்யம் ச நாராயண: - கண்களும் கண்களால் காணப்படுபவையும் நாராயணனே

- கீதை (18-14) – அதிஷ்டானம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம் விவிதா: ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் – செயல்கள் நடைபெற ஆதாரமாக உள்ள சரீரம், அவற்றைச் செய்யும் கர்த்தா, அவற்றுக்குப் பயன்படும் ஸாதனங்கள், அவற்றுக்கான முயற்சி, பரமாத்மா ஆகிய ஐந்தும் செயல்களை செய்ய அவசியம்.

## 385. குஹ:

இப்படியாக அனைவரையும் அவன் காப்பாற்றுவதால் குஹ என்னும் திருநாமம் கொண்டான்.

## 386. வ்யவஸாய:

**குறிப்பு:** அடுத்துள்ள ஐந்து திருநாமங்கள் எம்பெருமானின் அம்சமான துருவன் பற்றி உள்ளதாகும்.

நக்ஷத்திரங்கள் போன்ற ஜ்யோதிகள் பலவும் துருவனிடம் உறுதியாகக் கட்டப்பட்டுள்ளது போன்று இருப்பதால், அந்த துருவ நக்ஷத்திரமானது ஜ்யோதிகளாக உள்ள மற்ற நக்ஷத்திரங்களும் கிரஹங்களும் நகரக் காரணமாக உள்ளது. நக்ஷத்திரங்கள் அனைத்திற்கும் ஆதாரமாக உள்ள ஆகாயம் என்பது எம்பெருமானின் சரீரம் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். ககநமூர்த்தயே - ஆகாயத்தைச் சரீரமாக உடையவனே என்ற மந்த்ரம் காண்க. பவ சக்ரப்ருதம் தேவம் – உலகங்கள் என்னும் பல சக்கரங்களைத் தாங்கும் தேவன் – என்பதும் காண்க.

## 387. வ்யவஸ்தாந:

கலை, முகூர்த்தம் போன்ற பல பிரிவுகளைக் கொண்ட காலம் என்பது அவனையே மூலகாரணமாகக் கொண்டுள்ளது. இதனால் இந்தத் திருநாமம் பெற்றான்.

**குறிப்பு:** கலை என்றால் இரண்டு நிமிடங்கள். முகூர்த்தம் என்றால் 2 மணி, 48 நிமிடங்கள். இது தவிர காலமானது பகல், இரவு, வாரம், பக்ஷம், மாதம், ருது (இரண்டு மாதங்கள்), அயநம் (ஆறு மாதங்கள்), வருடம், யுகம் போன்று பலவாகப் பிரிக்கப்பட்டுள்ளன. நான்கு யுகங்கள் = க்ருதயுகம் (1728000 வருடங்கள்), த்ரேதாயுகம் (1296000 வருடங்கள்), துவாபரயுகம் (864000 வருடங்கள்), கலியுகம் (432000 வருடங்கள்).

## 388. ஸம்ஸ்தாந:

அனைத்தும் இறுதியாக எம்பெருமானையே அடைவதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 389. ஸ்தாநத:

பரமபத ப்ராப்தி ஹேதவே – அனைத்தையும் விட உயர்ந்த பரமபதத்தை அளிப்பதற்குக் காரணமாக உள்ளவன் – என்றது காண்க. இதனால் ஸ்தாநத: என்னும் திருநாமம் பெற்றான்.

## 390. த்ருவ:

உயர்ந்த பரமபதம் அளிக்கும் அவன், அதற்கும் கீழே உள்ள பல இடங்களையும் ஸ்திரமாக வைத்துள்ளான். இதனால் த்ருவ: என்னும் திருநாமம் பெற்றான். அதாவது அவன் அனைத்து இடங்களிலும் வ்யாபித்துள்ளான் என்பதே அவனைப் பற்றிய தத்துவம் ஆகும்.

## ராமாவதாரம்

## 391. பரமர்த்தி:

ஸர்வேச்வரனாகிய பரமபுருஷனின் அனைத்து கல்யாண குணங்களும் ஸ்ரீராமனிடம் அதிகமாக உள்ளதால் அவன் பரமர்த்தி எனப்படுகிறான். அனைவரிலும் மேம்பட்டவனாகிய இராமனுக்கு சந்த்ரன் உள்ளிட்ட பலரும் உதாரணமாக வர்ணிக்கப்பட்டனர். இந்த வரிகளைக் கீழே காண்க:

- இராமாயணம் பாலகாண்டம் – விஷ்ணுநாம் ஸத்ருசோ வீர்யே ஸோமவத் ப்ரியதர்சந: - வீர்யத்தில் இராமனுக்கு நிகரான தேவதை ஏதும் இல்லை, ஆகவே அவனை விஷ்ணுவிற்கு நிகராக உரைத்தார்.

- இராமாயணம் யுத்தகாண்டம் – ஏதத் தத் உக்தம் அவ்யக்தம் அக்ஷரம் ப்ரஹ்மஸம்மிதம் தேவாநாம் ஹ்ருதயம் ஸௌம்ய க்ருஹ்யம் ராம: பரந்தப: - இப்படியாக உரைக்கப்பட்ட ராமதத்வம் என்பது யாராலும் எளிதில் அறிய இயலாததாகும். அது எந்தவிதமான தோஷமும் இல்லாத ஒன்றாகும். ப்ரஹ்மத்திற்கு நிகரானதாகும். தேவர்களின் இதயத்தில் எப்போதுமே இருப்பதாகும். எதிரிகளை வாட்டமுறச் செய்வதாகும்.

- இராமாயணம் அயோத்யாகாண்டம் – பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே – தசரதனே! உனது புத்திரனான இராமனிடம் அனைத்து கல்யாண குணங்களும் பொருந்தியுள்ளன.

இராமனைப் பற்றிய மந்த்ரங்களில் “பகவதே” என்றுள்ளதைக் காண்க.

## 392. பரமஸ்பஷ்ட:

மிகவும் தெளிவாக உள்ள மேன்மை கொண்டவன். அவனது மேன்மையை ப்ரத்யக்ஷமாகக் காணும்படி உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் யுத்தகாண்டம் – வ்யக்தமேஷ மஹாயோகோ பரமாத்மா ஸநாதந: - இராவணன் இறந்து கிடக்கும்போது அருகில் அமர்ந்திருந்த மண்டோதரி, “இராமன் மஹாயோகி, பரமாத்மா, எப்போதும் உள்ளவன்”, என்று கூறியது காண்க.

- இராமாயணம் அயோத்யாகாண்டம் – ஸூர்யஸ்யாபி பவேத் ஸூர்ய: - சூரியனுக்கும் ப்ரகாசம் அளிக்கும் சூரியனாக உள்ளவன் இராமன்.

## 393. துஷ்ட:

எப்போதும் மகிழ்வுடன் உள்ளவன். இராமன் கூறுவது: நான் இந்த உலகைக் காக்க அவதரித்தவன் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆனால் நான் என்னை தசரதனின் புத்திரனாக ஒரு சாதாரண மனிதனாகப் பிறந்ததையே எண்ணுகிறேன். இப்படியாக இருந்து உலகை உயர்த்துவதையே எனது மகிழ்ச்சிக்குக் காரணம் என்று கொள்கிறேன்.

- இராமாயணம் பாலகாண்டம் – பிதரம் ரோசயாமாஸ ஸதா தசரதம் ந்ருபம் – தசரதனைத் தனது தந்தையாக ஏற்றதை எண்ணி மகிழ்ந்தான்

- இராமாயணம் அயோத்யாகாண்டம் – குலோசிதமதி: க்ஷாத்ரம் தர்மம் ஸ்வம் பஹு மந்யதே – தான் அவதரித்த க்ஷத்ரிய குலத்திற்கு ஏற்ற ஸங்கல்பம் கொண்டவனாக, அந்தக் குலத்தில் அதிக மதிப்புடன் இருந்தான்.

- இராமாயணம் யுத்தகாண்டம் – ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம் – நான் என்னை சாதாரண மனிதனாகவும், தசரதனின் புத்திரனாகவும் மட்டுமே எண்ணுகிறேன்.

## 394. புஷ்ட:

இப்படியாகப் பல உன்னதமான குணங்களால் பரிபூர்ணமாக எம்பெருமான் இருந்தான். இதனால் அவன் புஷ்ட: என்னும் திருநாமம் பெற்றான். இராமாயணம் பாலகாண்டம் –

தமேவம் குணஸம்பந்நம் – இப்படியாகக் கல்யாண குணங்கள் கொண்டவன் – என்றது காண்க.

## 395. சுபேக்ஷண:

ஐச்வர்யம், சீலம் ஆகிய குணங்களை வெளிப்படுத்துவதும், குளிர்ச்சி உடையதும், அகலமானதும், வேண்டியவற்றை அளிப்பதும், கூர்மையானதும், தாமரை போன்று சிவந்து அழகானதும் ஆகிய கண்களைக் கொண்டவன் இராமன் ஆவான்.

இராமாயணம் அயோத்யாகாண்டம் – ஸுப்ரு: ஆயத தாம்ராக்ஷ: ஸாக்ஷாத் விஷ்ணுரிவ ஸ்வயம் – இராமன் அழகான புருவங்களைக் கொண்டவன், அழகான கண்களைக் கொண்டவன், இதனால் விஷ்ணு என்றே கூறும்படியாக உள்ளவன். தன்னுடைய தோற்றம், தான் மற்றவர்களைக் காணும்போது உண்டாகும் மேன்மை ஆகியவற்றின் காரணமாகத் தனது மனதிற்கும் அவன் தானே மகிழ்வை அளிப்பதால் சுபேக்ஷண: எனப்படுகிறான். இராமாயணம் அயோத்யாகாண்டம் – யச்ச ராமம் ந பச்யேத்து யம் ச ராமோ ந பச்யதி – யார் ஒருவன் இராமனைக் காண்பதில்லையோ, யார் ஒருவனை இராமன் காண்பதில்லையோ அவன் அனைவராலும் ஒதுக்கப்படுகிறான்.

## 396. ராம:

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (53-1) – ரம்யதே அஸ்மின் ஸதா ஸர்வை: குணரூப வசீக்ருதை: - திருக்கல்யாண குணங்கள், திருமேனியின் எழில் ஆகியவற்றால் பரவசம் அடைந்த அனைவருக்கும் எப்போதும் இராமனால் ஆனந்தம் கிட்டுகிறது.

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (53-1) – ராமோ ரம்யதாம் ச்ரேஷ்ட: - மற்றவர்களை மகிழும்படிச் செய்வதில் சிறந்தவன் இராமன்

- மஹாபாரதம் ஸபாபர்வம் (58-42) – குணாபிராமம் ராமம் ச – சிறந்த குணங்கள் நிரம்பியுள்ளதால் அனைவரையும் மகிழும்படிச் செய்யும் இராமன்

- ச்யாமோ யுவா லோஹிதாக்ஷோ மாதங்காநாம் இவ ரிஷப: - மழைமேகம் போன்று நிறம் கொண்டவனும், இளம் வயதில் உள்ளவனும், தாமரை போன்ற அழகான கண்கள் கொண்டவனும், யானைகளின் நடுவே உள்ள ஆண் யானை போன்றவனும் ஆகிய இராமன்

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (1-33) – ததா ஸர்வப்ரஜாகாந்தை: ப்ரீதிஸஞ்ஜநநை: பிது: குணைர்விருருசே ராமோ தீப்த: ஸூர்ய இவாம்சுபி: - தனது நாட்டு மக்களால் மிகவும் விரும்பப்படுபவனும், தசரதனுக்கு மகிழ்வை அளிப்பவனும், சிறந்த கல்யாண குணங்கள் கொண்டவனும் ஆகிய இராமன் தனது தேஜஸ் மூலம் சூரியன் போன்று ஒளியுடன் நின்றான்

- சரத் இந்தீவரத்விஷே அபிராம சரீராய – இராமனின் திருமேனி சரத் காலத்தில் தோன்றிய நீலோத்பல மலர்கள் போன்று மனதைக் கவர்வதாக இருந்தது.

## 397. விராம:

பலவிதமான வரங்களை அளிப்பவர்களான நான்முகன் உள்ளிட்டவர்களாலும், அழிக்க இயலாத வரங்களாலும், அப்படிப்பட்ட வரங்களைப் பெற்ற இராவணன் போன்ற அரக்கர்களாலும் அவனுக்கு எதிராக ஏதும் செய்ய இயலாதபடி உள்ளதால் விராம என்னும் திருநாமம் பெற்றான். இராமாயணம் ஸுந்தரகாண்டம் (51-45) – ப்ரஹ்மா ஸ்வயம்பூ: சதுராநநோ வா – மற்றவர்களால் படைக்கப்படாமல் தானாகவே தோன்றும் நான்முகனாக இருந்தாலும் (இராமன் ஒருவனை அழிப்பது என்று முடிவு செய்தால் காப்பாற்ற இயலாது).

## 398. விரத: மார்க:

தன்னுடைய இயல்பாகவே எதிலும் ஆசையில்லாமலும், ராஜ்யம் முதலானவற்றில் விருப்பம் இல்லாமலும், மற்றவர்களால் தேடப்படுபவனாகவும் உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (19-32) – ந ச அஸ்ய மஹதீம் லக்ஷ்மீம் ராஜ்யநாச: அபகர்ஷதி லோககாந்தஸ்ய காந்தத்வாத் சீதரச்மே: இவ க்ஷபா – இராமனின் திருமுகத்தில் லக்ஷ்மீ என்னும் சோபை அதிகமாக உள்ளது. ராஜ்யம் கைவிட்டுப் போனாலும் அந்த சோபையை நீக்க இயலாது. உலகிற்கு ஒளியை அளிக்கவல்லதும், காண்பவர்களுக்கு குளிர்ச்சியை அளிக்கவல்லதும் ஆகிய சந்த்ரனின் சோபையை இருல் எவ்விதம் நீக்க இயலும்.

- ஸ பிதுர்வசநம் ஸ்ரீமாந் அபிஷேகாத் பரம் ப்ரியம் – வனவாசம் செய்வதற்கு அனுமதி அளித்த தசரதனின் சொற்கள் பட்டாபிஷேகம் என்பதைக் காட்டிலும் இராமனுக்கு மிகவும் ப்ரியமாக இருந்தன.

- இராமாயணம் ஸுந்தரகாண்டம் (36-29) – தர்மாபதேசாத் த்யஜதச்ச ராஜ்யம் மாம் சாப்யரண்யம் நயத: பதாதிம் – தர்மத்தின் வழியைக் கடைப்பிடிக்க எண்ணியவராக ராஜ்யத்தைத் துறந்து, மென்மையான சரீரம் கொண்ட என்னை அடர்ந்த கானகத்தில் நடத்தியபடி வந்தார் (இதனால் எனக்கு வருத்தம் உண்டாகவில்லை)

பரத்வாஜர் உள்ளிட்ட முனிவர்களால் மிகவும் ஆர்வத்துடன் நாடப்பட்ட காரணத்தால் மார்க என்னும் திருநாமம் பெற்றான். விரஜோ மார்க: என்னும் பாடமும் உண்டு. இப்படிக் கொண்டால், தன்னைச் சரணம் அடைந்தவர்களுக்கு தோஷம் அற்ற மார்க்கத்தைக் காண்பிப்பவன் என்று பொருள். கீழே உள்ள வரிகள் காண்க:

- யா கதிர்யஜ்ஞசீலாநாம் ஆஹிதாக்நேச்ச யா கதி: - யஜ்ஞங்கள் இயற்றுவோரின் உயர்ந்த கதி, ஐந்து அக்னியை வைத்து வழிபடுவோரின் கதி

- இராமாயணம் ஸுந்தரகாண்டம் (17-8) – ஆவஹத் பரமாம் கதிம் – ஜடாயு! நீ நான் கூறும் மார்க்கத்தை அடைவாயாக.

## 399. நேய:

தனது நண்பர்கள் வழங்கும் ஆலோசனைகளுக்குச் மதிப்பு அளிப்பவன். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- இராமாயணம் ஆரண்யகாண்டம் – ஆஜ்ஞாப்ய: அஹம் தபஸ்விநாம் – முனிவர்களே! உங்களது துன்பம் பற்றி எனக்குக் கூறவேண்டாம், ஆணையிடுங்கள்

- இராமாயணம் ஆரண்யகாண்டம் – ஆவாஸம் து அஹமிச்சாமி ப்ரதிஷ்டம் இஹ காநநே – இந்தக் கானகத்தில் நான் எங்கு தங்கவேண்டும் என்று நீங்கள் கூறுகிறீர்களே அங்கு நான் தங்குகிறேன்.

- இராமாயணம் யுத்தகாண்டம் – ஸுஹ்ருதாம் ஸர்வக்ருச்ரேஷு யுக்தம் புத்திமதா ஸதா ஸமர்த்தநாபி ஸந்தேஷ்டும் சாஸ்வதீம் பூதிமிச்சதா – ஒருவன் மிகவும் சிறந்த புத்தி உள்ளவனாகவும், சிறந்த எண்ணம் கொண்டவனாகவும், மற்றவர்களின் துன்பங்களை நீக்கவல்லவனாகவும் இருக்கக்கூடும். அப்படிப்பட்டவன் தனது நண்பர்களுக்கு உண்டாகவல்ல துன்பங்களை தனது ஸாமர்த்யத்தால் நீக்குவதே சிறந்தது. மேலும் அவர்களின் துன்பங்களை நீக்கி ஐச்வர்யம் கிட்டும்படிச் செய்தால் மேலும் சிறப்பானது.

- மஹாபாரதம் ஸபாபர்வம் (33-25) – யஜஸ்வ அபீப்ஸிதம் யஜ்ஞம் மயி ச்ரேயஸி அவஸ்திதே நியுங்க்ஷ்வச அபி மாம் க்ருத்யே ஸர்வம் கர்த்தாஸ்மி தே வச: - க்ருஷ்ணன் தர்மரிடம், “நான் உங்களுக்கு நன்மையைச் செய்பவனாக உள்ளேன். ஆகவே நீங்கள் உங்களுக்கு விருப்பமானவற்றைச் செய்யுங்கள். உங்களுக்கான உதவி தேவைப்படும்போது என்னையும் உங்களுடன் சேர்த்துக் கொள்ளுங்கள். உங்களுடைய சொற்களைக் கேட்டு நான் அப்படியே செய்கிறேன்”, என்றான்.

- மஹாபாரதம் உத்யோகபர்வம் – அயமஸ்மி மஹாபாஹோ வ்ரூஹி யத் தே விவக்ஷிதம் கரிஷ்யாமீஹ தத் ஸர்வ யத் த்வம் வக்ஷ்யஸி பாரத – நீண்ட புஜங்கள் கொண்டவனே! பாரத குலத்தில் வந்தவனே! நீ எதனைச் செய்ய எண்ணுகிறாயோ

அதனைச் செய்ய நான் தயாராக உள்ளேன். உன்னுடைய கட்டளைகளை ஏற்கிறேன்.

- இராமாயணம் யுத்தகாண்டம் – வாயுஸூநோ: ஸுஹ்ருத்வேந பக்த்யா பரமயா ச ஸ: சத்ரூணாம் அப்ரகம்ப்ய: அபி லகுத்வம் அகமத் கபே: - லக்ஷ்மணன் இராவணனால் அடிபட்டு விழுந்தவுடன் அவனை இராவணன் தூக்கிச் செல்ல முயன்றான். அவனால் இயலவில்லை. ஆனால் அனுமனோ லக்ஷ்மணன் மீது கொண்டுள்ள அன்பின் காரணமாக ஒரு குழந்தையைத் தூக்குவது போன்று எளிதாக தூக்கிச் சென்றான்.

## 400. நய:

அனைவரையும் தனது குணங்களால் தன் பக்கம் இழுத்துக் கொள்வதால் இத்திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் ஆரண்யகாண்டம் – ரக்ஷிதவ்யா: த்வயா சச்வத் கர்யபூதா: தபோதநா: - தவத்தை மட்டுமே பெரும் செல்வமாகக் கொண்டுள்ள நாங்கள் தாயின் வயிற்றில் உள்ள சிசு போன்று உன்னால் காக்கப்பட வேண்டியவர்கள்

- மஹாபாரதம் ஸபாபர்வம் – பாண்டவாநாம் பவாந் நாதோ பவந்தம் ச ஆச்ரிதா வயம் – பாண்டவர்களாகிய எங்களுக்கு நீதானே ரக்ஷகன். உன்னை அண்டிய எங்களைக் காக்கவேண்டும்.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், ஸ்ரீரங்கநாதனின் தெய்வீக ஆணையால் ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச்செய்த பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், நான்காவது நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.

ஐந்தாவது நூறு தொடக்கம்

## 401. அநய:

அனைவரையும் மேலே கூறியபடி தன்னிடம் இழுத்துக் கொள்பவன். ஆனால் விரோதிகளால் தங்கள் பக்கம் இழுத்துக் கொள்ள இயலாதவன் என்பதால் "அ நய:" என்று திருநாமம் கொண்டான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் யுத்தகாண்டம் (59-110) – ஹிமவாந் மந்தரோ மேரு: த்ரைலோக்யம் வா ஸஹாமரை: சக்யம் புஜாப்யாம் உத்தர்த்தும் ந ஸங்க்யே பரதாநுஜ: - இமயமலை, மந்தர மலை, மேரு மலை, மூன்று உலகங்கள் போன்ற பலவற்றையும் தனது தோள்களால் தூக்கும் வலிமை பெற்ற இராவணனால், யுத்தத்தில் அடிபட்டுக் கிடந்த பரதனின் சகோதரனைத் (லக்ஷ்மணன்) தூக்க இயலவில்லை.

- அய: சுபாவஹோ விதி: - அய: என்றால் சுபத்தை கொண்டுவரும் வஸ்து என்று பொருள். பகவானைத் தவிர வேறு யாரும் சுபத்தைக் கொண்டு வர இயலாது என்பதால் அநய: என்று திருநாமம்

- இராமாயணம் அயோத்யாகாண்டம் – ஏதே வயம் ஸர்வைஸம்ருத்தகாமா யேஷாமயம் நோ பவிதா ப்ரசாஸ்தா – அவன் நம்முடைய எஜமானனாகவும், ரக்ஷகனாகவும் உள்ளதால் நமது விருப்பங்கள் அனைத்தும் கைகூடும்படி உள்ளன.

## 402. வீர: (665)

அரக்கர்களைப் பயந்து ஓடுவதற்குக் காரணமாக உள்ளதால் வீர: என்னும் திருநாமம் கொண்டான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் யுத்தகாண்டம் (60-3) – ப்ரஹ்மதண்ட ப்ரகாசாநாம் வித்யுத்ஸத்ருச வர்சஸாம் ஸ்மரந் ராகவபாணானாம் விவ்யதே ராக்ஷஸேச்வர: - நான்முகனின்

தண்டம் போன்றும், மின்னல் போன்று ஒளியுள்ளதும் ஆகிய ராமபாணங்களை எண்ணிய மாத்ரத்திலேயே அரக்கர்களின் அரசனான இராவணன் கலங்கினான்.

- இராமாயணம் யுத்தகாண்டம் (60-2) – மாதங்க இவ ஸிம்ஹேந கருடேநேவ பந்நக: அபிபூத: அபவத்ராஜா ராகவேண மஹாத்மநா – சிங்கத்தைக் கண்ட யானை பயந்து ஓடுவது போன்றும், கருடனைக் கண்ட நாகம் பயந்து ஓடுவது போன்றும் மஹாத்மாவான இராமனைக் கண்டு இராவணன் அச்சம் கொண்டான்.

- இராமாயணம் ஆரண்யகாண்டம் (39-14) – வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ணாஜிதாம்பரம் க்ருஹீத தநுஷம் ராமம் பாசஹஸ்தமிவ அந்தரகம் – இராவணனிடம் மாரீசன், "இங்கு காணப்படும் ஒவ்வொரு மரத்திலும் நான் மரவுரியும் க்ருஷ்ணாஜினம் என்னும் மான்தோலும் அணிந்த இராமனைக் காண்கிறேன். தனது கைகளில் வில்லுடன் கூடிய இராமனை நான் பாசக்கயிற்றுடன் நிற்கும் யமனாகவே காண்கிறேன்", என்றான்.

## 403. சக்திதாம் ச்ரேஷ்ட:

சக்தியை உடைய தேவர்களாலும் கொண்டாடப்படுபவன். இப்படியாகவே பரசுராமன் (இராமாயணம் பாலகாண்டம் 76-17) – அக்ஷய்யம் மதுஹந்தாரம் ஜாநாமி த்வாம் ஸுரேச்வரம் – மது என்னும் அரக்கனை அழித்த தேவனாகவே உன்னைக் காண்கிறேன் – என்றது காண்க. மேலும் கீழே உள்ள பல வரிகள் காண்க:

- இராமாயணம் யுத்தகாண்டம் (120-6) – கதம் தேவகண ச்ரேஷ்ட நாத்மாநம் அவபுத்யஸே – நான்முகன் இராமனிடம், "உன்னைப் பற்றி நீயே ஏன் தெரிந்து கொள்ளவில்லை?", என்றான்.

- இராமாயணம் ஸுந்தரகாண்டம் (51-44) – தேவாச்ச தைத்யாச்ச நிசாசரேந்த்ர கந்தர்வ வித்யாதர நாகயக்ஷா: ராமஸ்ய லோகத்ரய நாயகஸ்ய ஸ்தாதும் ந சக்தா: ஸமரேஷு ஸர்வே – அனுமன் இராவணனிடம், "அரக்கர்களின் அரசனே! தேவர்கள், அசுரர்கள், கந்தர்வர்கள், வித்யாதரர்கள், நாகர்கள், யக்ஷர்கள் என்று

யாராக இருந்தாலும், மூன்று உலகங்களுக்கும் நாயகனான இராமனை எதிர்த்து யுத்தத்தில் நிற்க இயலாது", என்றான்.

- இராமாயணம் ஸுந்தரகாண்டம் (51-40) – ஸர்வாந் லோகாந் ஸ ஸம்ஹ்ருத்ய ஸம்ஹ்ருதாந் ஸசராசராந் புநரேவ ததா ஸ்ரஷ்டும் சக்தோ ராமோ மஹாசரை: - இராமனால் தனது பாணங்கள் மூலமாக, அசையும் மற்றும் அசையாப் பொருள்கள் நிறைந்த இந்த உலகில் உள்ள அனைத்தையும் அழித்து, படைக்கவும் இயலும்.

## 404. தர்ம:

அனைத்து ஜீவராசிகளுக்கும் அவற்றின் நன்மைகள் மற்றும் இன்பங்களை அளிப்பதால் இந்தத் திருநாமம் கொண்டான். உணாதி பாதம் – அஸ்திஸ்து ஸுஹுஸ்ருத்ருக்ஷிக்ஷு பாயாவாபதியக்ஷிநீப்யோ மந் – அர்த்தி, ஸ்து, ஸு, ஹு, ஸ்ரு, த்ரு, க்ஷி, க்ஷு, பா, யா, வா, பதி, யக்ஷ, நீ போன்ற தாதுக்களைத் தொடர்ந்து மந் என்னும் ப்ரத்யயம் உண்டாகும் – என்னும் சூத்திரத்திற்கு ஏற்ப த்ரு என்பதன் பின்னே மந் இணைந்து தர்ம என்றானது. இது போன்றே ஸோம: (507) உள்ளிட்ட திருநாமங்கள் உள்ளன. நான்முகன் – தமேவ ப்ரஹ்ம ப்ரஹ்மவிதாம் வர: ......லோகாநாம் த்வம் பரோ தர்ம: - ப்ரஹ்மவித்துக்களின் தலைவனை .... நீயே உயர்ந்த தர்மம் ஆகிறாய் – என்றான்.

- இராமாயணம் யுத்தகாண்டம் (120-14) – தர்மாத்மா ஸத்யஸந்தச்ச ராமோ தாசரதிர்யதி பௌருஷே ச அப்ரதித்வந்த்வ: சரைநம் ஜஹி ராவணிம் – லக்ஷ்மணன், "ஏ பாணமே! தசரதனின் புத்திரனாகிய இராமன் தர்மம் மிக்கவனாகவும், ஸத்யமே வடிவம் கொண்டவனாகவும், ஈடில்லாத பராக்ரமம் கொண்டவனாகவும் இருப்பது உண்மை என்றால், நீ சென்று இராவணனின் மகனான இந்த்ரஜித்தை அழிப்பாயாக", என்றான்.

- மஹாபாரதம் ஆரண்யபர்வம் (88-25) – யே ச வேதவேதோ விப்ரா: யே ச அத்யாத்மவிதோ ஜநா: தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்ம ஸநாதநம் – வேதங்களை அறிந்த அந்தணர்கள், ப்ரஹ்மத்தை அறிந்தவர்கள் போன்ற பலரும் க்ருஷ்ணனையே எப்போதும் நிலையாக உள்ள தர்மம் என்று கூறுகின்றனர்.

- மஹாபாரதம் வநபர்வம் (88-24) – புண்யா த்வாரவதீ தத்ர யத்ராஸ்தே மதுஸூதந: - துவாரகை மிகவும் புண்ணியமானது, ஏனென்றால் அங்குதான் மது என்னும் அரக்கனை அழித்த க்ருஷ்ணன் உள்ளான்.

- மஹாபாரதம் ஆரண்யபர்வம் (88-24) – ஸாக்ஷாத் தேவ: புராண: அஸௌ ஸ ஹி தர்ம: ஸநாதந: - அவனே மிகவும் பழமையானவன், அவனே தர்மம் ஆவான்.

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (2-29) – ஸாக்ஷாத் ராமாத் விநிர்வ்ருத்த: தர்மச்சாபி ச்ரியா ஸஹ – தர்மம் என்பது செல்வத்துடன் கூடியதாக இராமனையே அடைந்தது.

## 405. தர்மவித் உத்தம:

தர்மங்களை நன்றாக அறிந்தவர்களில் முதன்மையானவன். தர்மங்களைக் குறித்த ஞானத்தில் சிறந்தவர்களான வசிஷ்டர், வாமதேவர், மார்க்கண்டேயர் போன்றவர்களின் சிஷ்யனாக இருந்தபோதிலும், இவனிடம் அவர்கள் தர்மங்களைக் கேட்டு அறியும்படியாக உயர்ந்தவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் பாலகாண்டம் (1-56) – யதா ஸர்வதா அபிகத: ஸத்பி: ஸமுத்ர இவ ஸிந்துபி: - கடல் எவ்விதம் நதிகளால் சூழப்பட்டும் அண்டப்பட்டும் உள்ளதோ அது போன்று, பெரியவர்களால் சூழப்பட்டபடி இராமன் உள்ளான்.

- இராமாயணம் பாலகாண்டம் (1-12) – தர்மஜ்ஞ: ஸத்யஸந்தச்ச – தர்மத்தை அறிந்தவன், ஸத்யம் என்னும் தர்மத்தை எப்போதும் கடைபிடிப்பவன்

- இராமாயணம் ஸுந்தரகாண்டம் (35-14) – வேதவித்பி: ஸுபூஜித: - வேதங்களை நன்கு அறிந்தவர்களால் எப்போதும் பூஜிக்கப்படுபவன்

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (1-20) – யதாவத் ஸாங்கவேதவித் – வேதங்களை அதன் ஆறு அங்கங்களுடன் அறிந்தவன்

- இராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் (24-31) – த்வம் அப்ரமேயச்ச துராஸதச்ச ஜிதேந்த்ரியச்ச உத்தமதார்மிகச்ச அக்ஷய்யகீர்த்தீச்ச விசக்ஷணச்ச க்ஷிதிக்ஷமாவாந் க்ஷதஜோபமாக்ஷ: - தாரை இராமனிடம், "நீ எல்லையற்ற மேன்மை உடையவன், எதிரிகளால் நெருங்க இயலாதவன், இந்த்ரியங்களை வென்றவன், சிறந்த தர்மம் கொண்ட வீரன், குறையாத புகழ் கொண்டவன், திறமை உள்ளவன், பூமி போன்ற பொறுமை கொண்டவன், இரத்தம் போன்று சிவந்த கண்கள் கொண்டவன்", என்றாள்.

## 406. வைகுண்ட:

தனது அடியார்கள் தன்னை அடைவதைத் தடுக்கும் தடங்கல்களை விலக்கித் தன்னுடன் சேர்ப்பவன். தடைகள் மற்றும் பாவங்கள் நீங்கப் பெற்றவர்கள் வைகுண்டம் செல்வர், இதனால் இவன் வைகுண்ட: என்னும் திருநாமம் பெற்றான். கீழே உள்ள பல வரிகளையும் காண்க:

- மஹாபாரதம் சாந்திபர்வம் (343-50) – மயா ஸம்ச்லேஷிதா பூமி: அத்பி: வ்யோம: ச வாயுநா வாயுச்ச தேஜஸா ஸார்த்த வைகுண்டத்வம் ததோ மம – பூமியானது நீருடனும், ஆகாயம் காற்றுடனும், வாயு தேஜஸ்ஸுடனும் என்னால் கலக்கப்பட்டன; இதனால் எனக்கு வைகுண்டன் என்னும் பெயர் வந்தது.

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (48-5) – ராமமேவ அநுபச்யந்தீ நாப்யஹிம்ஸந் பரஸ்பரம்; ததஸ்நிதௌ பரஸ்பரநிர்வ்யபேக்ஷா ஹி தத்ரத்யா: யதா ஆஹு: பௌர்ய: பதீந் – இராமன் அயோத்தியில் இருந்தபோது ஜனங்கள் ஒருவருக்கொருவர் அன்யோன்யமாகவே இருந்தனர். அவன் அயோத்தியை விட்டு அகன்றதும் மக்கள் ஒருவரை ஒருவர் விரும்பாதவர்கள் ஆயினர்.

- இராமாயணம் – ராகவம் வா அநுகச்சத்வம் அச்ருதிம் வா அபி கச்சத – இராமன் கானகம் நோக்கிப் புறப்பட்டவுடன் அயோத்தியில் இருந்த பெண்கள் தங்கள் கணவன்மார்களிடம், "நீங்களும் இராகவனைப் பின்தொடர்ந்து கானகம்

செல்லுங்கள் அல்லது கைகேயியின் பெயர் கேட்காத இடம் செல்லுங்கள்" என்றனர்.

- இராமாயணம் – வ்யஸ்ருஜந் கபலாந் நாகா: காவோ வத்ஸாந் ந பாயயந் – இராமன் சென்ற பின்னர், யானைப்பாகன்கள் அளித்த உணவை யானைகள் உண்ணவில்லை, பசுக்கள் தங்கள் கன்றுகளுக்கு பால் அளிக்கவில்லை.

- இராமாயணம் – நஷ்டம் த்ருஷ்வாந் நாப்யநந்தந் விபுலம் வா தநாகமம் புத்ரம் ப்ரதமஜம் லப்த்வா ஜநநீ நாப்யநந்தத - அவர்கள் தங்கள் செல்வங்களை இழந்தபோது வருந்தவில்லை. தனக்குப் பிறந்த முதல் குழந்தையைப் பார்த்து எந்தத் தாயும் மகிழவில்லை.

- இராமாயணம் – ஸ்தந்யார்த்திந: ஸுதா: ஸ்த்ரீணாம் பர்த்தாரோ ப்ராதரஸ்ததா ஸர்வே ஸர்வம்பரித்யஜ்ய ராமமேவ அந்வயுஸ்ததா – குழந்தைகள் தாய் விஷயத்திலும், கணவன்மார்கள் மனைவி விஷயத்திலும், சகோதரர்கள் ஒருவருக்கொருவர் விஷயத்திலும் அன்பு இல்லாதவர்கள் ஆயினர். அனைத்தையும் துறந்தவர்களாக இராமனை எண்ணியே வருந்தியபடி இருந்தனர்.

## 407. புருஷ:

ஸ யத் பூர்வ: அஸ்மாத் ஸர்வஸ்மாத் பாப்மந ஓஷ: தஸ்மாத் புருஷ: - அனைத்துவிதமான பாவங்களிலிருந்து விடுவிப்பவன் என்பதால் புருஷன் எனப்படுகிறான், பரமபாவனன் என்பதால் புருஷன் எனப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் – பாவந: ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தன – அகஸ்தியர், "இராமா! நீயே அனைத்து உலகையும் தூய்மைப்படுத்த வல்லவன்", என்றார்.

- இராமாயணம் – தவாஹம் சக்ஷுஷா ஸௌம்ய பூதா ஸௌம்யேந மாநத – சபரி இராமனிடம், "உனது அழகான கண்களின் கடாக்ஷம் காரணமாக நான் தூய்மை பெற்றேன்", என்றாள்.

- ஸ ஹி ராம: ஸர்வதா புருஷ இஷ்யதே – இராமனே அனைத்துவிதத்திலும் புருஷன் எனப்படுகிறான்.

- இராமாயணம் அயோத்யாகாண்டம் - ராகவம் சோபயந்த்யேதே ஷட்குணா: புருஷோத்தமம் – புருஷர்களில் உயர்ந்தவனாகிய இராமனை கருணை, இரக்கம், சாஸ்த்ரம், ஒழுக்கம், தமம் மற்றும் சமம் ஆகிய ஆறு குணங்களும் அலங்கரிக்கின்றன.

- இராமாயணம் யுத்தகாண்டம் - சார்ங்கதந்வா ஹ்ருஷீகேச: புருஷ: புருஷோத்தம: - சார்ங்கம் என்னும் வில்லைக் கொண்டவன், இந்த்ரியங்களை நியமிப்பவன், புருஷன், புருஷர்களில் உத்தமன்.

## 408. ப்ராண:

அனைவருக்கும் மூச்சுக் காற்றாக இருந்து பிழைக்க வைப்பதால் ப்ராண: எனப்படுகிறான்.

## 409. ப்ரணத:

மிகவும் ப்ரஸித்தமான ப்ராணன்களை அளிப்பவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் அயோத்யாகாண்டம் – அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குர கோரகா: - இராமன் கானகம் சென்றதும் அயோத்தியில் மலர்களுடன் கூடியிருந்த அனைத்து மரங்களும் அவனது பிரிவு தாளாமல் வாடின.

- இராமாயணம் அயோத்யாகாண்டம் – பரிசுஷ்க பலாசாநி வநாந்யுபவநாநி ச – கானகத்தில் இருந்த அனைத்து மரங்களும் காய்ந்த இலைகளும் இலைகள் இன்றியுமே இருந்தன.

## 410. ப்ரணம:

"ப்ரணாமயதி" என்று ச்ருதியில் கூறுவதற்கு ஏற்ப தனது உயர்ந்த குணங்கள் காரணமாகவே அனைத்தும் தன்னை வணங்கும்படியாக உள்ளவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். இராமாயணம் அயோத்யாகாண்டம் – ஹ்ருதயாநி அமமந்தேவ ஜநஸ்ய குணவத்தயா – இராமன் கானகம் சென்றபோது அயோத்தியில் இருந்த மக்களின் இதயங்கள் மத்தினால் கடையப்பட்டது போன்று குழம்பின – என்றது காண்க.

## 411. ப்ருது:

தன்னுடைய புகழ் காரணமாக மிகவும் உயர்ந்தவன் என்பதால் ப்ருது: எனப்பட்டான். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- இராமாயணம் பாலகாண்டம் – ப்ருது ஸ்ரீ: பார்த்திவாத்மஜ: - தசரதனின் புத்திரனான இராமன் பெரும்புகழ் கொண்டவன்
- இராமாயணம் பாலகாண்டம் – ராமோ நாம ஜநை: ச்ருத: - அவன் இராமன் என்று அனைவராலும் கொண்டாடப்பட்டான்.
- இராமாயணம் பாலகாண்டம் – தேஷாமதியசா லோகே ராம: - அவர்களில் இராமன் மிகவும் புகழுடன் விளங்கினான்.
- இராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் – யசஸச்ச ஏகபாஜநம் – புகழின் ஒரே இருப்பிடமாக இராமன் இருந்தான்.

## 412. ஹிரண்யகர்ப்ப:

அவதாரங்கள் செய்த காலகட்டங்களில் இல்லாமல் இருந்த அனைவருக்கும் கூட த்யானம் செய்தல் போன்ற பல உபாகரங்கள் மூலம் உதவி செய்தபடி உள்ளதால் ஹிரண்யகர்ப்பன் எனப்பட்டான். த்யானிப்பவர்களுடைய மனதிற்கு கிடைத்தற்கரிய பொருள் போன்று உள்ளான். அவனையே எண்ணியபடி அன்புடன் த்யானிப்பவர்களின் மனதில் எப்போதும்

மறைந்துள்ளான். மந்த்ரவர்ணத்தில் – த்யேய: ஸ விச்வாத்மா – அவனே அனைத்தின் ஆத்மாவாகவும் த்யானிக்கத்தக்கவன் – என்றது காண்க.

## 413. சத்ருக்ந:

தன்னை த்யானிப்பவர்களுக்கு விரோதியாக உள்ள உலகியல் விஷயங்களை இராவணனை அழித்தது போன்று அழிப்பவன் ஆவான். இந்த்ரியங்களின் விஷயங்களை விவேகம் என்னும் அம்பு கொண்டு அழிக்கிறான். ஈச்வர ஸம்ஹிதையில் – தசேந்த்ரியானனம் கோரம் யோ மனோரஜனீசரம் விவேக சரஜாலேந சமம் நயதி யோகினாம் – யோகிகளின் மனம் மற்றும் பத்து இந்த்ரியங்களை இராமன் எவ்விதம் இராவணனின் பத்துத் தலைகளை அழித்தானோ அது போன்று, விவேகம் என்பதன் மூலம் அழிக்கிறான் – என்றது காண்க.

## 414. வ்யாப்த:

ஏதும் அறியாத குழந்தைகள், வயதானவர்கள், எஜமானன், வேலையாட்கள் போன்ற அனைவரிடமும் அவனது அன்பு என்பது எந்தவிதமான ஏற்றத்தாழ்வும் இன்றி ஒரே போன்று உள்ளதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகளைக் காண்க:

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (2-38, 38) – பௌராந் ஸ்வஜநவத் நித்யம் குசலம் பரிப்ருச்சதி புத்ரேஷ்வக்நிஷு தாரேஷு ப்ரேஷ்ய சிஷ்யகணேஷு ச; நிகிலேந ஆநுபூர்வ்யாச்ச பிதா புத்ராநிவ ஔரஸாந் – அயோத்தி நகரத்து மக்கள் தசரதனிடம், "அரசனே! உன்னுடைய புத்ரனாகிய இராமன் தனது உறவினர்களை விசாரிப்பது போன்று எங்கள் அனைவரையும் அன்புடன் விசாரிக்கிறான். ஒரு தந்தை தனது புத்திரனைக் கவனித்துக் கொள்வது போன்று இராமன் இங்கு வாழ்கின்ற மக்களைப் பற்றியும், குழந்தைகளைப் பற்றியும், அக்னி வேள்விகள் பற்றியும், மனைவிமார்கள் பற்றியும், வேலையாட்கள் பற்றியும், மாணவர்கள் பற்றியும் விசாரிக்கிறான்", என்றனர்.

- இராமாயணம் யுத்தகாண்டம் – ரிபூணாமபி வத்ஸல: - சத்ருக்களிடமும் இராமன் அன்பு பூண்டவன்.

## 415. வாயு:

தனது அடியார்கள் எங்கெல்லாம் உள்ளனரோ அங்கெல்லாம் சென்று கவனித்துக் கொள்வதால் இந்தத் திருநாமம் பெற்றான் (அதாவது காற்று எவ்விதம் எங்கும் செல்கிறதோ அது போன்று இவனும் செல்கிறான் என்று கருத்து). கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் பாலகாண்டம் – ஸோப்யகச்சத் மஹாதேஜா: சபரீம் சத்ருஸூதந: - எதிரிகளை அழிக்கும் இராமன் சபரியின் இடத்திற்குச் சென்று பெருமை அளித்தான்.

- இராமாயணம் பாலகாண்டம் – பரத்வாஜ ஆச்ரமம் கத்வா – பரத்வாஜ முனிவரின் ஆச்ரமத்திற்குச் சென்றான்.

- இராமாயணம் பாலகாண்டம் – குஹமாஸாத்ய தர்மாத்மா – குஹனை மேன்மைப்படுத்தினான்.

## 416. அதோக்ஷஜ:

அமிர்தக்கடலாக அனைவராலும் எப்போதும் அனுபவிக்கப்பட்டபடி உள்ளபோதிலும் சற்றும் குறையாமல் உள்ளவன் ஆவான்.

- மஹாபாரதம் உத்யோகபர்வம் (89-10) – அதோ ந க்ஷீயதே ஜாது யஸ்மாத் தஸ்மாத் அதோக்ஷஜ: - சற்றும் குறையாமல் உள்ளதால் அவன் அதோக்ஷஜன் எனப்படுகிறான்.

- இராமாயணம் பாலகாண்டம் (76-17) – அக்ஷய்யம் மதுஹந்தாரம் ஜாநாமி த்வாம் ஸுரோத்தமம் – மது என்னும் அரக்கனை அழித்தவனே! தேவர்களின் தலைவனே! நீ குறையாதவன் என்று அறிவேன் (இது பரசுராமர் இராமனைப் பார்த்து உரைப்பது).

- இராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் (24-31) – அக்ஷய்ய கீர்த்திச்ச – குறையாத கீர்த்தி கொண்டவனே! (இது தாரை இராமனைப் பார்த்து உரைப்பது).

## 417. ருது:

எப்போதும் புதிதாக அனைவருக்கும் இன்பம் அளிக்கவல்ல குணங்களுடன் கூடியவன். அனைவரின் இதயங்களில் ப்ரவேசிப்பவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். இந்தக் குணத்தை ஒத்திருப்பதால்தான், வஸந்தம் மற்றும் சிசிர காலங்கள் ருது எனப்பட்டன. இராமாயணம் அயோத்யாகாண்டம் (3-29) – கர்மாபிதப்தா: பர்ஜந்யம் ஹ்லாதயந்தமிவ ப்ரஜா: - சூரியனின் உஷ்ணத்தால் தவிப்பவர்கள் நீர் கொண்ட மேகத்தைக் கண்டால் மகிழ்வது போன்று, இராமனை எத்தனை நேரம் பார்த்தாலும் த்ருப்தி அடைவதில்லை – என்றது காண்க.

## 418. ஸுதர்சன:

தனது குணங்களைப் பற்றி அறியாதவர்களுக்கும் தனது திருமேனி அழகு என்பதே சுபமாக இருக்கும்படி உள்ளவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் பாலகாண்டம் (1-18) – ஸோமவத் ப்ரியதர்சந: - சந்த்ரன் போன்று அழகான ரூபம் கொண்டவன் இராமன்

- இராமாயணம் பாலகாண்டம் (1-16) – ஸதைக ப்ரியதர்சந: - எப்போதும் மகிழ்வை அளிக்கும்படி திருமேனி கொண்டவன் இராமன்

## 419. கால:

இப்படியாக உள்ள தனது ஆத்மகுணங்களால் அனைத்து சராசரங்களையும் தன்னுள் சேர்த்துக் கொள்பவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 420. பரமேஷ்டீ

இப்படியாக அரக்கர்களை அழித்தும், உலகத்தைக் காப்பாற்றியும் செய்துவிட்டு பின்னர் மிகவும் உயர்ந்த இடமான பரமபதத்தில் உள்ளான். இதனால் பரமேஷ்டீ என்னும் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் உத்தரகாண்டம் (110-12) – விவேச வைஷ்ணவம் தேஜ: ஸசரீர: ஸஹாநுக: - மிகவும் உயர்ந்த விஷ்ணுலோகத்தை இராமன் தனது திவ்யமான சரீரம் மற்றும் தன்னைப் பின் தொடர்ந்து வருபவர்கள் ஆகியவர்களுடன் அடைந்தான்.

- மஹாபாரதம் ஸபாபர்வம் (55-47) – ஏவமேஷ மஹாபாஹு: இக்ஷ்வாகு குலவர்த்தந: ராவணம் ஸகணம் ஹத்வா திவம் ஆக்ரமிதா ப்ரபு: - நீண்ட திருக்கரங்களைக் கொண்டவனும், இக்ஷ்வாகு குலத்தின் நாயகனும் ஆகிய இராமன், இராவணனின் கூட்டத்தை அடியுடன் அழித்துவிட்டு மேலுகம் சென்றான்.

## 421. பரிக்ரஹ:

அனைத்தையும் எங்கே உள்ளபோதிலும் தன்னுடன் சேர்த்துக் கொள்பவன் என்பதால் பரிக்ரஹ என்னும் திருநாமம் பெற்றான். இராமன் அயோத்தியில் தனது தொடர்புள்ள மனிதர்கள், கிராமத்தில் உள்ளவர்கள், விலங்குகள், செடிகொடிகள் போன்ற அனைத்தையும் தன்னுடன் பரமபதம் கொண்டு சென்றான். யே ஹி பகவதம்சேஷு அநுராகிண: - இங்கு இராமனின் ஸௌசீல்யம் உணர்த்தப்பட்டது.

கல்கி அவதாரம்

## 422. உக்ர:

அடுத்து ஸாதுக்களாக இல்லாதவர்களைத் தண்டிக்கின்ற பாதாளவாசியான கல்கி அவதாரம் பற்றிக் கூறப்படுகிறது. யுகத்தின் முடிவில் பாவங்கள் தலைதூக்கி வர்ணாச்ரம தர்மங்கள் அனைத்தும் அடியுடன் புதையும்போது, மிகவும் உக்கிரமாக விளங்குபவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- மந்த்ரவர்ணனம் – ஸம்ஹாரமூர்த்தயே காலவைச்வாநரார்சிஷே – ஸம்ஹார மூர்த்தியாகவும், ப்ரளய காலத்தில் உண்டாகும் தீ போன்றும் உள்ள.

- பௌஷ்கர ஸம்ஹிதை – கல்கீ ச விஷ்ணு: பகவாந் நஷ்டதர்மாவதாரக்ருத் உர்வ்யாம் ம்லேச்சகணம் ஹத்வா அவஸ்திதோ ய: கலௌ யுகே – பகவான் விஷ்ணு கல்கியாக அவதாரம் செய்கிறான். அந்தக் காலகட்டத்தில் தர்மங்கள் அழிந்திருக்கும், அப்போது பூமியில் உள்ள ம்லேச்ச கூட்டத்தை அழிக்கவே கலியுகத்தில் அவதரிக்கிறான்.

## 423. ஸம்வத்ஸர:

பாதாளலோகத்தில் ஸம்ஹாரம் செய்வதற்கு ஏற்ற பரிவாரங்களுடன் தகுந்த காலத்தி எதிர்பார்த்தபடி, ஆதிசேஷன் மீது சயனித்தவனாக உள்ளான். கீழே உள்ள வரிகள் காண்க:

- அநந்த சயநாரூடம் – ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவன் என த்யானிக்கத்தக்கவன்

- சக்ராத்யாயுத வ்ருந்தேந மூர்த்தேந பரிவாரிதம் – அனைத்து ஆயுதங்களும் அவனது ஆணைக்காக உருவானது போன்றே உள்ளன என த்யானிக்கவேண்டும்.

## 424. தக்ஷ:

திருடர்களை அழிப்பதில் மிகவும் வேகம் கொண்டவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- மஹாபாரதம் வனபர்வம் (191-15) – கல்கி: சரிஷ்யதி மஹீம் ஸதா தஸ்யுவதே ரத: ஆக்ரோசமாநாந் ஸுப்ருசம் தஸ்யூந் நேஷ்யதி ஸம்க்ஷயம் – கல்கிபகவான் இந்த உலகில் உள்ள திருடர்களை அழிப்பதில் மிகவும் வேகமாக உள்ளான். கதறியபடி உள்ள அவர்களை முற்றிலுமாக அழிக்கும்விதமாக எங்கும் ஸஞ்சரிக்க உள்ளான்.

- தக்ஷ வ்ருத்தை சீக்ரார்த்தே ச - தக்ஷ என்னும் தாது விரைவாக மற்றும் வளரும்படியாக என்னும் இரு பொருள் கொண்டதாகும்.

- மஹாபாரதம் ஸபாபர்வம் – க்ஷிப்ரகாரீ ஜநார்த்தந: - வேகமாகச் செயல்களைச் செய்பவன் ஜனார்த்தனன்.

## 425. விஸ்ராம:

பாவங்களையும், அவற்றின் பயன்களையும் அனுபவித்து, அதன் காரணமாக களைத்துப் போன உயிர்களுக்கு இளைப்பாறும் இடமாக உள்ளவன். இதனால் விஸ்ராம என்னும் திருநாமம் பெற்றான். மஹாபாரதம் ஸபாபர்வம் (54-56) – தர்மஸ்ய ச வ்ருத்யர்த்தம் விப்ராணாம் ஹிதகாம்யயா – தர்மத்தின் வளர்ச்சிக்காகவும், அந்தணர்களைக் காப்பாற்றவும் எம்பெருமான் அவதாரம் செய்கிறான் – என்றது காண்க.

## 426. விச்வதக்ஷிண:

அபசாரங்கள் செய்தவர்களையும் எப்படிப் பொறுப்பது? அதுவே தாக்ஷிண்யமாகும். இதனால் விச்வதாக்ஷிண என்னும் திருநாமம் பெற்றான். விருப்பமானவற்றைச் செய்தாலும், விருப்பம் அல்லாதவற்றைச் செய்தாலும் அனைவரிடமும் ஒரே போன்று உள்ளவன். மஹாபாரதம் வனபர்வம் (190-96) – ஸ இமம் ஸகலம் லோகம் ப்ரஸாதந் உபநேஷ்யதி – இந்த உலகம் முழுமைக்கும் தன்னுடைய அருளை அளிப்பவன்.

அல்லது வேறுவிதமாகவும் பொருள் கொள்ளலாம். இராமனால் அச்வமேத யாகத்தின்போது அனைத்தும் அந்தணர்களுக்கு தக்ஷிணையாக அளிக்கப்பட்டது. இதனால் விச்வதக்ஷிண என்றும் கொள்ளலாம். இதனை மஹாபாரதம் வனபர்வம் (191-1) – ததச்சோரக்ஷய க்ருத்வா த்விஜேப்ய: ப்ருதிவீமிமாம் வாஜிமேத மஹாயஜ்ஞே விதித்வா கல்பயிஷ்யதி – அதன் பின்னர் அனைத்து திருடர்களையும் அழித்து, சற்றும் பயம் இல்லாத இந்தப் பூமியை, அச்வமேத யாகம் இயற்றிய அனைத்து அந்தணர்களுக்கும் தக்ஷிணையாக அளித்தான் – என்றது காண்க.

## 427. விஸ்தார:

கலியின் பலன்களை அழித்து, க்ருதயுக தர்மங்களை மீண்டும் நிலைநாட்டுவதன் பொருட்டு, வேதமார்க்கத்தைச் செழிக்க வைப்பவன் என்பதால் விஸ்தார என்னும் திருநாமம் பெற்றான். மஹாபாரதம் வனபர்வம் (191-7) – தத: அதர்ம விநாசோ வை தர்மவ்ருத்திச்ச பாரத பவிஷ்யதி க்ருதே ப்ராப்தே க்ரியாவாந் ச ஜநஸ்ததா – க்ருதயுகம் தோன்றியவுடன் கலி அழிகிறது; தர்மம் செழித்து, அதர்மம் சாய்கிறது; மக்கள் தர்மத்தையே கைக்கொள்கின்றனர் – என்றது காண்க.

## 428. ஸ்தாவரஸ்தாணு:

தர்மத்தை இப்படியாக நிலைநாட்டிய பின்னர், சற்றே ஆறியுள்ளவன். மஹாபாரதம் வனபர்வம் – ஸ்தாபயித்வா ஸமர்யாதாம் ஸ்வயம்பூவிஹிதாம் சுபாம் – தன்னால் படைக்கப்பட்ட நான்முகன் மூலமாக உலகில் தர்மத்தை நிலைநாட்டிய பின்னர் சாந்தமாக உள்ளவன் – என்றது காண்க.

## 429. ப்ரமாணம்

அதன் பின்னர் க்ருதயுகத்தில் உள்ளவர்களுக்கு நன்மை எது, தீமை எது என்று அறிவதற்குச் சாட்சியாக இருந்தான். இவனது செய்கைகளைக் கொண்டே அனைத்தும் ப்ரமாணங்கள் ஆகின்றன. தச்சீலம் அநுவர்த்தந்தே மநுஷ்யா லோகவாஸிந: - அவனது செய்கைகளையே மக்கள் சான்றாக எடுத்துக் கொண்டனர் – என்றது காண்க.

## 430. பீஜம் அவ்யயம்

இப்படியாக கலியின் கொடுமை காரணமாக தர்மமார்க்கமானது அழிந்தபோது, அதனை மீண்டும் தலைதூக்கச் செய்வதால், அழியாமல் உள்ளவன் ஆவான்; அதாவது அழியாத விதை ஆகிறான்.

## 431. அர்த்த:

எந்தவிதமான ப்ரதிபலனையும் எதிர்பாராமல், பக்தியை மட்டுமே கைக்கொள்கின்ற அதிகாரிக்கு, தானே உயர்ந்த புருஷார்த்தமாக உள்ளவன். இதனால் அர்த்த என்னும் திருநாமம் கொண்டான். கீதையில் (7-19) – ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யந்தே வாஸுதேவ: ஸர்வம் – பல பிறவிகளில் செய்த நற்செயல்களின் காரணமாக ஞானி ஒருவன் வாஸுதேவனாகிய என்னை மட்டுமே சரணம் என்று அடையக்கூடும் – என்றது காண்க.

## 432. அநர்த்த:

அற்பமான நன்மைகளைப் பெற்றதன் காரணமாக எம்பெருமானை விடுத்து மற்ற பொருள்களை விரும்பும் ஒருவனால் விரும்பப்படாதவன். இதனால் இந்தத் திருநாமம் கொண்டான்.

- விஷ்ணுதர்மம் (48-47) - அர்த்தம் ஏகபிங்க: - ஒரு கண்ணைக் கொண்ட குபேரன் பொருளுக்காக மட்டுமே என்னை நாடுகிறான்.

- மஹாபாரதம் சாந்திபர்வம் (342-35) – யே ச சிஷ்டா: த்ரயோ பக்தா: பலகாமா ஹி தே மதா: - மூன்றுவிதமான பக்தர்கள் எனக்கு உள்ளனர்: இழந்தவற்றை அடையும்பொருட்டு என்னை வேண்டுபவர்கள், மேலும் பொருள் வேண்டுபவர்கள், கைவல்யம் வேண்டுபவர்கள்.

## 433. மஹாகோச:

எப்போதும், அனைவருக்கும், அனைத்துவிதங்களிலும் வழங்கினால் கூட, சற்றும் குறையாமல் பெரியதாக உள்ள சங்கம், பத்மம் போன்ற ஒன்பது விதமான நிதிகளைக்

கொண்டவன்; மேரு உள்ளிட்ட மலைகளை அந்த நிதிகளின் இருப்பிடமாகக் கொண்டவன். இதனால் மஹாகோசன் என்னும் திருநாமம் பெற்றவன் ஆவான் (குறிப்பு: ஒன்பது நிதிகள் = சங்கம், பத்மம், மஹாபத்மம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம் மற்றும் கர்வசுல்வரம்).

## 434. மஹாபோக:

அர்த்தம் என்னும் செல்வத்தினால் கிட்டக்கூடிய போகங்கள் அனைத்தும் தன்னால் கிட்டக்கூடியபடி உள்ளவன். இதனால் மஹாபோகன் என்னும் திருநாமம் பெற்றவன் ஆவான். கீதையில் (7-22) – லபதே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹிதாந் – செல்வத்தின் பொருட்டு பல தேவதைகளையும் ஆராதிக்கின்றனர்; அவர்கள் மூலமாக நானே அனைத்தையும் அளிக்கிறேன் – என்றான்.

## 435. மஹாதந:

அளவிட இயலாதபடி பெரும் செல்வத்தைக் கொண்டவன். இதனை ப்ரஹ்லாதன் கீழே உள்ளபடி உரைக்கிறான். விஷ்ணுபுராணம் (1-18-23) – மரீசி மித்ரை: தக்ஷேண ததைவ அந்யை: அநந்தத: தர்ம: ப்ராப்த: ததா ச அந்யை: அர்த்த: காம: ததா பரை: - ஸர்வேச்வரனிடமிருந்து மரீசி, தக்ஷர் போன்றவர்களால் தர்மங்கள் அடையப்பட்டன; ஒரு சிலரால் செல்வங்கள் அடையப்பட்டன; ஒரு சிலரால் விருப்பங்கள் நிறைவேற்றிக் கொள்ளப்பட்டன; அவன் குறைவற்ற செல்வம் கொண்டவன் – என்றது காண்க.

## 436. அநிர்விண்ண:

இப்படியாக ஸ்ருஷ்டி உள்ளிட்டவைகளையும், அவரவர்களுக்கு வேண்டியவைகளையும் அடிக்கடி செய்து வருகிறான். ஸம்ஸாரிகள் உலகவிஷயங்களின் மீது உண்டான ப்ரீதி காரணமாகத் தன்னை உதாஸீனம் செய்யும்போது, தான் அவர்களுக்காகச் செய்த அனைத்தும் வீணாகப் போனது என்று எண்ணாமல், அவர்களை மீண்டும் தன்பக்கம் இழுக்கலாம் என்னும் ஆசை காரணமாக சற்றும் ஓய்வு என்பதே இல்லாமல் தொடர்ந்து முயல்கிறான். இதனால் அல்லவோ இந்த உலகத்தின் ஸ்ருஷ்டி என்பது தொடர்ந்தபடி உள்ளது! விஷ்ணுபுராணம் (1-2-26) – அவ்யுச்சிந்நா: ததஸ்த்வேதே ஸர்க ஸ்தித்யந்த

ஸம்யமா: - ஸ்ருஷ்டி, ஸ்திதி மற்றும் ஸம்ஹாரம் ஆகியவற்றை ஸர்வேச்வரன் எந்தவிதமான தடைகளும் இன்றி செய்தபடி உள்ளான் – என்றது.

## 437. ஸ்தவிஷ்ட:

மிகவும் பெரியவனாக உள்ளவன். இந்தக் கருத்தானது விஷ்ணுபுராணத்தில் மிகவும் தெளிவாக உள்ளது. மிகவும் பெரிய நக்ஷத்திரக் கூட்டமான சிம்சுமாரம் என்பதைப் போன்றவன். விஷ்ணுபுராணம் (2-9-1) – தாராமயம் பகவத: சிம்சுமாராக்ருதி ப்ரபோ: - என்று இதனைக் கூறியது காண்க.

## 438. பூ:

துருவனைத் தாங்கி நிற்பதால் அனைத்திற்கும் ஆதாரமாக உள்ளவன். இதனால் இந்தத் திருநாமம் கொண்டான். விஷ்ணுபுராணம் (4-9-4) – தஸ்ய ப்ருச்சே த்ருவ: ஸ்தித: - சிம்சுமாரம் என்னும் முதலை வடிவில் உள்ள ப்ரபஞ்சத்தின் வால் போன்ற பகுதியில் துருவனாக நின்று தாங்குகிறான் – என்றது காண்க.

## 439. தர்மயூப:

தர்மம் என்னும் தத்துவங்களை தனது தலையாகக் கொண்டவன் என்பதால் தர்மயூபன் எனப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- விஷ்ணுபுராணம் – தர்மா மூர்த்தாநமாச்ரித: - தர்மங்களை அண்டி, அவற்றையே தனது திருமேனியாகக் கொண்டவன்.

- தச்சிரோ தர்ம: - அவனது தலையாக தர்மமே உள்ளது.

## 440. மஹாமக:

தர்மத்தைத் தனது சரீரமாகக் கொண்டதால், வணங்கத்தகுந்த யஜ்ஞத்தைத் தனது அவயவங்களாகக் கொண்டவன். யஜ்ஞோ தர்மச்ச விஜ்ஞேய: - யஜ்ஞம் என்பதையே தர்மமாக எடுக்கவேண்டும்.

## 441. நக்ஷத்ரநேமி:

நக்ஷத்ரம் என்னும் ஒளிச்சக்கரத்தைச் சுழலும்படிச் செய்வதால் நக்ஷத்ரநேமி எனப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- விஷ்ணுபுராணம் (2-12-28) – அலாத சக்ரவத் யாந்தி வாத சக்ரேரிதாநி து யஸ்மாத் ஜ்யோதீம்ஷி வஹதி ப்ரவஹஸ்தேந ஸ ஸ்ம்ருத: - வட்டமாக உள்ள ஜ்யோதி ரூபமாகச் சுழன்றபடி இருக்கின்ற நக்ஷத்திரக் கூட்டங்களைத் தாங்கி, அவற்றைச் சுழலும்படிச் செய்பவன் என்பதால் ப்ரவஹன் என்பர்.

- விஷ்ணுபுராணம் (2-9-2) – ஏவம் ப்ரமந் ப்ராமயதி சந்த்ராதித்யகாந் க்ரஹாந் ப்ரமந்த மநு தம் யாந்தி நக்ஷத்ராணி ச சக்ரவத் – அவன் சூரியன், சந்த்ரன் மற்றும் உள்ள க்ரஹங்களைத் தன்னுடன் சுழலும்படிச் செய்கிறான். அவன் வட்டமான பாதையில் செல்லும்போது, அனைத்து நக்ஷத்ரங்களும் அதே பாதையில் அவனைப் பின்தொடர்ந்து செல்கின்றன.

## 442. நக்ஷத்ரீ

சிம்சுமார வடிவிலான நக்ஷத்ர ரூபம் கொண்டவன் என்பதால் இந்தத் திருநாமம் கொண்டான். விஷ்ணுபுராணம் (4-9-4) – நாராயணோ நயந் தாம்நா தஸ்யாதார: ஸ்வயம் ஹ்ருதி – விண்ணில் உள்ள நக்ஷத்ரங்கள் சிம்சுமார வடிவில் உள்ளன, அவற்றை நாராயணன் தாங்கி தனது இதயத்தில் வைத்து ஸஞ்சரிக்கச் செய்கிறான்.

## 443. க்ஷம:

அனைத்து உலகங்களின் பாரத்தை எந்தவிதமான சிரமமும் இன்றி எளிதாகத் தாங்கவல்லவன். விஷ்ணுபுராணம் (2-12-28) – யஸ்மாத் ஜ்யோதீம்ஷி வஹதி ப்ரவஹஸ்தேந ஸ ஸ்ம்ருத: - அனைத்து நக்ஷத்ரங்களையும் தாங்குவதால் ப்ரவஹன் எனப்படுகிறான்.

## 444. க்ஷாம:

ப்ரளய காலத்தில் ஏற்படும் அழிவுகள் காரணமாக ஒரு சில நக்ஷத்ரங்களுடன் மட்டுமே கூடியவனாக உள்ளதால் சற்றே இளைத்துக் காணப்படுபவன்.

- விஷ்ணுபுராணம் (2-9-5) – தாரகா: சிசுமாரஸ்ய ந அஸ்தமேதி சதுஷ்டயம் – சிம்சுமாரத்தில் உள்ள நான்கு நக்ஷத்ரங்கள் மட்டும் ப்ரளய காலத்தில் மறைவதில்லை.

- விஷ்ணுபுராணம் (2-8-97) – யாவந்மாத்ரோ ப்ரதேசே து மைத்ரேய அவஸ்திதோ த்ருவ: க்ஷயம் ஆயாந்தி தாவத் து பூமே: ஆபூதஸம்ப்லவே – மைத்ரேயரே! ப்ரளய காலத்தில் துருவ நக்ஷத்ரம் உள்ள ப்ரதேசம் முடிய உள்ள அனைத்தும் அழிகின்றன. துருவன் மட்டும் தன்னுடைய இடத்தில் ஒளிர்ந்தபடி உள்ளது.

## 445. ஸமீஹந:

அதன் பின்னர் உண்டாகும் ஸ்ருஷ்டியின்போது அனைவரையும் எப்போதும் அவரவர்களின் அதிகாரங்களில் மீண்டும் நியமிப்பதால் ஸமீஹந என்னும் திருநாமம் பெற்றான்.

- தைத்திரீய உபநிஷத் – த்வம் பூதாநி உபபர்யாவர்தந்தே – அனைத்து உயிர்களும் உன்னையே சுற்றி வருகின்றன.

- மஹாபாரதம் உத்யோகபர்வம் (67-10) – ப்ருதிவீம் சாந்தரிக்ஷம் ச திவம் ச புருஷோத்தம: விசேஷ்டயதி பூதாநி க்ரீடந்நிவ ஜநார்த்தந: - ஜநார்த்தனன் உயர்ந்த புருஷன் ஆவான், புருஷோத்தமன் ஆவான், விளையாட்டு போன்று ஆகாயம் மற்றும் ஸ்வர்க்கம் போன்றவற்றை செயல் புரிய வைக்கிறான்.

## 446. யஜ்ஞ:

யஜ்ஞமாகவும், அதனை இயற்றும் ஸாதநமாகவும், அந்த யஜ்ஞத்தின் பலனாகவும் உள்ளான் என்று விஷ்ணுபுராணம் கூறுகிறது.

- விஷ்ணுபுராணம் (2-8-98) – த்ருவோ யத்ர ப்ரதிஷ்டித: ஏதத் விஷ்ணுபதம் திவ்யம் த்ருதீயம் வ்யோம்நி பாஸ்வரம் – எந்த இடத்தில் துருவன் ஸ்திரமாக நிற்கிறானோ அந்த இடமே விஷ்ணுபதம் என்பதன் மூன்றாம் பாகம் ஆகும்.

- இஜ்யாபலஸ்ய பூரேஷா இஜ்யா சாத்ர ப்ரதிஷ்டிதா – இந்த உலகமே இஜ்யை (யஜ்ஞங்கள்) என்பதன் பலனாக உள்ளது, இந்த உலகமே இஜ்யையின் ஆதாரமாக உள்ளது.

- விஷ்ணுபுராணம் (4-8-106) – ததச்ச ஆஜ்யாஹுதித்வாரா போஷிதாஸ்தே ஹவிர்புஜ: - அதன் பின்னர் நெய் முதலான அவர்பாகங்கள் அக்னியில் இடப்படுகின்றன.

- யஜுர்வேதம் – யஜ்ஞோ வை விஷ்ணு: - விஷ்ணுவே யஜ்ஞம் ஆகிறான்.

## 447. இஜ்ய:

விருப்பங்களின் அடிப்படையில் ஆராதனை செய்யும் அதிகாரிகளால் (காமாதிகாரி), இந்த்ரன் உள்ளிட்ட தேவதைகளின் மூலமாக ஆராதிக்கப்படுபவன் என்பதால் இஜ்ய: என்னும் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- மஹாபாரதம் சாந்திபர்வம் (346-29) – யே யஜந்தி பித்ருந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாசநாந் ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே – பித்ருக்கள், தேவர்கள், நான்முகன், அக்னி போன்ற பலரையும் ஆராதனை செய்தபடி யார் உள்ளனரோ, அவர்கள் இவை அனைத்திற்கும் அந்தர்யாமியாக உள்ள விஷ்ணுவையே ஆராதிக்கின்றனர்.

- ஸ்ரீமத்பகவத்கீதை (9-23) – யே அப்யந்ய தேவதா பக்தா: - மற்ற தேவதைகளை வணங்குபவர்களும் என்னையே வணங்குகின்றனர்.

- விஷ்ணுபுராணம் (3-8-9) – வர்ணாச்ரமாசாரவதா – அவரவர்களின் குலம் மற்றும் ஆசாரம் ஆகியவற்றைக் கடைபிடிப்பது என்பது ஸர்வேச்வரனை மகிழும்படிச் செய்யும்.

## 448. மஹேஜ்ய:

மற்ற பலன்களை எண்ணாமல் உள்ள அதிகாரிகளால் நேரடியாகத் தன்னையே குறித்து இயற்றப்படும் மஹாயஜ்ஞ ரூபமாக உள்ளவன்.

- ஸ்ரீமத்பகவத்கீதை (12-6) – யே து ஸர்வாணி கர்மாணி – அனைத்து கர்மங்களையும் எனக்கே அளித்து.

- ஸ்ரீமத்பகவத்கீதை (3-30) – மயி ஸர்வாணி கர்மாணி - அனைத்து கர்மங்களையும் எனக்கே துறந்து.

## 449. க்ரது:

பஞ்சமஹா யஜ்ஞங்கள், ஔபாஸனங்கள், ஏழுபாக யஜ்ஞங்கள், ச்ருதில் கூறப்படும் அக்னிஹோத்ரம் உள்ளிட்டவைகள், ஏழு ஹவிர்யஜ்ஞங்கள், யஜ்ஞ என்னும் பதம் மூலம் கூறப்படும் அக்னிஷ்டோமங்கள், ஏழுஸோம ஸவநங்கள் போன்ற பலவற்றாலும் ஆராதிக்கப்படுபவன். எது இயற்றப்படுகிறதோ அதுவே க்ரது எனப்படும்.

பஞ்சமஹா யஜ்ஞங்கள் – ப்ரஹ்மயஜ்ஞம் (வேதம் ஓதுதல்), பித்ருயஜ்ஞம் (தேவரிஷிகள், பித்ருக்கள் குறித்த தர்ப்பணங்கள்), தேவயஜ்ஞம் (தேவர்கள் குறித்தவை), பூதயஜ்ஞம் (ப்ராணிகளுக்கு அளிக்கப்படும் அரிசி போன்றவை), மநுஷ்யயஜ்ஞம் (அதிதிகளுக்கு அளித்தல்).

## 450. ஸத்ரம்

பலநாட்கள் பல யஜமானர்களால் கூடி நின்று செய்யப்படுகிற ஸத்திரயாகத்தால் ஆராதிக்கப்படுகிறவன்.

## 451. ஸதாம்கதி:

இதுவரை உலகியல் விருப்பங்களுடன் தொடர்புடையதான ப்ரவ்ருத்தி தர்மங்களைக் கைக்கொள்பவர்களின் கதி இவனே என்றார். இனி அனைத்தையும் கைவிட்ட நிவ்ருத்தி தர்மங்களைக் கைக்கொள்பவர்களின் கதி இவனே என்கிறார். ஸாதுக்களுக்கு கதியாக உள்ளவன். விஷ்ணுபுராணம் (2-8-99) – நிர்தூத தோஷ பங்காநாம் யதீநாம் ஸம்யதாத்மநாம் ஸ்தாநம் தத் பரமம் விப்ர புண்ய பாப பரிக்ஷயே – அந்தணர்களே! கீழே கூறப்பட்ட விஷ்ணுவின் பரமபதம் என்பது புலனடக்கம் கொண்டவர்களும், தோஷங்கள் என்னும் சேற்றைக் கழுவியவர்களும், புண்ணியம் மற்றும் பாவம் ஆகியவற்றை உதறியவர்களும் ஆகிய யதிகளின் இடமாகும் – என்றது காண்க.

## 452. ஸர்வதர்சீ

இப்படியாக உள்ள ப்ரவ்ருத்தி தர்மங்களையும், நிவ்ருத்தி தர்மங்களையும் எப்போதும் கவனிக்கிற தன்மை கொண்டவன்.

## 453. நிவ்ருத்தாத்மா

இந்த இரண்டில், நிவ்ருத்தி தர்மங்களை வெளிப்படுத்தும் நரநாராயண அவதாரங்களைக் கூறுகிறார். பரமவைராக்யத்தை வெளிப்படுத்தும்விதமாக, அனைத்து உலக விஷயங்களிலிருந்தும் தனது மனதைத் திருப்பியவன். இதனால் நிவ்ருத்தாத்மா என்னும் பெயர் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- அந்தர்நிவிஷ்டபாவம் ச – த்யானத்தில் மனதை அடக்கிய நிலை கொண்டவன்
- ஆத்மத்யான பராயணாய – ஆத்ம த்யானத்தில் ஊக்கம் கொண்டவன்
- ஹ்ருத்பத்மார்பித மாநஸம் – தனது இதயகமலத்தில் மனதை நிலைநிறுத்தியவன்

## 454. ஸர்வஜ்ஞ:

அனைத்துவிதங்களாலும் தன்னை அறிபவன். யுஜ்ஞாநாம் ச ஸ்வமாத்மாநம் பரஸ்மிந் அவ்யயே பதே – அனைத்திற்கும் தான் ஆத்மாவாக அறிந்தும், தனது ஆத்மாவை அழியாத பரமபதத்துடன் இணைத்தும் உள்ளவன்.

## 455. ஜ்ஞாநம் உத்தமம்

உத்தமமான வைஷ்ணவ தர்மங்கள் அனைத்தும் அறிந்த ஞானஸ்வரூபன். படந்தம் அநிசம் சாஸ்த்ரம் பஞ்சராத்ர புரஸ்ஸரம் – பாஞ்சராத்ரம் உள்ளிட்ட அனைத்து சாஸ்த்ரங்களையும் படிப்பவன்.

## 456. ஸுவ்ரத:

கீதையில் (3-22) – ந மே பார்த்த அஸ்தி கர்த்தவ்யம் – பார்த்தா! எனக்கு எந்தவிதமான கர்மமும் இல்லை – என்று கூறுவது போன்று அவன் தனக்காக எதுவும் செய்ய வேண்டாதவனாக உள்ளான், ஆயினும் மற்றவர்களுக்காகச் செய்வது என்னும் விரதம் பூண்டுள்ளான். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான். ஏகபாதேந திஷ்டந்தம் ஆஹரந்தம் ச மாருதம் பக்ஷமாஸோபவாஸாம்ச்ச திசாந்தம் அநுசிந்தயேத் – ஒரு பாதத்தில் நிற்பவனாக, ஆகாயத்தில் உள்ளவனாக, பதினைந்து நாட்கள் மற்றும் மாதம் ஒருமுறை எடுக்கவேண்டிய உபவாஸத்தை மற்றவர்கள் கடைபிடிக்கவேண்டும் என்று உணர்த்துவதற்காக தான் அவற்றைக் கடைபிடிப்பவனாக அவனை எண்ணி த்யானம் செய்யவேண்டும் – என்றது காண்க.

## 457. ஸுமுக:

ஜபம் போன்றவற்றை அவன் அநுஷ்டிக்கும்போதும் மாற்றம் அடையாமல், தெளிவான திருமுகத்தைக் கொண்டவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஓம்கார லக்ஷணம் மந்த்ரம் ஜபந் ஆந்தரலக்ஷிதம் – அவன் அந்த ஓம் என்னும் மந்த்ரத்தை ஜபித்தவனாக, தனது மனதை அடக்கியவனாக, ஓம் என்பதைத் தன்னுள் கண்டவனாக உள்ளான்.

- க்ருஷ்ணாய கமலதல அமல நேத்ராய – தூய்மையாகவும் தாமரை இதழ் போன்ற கண்கள் கொண்டவனும் ஆகிய க்ருஷ்ணனின் பொருட்டு.

## 458. ஸூக்ஷ்ம:

எந்தவிதமான பலனையும் எதிர்பார்க்காமல் செய்யப்படும் த்யானம் மூலமாக அவன் தென்படுகிறான்; இவ்விதம் அவன் தென்படும்போதும் ஸூக்ஷ்மமான ஸ்வரூபம் கொண்டவனாக உள்ளதால் இந்தத் திருநாமம் பெற்றான். ஸர்வே ப்ரஹ்மபராயணா: - அனைவரும் ப்ரஹ்மம் என்னும் த்யானத்தில் ஈடுபட்டுள்ளனர்.

## 459. ஸுகோஷ:

உபநிஷத் தொடர்புடைய நல்ல கோஷத்தை (ஓசையை) உடையவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 460. ஸுகத:

இப்படியாக அவன் நல்ல நடத்தை, த்யானம் போன்றவற்றைப் (இராமனாகவும், க்ருஷ்ணனாகவும் அவதரித்து) பின்பற்றியதால், அவற்றைப் பின்பற்றுபவர்களுக்குப் பயனாக, மிகவும் உன்னதமான ஸுகங்களை அளிக்கிறான்.

## 461. ஸுஹ்ருத்

இவனுக்கு எதனால் மற்றவர்களுக்கு உதவி செய்வதில் நாட்டம் அதிகம் என்பதற்கு விடை அளிக்கிறார். நல்ல ஹ்ருதயம் கொண்டவன் என்பதால் ஆகும், அதாவது அன்பான மனம் கொண்ட நண்பனாக உள்ளான். தனக்கு எந்தவிதமான நன்மையையும் செய்யாதவனுக்குக் கூட, “இவனது தேவை என்ன? இவனுக்கு நாம் என்ன செய்யலாம்?”, என்று அவர்களுடைய நன்மைகளைத் தேடியபடி உள்ள மனம் கொண்டவன் என்று கருத்து.

## 462. மநோஹர:

இப்படியாகத் தனது இயல்பாகவே நல்லமனம் கொண்டவனாக உள்ளதால் அனைவரது மனதையும் கவர்கிறான்.

## 463. ஜிதக்ரோத:

கோபம் முதலாவற்றை வென்றவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## மற்றொரு பொருள்
## (திருநாமங்கள் 457 முதல் 463 வரை)

**குறிப்பு:** மேலே கூறப்பட்ட திருநாமங்களுக்கு அமிர்தம் கடைந்தபோது உள்ள நிலையை ஒட்டிய விளக்கங்களை அளிக்கிறார்.

463. ஸுமுக: - அமிர்தம் கடைந்தபோது இருந்த நிலையைக் கூறுவதாக, அழகான திருமுக மண்டலம் கொண்டவன்.

464. ஸூக்ஷ்ம: - அசுரர்களின் விஷயத்தில் மறைந்த சிந்தனை கொண்டவன் (அவர்களால் எண்ண இயலாதவன்).

465. ஸுகோஷ: - அமிர்தம் கடைகின்றபோது தேவர்கள் மற்றும் அசுரர்கள் எழுப்பிய ஓசையுடன், கடையப்படும் ஓசையும் சேர்ந்துள்ளதால் அற்புதமான கோஷம் கொண்டவன்.

463. ஸுகத: - அமிர்தம் அளித்தல் போன்ற சுகங்களை அளிப்பவன்.

464. ஸுஹ்ருத் – சுகங்களை அளிப்பதற்குக் காரணமான நல்ல மனம் கொண்டவன்.

465. மநோஹர: - அசுரர்களை மயக்குவதால் இந்தத் திருநாமம் பெற்றான். த்ரைலோக்ய விஸ்மயகரம் காந்தாக்ருதிதரம் ஸ்மரேத் – மூன்று உலகங்களையும் மயக்குபவனும் அற்புதமான ரூபம் கொண்டவனும் ஆகிய பகவானை எப்போதும் எண்ணவேண்டும்.

466. ஜிதக்ரோத: - தன்னிடத்தில் ஆச்சர்யம் உண்டாக்கி, இதன் மூலம் தேவர்கள் மீது அசுரர்களுக்கு உண்டான கோபத்தை வென்றவன்.

## 467. வீரபாஹு:

மணிகள் நிறைந்த கங்கணங்கள், தோள்வளைகள், முத்துவடங்கள், அழகான திருமாலை ஆகியவை அங்கும்இங்கும் பரந்தபடி இருக்கின்ற, கடலைக் கடையும்போது “நான் முந்தி, நான் முந்தி” என்று பரபரக்கும் ஆயிரம் தோள்களைக் கொண்டவன்.

## 468. விதாரண:

தனது திவ்யமான அஸ்த்ரங்கள் மூலமாக ராஹு உள்ளிட்டவர்களின் முகங்களைப் பிளந்தவன். ஸமக்ரோக்ர பயவிதாரணாய – அடியார்களின் அனைத்து பயங்களையும் ஒழிப்பவன்.

## 466. ஸ்வாபந:

கடந்த திருநாமத்தில் கூறப்பட்டது போன்று அழிந்தவர்கள் நீங்கலாக உள்ள மற்ற (அசுரர்கள்) அனைவரையும் தனது அதிஸுந்தரமான புன்னகையாலும், இனிமையான கடாக்ஷம் மூலமாகவும், தனது புருவங்களின் மலர்ச்சியாலும் மயங்கச் செய்து, அவர்களை உறங்க வைப்பவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். மத விஹ்வல நேத்ரம் ச தேவம் உத்பிந்ந யௌவநம் – அவனது திருக்கண்கள் அன்பையும், இளமையையும் வெளிப்படுத்தியபடி உள்ளன – என்றது காண்க.

## 467. ஸ்வவச:

மேலே கூறியபடி அசுரர்கள் அனைவரும் உறங்கிய பின்னர், தனக்கு மிகவும் அன்பர்களாக உள்ள தேவர்களுடன் விளையாடியும், உறவாடியும் மகிழ்பவன். ஸர்வேச்வராய – அனைத்திற்கும் ஈச்வரன் – என்னும் மந்த்ரம் காண்க.

## 468. வ்யாபீ

தேவர்கள், அசுரர்கள், மந்த்ரமலை, வாசுகி ஆகிய அனைவருக்கும் திருப்பாற்கடலைக் கடையும்போது அவர்களின் சக்தி குறைந்தது. அப்போது தனது சக்தியைக் கொண்டு அவர்கள் புத்துணர்ச்சி பெறும்விதமாக அவர்களுக்குள் வ்யாபித்து நின்றான்.

## 469. நைகாத்மா

அந்த நேரத்தில் (திருப்பாற்கடலைக் கடையும்போது) அவன் பல ரூபங்களைத் தரித்தான். அதாவது விஷ்ணுவாகவும், கூர்மமாகவும், மோகினியாகவும் அவதாரங்கள் எடுத்தான்.

## 470. நைக கர்ம க்ருத்

மத்தாக விளங்கிய மந்த்ரமலை சரிந்தபோது அதனைத் தாங்கியும், அதற்கு ஆதாரமாக நின்றும், அசுரர்களை அழித்தும், அமிர்தத்தைச் சேகரித்தும் – என்று பல செயல்களைச் செய்தபடி நின்றான்.

**குறிப்பு:** அடுத்து வர உள்ள 57 திருநாமங்கள் (471 – 527) இவனைத் தர்ம ஸ்வரூபியாக உரைக்கின்றன.

## 471. வத்ஸர:

அனைத்து புருஷார்த்தங்களும் அனைவருக்கும் கிட்டும்விதமாக அனைவரது உள்ளத்திலும் வசிப்பவன். அவனுக்கான மந்த்ரத்தில் – ஸர்வாந்தரச்சாரிணே தர்மாத்மநே – தர்மத்தின் ஸ்வரூபமாகவும், அனைவரது உள்ளத்தில் இருப்பவனும் ஆகியவனுக்கு – என்று உள்ளது.

## 472. வத்ஸல:

கடந்த திருநாமத்தில் கூறப்பட்டது போன்று இவன் உள்ளதற்குக் காரணம் “வத்ஸல:”. அதாவது தன்னிடம் ஆசை கொண்டவர்களை மிகவும் விரும்புபவன் ஆவான். ஸர்வேச்வரன் சேதநர்களிடம் எல்லையற்ற காலமாக ஆசை வைத்துள்ளபோதிலும், அவர்கள் சரணம் என்று தன்னை அடைந்தவுடன், “இவன் இன்ன காரணத்தினால்,

இப்படி நம்மிடம் சரணம் அடைந்தான்" என்றெல்லாம் ஆராய்வதில்லை; மாறாக அப்போது ஈன்ற கன்றிடம் கொண்ட வாத்ஸல்யம் காரணமாக, அந்த கன்றுக்கு அருகில் வருபவர்களை ஹூங்காரத்துடன் விரட்டி, தனது மடியில் சுரக்கின்ற பாலை அதற்கு ஊட்ட முயல்கிறது; ஆனால் அந்தக் கன்று அந்தப் பாலைப் பருக இன்னது செய்யவேண்டும் எனத் தெரியாமல் தடுமாறுகிறது. இந்தக் கன்றின் தடுமாற்றம் போன்றே, சேதநன் உலகவிஷயங்களின் பின்னே அலைந்து திரிகிறான். இதனை இராவணன் போன்றவர்களின் செயல்களில் காணலாம். இராமாயணம் ஸுந்தரகாண்டத்தில் (21-20) சீதை இராவணனிடம் – விவித: ஸ ஹி தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல: - இராவணா! அனைத்து தர்மங்களும் அறிந்தவனாகிய இராமன், தன்னிடம் சரணம் புகுந்தவர்களிடம் மிகுந்த வாத்ஸல்யத்துடன் உள்ளவன் ஆவான் – என்றாள். இப்படிப்பட்ட தாராள மனம் கொண்டவனாகிய எம்பெருமானுக்கு உதவி செய்கின்றதாக இருப்பதால் அல்லவோ தர்மம் என்பதற்கும் அத்தகைய தன்மை (தர்மமாக உள்ள தன்மை) உண்டாகிறது?

## 473. வத்ஸி

தன்னால் இப்படியாக எப்போதும் காப்பாற்றப்படும் ஜீவாத்மாக்களின் கூட்டத்தை எப்போதுமே கொண்டவன் என்பதால் வத்ஸி என்னும் திருநாமம் பெற்றான்.

## 474. ரத்நகர்ப்ப:

இப்படியாக உள்ள பக்தர்களில் யார் செல்வத்தைத் தன்னிடம் வேண்டி நிற்பவர்களுக்கு அளிப்பதற்காகவே அளவற்ற செல்வங்களைக் கொண்டவன். காமார்த்தை உத்வஹந்தம் ச சங்கசக்ரச்சலேந து – இதற்காகவே எம்பெருமான் தன்னுடைய செல்வங்களைச் சங்கு மற்றும் சக்ர ரூபத்தில் வைத்துள்ளான் – என்றது காண்க.

## 475. தநேச்வர:

அவரவர்கள் விரும்பிய தனத்தை மிகவும் விரைவாக அளிப்பவன். இதனால் தநேச்வர என்னும் திருநாமம் பெற்றான்.

## 476. தர்மகுப்

தான் அளித்த செல்வங்கள் மற்றும் விருப்பங்கள் போன்றவை தாழ்ந்த விஷயங்களுக்குச் செல்லாமல் தடுத்து, அவைகள் மூலமாக தர்மத்தை காப்பாற்றியபடி உள்ளவன் ஆவான். ஸாதுமார்க்க ஸ்திதாநாம் ச ஸம்யச்சந்தம் தியா ச தெள – யார் தர்ம வழியில் உள்ளனரோ அவர்களுக்கே நிலையான செல்வங்களையும் விருப்பங்களையும் அளிக்கிறான்.

## 477. தர்மக்ருத்

இப்படியாக அனைவரையும் தர்மவழியில் நிற்கும்படிச் செய்யும்விதமாக, தன்னுடைய அநுக்ரஹத்திற்குக் காரணமான தர்மத்தை, எந்தவிதமான காரணமும் இன்றி உண்டு பண்ணுகிறான். இதனால் இவன் தர்மம் செய்பவன் என்றாகிறான். தர்மம் ஸாமாந்யம் அமலம் அநாதி நிதனம் விபும் துர்லபம் யத் ப்ரபுத்தாநாம் தத்ப்ரஸாததியா விநா – எல்லையற்ற காலமாக இருந்து வருவதும், எங்கும் நிறைந்துள்ளதும், தோஷங்கள் அற்றதும் ஆகிய தர்மங்கள், அவனுடைய க்ருபை இல்லை என்றால் எப்படிப்பட்ட ஞானம் கொண்டிருந்தாலும் அடைய இயலாதவை ஆகும்.

## 478. தர்மீ

இந்த உலகில் ப்ரஸித்தமாக உள்ள அனைத்துவிதமான தர்மங்களும் இவனுக்கு மிகவும் சாதாரணமாக உபயோகப்படுவதால், தர்மத்தை உடையவன் எனப்படுகிறான்.

## 479. ஸத்

இப்படியாக உள்ள அனைத்து தர்மங்களிலும் சிறந்தவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீதை (17-27) – ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே – அர்ஜுனா! “உள்ளது” என்னும் பொருளிலும், “நல்லது” என்னும் பொருளிலும் “ஸத்” என்னும் பதம் பயன்படுவதைக் காண்பாயாக – என்றது. இப்படியாக உள்ள தர்மத்தை “ஸத்” என்று கொண்டாடப்படுவது ஏன் என்றால், இதனால் அடையப்படும் “ஸத்” என்பதான பகவான் மிகவும் உயர்ந்தவனாக உள்ளதால் ஆகும். கீதையில் (17-27) – ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே – என்றதும் காண்க.

## 480. அக்ஷரம்

இவ்விதம் நித்யனாக, எந்தவிதமான காரணமும் இல்லாமல் நன்மைகளைச் செய்பவனாக உள்ளதால் குறைதல், அழிதல் போன்றதான எந்த மாற்றங்களும் இல்லாமல் இருப்பவன். இதனால் அக்ஷரம் என்னும் திருநாமம் பெற்றான்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (1-2-21) – அபக்ஷயவிநாசாப்யாம் பரிணாமர்த்தி ஜந்மபி: வர்ஜித: சக்யதே வக்தும் ய: ஸதா அஸ்தீதி கேவலம் – அவன் குறைதல், அழிதல், விகாரம், வளர்தல் மற்றும் பிறப்பு அற்றவன். எப்போதும் உள்ள ஒருவனாகவே அவனைக் கூறவேண்டும்.

- சாந்தோக்ய உபநிஷத் (6-2-1) – ஸதேவ ஸோம்ய இதம் அக்ர ஆஸீத் – ஸத் என்னும் இது மட்டுமே முதலில் இருந்தது.

## 481. அஸத்க்ஷரம்

தாழ்வாக உள்ள பாவங்களைப் பற்றியவர்களாய், தர்மத்திலிருந்து விலகியவர்களை மீண்டும் ஸம்ஸாரத்தில் சுழலவைப்பவன்; அவர்களுக்கு அஸத்தாகவும், க்ஷரமாகவும் உள்ளவன் ஆவான். அஸத்தாக உள்ளவர்களுக்கு நித்யமாகவும், எல்லையற்றதாகவும் உள்ள ஸம்ஸார பயத்தை அளிப்பதால் இவ்விதம் கூறப்பட்டது. இந்த இரண்டு விஷயங்களும் ச்ருதிகளில் கூறப்பட்டன:

- ஏஷ ஏவ ஸாது கர்ம காரயதி தம் யமேப்யோ லோகேப்ய: உந்நிநீஷதி ஏஷ ஏவாஸாது கர்ம காரயதி தம் யமதோ நிநீஷதி – யாரை இந்த உலகத்தை விட்டு விடுபட ஸர்வேச்வரன் எண்ணுகிறானோ, அவனைக் கொண்டு ஸர்வேச்வரன் நல்லசெயல்களைச் செய்விக்கிறான். யாரை கீழே தள்ள எண்ணுகிறானோ, அவனைக் கொண்டு தீய செயல்களைச் செய்விக்கிறான்.

- அஸச்ச ஸச்சைவை ச யத்விச்வம் ஸதஸத: பரம் – இந்த உலகம் நன்மை மற்றும் தீமை ஆகிய இரண்டையும் கொண்டதாகும். ஆனால் இவை அனைத்தையும் விட ஸர்வேச்வரன் உயர்ந்தவன்.

## 482. அவிக்ஞாதா

இவற்றில் ஸாதுக்களிடம் அபராதங்கள் அதிகமாக இருந்தால், அவைகளைக் கண்டு அவர்களைத் தண்டிக்காமல், பொறுத்துக் கொள்வது மட்டும் அல்ல; அவர்களிடம் அபராதங்கள் உள்ளன என்பதையே அறியாதவன் போன்று உள்ளவன் ஆவான். இதனை எங்கு காணலாம்?

- இராமாயணத்தில் - உச்யமாநோபி பருஷம்நோத்தரம் ப்ரதிபத்யதே – தன்னைப் பற்றிய தாழ்வான சொற்களை ஒருவன் கூறினாலும் அவற்றை இராமன் கேட்டு, பதில் உரைப்பதில்லை – என்றது காண்க.

- கூரத்தாழ்வான் – ப்ரபந்நாபராத அபரிகணநம் து குண ஏவ அதோ ஹி தாதபாதா: ஸர்வஜ்ஞதாம் ஏவம் உபாலபாமஹே த்வம் ஹி அஜ்ஞ ஏவ ஆச்ரிததோஷஜோஷண: - உம்முடைய அனைத்தும் அறிகின்ற தன்மையை நாங்கள் அறிவோம். ஆனால் உனது அடியார்களின் அபராதங்கள் குறித்த விஷயத்தில், அவர்களது தோஷங்களைப் பற்றி மட்டும் ஏதும் அறியாதவன் என்றும் அறிவோம்.

இங்கு ஒரு சிலர், “பரமபுருஷன் ஞானமாத்ரம் என்பதால் ஞாத்ருத்வம் இல்லாமை என்பதைக் காரணம் காண்பித்து அவிஜ்ஞாதா எனப்பட்டது” என்று கூறுவர். இவர்கள் ச்ருதி, ஆசார்யனின் கைங்கர்யம், ந்யாயம் போன்ற எதுவும் அறியாதவர்கள் என்பதால் இப்படி உரைத்தார்கள் என்று அவர்கள் மீது பரிதாபம் கொள்ளவேண்டும்.

## 484. ஸஹஸ்ராம்சு:

எல்லையற்ற ஞானம் கொண்டவன் ஆவான். இங்கு ஓர் ஆக்ஷேபம் எழலாம் – தனது அடியார்களின் அபராதங்கள் பற்றி அவன் அறியாமல் உள்ளான் என்றால், அவன் அவர்களது அபராதங்கள் தவிர மற்றவற்றை மட்டுமே அறிந்தவன் ஆகிறான்; இப்படி உள்ளபோது அவனை ஸர்வஜ்ஞ – அனைத்தும் அறிந்தவன் – என்று கூறுவது எப்படிப் பொருந்தும்? கூறுவோம். அபராதங்களை அறியாமல் உள்ளது என்றால், அபராதங்களை

பொருட்படுத்தாமல் இருப்பதே ஆகும். பகவான் இவ்விதம் உள்ளான் அல்லவோ? இதற்கான ப்ரமாணங்கள்:

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (28-3) – தோஷோ யத்யாபி தஸ்ய ஸ்யாத் – எனது அடியார் ஒருவருக்குத் தோஷம் உள்ளது என்று கூறுவீர்களாகில், நல்லது, அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும்.

- கீதை (9-30) – அபி சேதஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக் – மிகவும் தாழ்ந்தவனாக உள்ளபோதிலும் என்னை மட்டுமே பஜிப்பவனாக.

## 485. விதாதா

மற்றொரு கேள்வி எழலாம். ஸர்வேச்வரன் அடியார்களின் அபராதங்களையோ பாவங்களையோ காணாமல் இருக்கலாம். ஆனால் இவ்விதம் பாவம் செய்த ஒருவனை அவனுடைய பாவங்களின் பலனும், அந்தப் பாவத்திற்கான பலனை அனுபவிக்கும்படிச் செய்கின்ற யமலோக வேதனைகளும் பாதித்தே தீரும் அல்லவோ? பதில் அளிப்போம். அவை அனைத்தும் ஸர்வேச்வரனின் வசப்பட்டதாகையாலே, அவை அடியார்களை பாதிக்காது என்பதை மனதில் கொண்டு – அவைகளை விதிப்பதால் விதாதா ஆகிறான் எனப்பட்டது. விஷ்ணுபுராணத்தில் (3-7-15) யமன் – அஹம் அமரவரார்ச்சிதேந தாத்ரா ஸம இதி லோகஹிதாஹிதே நியுக்த: - தேவர்களின் தலைவர்களால் அர்ச்சிக்கப்படும் அந்த ஸர்வரக்ஷகன் என்னை அனைத்து உயிர்களின் நன்மை தீமைகளுக்காக நியமனம் செய்தான் – என்றது காண்க. இதே பொருளை ப்ராஹ்ம, விஷ்ணு, வாமன, நாரஸிம்ஹ, லைங்க, பாகவத புராணங்களிலும், விஷ்ணுதர்மம், விஷ்ணுதர்மம் ஆகியவற்றிலும் உள்ள மயகிங்கர உரையாடல்களின் காண்க.

## 486. க்ருதலக்ஷண:

இப்படியாக இவன் அடியார்களின் அனைத்துவிதமான தோஷங்களையும் பொறுத்துக் கொள்கிறான் என்றால், எந்தச் செயல்கள் கைவிடத்தக்கவை என்றும், எவை ஏற்கத்தக்கவை என்றும் அறிவது என்ற கேள்வி எழலாம். இவற்றுக்கு இடையே உள்ள வேறுபாடு என்ன என்று உரைக்கிறார். அதாவது இவன் லக்ஷணத்தை உண்டாக்கியவன்;

டன் மீது கொண்ட பக்தி காரணமாக யாருக்கு நன்மை அளிக்கவேண்டும் என்று தெளிவாக வேறுபடுத்தவல்ல லக்ஷணங்களை உண்டாக்கியவன். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- இராமாயணம் யுத்தகாண்டம் (28-3) – மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் – யார் ஒருவன் என்னை நட்புடன் அணுகுகிறானோ அவனிடம் எந்தவிதமான தோஷங்கள் இருந்தாலும் நான் கைவிடமாட்டேன்.

- கீதை (9-30) – ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ: - ஒருவன் கொடிய செயல்களைக் கொண்டவன் என்றாலும், என்னிடம் பக்தியுடன் கூடிய செயல்களில் ஈடுபடுகிறான் என்றால், அவன் என்னால் உயர்ந்தவனாகவே கொள்ளப்படுகிறான்

- ஹரிவம்சம் (27-24) – சக்ராங்கிதா: ப்ரவேஷ்டவ்யா: யாவதாகமநம் மம நாமுத்ரிதா: ப்ரவேஷ்டவ்யா: யாதத்ராகமநம் மம – யார் ஒருவன் சக்ரம் மற்றும் சங்கு ஆகிய அடையாளங்களைத் தன் மீது பொறித்துக் கொள்கிறானோ அவன் எனக்கு அருகில் சேர்த்துக் கொள்ளப்படுகிறான்

- விஷ்ணுதர்மம் – பவதாம் ப்ரமதாமத்ர விஷ்ணுஸம்ச்ரயமுத்ரயா விநா ஆஜ்ஞாபங்க க்ருந்நைவ பவிஷ்யதி நர: க்வசித் – மஹாவிஷ்ணுவை அண்டுவதற்கான தகுதியை அளிப்பதான சங்கு மற்றும் சக்கரத்தைப் பொறித்துக் கொள்ளாமல் இருக்கின்ற மனிதனைக் காட்டிலும் பகவானின் ஆணையை மீறும் எவனையும் உங்களால் காண இயலாது (அவனது ஆணையை மீறுவதில் முதன்மையாக யார் உள்ளான் என்றால், சங்கு-சக்கரம் பொறித்துக் கொள்ளாதவனே ஆவான் என்று கருத்து).

- விஷ்ணுதத்வம் – சக்ராதிதாரணம் பும்ஸாம் பரஸம்வந்தவேதநம் பதிவ்ரதாநிமித்தம் ஹி வலயாதி விபூஷணம் – ஒரு பதிவ்ரதை எவ்விதம் தனது கணவன் உயிருடன் உள்ளான் என்பதை உணர்த்தும்விதமாக தனது திருமாங்கல்யத்தை அணிகிறாளோ அது போன்று, மஹாவிஷ்ணுவின் அடியார்கள் அவனது முத்ரைகளான சங்கையும் சக்கரத்தையும் பொறித்துக் கொள்கிறார்கள்.

ஆக விஷ்ணுஸம்பந்தம் அடைந்தவன் மிகவும் உயர்ந்தவன் என்று உணர்த்திய பின்னர், மற்ற அனைத்தும் கைவிடத்தக்கவை என்றே ஆகிறது. ஆகவே அவன் பாரபக்ஷமாக நடக்கிறான் போன்றதான மற்ற வாதங்கள் என்னும் தோஷங்களுக்கு இங்கு இடமேயில்லை.

## 487. கபஸ்திநேமி:

இப்படிப்பட்ட லக்ஷணம் கொண்டவர்கள் (அவனது அடையாளங்களான சங்கு, சக்கரம் போன்றவற்றைத் தங்களது சரீரத்தில் பொறித்துக் கொண்டவர்கள்) யமனாக இருந்தாலும், யமதூதர்களாக இருந்தாலும் அவர்களால் எவ்வித கொடுமையும் அனுபவிக்கமாட்டனர். காரணம் இவர்களுக்கு ரக்ஷகனாக ஸர்வேச்வரனே உள்ளான் என்று கூற உள்ளார். இவர்களைக் காப்பதற்காகவே அவன் மிகவும் ஒளி வீசுகின்றதான ஆயிரம் இலைகள் கொண்ட சக்கரத்தைத் தரித்துள்ளான். விஷ்ணுபுராணம் (3-7-35) – யதா வஸதி மநஸி யஸ்ய ஸோ அவ்யயாத்மா புருஷவரஸ்ய ந தஸ்ய த்ருஷ்டிபாதே தத்ர கதி: அதவா மமாஸ்தி சக்ர ப்ரதிஹத வீர்யபலஸ்ய ஸோ அந்யலோக்ய: - யமன் தனது தூதர்களிடம், “மாற்றங்களே அடையாமல் உள்ள மஹாவிஷ்ணு யாருடைய உள்ளத்தில் எப்போதும் வஸிக்கிறானோ, அப்படிப்பட்ட மனிதனின் கண் பார்வையானது எத்தனை தூரம் வரை செல்கிறதோ, அத்தனை தூரம் மஹாவிஷ்ணுவின் சக்கரம் சுற்றியபடி உள்ளது; இப்படிப்பட்டவனின் பார்வை மூலம் பலம் இழந்த என்னாலோ அல்லது எனது வேலையாட்களான உங்களாலோ அந்த மனிதன் பாவம் செய்தவன் என்றாலும், அவனை அழைத்துவர இயலாது; அவன் ஸ்ரீவைகுண்டம் செல்லத் தகுதி கொண்டவன்”, என்கிறான்.

## 488. ஸத்வஸ்த்த:

மேலும் இப்படிப்பட்ட அடியார்களை வாட்டும்படியாகச் செய்கின்ற கர்மங்களே அவர்களிடம் இருப்பதில்லை என்பதால், யமன் போன்றவர்கள் இவர்கள் அருகில் வருவதற்கான வாய்ப்பு இல்லை. இவர்களுக்குக் கர்மம் இல்லை என்பதற்கான காரணம்

என்ன என்றால், இவர்களது மனதில் எப்போதும் எம்பெருமான் வீற்றிருப்பதால், கர்மங்கள் இருக்கின்ற இடம் தெரியாமல் ஓடிவிடுகின்றன என்று கருத்து. கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- விஷ்ணுபுராணம் (3-7-25) – ஹ்ருதி யதி பகவாந் அநாதிராஸ்தே ஹரிரபி சக்ரகதாதர: அவ்யயாத்மா ததகம் அகவிகாத கர்த்ருபிந்நம் பவதி கதம் ஸதி சாந்தகாரம் அர்கே – யார் ஒருவனது மனதில் அநாதியானவனும் சக்கரத்தை ஏந்தியவனும் ஆகிய ஸ்ரீஹரி வசிக்கிறானோ, அந்த மனிதனின் அனைத்து பாவங்களும், பாவங்களை அழிப்பவனாகிய பகவானால் அழிக்கப்படுகிறது; சூரியன் உதயம் ஆன பின்னர் இருள் இருக்க இயலுமா? இது போன்றே அவன் மனதி எந்தப் பாவங்களும் நிலைக்காது.

- விஷ்ணுபுராணம் – ஸ்படிகமணி சிலாமால: க்வ விஷ்ணு: மநஸி ந்ருணாம் க்வ மத்ஸராதிதோஷ: - நிர்மலமான ஸ்படிகமணி போன்ற மஹாவிஷ்ணு மனதில் வாஸம் செய்யும்போது, அதில் உள்ள தோஷங்கள் எங்கே?

- விஷ்ணுதர்மம் (2-2-28) – கிங்கரா தண்டபாசௌ வா ந யமோ ந ச யாதநா: ஸமர்த்தா: தஸ்ய யஸ்யாத்மா கேசவாலம்பந: ஸதா – யார் ஒருவனுடைய மனம் கேசவனின் த்யானத்தில் எப்போதும் ஈடுபட்டபடி உள்ளதோ அவனுக்கு யமகிங்கரர்களாலோ, அவர்களது ஆயுதங்களாலோ அல்லது யமலோக வேதனைகளாலோ துன்பம் அடைகின்ற நிலை இல்லை, அவற்றுக்கு இவனைத் துன்புறுத்தும் சக்தி இல்லை.

- வாமனபுராணம் – ததா அந்யதுக்தம் நரஸத்தமேந இக்ஷ்வாகூணாம் பக்தியுதேந நூநம் யே விஷ்ணுபக்தா: புருஷா: ப்ருதிவ்யாம் யமஸ்ய தே நிர்விஷயா பவந்தி – ப்ரஹ்லாதன் கூறுவது: இந்த உலகில் உள்ள விஷ்ணுபக்தர்கள் யாரும் யமலோகம் வாசம் என்பதையே பெறமாட்டார்கள்

## 489. ஸிம்ஹ:

மேலே கூறப்பட்ட பலவற்றையும் அறியாமல் யமன் உள்ளிட்டவர்கள் தனது அடியார்களைக் கிட்டினால், அவர்கள் மீது சிங்கம் போன்று பாய்பவன். இதனை யமன் கூறும்போது – ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு: - நான் சுதந்திரமானவன் அல்லன், என்னை நியமிப்பவன் மஹாவிஷ்ணு – என்கிறான். மேலும் லைங்கபுராணத்தில் மார்க்கண்டேயர் பின்வருமாறு உரைக்கிறார்:

வாஸுதேவபரம் த்ருஷ்ட்வா வைஷ்ணவம் தக்தகில்பிஷம்
தேவா விபீதா: ஸம்யாந்தி ப்ரணிபத்ய யதாகதம்
த்ருஷ்ட்வா யம: அபி வை பக்தம் வைஷ்ணவம் தக்தகில்பிஷம்
உத்தாய ப்ராஞ்ஜலிர்பூத்வா நநாம ரவிநந்தந:
தஸ்மாத் ஸபூஜயேத் பக்த்யா வைஷ்ணவாந் விஷ்ணுவத் நர:
ஸ யாதி விஷ்ணுஸாயுஜ்யம் நாத்ர கார்யா விசாரணா

**இதன் பொருள்** – வாஸுதேவன் மட்டுமே கதி என்று இருந்து, இதன் காரணமாக அனைத்து பாவங்களையும் போக்கிக்கொண்ட ஸ்ரீவைஷ்ணவன் ஒருவனைக் காணும் தேவர்கள், அவனைக் கண்டு பயந்தவர்களாக, அவனைக் கண்டு வணங்கியபடியே வந்து, மீண்டும் திரும்பிச் செல்கின்றனர்; சூரியனின் புத்திரனான யமனும் அனைத்துவிதமான பாவங்கள் நீங்கப் பெற்ற ஸ்ரீவைஷ்ணவனைக் கண்டவுடன் சட்டென்று எழுந்து, கைகள் குவித்து வணங்கினான்.

இது போன்றே லைங்க புராணம், கௌசிகோபாக்யானத்தில் – கௌசிகாதீஸ்ததா த்ருஷ்ட்வா ப்ரஹ்மா லோகபிதாமஹ: ப்ரத்யுத்கம்ய யதாந்யாயம் ஸ்வாகதேநாப்ய பூஜயத் – எம்பெருமானைக் குறித்துப் பாடுவதற்காகப் படைக்கப்பட்டவர்களில் நான்முகனே முதல்வன் ஆவான்; ஆகவே அவனே உலகின் பிதாமகன் ஆகிறான்; அந்த நான்முகன் எம்பெருமானைக் குறித்து பாடுகின்ற கௌசிகன் போன்றவர்களைப் பார்த்தான்; அவர்களை எதிர்கொண்டு வரவேற்று பூஜைகள் செய்தான் – என்றது காண்க.

ஸ்ரீவிஷ்ணுதத்வத்தில் உள்ள நரக வர்ணனையில் கீழே உள்ள வரிகளைக் காணலாம்:

ஹரிபாத ப்ரபந்நானாம் தூரீபூதா: ஸ்வபாவத:

தேஷாம் து ஸர்வபூதாநாம் ஹரிரேவ பதிர்யத:
வைஷ்ணவேப்ய: அபி பிப்யந்தி தேவா நரகரக்ஷா:
அவமாந க்ரியா தேஷாம் ஸம்ஹரத்யகிலம் ஜகத்
காலேந ஏதாவதா தேஷு நரகேஷுஹி கஞ்சந
ந த்ருச்யதே மஹாவீர்ய ப்ரபாவாத் பரமேஷ்டிந:

**இதன் பொருள்** – ஸ்ரீஹரியின் திருவடிகளில் சரணம் என்று புகுந்த அடியார்களிடம் யமனின் தூதர்கள் விலகியே நிற்பார்கள்; இதன் காரணம் அந்த அடியார்களின் எஜமானன் ஸ்ரீஹரியே அல்லாமல், யமன் இல்லை; நரகத்தின் பாதுகாவலர்கள் கூட எம்பெருமானின் அடியார்களைக் கண்டு அச்சம் கொள்கின்றனர்; அந்த அடியார்களை அவமானம் செய்வது உலகிற்கே தீமையை அளிக்கக்கூடியதாகும்; இதுவரை நரகத்தில் ஒரு விஷ்ணுபக்தன் கூட இருந்ததில்லை.

ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் – நரகே பச்யாமாநஸ்து யமேந பரிபாஷித: கிம் த்வயா நார்சிதோ தேவ: கேசவ: க்லேசநாசந: - யமலோகமான நரகத்தில் துன்பப்படும் ஒருவனைக் கண்டு யமன், “நரனே! பாவங்களை அழிக்கவல்ல கேசவன் உன்னால் ஒருநாள் கூட பூஜிக்கப்படவில்லையா?”, என்று கேட்பான் – என்றது காண்க.

## 490. பூத மஹேச்வர:

இதுவரை கூறப்பட்ட விஷயங்களில் எம்பெருமான் ஸமர்த்தனாக உள்ளதன் காரணம் என்னவென்றால் – பூதங்களின் ஈச்வரர்களாக உள்ள நான்முகன், ருத்ரன், யமன் போன்ற அனைவரையும் நியமிப்பவனாக உள்ளதாலும், அவர்களுக்குக் காரணமாக உள்ளதாலும், அவர்களை அடக்கி ஆள்கின்ற திறமை மற்றும் ப்ரபாவம் உள்ளதாலும் ஆகும்.

## 491. ஆதிதேவ:

அவனே அனைத்திற்கும் காரணமாக உள்ளான். அனைத்து தேவர்களையும் அடக்கும் திறமை கொண்டுள்ளான். தைத்திரீய ஆநந்தவல்லீ – பீஷ: அஸ்மாத் வாத: பவதே – அவனிடம் உள்ள பயம் காரணமாகவே காற்று வீசுகிறது – என்று கூறியது.

## 492. மஹாதேவ:

நான்முகன் உள்ளிட்ட அனைத்து தேவர்களையும் பந்து போன்று வைத்துக்கொண்டு விளையாடுபவன். இதனால் மஹாதேவன் எனப்படுகிறான்.

## 493. தேவச:

நான்முகன் உள்ளிட்ட அனைத்து தேவர்களுக்கும் தலைவனாக உள்ளதால் தேவேச எனப்பட்டான்.

## 494. தேவப்ருத்

தேவர்களைக் காப்பாற்றித் தாங்குபவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 495. குரு:

வேதங்கள் மூலமாக தேவர்களுக்கு அவரவர்களின் அதிகாரங்கள் குறித்து இவன் உபதேசம் செய்வதால் அவர்களுன் குருவாக உள்ளான். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- ஸ்வேதாச்வதர உபநிஷத் (6-18) – யோ வை தேவாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை – நான்முகனுக்கு வேதங்களை எம்பெருமான் உபதேசம் செய்தான்.
- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (3-7-15) – ஹரி குரு வசக: அஸ்மி – உயர்ந்த ஆசார்யனான ஸ்ரீஹரிக்கு நான் அடங்கியவன் (இது நான்முகன் கூறுவது)
- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (3-7-15) – அக்நி: ஸுவர்ணஸ்ய குரு: - தங்கத்தை தூய்மை செய்வதில் எவ்விதம் அக்னி முக்கியமோ அது போன்று எனக்குக் குருவாக ஸர்வேச்வரன் உள்ளான் (யமன் கூறுவது).

- ஹயசிர உபாக்யானம் – காலேந அநவச்சேதாத் இதம் குருத்வம் – காலத்தினால் அளவிட இயலாத பெருமை கொண்ட ஆசார்யனாக உள்ளவன்

- ஜக்ராஹ வேதாந் அகிலாந் ரஸாதலகதாந் ஹரி: ப்ராதாச்சம் ப்ராஹ்மணோ ராஜந் தத: ஸ்வாம் ப்ரக்ருதிம் கத: - அரசனே! ஹயக்ரீவனாக வந்த ஸ்ரீஹரி, பாதாள லோகத்திலிருந்து வேதங்களை மீட்டு வந்து, அவற்றை நான்முகனுக்கு உபதேசம் செய்தான்.

- ஸ்ரீவிஷ்ணுதர்மம் (43-36) – ரஸாதலாத் யேந பரா ஸமாஹ்ருதோ: ஸமஸ்தவேதா: - அனைத்து வேதங்களும் அவனால் பாதாள லோகத்திலிருந்து மீட்கப்பட்டன.

## 496. உத்தர:

நான்முகன் உள்ளிட்ட தேவர்களுக்கு அசுரர்கள் மூலமாக உண்டாகக்கூடிய ஆபத்துக்களிலிருந்து அவர்களை தப்பும்படிச் செய்பவன். மஹாபாரதம் சாந்திபர்வம் (348-47) – ஏவம் ஸ்துத: ஸ பகவாந் புருஷ: ஸர்வதோமுக: ஜஹௌ நித்ராமத ததா தேவகார்யர்த்தம் உத்யத: - இப்படியாக அனைத்து திசைகளில் திருமுகங்கள் கொண்ட பகவான், தேவர்களின் காரியத்திற்காகத் தனது நித்திரையை விட்டு எழுந்தான்.

## 497. கோபதி:

சந்தஸ் என்னும் பாஷையாக வழங்கப்படும் சொற்கள் அனைத்திற்கும் பதியாக உள்ளவன் (அனைத்து வித்யைகளுக்கும் தலைவன் எனலாம்). வாக்யபதயே – வாக்கியங்களின் பதி – என்று மந்த்ரம் கூறுகிறது.

## 498. கோப்தா:

அனைத்து வித்யைகளையும் ரக்ஷிப்பதால் ரக்ஷகன் ஆகிறான். மந்த்ரவர்ணம் – ஸர்வவித்யேச்வராய – அனைத்து வித்யைகளுக்கும் ஈச்வரனாக உள்ளவனுக்கு – என்றது.

## 499. ஜ்ஞாநகம்ய:

வேதாந்த வித்யை என்னும் உயர்ந்த வித்யை மூலமும், உறுதியான த்யானத்தின் மூலமும் மட்டுமே அறியப்படுபவன். வரவாஜிமுகம் த்யாயேத் அத வாகீச்வரம் ப்ரபும் – குதிரையைப் போன்ற திருமுகம் கொண்டவனும், ஹயக்ரீவனும், வாக்கின் நாயகனாக உள்ளவனும் ஆகிய அவனைக் குறித்தே த்யானம் செய்யவேண்டும்.

## 500. புராதந:

இப்படியாக வித்யையை வளர்த்து, அதனை உபதேசம் செய்தபடி இருத்தல் என்பது இந்த யுகத்தில் மட்டும் அல்ல. ஒவ்வொரு கல்பத்திலும் இதனைச் செய்தபடி உள்ளதால் புராதநன் ஆகிறான். அதாவது எல்லையற்ற காலமாகச் செய்தபடி உள்ளான்.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், ஸ்ரீரங்கநாதனின் தெய்வீக ஆணையால் ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச்செய்த பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், ஐந்தாவது நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.

### ஆறாவது நூறு திருநாமங்கள் தொடக்கம்

## 501. சரீர பூத ப்ருத்

இருபத்துநான்கு தத்துவங்களையும் (ப்ரக்ருதி, மஹத் போன்றவை) தன்னுடைய சரீரமாகவே தரிப்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- யஜுர் - தச்சிர: - இதுவே அவனது தலையாகும்.

- மஹாபாரதம் சாந்திபர்வம் (348-49) – தஸ்ய மூர்த்தா ஸமபவத் த்யை: ஸநக்ஷத்ரதேவதா இதி – நக்ஷத்ர தேவதைகளுடன் கூடிய ஆகாயம் அவனது தலையானது.

- மஹாபாரதம் சாந்திபர்வம் – (மேலே உள்ள வரி தொடங்கி இந்த வரி முடிய அனைத்தும் இவனது சரீர வர்ணனை என்று கொள்க) – ஏதத் ஹயசிர: க்ருத்வா நாநாமூர்த்திபி: ஆவ்ருதம் இத்யந்தம் – குதிரை போன்ற தலையைக் கொண்டும், பலவிதமான ரூபங்களின் சரீரம் கொண்டும்.

## 502. போக்தா

அனைத்தையும் அனுபவிப்பவன். மஹாபாரதம் சாந்திபர்வம் (348-3) – யத்து தத்கதிதம் பூர்வம் த்வயா ஹயசிரோ மஹத் ஹவ்யகவ்யபூஜோ விஷ்ணோ: உதக்பூர்வே மஹோததௌ – வடகிழக்குத் திசையில் முன்னர் ஹவ்யகவ்யங்களை (ஹவ்யம் என்றால் தேவர்களைக் குறித்து இயற்றப்படும் ஹோமம், கவ்யம் என்றால் பித்ருக்களுக்குச் செய்வதாகும்) அனுபவிப்பனாகிய விஷ்ணுவைப் பற்றி உரைத்தீர்கள். அப்படிப்பட்ட ஹயக்ரீவனின் சரிதம் பற்றிக் கூறுங்கள் – என்று ஜனமேஜயர் கேட்பதாக உள்ளது.

இராமாவதாரம்

## 503. கபீந்த்ர:

வானரர்களின் தலைவனாக உள்ளவன். அதன் பின்னர் ஹயக்ரீவனாக வந்து அவதரித்தபோது தன்னால் உபதேசிக்கப்பட்ட வேதங்களில் உள்ள யஜ்ஞம் போன்றவை சரியான முறையில் கடைப்பிடிக்கப்படும் பொருட்டு இராமனாக அவதரித்தான். தனக்கு ஏற்காத மனித வடிவம் தரித்தவனாக, தன்னைப் போன்றே மாறுவேஷம் பூண்டு வானரர்களாக வந்த தேவர்களுக்கு இந்த்ரனாக விளங்கியவன். இராமாயணம் யுத்தகாண்டம் – ஸர்வலோகேச்வர: ஸாக்ஷாத் லோகாநாம் ஹிதகாம்யயா ஸர்வை: பரிவ்ருதோ தேவை: வானரத்வம் உபாகதை: - அனைத்து லோகங்களுக்குக் ஈச்வரனாக உள்ள இராமன், அனைத்து உலகிற்கும் நன்மையைச் செய்ய திருவுள்ளம் கொண்டவனாக, வானரர்களாக நின்ற தேவர்களால் சூழப்பட்டான் – என்றது காண்க.

## 504. பூரிதக்ஷிணை:

இந்த உலகைத் திருத்தும்விதமாக அச்வமேதம் போன்ற பல யாகங்களைத் தானே யஜமானனாக நின்று நடத்தி, அவற்றில் பலவிதமான தக்ஷிணைகளை அளித்தவன்.

இராமாயணம் பாலகாண்டம் – அச்வமேதசதை: இஷ்ட்வா – நூற்றுக்கணக்கான அச்வமேதங்களை நடத்திய பின்னர் (இராமன் பரமபதம் செல்வான்) – என்றது காண்க.

## 505. ஸோமப:

அந்த யாகங்களில் ஸோமம் என்னும் ஒருவகையான செடியின் ரஸத்தைப் பருகியதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

## 506. அம்ருதப:

கீழே உள்ள வரிகள் காண்க:

- யத் கிஞ்சித் ஹூயதே வஹ்நௌ ஹவிர்மந்த்ரை: விதாநத: தத் ஸர்வம் அம்ருதம் க்ருத்வா விஷ்ணவே ஸம்ப்ரயச்சதி – வேதங்களில் முழங்கப்பட்ட முறையில் மந்த்ரங்கள் உச்சரிக்கப்பட்டு, யஜ்ஞங்களில் எந்த அவிர்பாகம் அளிக்கப்பட்டாலும் அதனை அக்னிதேவன் அமிர்தமாக மாற்றி மஹாவிஷ்ணுவிற்கு அளிக்கிறான்.

- கீதை (9-24) – அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச – அனைத்து அவிர்பாகங்களையும் அனுபவிப்பவனும், அவற்றுக்கான பலன் அளிப்பவனும் நானே.

ஆக அவிர்பாகத்தின் பரிணாம மாற்றமான அமிர்தத்தை பருகுவதால் இந்தத் திருநாமம் பெற்றான். அல்லது அமிர்தத்தைப் பாதுகாப்பவன் எனலாம். அவனே அமிர்த ஸ்வரூபமாக உள்ளான்; யார் அவனால் நியமிக்கப்பட்ட நித்யகர்மாக்களை செவ்வனே செய்து வருகிறார்களோ, அவர்களுக்காக அமிர்தத்தைப் பாதுகாப்பவன் எனலாம். இதனால் அம்ருதப: எனப்படுகிறான். மேலும் கீழே உள்ள வரிகள் காண்க:

- யத்ர தேவா அம்ருதம் ஆநசாநா: த்ருதீயே தாமாந்யப்யைரயந்த இதி – மூன்றாவது உலகமான தேவலோகத்தில் தேவர்கள் அமிர்தத்தைப் பருகி தேஜஸ்ஸுடன் உள்ளனர்.

- அம்ருதஸ்ய ஏஷ ஸேது: - அமிர்தத்திற்கு அணையாக உள்ளவன்.

- யஸ்ய சாயா அம்ருதம் – யாருடைய நிழலானது அமிர்தமோ.

## 507. ஸோம:

தனக்கும் தன்னை அனுபவித்தபடி உள்ளவர்களுக்கும் அமிர்தமாக உள்ளவன் என்பதால் ஸோம எனப்பட்டான். ஸோம என்னும் பதம் அமிர்தத்தைக் குறிக்கும். கீழே உள்ள வரிகள் காண்க:

- யஜுர் அஷ்டகம் – த்ருதீயஸ்யாமிதோ திவி ஸோம ஆஸீத் – இந்த உலகிலிருந்து மூன்றாவதாக உள்ள உலகத்தில் அமிர்தம் உள்ளது.
- ஸ கலு அம்ருதோபம: - அவன் அமிர்தமாகவே உள்ளான்

- இராமாயணம் ஆரண்யகாண்டம் – மஹதா தபஸா ராம மஹதா சாபி கர்மணா ராஜா தசரதேநாஸி லப்தோ அம்ருதமிவ அமரை: - ராமா! தேவர்கள் எப்படி அமிர்தத்தை அடைந்தனரோ அப்படியே, உனது தந்தையான தசரதன் தன்னுடைய தவத்தாலும் புண்ணிய செயலாலும் உன்னை அடைந்தான்.

- அம்ருதஸ்யேவ நாத்ருப்யந் ப்ரேக்ஷமாணா ஜநார்த்தநம் – அமிர்தத்தைச் சுவைத்தவர்கள் எவ்விதம் த்ருப்தி அடையாமல் உள்ளனரோ அது போன்றே ஜனார்த்தனனைக் கண்டவர்கள் த்ருப்தி அடைவதில்லை.

- தைத்திரீயம் – சாந்திஸம்ருத்தம் அம்ருதம் – ப்ரஹ்மம் அமிர்தம் போன்றதே

## 508. புருஜித்

பலரையும் வென்றவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். இராமாயணம் அயோத்யாகாண்டம் (12-19) – ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ: குரூந் சுச்ஷ்ருஷயா வீரோ தநுஷா யதி சாத்ரவாந் – இராமன் இந்த உலகங்களை சத்தியத்தாலும், செல்வம் அற்ற மக்களை தானத்தாலும், ஆசார்யர்களை

பணிவிடைகளாலும், விரோதிகளை தனது திருக்கரத்தில் உள்ள வில்லாலும் வெல்கிறான் – என்றது காண்க. ஆக, பலரையும் வெல்கிறான் என்று கருத்து.

## 509. புருஸத்தம:

தனது குணங்கள் என்னும் அமிர்தத்தை எப்போதும் பருகியபடி இருக்கவேண்டும் என்று ஆசைப்பட்ட அனுமன் முதலானர்களிடம் எப்போதும் வசிப்பவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் உத்தரகாண்டம் (40-15) – ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித: பக்திச்ச நியதா தீர பாவோ நாந்யத்ர கச்சதி – ராஜன்! உன்னிடம் எப்போதும் அடியேனுக்கு பரமபக்தியும் ஆழ்ந்த நட்பும் குடிகொண்டுள்ளது. அடியேனுடைய இதயமானது உன்னைத் தவிர வேறு எதிலும் செல்வதில்லை – என்பது அனுமன் வாக்கு.

- இராமாயணம் உத்தரகாண்டம் (40-16) – யாவத் ராமகதா வீர – வீரனே! இராமனின் சரிதம் எந்த நாள்வரை இங்கு கூறப்பட்டபடி உள்ளதோ (அதுவரை எனது ப்ராணன் இங்கு இருக்கும்).

## 510. விநய:

மாரீசன் தொடக்கமாக உள்ள பலவிதமான தீயவர்களையும் தனது வீர்யம் முதலான குணங்களைக் காண்பித்துத் திருத்தியவன்.

## 511. ஜய:

தனது அடியார்களால் எளிதாக வெல்லப்படுபவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் ஆரண்யகாண்டம் – ஆஜ்ஞாப்யோ அஹம் தபஸ்விநாம் – நான் முனிவர்களின் ஆணைக்காக காத்திருக்கிறேன்.

- இராமாயணம் பாலகாண்டம் – ததோ நாராயணோ விஷ்ணு: நியுக்த: ஸுரஸத்தமை: - அதன் பின்னர் தேவர்களால் நாராயணன் பணிக்கப்பட்டான்.

## 512. ஸத்யஸந்த:

தன்னுடைய அடியார்களிடம் தான் செய்து கொடுத்த ப்ரதிஜ்ஞை சத்தியமாக இருக்கும்படியாக நடப்பவன் என்பதால் ஸத்யஸந்தன் எனப்படுகிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் ஆரண்யகாண்டம் (10-19) – அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம் ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத: - சீதையே! எனது ப்ராணனையும், உன்னையும், லக்ஷ்மணனையும் நான் விட்டாலும் விடுவேன்; ஆனால் எனது ப்ரதிஜ்ஞையை விடமாட்டேன்; அதிலும் அந்தணர்களுக்கு என்னால் கொடுக்கப்பட்ட ப்ரதிஜ்ஞை பற்றிக் கூறவும் வேண்டுமோ?

- இராமாயணம் பாலகாண்டம் (1-39) – ஸத்யஸந்தோ ஜிதேந்த்ரிய: - தன்னுடைய வாக்கைக் காப்பாற்றுவதில் உண்மையானவன்; தனது புலன்களைத் தன்வசப்படுத்தியவன்.

## 513. தாசார்ஹ:

“தாச” என்பது தானம் என்பதாகக் கொள்ளப்பட்டு, அதற்குத் தகுதியானவன் என்று பொருள். அதாவது தனது அடியார்களுக்குத் தன்னை அளிப்பதற்கும், அது போன்று அவர்கள் தங்களைத் தன்னிடம் அளிப்பதற்கும் தகுதியானவன் என்று கருத்து. அல்லது க்ருஷ்ணனாக அவதரித்தபோது, தசார்ஹ வம்சத்தில் பிறந்த காரணத்தினால் தாசார்ஹ என்றும் கொள்ளலாம்.

## 514. ஸாத்வதாம் பதி:

தன்னுடைய திருவடிகளைத் தவிர மற்றொன்றை நாடாத ப்ரஹ்மநிஷ்டர்களுக்கு பதியாக விளங்குபவன். ஸத்வான் என்றால் ப்ரஹ்மத்தை அறிந்தவன் அல்லது ஸாத்வீகமான

குணம் கொண்டவன். இப்படிப்பட்டவர்களால் பின்பற்றப்படும் சாஸ்த்ரம் ஸாத்வதம் எனப்படும். பௌருஷ ஸம்ஹிதை – நிரசீ: கர்மஸம்யுக்தாந் ஸாத்வதாம்ச்சாப்யகல்பயம் ஸாத்வத ஜ்ஞாநத்ருஷ்ட: அஹம் ஸாத்வத: ஸாத்வதீபதே – பலனை எதிர்பார்க்காமல் கர்மங்களைச் செய்கின்ற ஸாத்வதர்களை நான் படைத்தேன்; உயர்ந்த ஞானம் கொண்ட அவர்களால் நான் அறியப்படுவதால் நானும் ஸாத்வதன் ஆவேன் – என்றது காண்க. யாதவர்களும் ஸாத்வதர்கள் எனப்படுவர்; அவர்களது பதியாக உள்ளதால் ஸாத்வதாம் பதி எனப்படுகிறான்.

## 515. ஜீவ:

தனது அடியார்கள் தகாத வழிகளில் சென்று தங்களது ஆத்மாவிற்கு அழிவைத் தேடிக் கொள்ளாமல் தடுத்து, தனது கைங்கர்யங்களை அவர்களுக்கு அளித்து, அவர்களைக் காப்பாற்றுகிறான். ஆனந்தமூர்த்தி: பகவாந் ஹரி: த்ரைலோக்யபூஜித: த்ரஷ்டும் ந ஸாஹதே தேவி! க்லிஷ்டாந் ஸ்வபரிசாரகாந் – மூன்று உலகங்களும் பூஜிக்கும்படியாக உள்ள ஸ்ரீஹரியானவன் தனது அடியார்கள் வருத்தம் கொள்வதைக் காண்பதற்குப் பொறுக்கமாட்டான் – என்றது காண்க.

## 516. விநயிதா

ராஜகுமாரனை அரசன் எவ்விதம் அன்புடன் அணைத்துக் கொள்வானோ அது போன்று, தனது அடியார்களை அணைத்துக் கொண்டு, அவர்களைக் காப்பவன். நய கதௌ ரக்ஷணே ச – நய என்னும் தாது காப்பாற்றுதலைக் குறிக்கும்.

## 517. ஸாக்ஷீ

அவர்களது நன்மையை மட்டுமே இவன் எண்ணியபடி உள்ளதால், அவர்கள் செய்யும் அனைத்துச் செயல்களையும் கவனித்தபடி உள்ளவன்.

## 518. முகுந்த:

தன்னிடம் மட்டுமே நிலையாக நிற்கும் தனது அடியார்கள், தன்னை வேண்டி நின்றார்கள் என்றால், அவர்கள் கேட்டதை அளித்தால் மட்டுமே தனது இருப்பு உள்ளது என்று எண்ணியவனாக, அவர்களுக்கு முக்தி பூமியை அளிப்பவன்.

## 519. அமிதவிக்ரம:

தனது அடியார்கள் தன்னை த்யானம் செய்யும்போதும், தன்னை ஆராதிக்கும்போதும் அநுஸந்திக்கின்ற அனைத்து தத்வங்களையும் (ப்ரக்ருதி, மஹத் போன்றவை) தாங்குகின்ற ஆதாரச்சக்தி என்பதான எல்லையற்ற பலம் கொண்டவன். பௌஷ்கர ஸம்ஹிதையில் – காலவைச்வாநர: சாயீ நாநாத்வாதோ நிவாஸிந: ஆதாரசக்தி ஸஞ்ஜஸ்ய ஹி அமூர்த்தஸ்ய ச வை விபோ: அபிமாநதநுர்யோ வை நாநாபேதைச்ச வர்த்ததே – கால வைச்வாநரன் என்றும், ஆதாரசக்தி என்றும் திருநாமங்களைக் கொண்டு; எங்கும் செல்லக்கூடியவனாக, கீழுலகில் தனியாக உள்ளவனாகிய பகவான், அந்தந்த காலங்களில் தனது விருப்பத்திற்கு ஏற்ப பல திருமேனிகளைக் கொள்கிறான் – என்றது காண்க.

## 520. அம்போநிதி:

பாதாளத்தில் நீரில் உள்ளபடி அனைத்து உலகங்களையும் தரிக்கும்படியான கூர்ம உருவத்தில் எழுந்தருளியுள்ளவன். அநந்தபலசக்த்யே புவநப்ருதே கச்சபாத்மநே – அளவற்ற பலமும் சக்தியும் கொண்டவனாக, அனைத்து லோகங்களையும் காக்கின்ற ஆமை ரூபம் கொண்டவனுக்கு.

## 521. அநந்தாத்மா

அந்தக் கூர்மத்தின் மேலே அனைத்து உலகிற்கும் ஆதாரத் தூணாக இருக்கின்ற ஆதிசேஷனுக்கு அந்தராத்மாவாக உள்ளவன் என்பதால் அநந்தாத்மா என்னும் திருநாமம் கொண்டான். கீழே உள்ள வரிகள் காண்க:

ஜயஸம்ஹிதை – ஆதாரசக்தேரூபரி விமலம் தீப்தவிக்ரஹம் ஜ்வாலாசத ஸமாகீர்ணம் சங்கசக்ரகதாதரம் அநந்தேசம் ந்யஸேத் – ஆதாரசக்தியின் மீது நிர்மலமாக பிரகாசிக்கின்ற திவ்யமங்களமான திருமேனியைக் கொண்டவனாகவும், பல ஜ்வாலைகளைக் கொண்டவனாகவும், சங்கு-சக்ரம்-கதை ஆகியவற்றை உடையவனாகவும், ஆதிசேஷன் மீது சயனித்தவனும் ஆகியவனை த்யானிக்கக் கடவன்.

சக்ரலாங்கலஹஸ்தம் ச ப்ரணமந்தம் பராவரம் – யார் தனது திருக்கரங்களில் சக்கரத்தையும், உழுகின்ற ஏர் ஒன்றையும் வைத்துள்ளானோ, யார் அவனை வணங்குகின்றார்களோ; யாரை ஒப்பிடும்போது மற்ற தெய்வங்கள் அனைத்தும் தாழ்ந்தவையோ.

## 522. மஹோததிசய:

பிரளயத்தின்போது அவனே ஆதிசேஷன் என்னும் படுக்கையில் சயனித்தபடி உள்ளதால், மஹோததி என்னும் திருப்பாற்கடலில் சயனிப்பவன்.

## 523. அந்தக:

அப்போது அனைத்தையும் நாசம் செய்பவன் என்பதால் அந்தக: எனப்பட்டான். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் யுத்தகாண்டம் (120-23) – அந்தே ப்ருதிவ்யாம் ஸலிலே த்ருச்யஸே த்வம் மஹோரக: - இந்த உலகின் முடிவின்போது நீ ஸமுத்திரத்தில் உள்ள ஆதிசேஷன் மீது காணப்படுகிறாய்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (2-5-20) – ஆஸ்தே பாதாளமூலஸ்த: சேஷ: அசேஷஸுரார்சித: - சேஷனாக (ஸங்கர்ஷணன்) பாதாளத்தில் அனைத்து தேவர்களாலும் அர்ச்சிக்கப்பட்டபடி உள்ளான்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (2-5-22) – யஸ்யைஷா ஸகலா ப்ருதிவீ பணாமணிசிகாரூணா ஆஸ்தே குஸும மாலேவ கஸ்தத்வீர்யம் வதிஷ்யதி – ஆதிசேஷனின் படம் எடுத்த தலைகளில் காணப்படும் மணிகளின் சிவந்த நிறம் பிரதிபலிக்கும்படியாக, சிவந்த மாலை போன்று அவனிடம் இந்த உலகம் காணப்படுகிறது. அவனுடைய வலிமையை யாரால் விவரிக்க இயலும்?

- கந்தர்வாப்ஸரஸ: ஸித்தா: ஸகிந்நரமஹோரகா: நாந்தம் குணாநாம் கச்சந்தி தேநாநந்த: - கந்தர்வர்கள், அப்ஸரஸ்ஸுகள், கிந்நரர்கள், ஸித்தர்கள், உரகர்கள்

என்று யாருமே அவனுடைய குணங்களின் எல்லையை அறிய இயலாது. இதனால் அவன் அநந்தன் எனப்படுகிறான்.

- தஸ்ய வீர்யம் ப்ரபாவம் ச ஸ்வரூபம் ரூபமேவ ச ந ஹி வர்ணயிதும் சக்யம் ஜ்ஞாதும் வா த்ரிதசைரபி – அவனுடைய வீர்யம், பிரபாவம், ஸ்வருபம், ரூபம் ஆகிய எதனையும் எந்த தெய்வத்தாலும் முழுவதுமாக வர்ணிக்க இயலாது.

- கல்பாந்தே யஸ்ய வக்த்ரேப்யோ விஷாநலசிகோஜ்ஜ்வல: ஸங்கர்ஷணாத்மகோ ருத்ரோ நிஷ்க்ரம்ய அத்தி ஜகத்த்ரயம் - கல்பத்தின் முடிவில் அவனுடைய வாயில் இருந்து ஸங்கர்ஷணனைத் தனது ஆத்மாவாகக் கொண்டு ருத்ரன் வெளிப்படுகிறான். அப்போது அவனிடமிருந்து வெளிப்படும் சிவந்த விஷம் நிறைந்த ஜ்வாலைகள் மூலம் மூன்று உலகங்களையும் விழுங்குகிறான்.

## 524. அஜ:

அகாரத்தின் பொருளாக உள்ளவன். ப்ரளய காலத்தில் அனைத்து தத்துவங்களும் இவனிடம் லயித்தன. அப்போது இவன் தன்னுடைய ஸ்வரூபத்தை ப்ரணவத்திற்கு ஆதாரமாகவும், அனைத்து சப்தங்களுக்குக் காரணமாகவும் உள்ள அகாரத்தின் பொருளாக இவன் உள்ளதாகவே த்யானிக்கப்படுகிறான். தஸ்ய ப்ரக்ருதி லீநஸ்ய ய: பர: ஸ மஹேச்வர: - யார் ஒருவனிடம் இந்த ப்ரக்ருதி ப்ரளய காலத்தில் லயிக்கின்றதோ அந்தப் பரம்பொருளே மஹேச்வரன் ஆவான்.

## 525. மஹார்ஹ:

அப்போது ப்ரணவத்தால் பூஜிக்கப்படுபவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். ப்ரஹ்மணே த்வா மஹஸ ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத ஏதத்வை மஹோபநிஷதம் தேவாநாம் குஹ்யம் – ஜீவனை ப்ரணவத்தால் ப்ரஹ்மத்திற்கு அர்ப்பணிக்கக்கடவன்; இதுவே மஹோபநிஷத்தில் காணப்படும் தேவரகசியம் ஆகும்.

## 526. ஸ்வாபாவ்ய:

தன்னுடைய சொத்தாக உள்ள அடியார்களால் எப்போதும் த்யானிக்கப்பட்டபடி உள்ளவன் (பாவிக்கப்பட்டபடி உள்ளவன்) என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். அதாவது, ப்ரணவம் என்னும் மந்த்ரம் கொண்டு தன்னுடைய சொத்துக்களான ஆத்மாக்கள் தன்னை வழிபடும்படியாக, தான் ஸ்வாமியாக நிற்பவன் என்று கருத்து. கீழே உள்ள வரிகள் காண்க:

- விஷ்ணுதத்வம் – ஸ்வ உஜ்ஜீவந இச்சா யதி தே ஸ்வஸத்த்தாயம் ஸ்ப்ருஹா யதி ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபாவம் ச ஸதா ஸ்மர – உன்னுடைய வாழ்க்கை மற்றும் ஸ்வரூபத்தின் இருப்பு ஆகியவற்றில் நீ ஆசைப்பட்டாய் என்றால், உன்னுடைய ஆத்மா ஸ்ரீஹரிக்கு அடிமையானது என்றும், அவனே உனக்கு எஜமானன் என்றும், இது இயற்கையாகவே உள்ள உறவு என்றும் எப்போதும் எண்ணியபடி இருப்பாயாக.

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-17) – நாந்யோ ஹேதுர்வித்யதே ஈசநாய – ஸர்வேச்வரன் இந்த உலகின் எஜமானனாக உள்ளதற்கு வேறு காரணம் ஏதும் இல்லை.

அவன் எஜமானன், அனைத்து ஆத்மாக்களும் அவனது அடிமைகள் என்னும் ஸம்பந்தம் நித்யமாகவும் இயற்கையாகவும் உள்ளதாகும்.

## 527. ஜிதாமித்ர:

மேலே கூறப்பட்ட பரமரஹஸ்யத்தின் பொருளை அரிய இயலாமல் தடுக்கின்ற ஜீவன்களின் விரோதிகளாக உள்ள அஹங்காரம், மமகாரம் ஆகியவற்றை நீக்குபவன். தனது அடியார்களின் நன்மைக்காக இந்த விரோதிகளை போக்கடிக்கிறான்.

- கீதை (3-37) – காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ: - காமம், க்ரோதம் போன்றவை ரஜோ குணத்தால் ஏற்படுகின்றன.

- கீதை (3-43) – ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் – அர்ஜுனா! காமம் என்னும் வடிவில் உண்டாகும் இந்த சத்ருவிற்கு முடிவை உண்டாக்குவாயாக.

## 528. ப்ரமோதந:

தன்னுடைய ஸம்பந்தம் பெற்றவர்களை, அவர்கள் முதலில் தன்னை அநுஸந்திக்கும்போதே, அவர்களுக்கு மகிழ்வை உண்டாக்குபவன். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான்.

குறிப்பு: திருநாமங்கள் 529 முதல் 538 முடிய கபிலமூர்த்தியை வர்ணிக்கிறது

## 529. ஆநந்த:

தைத்திரீய ஆநந்தவல்லியில் அளவிடுவதற்காக ஆராயப்பட்ட, எல்லையற்ற ஆநந்தம் கொண்டவன். வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாத ஆநந்தம் கொண்டவன் ஆவான்.

## 530. நந்தந:

இப்படியாக உள்ள தன்னுடைய ஆனந்தத்தை (தனக்கு நிகரான ஆனந்தம்), முக்தி பெறுகின்ற சேதனர்களுக்கு அளித்து, அவர்களை மகிழச் செய்பவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீய ஆநந்தவல்லீ (7) – ஏஷ ஹி ஏவாநந்தயாதி – அவன் மட்டுமே ஆனந்தம் அளிக்கிறான்.

- ப்ருஹத் உபநிஷத் (4-3-32) – ஏதஸ்யைவாநந்தஸ்ய அந்யாநி பூதாநி மாத்ராம் உபஜீவந்தி – ஆனந்தரூபமாக உள்ள இவனுடைய மிகவும் சிறிய அம்சத்தை மட்டுமே அடைகின்ற உயிர்கள் மிகவும் ஆனந்தம் கொள்கின்றன.

## 531. நந்த:

இப்படியாக எல்லையற்றதாக உள்ள அனுபவிப்பவர்களாலும், அனுபவிக்கப்படும் வஸ்துக்களாலும், அனுபவிப்பதற்கான உபகரணங்களாலும் எப்போதும் சூழப்பட்டபடி உள்ளவன்.

## 532. ஸத்யதர்மா

இப்படியாகத் தன்னை அண்டியே நிற்பவர்களை, ஆரம்பம் முதல் இறுதிவரை சரியான வழியில் நடத்திச் செல்வதால் இந்தத் திருநாமம் பெற்றான். ஸத்யம் என்பதைத் தனது செயல்பாடாக வைத்துள்ளவன்.

## 533. த்ரிவிக்ரம:

மூன்று வேதங்களிலும் வ்யாபித்து நிற்பவன். இப்படியாக இவனது மஹாமஹிமை உள்ளதால், வேதங்கள் அனைத்திற்கும் இவனே பொருளாக உள்ளான் என்பது விளங்கும்படியாக இருப்பவன். முனிவர்களால் மூன்று என்றால் மூன்று வேதங்கள் என்றே கூறப்பட்டன. கீழே உள்ள வரிகள் காண்க:

- யஜுர் – ஸர்வே வேதா யத்ரைகம் பவந்தி – யாரைக் குறித்து அனைத்து வேதங்களும் ஒரே குரலில் முழங்குகின்றனவோ

- ஸ்ரீமத்பாகவதம் (2-5-15) – நாராயணபரா வேதா: - வேதங்களால் பேசப்படுபவன் நாராயணனே ஆவான்

## 534. மஹர்ஷி:

இப்படியாக வேதத்தைத்தான் ப்ரத்யக்ஷமாகக் காணவல்ல கபில மஹரிஷியானவன்.

- கபில த்யான ச்லோகம் – ச்ருதீ: ருகாத்யா: வக்த்ரேப்ய: ப்ரோத்கிரந்தமத: ஸ்மரேத் – ருக் முதலான மூன்று வேதங்களையும் தனது வாய்மொழியால் உரைப்பவனை எப்போதும் த்யானிக்கக் கடவன்

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (5-2) – ருஷிம் ப்ரஸூதம் கபிலம் மஹாந்தம் – கபிலர் பிறப்பிலேயே ரிஷியாக (தத்வ தர்சியாக) இருந்தார்

- ஸாங்க்யஸ்ய வக்தா கபில: பரமர்ஷி: ஸ உச்யதே – அவரே ஸாங்க்ய தர்சனத்தை உபதேசம் செய்தவர், மஹரிஷி என்று போற்றப்படுபவர்

## 535. கபிலாசார்ய:

கபிலாசார்யர் என்று மிகவும் ப்ரஸித்தமாக விளங்கியவன். பழுப்பு நிறம் கொண்டவர். அவரை த்யானிப்பது எப்படியென்றால் - நிர்தூமாங்காரவர்ணாபம் சங்கபத்மாக்ஷ ஸூத்ரிணாம் – யார் புகையற்ற நெருப்பு போன்று ப்ரகாசத்துடன் உள்ளாரோ, யார் தனது கைகளில் சங்கம் பத்மம் போன்ற ஜப மணி மாலைகளை வைத்துள்ளாரோ – என்று ஆகும். அவருடைய மந்த்ரவர்ணனம் – ஸம்வித்ப்ரகாசநாய – யார் தனது ஸாங்க்யத்தை ப்ரகாசம் அடையச் செய்கிறாரோ – என்பதாகும்.

## 536. க்ருதஜ்ஞ:

தன்னுடைய விஷயத்தில் அபராதம் செய்த ஸகரபுத்திரர்களின் பொருட்டு, அவர்களுடைய புத்திரனாகிய அம்சுமான் தன்னை வணங்கி ப்ரார்த்தனை செய்ய, அதனி ஏற்றுக் கொண்டவன். விஷ்ணுபுராணம் – கபிலமுபகம்ய பக்திநம்ரஸ்ததா துஷ்டாவ ஸ சைவம் பகவாநாஹ – கபிலரை அம்சுமான் கிட்டிநின்று, மிகவும் மரியாதையுடன் வணங்கித் துதித்தான். அப்போது அவர் உரைக்கத் தொடங்கினார். விஷ்ணுபுராணம் – வரம் வ்ருஷ்ணிவ – வேண்டும் வரம் கேட்பாயாக என்று அம்சுமானிடம் உரைத்தார்.

## 537. மேதிநீபதி:

யஸ்யேயம் வஸுதா ஸர்வா வாஸுதேவஸ்ய தீமத: கபிலம் ரூபமாஸ்தாய தாரயத்யநிசம் தராம் – இந்த உலகங்கள் அனைத்தும் ஸர்வஜ்ஞனாக உள்ள எந்த வாஸுதேவனுக்கு

உரிமையாக உள்ளதோ, அவன் கபில ரூபத்தை அடைந்து இந்த உலகங்களை எப்போதும் தரிக்கிறான் – என்று கூறுவதன் காரணமாக மேதிநீபதி என்னும் திருநாமம் பெற்றான்.

## 538. த்ரிபத:

மூன்று தத்துவங்களை உணர்த்தியவன். போக்ய (அனுபவிக்கப்படும் வஸ்து), போக்தா (அனுபவிப்பவனாகிய ஆத்மா) மற்றும் நியந்தா (நியமிக்கும் ஈச்வரன்) என்பதான மூன்று தத்துவங்களை உணர்த்தியவன். இதனால் த்ரிபத என்னும் திருநாமம் பெற்றான். விஷ்ணுதர்மம் – ஸத்வாநாமுகாராய ப்ரதாநம் புருஷம் பரம் தர்சாயிஷ்யாபி லோகேஷு கபிலம் ரூபமாஸ்தித: - கபில ரூபம் கொண்டவனாக நான் இந்த உலகின் நன்மையைக் கருத்தில் கொண்டு ப்ரதாநம், புருஷன், ஈச்வரன் ஆகிய மூன்றைப் பற்றி உரைத்தேன் – என்றது காண்க. அல்லது த்ரிபதம் என்பது ப்ரணவத்தைக் குறிக்கிறது எனலாம் (அ, உ, ம என்னும் மூன்று பதங்களே ப்ரணவமாகிறபடியால் இவ்விதம் கொள்ளலாம்). அல்லது மஹாபாரதம் மோக்ஷபர்வம் – ததைவாஸம் த்ரிககுதோ வாராஹம் ரூபமாஸ்தித: - வராஹ வடிவம் எடுத்தபோது முதுகில் மூன்று திமில்கள் காணப்பட்டன – என்பதால் த்ரிபத என்பதாகவும் கொள்ளலாம்.

வராஹ அவதாரம் (539 – 543)

## 539. த்ரிதசாத்யக்ஷ:

வராஹ ரூபம் கொண்ட பகவானே ப்ரளய காலத்தில் உண்டாகின்ற ஆபத்துக்கு உதவி செய்பவனாக உள்ளதால், நான்முகன் உள்ளிட்ட தேவர்கள் அனைவருக்கும் காப்பவனாக உள்ளவன்.

## 540. மஹாச்ருங்க:

இந்தப் பூமண்டலத்தை நுனியிற்கொண்ட மிகவும் பெரிய கோரைப்பல்லை உடையவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான்.

- இராமாயணம் யுத்தகாண்டம் (120-14) – ஏகச்ருங்கோ வராஹஸ்த்வம் – ஒரு கொம்பை உடைய வராஹம் நீயே.

- தம்ஷ்ட்ரோக்ராவிந்யஸ்தமசேஷம் ஏதத் பூமண்டலம் நாத விபாக்யதே தே விகாஹத: பத்பவநம் விலக்நம் ஸரோஜிநீபத்ரமிவோடபங்கம் – உன்னுடைய பல்லின் நுனியில் காணப்படும் பூமியானது, மண்ணுடன் சேர்ந்துள்ள தாமரை இலை போன்று காட்சி அளித்தது. அதாவது தாமரைக் குளம் ஒன்றில் இறங்கிய யானை ஒன்று தாமரை இலைகளைப் பறித்து விளையாடியது போன்று உள்ளது.

## 541. க்ருதாந்தக்ருத்

யமன் போன்றுள்ள ஹிரண்யாக்ஷனைக் கிழித்து எறிந்தவன். ஹதோ ஹிரண்யாக்ஷ மஹாஸுர: - ஹிரண்யாக்ஷன் என்னும் பெரிய அசுரன் அழிக்கப்பட்டான். வராஹஸ்ம்ருதி, வராஹபுராணம் போன்றவற்றில் தனது ஸித்தாந்தத்தை வெளியிட்டான் என்றும் பொருள் கொள்ளலாம்.

## 542. மஹாவராஹ:

மிகவும் பெரிய வராஹரூபம் கொண்டு நின்றவன். விஷ்ணுபுராணம் (1-4-26) – தத: ஸமுத்க்ஷிப்ய தராம் ஸ்வதம்ஷ்ட்ரயா மஹாவராஹ: ஸ்புடபத்மலீசந: ரஸாதலாத் உத்பலபத்மஸந்நிப: ஸமுத்திதோ நீல இவாசலோ மஹாந் – அவன் பெரிய வராஹ அவதாரம் எடுத்தபோது, அவனது கண்கள் மலர்ந்த தாமரை போன்று பெரிதாக இருந்தன; அவை நீலோத்பல மலர்கள் போன்று பிரகாசித்தன; அவன் பாதாளத்திலிருந்து பூமியைத் தனது பல்லில் உயர்த்தியபோது, நீரிலிருந்து நீல நிறம் கொண்ட மலை ஒன்று வெளிவருவது போன்று இருந்தது.

## 543. கோவிந்த:

மஹாபாரதம் சாந்திபர்வம் – நஷ்டாம் ச தரணீம் பூர்வமவிந்தம் ச குஹாகதாம் கோவிந்த இதி தேநாஹம் – முன்பு இந்தப் பூமி காணாமற்போய் ஒரு குகையில் இருந்தது; அதனை (வராஹமாய் அவதரித்து) மீட்டதால் எனக்கு கோவிந்தன் என்னும் பெயர் உண்டானது – என்றது காண்க.

சுத்தஸத்த்வ தன்மையைக் குறிக்கும் திருநாமங்கள் (544 – 562)

## 544. ஸுஷேண:

சிறந்த சேனையை உடையவன். இது முதல் ரஹஸ்யமான விஷயம் உரைக்கப்படும். பத்தர், முக்தர், நித்யர் ஆகிய மூன்றுவிதமான சேதநர்களையும் வெல்வதற்கான சிறந்த உபகரணமாக உள்ளது; எதுவென்றால் சேனை போன்று விளங்குகின்ற சுத்த ஸத்வமயமான ஐந்து உபநிஷத் தத்துவங்களைத் தனது திருமேனியாகக் கொண்டவன்.

## 545. கநகாங்கதீ

கடந்த திருநாமத்தில் உரைக்கப்பட்ட ஸௌந்தர்யமான திருமேனிக்கு ஏற்றபடியான ஸுவர்ணமயமான தோள்வளைகள் உள்ளிட்ட பல திவ்யமான ஆபரணங்களை அணிந்துள்ளவன். ஸுவர்ணம் என்றால் அபராக்ருதமான பஞ்சோபநிஷத் என்னும் தத்துவங்களே கூறப்பட்டன.

## 546. குஹ்ய:

இவ்விதமாக பஞ்சோபநிஷத்மயமான திருமேனியால் மூடப்பட்டவன்.

## 547. கபீர:

நிர்மலமான திருமேனியில் தன்னுடைய ஈச்வரத்தன்மைக்கு ஏற்றபடியான காம்பீர்யம் விளங்கும்படியாக உள்ளவன். இவனுடன் கலந்த உடனேயே, எல்லையற்ற காலங்களாக அவித்யையால் கலங்கி நிற்கும் ஸம்ஸாரிகள், தேத்தாங்கொட்டையால் தெளிவுற்ற நீர் போன்று தெளிந்து கம்பீரம் அடைகிறான்; இவ்விதம் உள்ளபோது, இயல்பாகவே ப்ரகாசமாக உள்ள ஸர்வேச்வரன் இவ்விதம் கம்பீரமாக உள்ளது குறித்துக் கூறவும் வேண்டுமோ?

## 548. கஹந:

அறிந்துகொள்ள அரிதாக உள்ளவன். ஸமுத்திரம் தெளிவாக உள்ளே இருக்கும் அனைத்தையும் காண்பித்தாலும், அதனை முழங்கால் அளவு மட்டுமே என்று கூற இயலாமல் உள்ளது அல்லவோ? இதே போன்று ஸர்வேச்வரனின் திருமேனி குறித்து

உபநிஷத் வாக்கியங்கள் மூலம் ஓரளவு அறியலாம் என்றாலும், முழுமையாக அறிய இயலாது.

## 549. குப்த:

நம்முடைய பூர்வாசார்யர்களால் நமக்கு அவனது பெருமை உணர்த்தப்படுகிறது.

## 550. சக்ரகதாதர:

எங்கு, எவ்விதம் அவனது தன்மைகள் மறைவாக உள்ளன என்பதை உரைக்கிறார். இராமாயணம் யுத்தகாண்டத்தில் – தமஸ: பரமோ தாதா சங்க சக்ரகதாதர: - இந்த உயர்ந்த இராமன் சங்கு மற்றும் சகரம் தரித்தவனாக, தமஸ் என்னும் ப்ரக்ருதியைக் கடந்தவனாக உள்ளான் – என்று மண்டோதரி உரைக்கிறாள். மேலே கூறப்பட்ட நித்யமான திவ்யமங்கள விக்ரஹம் மற்றும் திவ்யமான ஆபரணங்கள் போன்று பஞ்சசக்திமயமான சக்கரம், கதை போன்ற ஆயுதங்களால் பரமபதத்தில் எப்போதும் காக்கப்படுபவன்.

## 551. வேதா:

இவ்விதம் அளவிட இயலாத மஹாவைபவம் எப்போதும் விளங்கும்படியாகச் செய்பவன். இராமாயணம் யுத்தகாண்டம் - தமஸ: பரமோ தாதா - தமஸ் என்னும் ப்ரக்ருதியைக் கடந்தவனாக – என்றது காண்க.

## 552. ஸ்வாங்க:

பரமபதத்தில் தன்னுடைய அதிபதி தன்மைக்கு ஏற்றபடியான குடை, சாமரம் போன்ற பலவிதமான பரிவாரங்களுடன் கூடியவன்.

## 553. அஜித:

மேலே கூறப்பட்ட பஞ்சோபநிஷத்துக்களால் சூழப்பட்டு நித்யமாக விளங்குவதால், லீலாவிபூதி போன்று உற்பத்தி மற்றும் அழிவு ஆகியவற்றால் வெல்லப்படாத அஜிதை என்னும் திவ்யமான நகரத்தைக் கொண்டவன். புரம் ஹிரண்மயீம் ப்ரஹ்ம விவேச

அபராஜிதா – அபராஜிதம் என்னும் வெல்லமுடியாத நகரத்தில் ப்ரஹ்மம் உள்ளது – என்றது காண்க.

## 554. க்ருஷ்ண:

நீருண்டமேகம் போன்ற சியாமளமான திருமேனி கொண்டவன். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- க்ருஷ்ணவர்ணே – வர்ணங்களில் ஒன்றைக் குறிப்பதாகும். வராஹம் உள்ளிட்ட அவதாரங்களும் பஞ்சோபநிஷத்மயமானவை என்று உரைக்கப்படுகிறது.

- மஹாபாரதம் சாந்திபர்வம் – க்ருஷாமி மேதிநீம் பார்த்த பூத்வா க்ருஷ்ணாயஸோ மஹாந் க்ருஷ்ணோ வர்ணச்ச மே யஸ்மாத் தேந க்ருஷ்ணோஹம் அர்ஜுந – அர்ஜுனா! நான் கருமையான நிறம் கொண்ட கலப்பையாக மாறி இந்த உலகத்தை உழுவதாலும், எனது திருமேனியின் நிறம் கருமையாக உள்ளதாலும் நான் க்ருஷ்ணன் என்னும் பெயர் பெற்றேன்.

- ஸ்ரீவிஷ்ணுதத்வம் – ஏகைவ பஞ்சதா பூதா ப்ரதாநா விக்ரஹாத்மிகா ஸர்வசக்திஸமேதா அபி புருஷோ நியதீரிமா: ந ஜஹாதி ஸ்வபாவோத்த காருண்யேந ஸமாச்ரித: பரமேஷ்டீ புமாந் விச்வோ நிவ்ருத்தி: ஸர்வம் ஏவ ச பஞ்சைதா: சக்தய: ப்ரோக்தா: பரஸ்ய பரமாத்மந: - என்னுடைய திருமேனி அனைத்து சக்தியும் நிறைந்ததாகும். அது ஐந்துவிதமான பிரிவுகளைக் கொண்டதாகும். அவையாவன பரமேஷ்டி, புமாந், நிவ்ருத்தி, ஸர்வ:, விச்வ: என்பதாகும். ஸர்வேச்வரனாகிய எனக்கு அனைத்து சக்திகளும் இருந்தாலும், எனது கருணையான ஸ்வபாவம் காரணமாக அவற்றைக் கைவிடுவதில்லை.

- மத்ஸ்யகூர்மவராஹாணாம் ஆவிர்பவோ மஹாத்மந: அநயைவ த்விஜச்ரேஷ்ட நாந்யதா தத்விரோதத: - அந்தணர்களில் உயர்ந்தவரே! பரமாத்மாவின் மத்ஸ்யம், கூர்மம், வராஹம் போன்ற அவதாரங்கள் இந்த சக்தியின் காரணமாகவே வெளிப்பட்டன. இதனைத் தவிர வேறு எந்த வழியிலும் அல்ல.

வ்யூஹரூபமான ஸங்கர்ஷணனைக் குறிக்கும் திருநாமங்கள் (555 – 562)

## 555. த்ருட:

நித்யமாக உள்ள திருமேனியில் தானாகவே உபாஸகனை அநுக்ரஹம் செய்யும்விதமாக, வ்யூஹமாக பிரிந்து நிற்கிறான். இப்படிப்பட்ட வ்யூஹ ரூபங்களில் சற்றே ஸ்துலமாக உள்ளவன்.

## 556. ஸங்கர்ஷண:

இவ்விதம் ஸ்தூலமாக உள்ளவன் யார் என்றால், ஸங்கர்ஷணன் ஆவான். ஸம்ஸாரே சிதசிதோ: ஆத்மநி ஸமம் கர்ஷணாத் ஸமம் கர்ஷம் நயதி – இந்த உலகில் உள்ள சித் மற்றும் அசித் ஆகிய இரண்டையும் எந்தவிதமான வேறுபாடுகளும் இன்றி, ஒரே போன்று தனக்கு வசப்படுத்துகிறான்.

## 557. அச்யுத:

தன்னுடைய நித்யமான ஸ்வரூப ஸ்வபாவங்களில் இருந்து எப்போதும் நழுவாமல் உள்ளவன். ச்யவநோத்பத்தியக்தஷு ப்ரஹ்மேந்த்ரவருணாதிஷு யஸ்மாந்ந ச்யவஸே ஸ்தாநாத் தஸ்மாத் ஸங்கீர்த்யஸே அச்யுத: - நான்முகன், இந்த்ரன், வருணன் ஆகிய பலரும் உற்பத்தி மற்றும் நாசம் ஆகிய இரண்டிற்கும் வசப்பட்டவர்களே; ஆனால் ஸர்வேச்வரனுக்கு இது போன்ற நழுவுதல் இல்லை என்பதால் அச்யுதன் எனப்படுகிறான்.

## 558. வருண:

பூமி முதலான அனைத்தையும் சூழ்ந்தவன் என்பதால் இந்தத் திருநாமம் பெற்றான். கீழே உள்ள வரிகள் காண்க:

- யேநாவ்ருத்தம் கம் ச திவம் மஹீம் ச – யாரால் ஆகாயம், ஸ்வர்க்கம், பூமி ஆகியவை சூழப்பட்டுள்ளனவோ

- தேநததமாவ்ருதம் – யாரால் இவை அனைத்து சூழப்பட்டுள்ளனவோ
- வ்ருடம் வரணை – இதனால் வருணன் எனப்படுகிறான்

## 559. வாருண:

தன்னை அடைந்த அடியார்கள் பலருடன் கூடியபடி உள்ளவன். கீதையில் (9-29) - தேஷு சாப்யஹம் – அவர்களிடம் நான் உள்ளேன் – என்றது காண்க.

## 560. வ்ருக்ஷ:

இவ்விதமாகத் தன்னை அண்டியபடி உள்ளவர்களில் யார் தன்னை நிழல் போன்று கொண்டுள்ளார்களோ, அவர்களுக்கு அனைத்தையும் அளிக்கிறான்; அவர்களது பலவிதமான அபராதங்களையும் பொறுத்துக் கொள்கிறான்; அவர்களை எப்போதும் ஏற்றுக் கொண்டபடி உள்ளான். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- இராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் (15-19) – நிவாஸவ்ருக்ஷா: ஸாதூநாம் ஆபந்நாநாம் பரா கதி: - ஸாதுக்கள் ஒதுக்குவதற்கு ஏற்ற நிழல் அளிக்கும் மரமாகவும், ஸம்ஸார ஆபத்துக்களில் சிக்கித் தவிப்பவர்கள் அடையவல்ல உயர்ந்த கதியாகவும் உள்ளவன்.
- தைத்திரீய நாராயணவல்லீ (11-20) – வ்ருக்ஷ இவ ஸ்தப்தோ திவி திஷ்டத்யேக: - அவன் பரமபதத்தில் தனியாக, மரம் போன்று அங்கிருந்து நகராமல் உள்ளான்.
- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (1-17-91) – ஸமாச்ரிதாத் ப்ரஹ்மதரோரநந்தாத் நி:ஸம்சய: பக்வபலப்ரபாத: - ப்ரஹ்மம் என்னும் அந்த மரத்தில் இருந்து பலன்கள் என்னும் கனிந்த பழங்கள் விழுவதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை; அவன் எப்போதும் உள்ளவனாக, அனைவரும் அண்டும்படியாக உள்ளான்.

## 561. புஷ்கராக்ஷ:

அவர்களிடம் எல்லையற்ற க்ருபையை மழை போன்று கொட்டியபடி இருந்து, அவர்களைக் காக்கும் திருக்கண்கள் கொண்டவன்.

## 562. மஹாமநா:

அவர்களிடம் எல்லையற்ற தாராளம் நிறைந்த திருவுள்ளத்துடன் கூடியவனாக உள்ளவன்.

## 563. பகவாந்

அனைத்து தோஷங்களுக்கும் எதிர்த்தட்டாகவும், திருக்கல்யாண குணங்களின் ஸ்வரூபமாகவும் உள்ளதால் அனைவராலும் பூஜிக்கத்தகுந்த உயர்ந்தவனாக உள்ளவன்.

## 564. பகஹா

ஞானம், ஐச்வர்யம் போன்றதான பலவிதமான குணங்களாலும் மேலே கூறியபடி விளங்குபவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் – ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யசஸ: ஸ்ரீய: ஜ்ஞாநவைராக்யயோச்சைவ ஷஷ்ணாம் பக இதீரணா – ஐச்வர்யம், வீர்யம், கீர்த்தி, செல்வம், ஞானம், வைராக்யம் ஆகிய ஆறுக்கும் “பக” என்று பெயர் – என்றது காண்க.

## 565. நந்தீ:

இவ்விதம் வ்யூஹத்தில் ஸங்கர்ஷணனாக விளங்கி, தன்னுடைய பலபத்ர (பலராமன்) அவதாரத்தின்போது, நந்தகோபரைத் தனது தந்தையாக அடைந்தவன். அல்லது கோபிகைகளையும், மதுவையும் அனுபவிப்பதால் ஆனந்தம் அடைபவன் என்றும் கூறலாம்.

## 566. வனமாலீ

தன்னுடைய ஸ்ருஷ்டியில் அகப்பட்டதாகவும், நறுமணத்திற்கு இருப்பிடமாகவும் உள்ள வைஜயந்தீ என்னும் திருமாலையை எப்போதும் அணிந்துள்ளவன்.

## 567. ஹலாயத:

கீழே உரைக்கப்பட்ட அனைத்து உயிர்களின் செழிப்பை உண்டுபண்ணுகின்ற கலப்பை என்னும் ஆயுதம் கொண்டவன். ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் (41-36) – பலபத்ரம்

ஸம்ருத்த்யர்த்தம் ஸீரகர்மணி கீர்த்தயேத் – இந்தப் பூமியை உழும்போது, அதன் செழிப்பிற்காக, பலராமனை நினைக்கக்கடவன் – என்றே கூறப்பட்டது.

## 568. ஆதித்ய:

தனக்கு வாசகமாக உள்ள அகாரத்தின் பொருளாக உள்ளவன். ஸங்கர்ஷணனின் பீஜமந்த்ரம் அகாரமாக உள்ளதால் இவ்விதம் கூறப்பட்டதாகக் கொள்க. அல்லது, கடந்த பிறவியில் அதிதியாக இருந்த தேவகிக்குப் பிறந்தவன் என்றும் உரைக்கலாம். ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் (93-44) – தாக்ஷாயணீ த்வம் ஆதிதி: ஸம்பூதா வஸுதாதலே நித்யைவ த்வம் ஜகத்தாத்ரீ ப்ரஸாதம் தே கரோம்யஹம் – தாக்ஷாயணீ! நீ முன்பு அதிதியாகப் பிறந்தாய், அப்படிப்பட்ட உனக்கு இப்போது நான் அனுக்ரஹம் செய்கிறேன் – என்று பகவான் அருளிச்செய்தான்.

நாராயணனைக் குறிக்கும் திருநாமங்கள் (569 – 574)

## 569. ஜ்யோதி: ஆதித்ய:

ஜ்யோதிஸ்வரூபனாகிய ஆதித்யன். இவ்விதம் உரைத்தால் ஜ்யோதியற்ற ஆதித்யன் என ஒருவன் உள்ளது போன்று ஆகிறதே! உண்மையே, ஸர்வேச்வரனுடைய தேஜஸ்ஸுக்கு முன்பாக சூரியனின் ஒளி என்பது இருளாகவே உள்ளது என்று கருத்து. மஹாபாரதம் ஸ்ரீநாராயணீயத்தில் – நிஷ்ப்ரபாணி ச தேஜாம்ஸி ப்ரஹ்மா சைவ ஆஸநாத் ச்யுத: - நரனும் நாராயணனும் யுத்தம் செய்யும்போது எழுந்த தேஜஸ்ஸி அனைத்தும் மங்கின, நான்முகன் தனது ஆசனத்தில் இருந்து நழுவினான் – என்றது காண்க.

## 570. ஸஹிஷ்ணு:

நான்முகன் உள்ளிட்ட அனைவருடைய அபராதங்களையும் சகித்தபடி உள்ளவன். மஹாபாரதம் சாந்திபர்வம் (352-64) – ப்ரஸாதயாமாஸ பவோ தேவம் நாராயணம் ப்ரபும்

சரணம் ஜகதாமாத்யம் வரேண்யம் வரதம் ஹரிம் ததைவ வரதோ தேவோ ஜிதக்ரோதோ ஜிதேந்த்ரிய: ப்ரீதிமாநபவத் தத்ர ருத்ரேண ஸஹ ஸங்கத: - இந்த உலகங்கள் அனைத்திற்கும் ஆதியானவனும், அனைவரிலும் உயர்ந்தவனும், விருப்பங்களை அளிக்கவல்லவனும், அனைத்து பாவங்களையும் போக்குபவனும், எங்கும் நிறைந்தவனும் ஆகிய ஸ்ரீமந்நாராயணனை ருத்ரன் வேண்டி நின்றான். இதனைக் கண்ட தேவனாகிய நாராயணன் தன்னுடைய சீற்றம் குறைந்து ருத்ரனுடன் கலந்து பரிமாறினான் – என்றது காண்க.

## 571. கதிஸத்தம:

அவனே உயர்ந்த தர்மங்களை உபதேசம் செய்வதற்கு ஏற்ற ஆசார்யனாக உள்ளதால், அவனே கதி என்று நம்பிக்கையுடன் அடையலாம்படி உள்ளவன். மஹாபாரதம் சாந்திபர்வம் (342-17) – அஹோ ஹ்யுநுக்ருஹீத: அத தர்ம ஐபி: ஸுரைரிஹ – இந்த நரநாராயணர்களின் முன்னிலையில் தேவர்களுக்கு தர்மம் கூறப்பட்டது – என்றது காண்க.

## 572. ஸுதந்வா

அமிர்தத்தின் பொருட்டு தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் கலகம் உண்டானபோது, அந்த நேரத்தில் அசுரர்களை அழிப்பதற்காக சிறந்த வில்லை ஏந்தியவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- தத்ர திவ்யம் தநுர்த்ருஷ்ட்வா நரஸ்ய பகவாநபி – அதன் பின்னர் பகவான் மிகவும் சிறந்த இந்த அழகான வில்லை நரனின் கையில் கண்டான்.

- நரஸ்ததோ வரகட காக்ர்ய பூஷணை: மஹோஷுபி: பவநமிதம் ஸமாவ்ருணோத் – அதன் பின்னர் நாராயணனின் நண்பனாகிய நரன் ஆகாயம் முழுவதும் தன்னுடைய திவ்யமான ஆபரணங்கள் கொண்டதான பாணங்களால் மறைத்தான்.

## 573. கண்டபரசு:

பரசு என்னும் கோடாலியால் ருத்ரனுடன் உண்டான யுத்தத்தில் பரசு உடைக்கப்பட்டதால் கண்டபரசு என்னும் திருநாமம் உண்டானது. கீழே உள்ள ச்லோகம் காண்க:

அத ருத்ரவிதார்த்தம் இஷீகாம் நர உத்தரந்
மந்த்ரைச்ச ஸம்யுயோஜாசு ஸ: அபவத் பரசுர்மஹாந்
க்ஷிப்தச்ச ஸஹஸா ருத்ரே கண்டனம் ப்ராப்தவாம்ஸ்ததா

தத: அஹம் கண்டபரசு: தத: பரசுகண்டநாத்

இதன் பொருள் – ருத்ரனை அழிக்கும்பொருட்டு நரனாகிய அர்ஜுனன் ஒரு துரும்பை எடுத்து, மந்த்ரங்களை உச்சரித்து ருத்ரன் மீது ப்ரயோகம் செய்தான். அது ஒரு பெரிய கோடாரியாக மாறியது. அதனை ருத்ரன் மீது எறிய, அது உடனே துண்டிக்கப்பட்டது. இவ்விதம் உள்ளதால் என்னைக் கண்டபரசு என்றனர்.

## 574. தாருண:

இப்படியாக உட்புறம் உள்ள விரோதிகள் மற்றும் வெளிப்புறம் உள்ள விரோதிகள் ஆகிய அனைவரையும் அழிப்பதான் தாருணன் எனப்படுகிறான்.

வ்யாஸ அவதாரம் (575 – 607)

## 575. த்ரவிணப்ரத:

உயர்ந்த செல்வம் போன்று மிகவும் மதிக்கத்தக்க அனைத்து சாஸ்த்ரங்களையும், அவற்றின் ஆழ்பொருளையும் அளிப்பவன். த்யானச்லோகம் – வஹந் வை வாமஹஸ்தேந ஸர்வசாஸ்த்ரார்த்தஸம்சயம் தக்ஷிணேந ச சாஸ்த்ரார்த்தாநாம் ஆதிசம்ச்ச யதாஸ்திதாந் – அனைத்து சாஸ்த்ரங்களையும் அதன் பொருளையும் தொகுத்து, இட்து கையில் தாங்கிக் கொண்டு, வலது கையால் அந்த அர்த்தங்களை அங்கே உள்ளவர்களுக்கு உபதேசம் செய்தார் – என்றது காண்க.

## 576. திவிஸ்ப்ருக்

பரவித்யை மூலம் பரமபதத்தில் உள்ள தத்வங்களைப் பற்றிய ரஹஸ்யங்களை அறிந்தவர். அதாவது பரமார்த்தவித் என்று கருத்து. அவருடைய மந்த்ரம் – விதிதபரமார்த்த: - உண்மையை அறிந்தவர் – என்பதாகும்.

## 577. ஸர்வத்ருக்

அனைத்துவிதமான வைபவங்களையும் காணவல்லவர். அவருடைய மந்த்ரம் – விதுஷே - அனைத்தும் அறிந்தவர் – என்பதாகும்.

## 578. வ்யாஸ:

யுகத்திற்கு ஏற்றபடி, தாழ்வான புத்திகளைக் கொண்ட மனிதர்களின் நன்மையைக் கருத்தில் கொண்டு வேதங்களை நான்காகப் பிரித்தவர். மூன்று காலமும் உணர்ந்தவர் என்பதால் இவ்விதம் செய்தார்.

## 579. வாசஸ்பதி:

ஐந்தாவது வேதமாக உள்ள ஸ்ரீமஹாபாரதத்தின் பதியாக உள்ளவன். இதனால் வாசஸ்பதி: என்னும் திருநாமம் கொண்டான்.

## 580. அயோநிஜ:

ஸாரஸ்வத அவதாரத்தின்போது எம்பெருமானின் வாக்கிலிருந்து உண்டானதால் அயோநிஜ: என்னும் திருநாமம் கொண்டான். மஹாபாரதம் சாந்திபர்வம் (350-37) – அத பூயோ ஜகத் ஸ்ருஷ்ட்வா போ சப்தேந அநுவாதயந் ஸாரஸ்வதீம் உச்சசார தத்ர ஸாரஸ்வத: அபவத் – அதன் பின்னர் மீண்டும் மூன்று உலகங்களையும் படைத்தான்; "போ" என்னும் சப்தத்தை உச்சரித்து, ஸரஸ்வதியை உச்சரித்தான்; அதன் மூலமாக ஸாரஸ்வதன் தோன்றினான் – என்றது காண்க.

## 581. த்ரிஸாமா

ப்ருஹத், ரதந்தரம் மற்றும் வாமதேவ்யம் ஆகிய மூன்று ஸாம கானங்களால் பாடப்படுபவன்.

## 582. ஸாமகா:

தன்னுடைய ஸ்வபாவத்தினால் உண்டான மகிழ்ச்சி காரணமாக அப்படிப்பட்ட ஸாமங்களைத் தானும் பாடுபவன். இப்படியாக உள்ள அவனது அனுபவத்தின் காரணமாக மற்றவர்களையும் பாடும்படிச் செய்பவன். தைத்திரீய உபநிஷத் (3-10-5) – ஏதத் ஸாம காயந்நாஸ்தே – ஸாம கானங்களைப் பாடியபடி முக்தன் உள்ளான் – என்றது.

## 583. ஸாம:

தன்னைப் பாடுபவர்களின் பாவங்கள் அனைத்தையும் போக்கவல்லவன்.

## 584. நிர்வாணம்

இப்படியாகத் தன்னைப் பாடியதால் பாவங்கள் நீங்கப் பெற்றவர்களுக்கு உயர்ந்த கதியாக உள்ளவன்.

## 585. பேஷஜம்

தீர்க்கவே இயலாத ஸம்ஸாரம் என்னும் கொடிய வியாதிக்கு மிகவும் உயர்ந்த மருந்தாக உள்ளவன். மஹாபாரதம் – நாராயணாத் ருஷிகணா: ததா ஸித்தா மஹோரகா: தேவா தேவர்ஷயச்சைவ யம் விது: துக்கபேஷஜம் – நாராயணனிடமிருந்து ரிஷிகள், ஸித்தர்கள், பெரிய நாகர்கள் ஆகியோர் தோன்றினர்; தேவர்கள், தேவரிஷிகள் போன்றவர்களும்

அப்படியே தோன்றினர்; ஸம்ஸாரம் என்னும் துக்கம் நிறைந்த வியாதிக்கு ஏற்ற மருந்தாக அவர்கள் நாராயணனையே அறிந்தனர் – என்றது காண்க.

## 586. பிஷக்

வியாதியின் மூலகாரணத்தைக் கண்டறிந்து, அதற்கேற்ற சிகிச்சையைச் செய்பவன். ச்ருதியில் – வேதாந்த விஜ்ஞாந ஸுநிச்சிதார்த்தா: - அனைத்தும் அறிந்தவனாக நிச்சயம் செய்தனர் – என்றது காண்க.

## 587. ஸந்யாஸக்ருத்

அவன் எப்படிச் சிகிச்சை செய்கிறான்? ஸந்யாஸத்தால் ஸம்ஸாரத்தை அறுத்து சிகிச்சை செய்கிறான். அதாவது உலகவிஷயங்களின் மீது வைராக்யத்தையும், “நான், என்னுடையது” என்பது போன்றதான அபிமானங்களையும் ஸாத்விகமான ஸந்யாஸம் மூலமாக அழிக்கிறான். அதாவது ஸந்யாஸம் மூலம் ரஜஸ், தமஸ் போன்றவற்றை போக்குபவன். இங்கு ஸந்யாஸம் என்பது பரந்யாஸம் – நம்முடைய பாரத்தை அவனிடம் ஒப்படைத்தல்.

## 588. சம:

ஸந்ந்யாஸம் என்பது தன்னுடைய பாரத்தை அவன் மீது சுமத்துவதே ஆகும். இதற்காக இச்சை, பயம், கோபம் போன்ற பலவற்றையும் அடக்கவேண்டும் என்று உபதேசிக்கிறான். எனவே சாந்தியை உபதேசிப்பவன்.

## 589. சாந்த:

ஸமுத்திரம் போன்று அளவற்ற மஹிமை உள்ளபோதிலும், அலைகள் இல்லாத ஓசையற்ற ஸமுத்திரம் போன்று சாந்தமாக உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- பதஞ்ஜலி யோகஸூத்ரம் (4-5) – தத்ஸந்நிதௌ வைராத்யாக: - அவன் உள்ள இடத்தில் வைராக்யம் உண்டாகிறது.

- மதுரைரவசாநி லம்பயந் அபி திர்யஞ்சி சமம் நிரீக்ஷிதை: பரித: படு விப்ரதேநஸாம் தஹநம் தாம விலோகநக்ஷமம் – வ்யாஸர் தன்னுடைய சாந்தமான பார்வை மூலம் பசு மற்றும் பறவைகளின் மனதில் அமைதியை உண்டாக்கினார். அவருடைய கண்களின் ஒளி அதிகமாக உள்ளபோதிலும், காண்பதற்கு ஏற்றதாகவும் பாவங்களை அழிப்பதாகவும் உள்ளது.

## 590. நிஷ்டா:

மஹான்களின் சுபமான உள்ளங்கள் நிலையாக இருப்பதற்குக் காரணமாக உள்ளவன்.

## 591. சாந்தி:

அந்த மஹான்கள் பரமஸமாதி நிலையில் நின்று தன்னை அனுபவித்தபடி உள்ளபோது, "நாம் இந்த நிலையில் உள்ளோம்" என்பதான தங்களுடைய நிலையை மறந்திருக்கும்படிச் செய்பவன்.

## 592. பராயணம்

இவ்விதம் ஸமாதி நிலையில் உள்ளவர்களுக்கு உடனே மோக்ஷம் அளிக்கவல்ல பரமபக்தியை அவர்களுக்கு அளிப்பவன். கீழே உள்ள பல கீதை வாக்கியங்கள் காண்க:

- கீதை (18-53) – நிர்மம: சாந்த: - மமகாரம் இன்றி சாந்தமாக உள்ளவன் (அடுத்த வரியில் தொடர்கிறது)

- கீதை (18-54) – மத்பக்திம் லபதே பராம் – என்னிடம் பரபக்தி உண்டாகப் பெறுவான்.

- கீதை (11-54) – பக்த்யா த்வநந்யயா சக்ய: - வேறு எதிலும் நாட்டம் இன்றி என்னிடம் மட்டுமே பதியுடன் உள்ளவன், என்னை அறிந்து, என்னையே அடைகிறான்.

## 593. சுபாங்க:

இவ்விதம் தன்னிடம் பக்தியைச் செலுத்துவதற்கு உதவும்படியாக யமம், நியமம் உள்ளிட்ட எட்டு அங்கங்களை அளிப்பவன்.

## 594. சாந்தித:

இவ்விதம் பக்தியோகம் கைகூடப் பெற்றவர்கள் மறுபடியும் ஸம்ஸார மார்க்கத்தில் திரும்பிச் செல்லாதபடி, தன்னுடைய ஸாயுஜ்யம் என்னும் சாந்தியை அளிக்கிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (2-7) – விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா சிவம் சாந்திமத்யந்தமேதி – உலகம் முழுவதும் வ்யாபித்து நின்று, மங்களகரமாக உள்ள ஸர்வேச்வரனை அறிந்து, மிகுந்த சாந்தியை அடைகிறான்.

- கீதை (18-59) – மத்ப்ரஸாதாம் பராம் சாந்திம் ஸ்தாநம் ப்ராப்யஸி சாச்வதம் – என்னுடைய க்ருபை காரணமாக நீ சாந்தியையும், உயர்ந்த நிரந்தமான இடத்தையும் பெறுவாய்.

- தமீசாநம் வரதம் தேவமீட்யம் நிசாய்யா ஆத்மாநம் சாந்திமத்யந்தமேதி – யார் ஒருவன் அனைவருக்கும் ஈச்வரனாக, வரம் அளிப்பவனாக, போற்றத்தக்கவனாக, அனைத்திற்கும் ஆத்மாவாக உள்ள ஸர்வேவரனை அறிகிறானோ அவன் சாந்தி அடைகிறான்.

## 595. ஸ்ரஷ்டா

இப்படியாக மோக்ஷத்தில் விருப்பம் கொண்டவர்களான முமுக்ஷுக்களை இந்த ப்ரக்ருதியிலிருந்து விடுவிக்கிறான். இன்பத்தில் நாட்டம் கொண்டவர்களான சேதநர்களை அவரவர்களின் கர்மங்களுக்கு ஏற்ப ஸ்ருஷ்டி செய்கிறான் (அல்லது அவர்களை அனுபவிக்கும்படிச் செய்கிறான்).

## 596. குமுத:

இவ்விதம் நான்முகன் தொடக்கமாக புல்பூண்டு முடிய உள்ள அனைத்து உயிர்களுக்கும், அவரவர்களின் நிலைக்கு ஏற்றபடியான விரிவான இன்பத்தை அளிக்கவல்ல பூமியில் சேர்க்கிறான். இப்படியாக அவைகளை அனுபவிக்கும்படிச் செய்து, தானும் மகிழ்கிறான். கீழே உள்ள வரிகள் காண்க:

- அநிசச்சாத்மா பத்யதே போக்த்ருபாவாத் – சக்தியற்ற ஆத்மா அனுபவிப்பனாக பந்தப்படுகிறான்

- ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசநீசௌ – இப்படியாகக் கூறப்பட்ட ஜீவன் அடிமையானவன், பரமாத்மா அனைத்தும் அறிந்தவன்.

## 597. குவலேசய:

ஸம்ஸார மண்டலத்திலேயே எங்கும் திரிந்தபடி, தங்களது சரீரம் மற்றும் இந்த்ரியம் ஆகியவற்றுக்குத் தாங்களே ஈச்வரன் என்று எண்ணியபடி உள்ள ஜீவன்களை, அது போன்றே எண்ணிக் கொண்டு திரியும்படிச் செய்பவன்.

## 598. கோஹித:

“கோ” என்னும் பதம் பூமியைக் குறிக்கும். ஸம்ஸாரம் என்னும் வித்தை விதைக்கின்ற பூமியான ப்ரக்ருதியைக் கூறி, அதற்கு நியமனத்தைச் செய்கின்றவன் என்று கருத்து. கீழே உள்ள வரிகள் காண்க:

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (4-11) – யோ யோநிம் யோநிம் அதிதிஷ்டத்யேகோ யஸ்மிந்நிதம் கம் ச விசைதி ஸர்வம் தமீசாநம் – யார் ஒருவன் ஒவ்வொரு பிறப்பையும் நியமித்தபடி உள்ளானோ, யாரிடம் அனைத்தும் சென்று லயிக்கின்றவோ, அத்தகைய ஈச்வரனை த்யானிப்பாயாக.

- மந்த்ரிகோபநிஷத் (5) – கௌரநாத்யந்தவதீ ஸா ஜநித்ரீ பூதபாவிநீ – தொடக்கமும் முடிவும் அற்ற ப்ரக்ருதி, தாய் போன்று அனைத்தையும் படைத்து ஆதரிக்கிறது.

- மந்த்ரிகோபநிஷத் (4) – ஸூயதே புருஷார்த்த ச தேநைவாதிஷ்டிதா ஜகத் – ப்ரக்ருதியானது பரமாத்மாவால் ஏவப்பட்டு புருஷர்களால் விரும்பப்படும் பொருள்களைப் படைக்கிறது.

## 599. கோபதி:

போகபூமியாக உள்ள ஸ்வர்க்கத்திற்கும் பதியாக உள்ளவன்.

## 600. கோப்தா

கர்மபலன் என்னும் இந்த ஸம்ஸார சக்கரத்தை சுழற்றியபடி ரக்ஷிப்பவன்.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், ஸ்ரீரங்கநாதனின் தெய்வீக ஆணையால் ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச்செய்த பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், ஆறாவது நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.

### ஏழாவது நூறு திருநாமங்கள் தொடக்கம்

## 601. வ்ருஷபாக்ஷ:

வ்ருஷம் என்றால் தர்மம். இந்த தர்மத்தையே தன்னுடைய சக்கரத்தின் அச்சாக வைத்துள்ளவன். இதனால் இந்தத் திருநாமம் பெற்றான். கர்மபலன்களுக்கு தர்மமே உபாயமாக உள்ளது; ஆக அந்த கர்மபலன்கள், (ஸம்ஸார) சக்கரம் என்று கூறப்படும்போது, அதன் ஆதாரமாக தர்மமே உள்ளது என்று கருத்து.

## 602. வ்ருஷப்ரிய:

தர்மங்கள் இரண்டு வகைப்படும். அவை ப்ரவ்ருத்தி மற்றும் நிவ்ருத்தி தர்மங்கள் ஆகும். ப்ரவ்ருத்தி (இந்தப் பிறவியில் பல அளிக்கும் தர்மங்கள்) மற்றும் நிவ்ருத்தி (மறுமையில் பலன் அளிக்கவல்லவை) ஆகிய இரண்டின் மீதும் ப்ரியமாக உள்ளவன். அவனுக்கு ப்ரியமாக உள்ளதால்தான் கர்மங்களைத் தர்மங்கள் என்கிறோம். கீழே உள்ள வரிகள் காண்க:

- ப்ரஹ்மஸூத்ரம் (3-2-37) – பலமத உப்பத்தே: - அனைத்து கர்ம பலன்களும் ப்ரஹ்மத்திடமிருந்தே உற்பத்தி ஆகின்றன.

- சாரீரக சாஸ்த்ர ஸூத்ரம் (த்ரமிடாசார்யர்) – பலஸம்பிபத்ஸயா ஹி கர்மபிராத்மாநம் பிப்ரீஷந்தி ஸ ப்ரீத: அலம் பலாய இதி ஹி சாஸ்த்ரே மர்யாதா – பலனை அடையவேண்டும் என்னும் ஆசையால் அல்லவோ கர்மங்களை இயற்றி ஸர்வேச்வரனை த்ருப்தி அடையச் செய்கிறார்கள். அவன் ப்ரிதி அடைந்தால் பலனைத் தருகிறான் என்று கூறும் சாஸ்த்ரங்களுக்கு, அவன் அவ்விதமே செய்தால் அல்லவோ மரியாதை?

## 603. அநிவர்த்தீ

இவர்களில் ப்ரவ்ருத்தி தர்மங்களில் ஈடுபட்டபடி உள்ளவர்களை தூமாதி மார்க்கமாக பித்ருலோகங்களில் கொண்டு சேர்க்கிறான். அவர்களை அங்கிருந்து மீண்டும் இங்கேயே அழைத்து வருகிறான். ஆகவே அவர்களை ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றாமல் உள்ளான். இதனால் அல்லவோ ஸம்ஸாரம் ஓய்வு அடையாமல் உள்ளது? கீழே உள்ள வரிகளைக் காண்க:

- கீதை (8-25) – தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம் தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதி: யோகீ ப்ராப்ய நிவர்த்ததே – தூம மார்க்கம், இரவுப்பொழுது, க்ருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயந ஆறு மாதம் ஆகியவற்றில் இறக்கின்ற யோகி ஒருவன், சந்த்ரனின் ஒளையை அடைந்து, மீண்டும் இங்கு திரும்புகிறான்.

- ப்ரஹ்மஸூத்ரம் (3-1-8) – க்ருதாத்யயே அநுசயவாந் – கர்மபலனை அனுபவித்துவிட்டு, எஞ்சிய கர்மபலனுடன் திரும்புகிறான்.

## 604. நிவ்ருதாத்மா

நிவ்ருத்தி தர்மங்களில் ஈடுபட்டு மீண்டும் திரும்புதல் இல்லாத இடத்தை அடைபவர்களான ஆத்மாக்களும் தன்னுடையதே என்றுள்ளவன்.

## 605. ஸங்க்ஷேப்தா

ப்ரவ்ருத்தி தர்மங்களில் ஈடுபட்டபடி உள்ளவர்களுடைய இயல்பான ஞானத்தைச் சுருக்கும் தன்மை கொண்டவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (6-7-62) – யதா க்ஷேத்ரஜ்ஞா சக்தி: ஸா வேஷ்டிதா ந்ருப ஸர்வகா – ஜீவனுடைய சக்தியைச் சூழ்ந்துள்ளது எது; அது எங்கும் பரந்துள்ளது – என்றது காண்க.

## 606. க்ஷேமக்ருத்

நிவ்ருத்தி தர்மங்களில் ஈடுபட்டபடி உள்ளவர்களுடைய இயல்பான ஞானத்தின் சுருக்கத்தை நீக்கி, அவர்களுக்கு க்ஷேமத்தை அளிப்பவன்.

## 607. சிவ:

இப்படியாக போகத்திலும் (புபுக்ஷுக்கள்), மோக்ஷத்திலும் (முமுக்ஷுக்கள்) விருப்பம் கொண்ட அனைவருக்கும் ஏற்ற மங்களங்களை அளிப்பவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (6-7-72) – ஸம்ஸார மோக்ஷ ஸ்திதி பந்தஹேது: - ஸம்ஸாரம், மோக்ஷம், இருப்பு, பந்தம் ஆகியவற்றின் காரணமாக உள்ளவன்.

- பித்ருலோகே ராஜ்யமநுசாஸ்தி தேவ: - பித்ருக்களின் உலகத்தை ஆள்பவன்

- மஹாபாரதம் உத்யோகபர்வம் (41-6) – சிவ: சிவாநாம் அசிவ: அசிவாநாம் – யார் மங்களகரமான செயல்களைச் செய்கிறார்களோ அவர்களுக்கு மங்களமானவன்; அமங்களகரமான செயல்களைச் செய்கிறார்களோ அவர்களுக்கு அமங்களமானவன்

## 608. ஸ்ரீவத்ஸவக்ஷா:

மற்ற சேதநர்களைக் காட்டிலும் இவனை வேறுபடுத்திக் காட்டுகின்ற லக்ஷ்மீவல்லபனாக இருக்கின்ற ஸௌபாக்யத்திற்கு ஸூசகமான ஸ்ரீவத்ஸம் என்னும் சின்னம் கொண்டவன். இராமாயணம் யுத்தகாண்டம் (114-15) – ஸ்ரீவத்ஸவக்ஷா: - ஸ்ரீவத்ஸம் என்பதை திருமார்பில் கொண்டவன் – என்றது காண்க.

## 609. ஸ்ரீவாஸ:

ஸ்ரீமஹாலக்ஷ்மி எப்போதும் விளையாடி மகிழ்கின்ற கற்பக மரங்கள் நிறைந்த தோட்டம் போன்றவன். இராமாயணம் யுத்தகாண்டம் (114-15) – நித்யஸ்ரீ: - மக்ஷாலக்ஷ்மியுடன் எப்போதும் உள்ளவன்.

## 610. ஸ்ரீபதி:

இராமாயணம் ஸுந்தரகாண்டம் (16-5) – துல்யசீலவயோவ்ருத்தாம் – அவனுக்கு ஏற்ற வயதைக் கொண்டவன் – என்று கூறுவதற்கு ஏற்ப பெரியபிராட்டிக்குத் தகுந்த ஸ்வயம்வர நாயகன் ஆவான். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ – உனக்கு பூதேவியும் ஸ்ரீதேவியும் பத்தினிகள்
- அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ – அவளே இந்த உலகை ஆள்பவள், மஹாவிஷ்ணுவின் பத்தினி

## 611. ஸ்ரீமதாம் வர:

மஹாலக்ஷ்மி எப்போதும் அன்புடன் தன்னுடைய கண்களால் கண்டு மகிழ்ந்தபடி உள்ள பரிபூர்ணனாக பகவான் உள்ளான். ஆனால் நான்முகன் போன்ற தேவர்களோ அவளால் எப்போதோ ஒருமுறை விதிவசத்தால் அவளது கடாக்ஷத்தைப் பெறுகின்றனர்; இதனால் அவர்கள் தங்கள் பதவிகளை அடைகிறார்கள். இப்படிப்பட்ட நான்முகன் உள்ளிட்ட தேவர்களுக்கெல்லாம் இவன் ச்ரேஷ்டன் என்று கருத்து. ஸ்ரீவிஷ்ணுபுராணம் –

சுக்லமால்யாம்வரதரா ஸ்நாதா பூஷணபூஷிதா
பச்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷஸ்தலம் ஹரே:
தயா அவலோகிதா தேவா ஹரிவக்ஷஸ்தலஸ்ததா
லக்ஷ்ம்யா மைத்ரேய ஸஹஸா பராம் நிவ்ருத்திமாகதா:

**இதன் பொருள்** – மஹாலக்ஷ்மி வெண்மையான திருப்பாற்கடலில் இருந்து வெளிப்பட்டவுடன் அவளுடைய திருமேனி பலவிதமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டது. அவளை அனைத்து தேவர்களும் கண் இமைக்காமல் பார்த்தபடி நின்றனர். அவள் நேராகச் சென்று ஸ்ரீஹரியின் திருமார்பில் அமர்ந்தாள். இவ்விதம் அமர்ந்த அவள், ஸ்ரீஹரியின் திருமார்பிலிருந்து அனைத்து தேவர்களையும் ஒரு கணம் பார்த்தாள். அப்போது அவர்கள் அனைவரும் மிகுந்த ஆனந்தம் அடைந்தனர்.

## 612. ஸ்ரீத:

எந்த ஒரு காரணமும் இன்றி, தன்னுடைய ப்ரேமை என்பதன் அழகை எப்போதும் பெரியபிராட்டிக்கு அளித்தபடி உள்ளவன். அவளுடைய மேன்மைக்கு காரணமாக உள்ளவன். கீழே உள்ள வரிகளைக் காண்க:

- இராமாயணம் அயோத்யாகாண்டம் (53-31) – ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ முஹூர்த்தமபி ஜீவாவ: ஜலாத் மத்ஸ்யாவிவ உத்த்ருதௌ – லக்ஷ்மணன் இராமனிடம், “உன்னை விட்டு நீங்கினால் சீதையும் இல்லை, நானும் இல்லை.

மீனைத் நிலைத்தில் போடுவது போன்று, உன்னைவிட்டு நீங்கினால் ஒரு முஹூர்த்தம் மட்டுமே தாங்குவோம்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (1-9-144) – விஷ்ணோரேஷா அநபாயிநீ – அவள் எப்போதும் மஹாவிஷ்ணுவை விட்டு அகலாமல் உள்ளாள்

- இராமாயணம் யுத்தகாண்டம் (121-19) – அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா – சூரியனை விட்டு அதன் கதிர்கள் எப்படி இருக்காதோ, அது போன்று என்னை விட்டு சீதை இருக்கமாட்டாள்

- இராமாயணம் ஸுந்தரகாண்டம் (21-15) – அநந்யா ராகவேணாஹம் – ராகவனை விட்டு நான் அகலமாட்டேன்

## 613. ஸ்ரீச:

இராமாயணம் அயோத்யாகாண்டம் (44-15) – ஸ்ரீய: ஸ்ரீச்ச பவேதக்ர்யா – மஹாலக்ஷ்மி செல்வங்களை அளிப்பதற்கும் காரணமாக உள்ளதால் ஸ்ரீச: எனப்படுகிறான். அல்லது அவளே இவனுக்கு ஈச்வரியாக உள்ளாள்; இதனால் ஸ்ரீச: ஆகிறான்; அனைத்து நிலைகளிலும் அவள் நியமிக்கப்பெற்றவன். கீழே உள்ள வரிகளைக் காண்க:

- ஆதாவாத்மகுணத்வேந போக்யரூபேண விக்ரஹே ஆதாரகஸ்வரூபேண தாஸீபாவேந வா ஸதா – முதலில் தனது எண்ணற்ற திருக்கல்யாண குணங்களால் வசீகரம் செய்கிறாள். சரீரத்தினால் அனுபவிப்பளாக உள்ளதாலும், அனைத்திற்கும் ஆதாரமாக உள்ளதைத் தனது ஸ்வரூபமாக உடையதாலும் தாஸி போன்று அவனுக்குக் கைங்கர்யம் செய்கிறாள்

- பும்ப்ரதாநேச்வரேச்வரீ – ப்ரக்ருதியில் உள்ள அனைத்திற்கும், அவனுக்கும் ஈச்வரி.

## 614. ஸ்ரீநிவாஸ:

கற்பகக் கொடிக்கு கற்பக வ்ருக்ஷம் போன்று, பெரியபிராட்டியாருக்கு ஏற்ற கொள்கொம்பாக உள்ளவன்.

## 615. ஸ்ரீநிதி:

ஆபரணப்பெட்டியில் வைக்கப்பட்ட இரத்தினமாலை போன்று, தனது திருமார்பில் பெரியபிராட்டியாரை வைத்துள்ளவன்.

## 616. ஸ்ரீவிபாவந:

அவளுடைய ஸம்பந்தம் மூலமாகவே இவன் ப்ரஸித்தி அடைந்தவன். இராமாயணம் ஆரண்யகாண்டம் (37-18) – அப்ரமேயம் ஹி தத்தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா – யாருக்கு ஜனகனின் புத்ரியான சீதை மனைவியோ, அவனது தேஜஸ் என்பது புத்திக்கு எட்டாத ஒன்றாகும் – என்றது காண்க.

## 617. ஸ்ரீதர:

ஒளியை இரத்தினக் கற்களும், பரிமளத்தை மலர்களும், நிலவைச் சந்த்ரனும், இனிமையை அமிர்தமும் எவ்விதம் ஸ்வபாவமாகவே கொண்டுள்ளனவோ அது போன்று பெரியபிராட்டியை ஸ்வபாவத்திலேயே தரித்தவன். இராமாயணம் அயோத்யாகாண்டம் (3-29) – ந ஹி ஹாதுமியம் சக்யா கீர்த்திராத்மவதோ யதா – ஒருவன் தனது கீர்த்தியை எவ்விதம் விடமாட்டானோ அது போன்று, இராமனால் சீதையை விடஇயலாது – என்றது காண்க.

## 618. ஸ்ரீகர:

பரத்வமான நிலைகளைப் போன்றே வ்யூஹம், அவதாரம் போன்ற பல நிலைகளிலும் தனக்கு ஏற்றபடி பெரியபிராட்டியைக் கொள்பவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (1-9-145) – தேவத்வே தேவதேஹேயம் – அவன் தேவனாக அவதரித்தால், இவள் தேவியாக அவதரிக்கிறாள் – என்றது காண்க.

## 619. ச்ரேய: ஸ்ரீமாந்

அனைத்துவிதமான புருஷார்த்தங்களும் கிட்டுவதற்கு அடையப்பட வேண்டியவளான மஹாலக்ஷ்மியுடன் எப்போதும் கூடியுள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- இராமாயணம் ஸுந்தரகாண்டம் – ப்ரணிபாதப்ரஸந்நா ஹி மைதிலீ ஜநகாத்மஜா அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோ பயாத் – த்ரிஜடை அரக்கிகளிடம், "நீங்கள் இந்தச் சீதையைத் துன்புறுத்தாதீர்கள். ஜனகனின் புத்ரியான இந்த மைதிலி, அனைவருக்கும் கருணை காண்பிப்பவள். அவள் நம்மை நிச்சயம் காப்பாற்றுவாள்", என்றாள்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (1-9-125) – சரீர ஆரோக்யம் ஐச்வர்யம் அரிபக்ஷக்ஷய: ஸுகம் – அவளே சரீர ஆரோக்யம், செல்வம், விரோதி நீக்கம், இன்பம் போன்றவற்றை அளிப்பவள்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (1-9-120) – விமுக்தி பலதாயிநீ – ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிப்பவள் அவளே.

- ஸ்ரீஸூக்தம் – யஸ்யாம் ஹிரண்யம் விந்தேயம் காம் அச்வம் புருஷாநஹம் – யாரிடமிருந்து நான் பொன், பசு, குதிரை, புத்ரர்கள் ஆகியவற்றைப் பெறுவேனோ

- ஸ்ரீஸூக்தம் – ச்ரியம் லோகே தேவஜுஷ்டாம் உதாராம் – அனைவராலும் அண்டப்படுபவள், நாராயணனை அண்டியுள்ளவள், தாராள மனம் கொண்டவள்

## 620. லோகத்ரயாச்ரய:

ஜகந்மாதாவான அவளுடன் கூடி எப்போதும், அனைத்திற்கும் அண்டும் இடமாக உள்ளவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (1-9-126) – த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா – நீயே அனைத்து உலகங்களுக்கும் தாயானவள், தேவர்களுக்கும் தேவனாக உள்ள ஸ்ரீஹரியே அனைத்திற்கும் தந்தையாக உள்ளான்.

## 621. ஸ்வக்ஷ:

அவளது ஸௌந்தர்யம் என்னும் அமிர்தக்கடலின் எல்லையைக் காண இயலும்படியான திருக்கண்கள் போன்ற அவயவங்களைக் கொண்டவன்.

## 622. ஸ்வங்க:

அவளும் மேலே விழுந்து விரும்பும்படியாக உள்ள திருமேனியைக் கொண்டவன்.

## 623. சதாநந்த:

அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் இன்பமாக இருந்து, அந்த ஆனந்தம் வெளிப்படுப்படி உள்ளவன்

## 624. நந்தி:

இப்படியாக எப்போதும், எங்கும், எந்த நிலையிலும் இவளால் பிரியப்படாமல் உள்ளவன்.

## 625. ஜ்யோதிர் கணேச்வர:

இருவருக்கும் (ஸர்வேச்வரனுக்கு, பெரியபிராட்டிக்கும்) அநுகூலர்களாக, தேஜஸ்ஸுடன் விளங்குகின்ற ஆதிசேஷன், கருடன் போன்ற நித்யர்களான பரிசாரக் கணங்களால் வணங்கப்படுவதால், அவர்களுக்கும் ஈச்வரன் ஆவான். மரீசீநாம் பதமிச்சந்தி வேதஸ: - பரமாத்மாவின் ஜ்யோதிமயமான இடத்தை விரும்புகின்றனர்– என்றது காண்க. ஸாத்ய: ஸந்தி தேவா: - ஸாத்யம் கைகூடிய தேவர்கள் விரும்புகின்றனர் – என்றதும் காண்க. ஜ்யோதி: என்னும் பதம் புருஷஸூக்தத்தில் கூறியபடி நித்யஸூரிகளைக் குறிக்கும் என்பதை அறியவேண்டும்.

## 626. விஜிதாத்மா

மஹாலக்ஷ்மியின் நித்யஸம்பந்தம் பெற்றவனாக, யாராலும் கட்டுப்படுத்த இயலாதவனாக உள்ளபோதிலும், தன்னுடைய திருவடிகளைப் பற்றிச் சரணம் அடைந்தவர்களுக்கு வசப்பட்ட மனம் கொண்டவன் ஆவான்.

## 627. விதேயாத்மா

அவர்களுக்கு ஏற்ற காரியம் செய்யும்படியாக உள்ளவன். அவர்கள், "இங்கு வா, இங்கு நில், இங்கு அமர்வாய், இதனை உண்பாய்" என்று கட்டளையிடும்படியாக தன்னை வசப்படுத்திக் கொண்டவன்.

## 628. ஸத்கீர்த்தி:

இப்படிப்பட்ட ஸௌசீல்ய குணம் உள்ளதன் காரணமாக மிகவும் கீர்த்தி உடையவன் ஆவான். அவனைக் குறித்து புகழ்ந்து எதனைக் கூறினாலும், அந்தத் தன்மைகள் அவனிடம் உள்ளன என்னும்படி இருப்பவன். ஆனால் நாம் கூறியவை மட்டுமே அவனிடம் உள்ளன என்றும் கூற இயலாதபடி உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுதர்மம் (75-44) – யதா ஸர்வேச்வர: க்ருஷ்ண: ப்ரோச்யதே ஸர்வபண்டிதை: ததா அபி ஸ்வல்பமேவோக்தம் பூதார்த்தம் கதமா ஸ்துதி: - பண்டிதர்களால் க்ருஷ்ணன் ஸர்வேச்வரன் என்று புகழப்படுகிறான். ஆயினும் அவர்கள் அவனுடைய மேன்மையில் ஒரு சிறிய அளவை மட்டுமே கூறியுள்ளனர். அவனைப் பற்றி சிறிய அளவு மட்டுமே கூறப்பட்டது என்னும்போது, அதனைப் புகழ்தல் என்று எப்படி உரைப்பது?

- ஸ்ரீமத் பகவத்கீதை (11-36) – ஸ்தாநே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா – உன்னுடைய பெரும் கீர்த்தியில் உலகம் களிப்பது பொருத்தமே ஆகும்.

## 629. சிந்நஸம்சய:

இப்படியாக இவன் ஸௌசீல்யம் கொண்டவனாக இருப்பதால் - அவனை அடைதல், அவனை அறிதல், அவனை மகிழ்வித்தல் போன்றவை சுலபமோ அல்லது கடினமோ என்னும் சந்தேகங்களை நீக்குபவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்வேதாஸ்வதர உபநிஷத் (5-18) – தம் ஹ தேவம் ஆத்மபுத்தி ப்ரஸாதநம் – அவனைப் பற்றிய ஞானம் மற்றும் தெளிவான மனதை அளிக்கவல்ல ஸர்வேச்வரனை வணங்குக.

- ஸ்ரீமத் பகவத்கீதை (6-36) – த்வதந்ய: ஸம்சயஸ்யாஸ்ய சேத்தா ந ஹி உபபத்யதே – உன்னை விட்டால் வேறு யாரால் எனது சந்தேகங்களைப் போக்க இயலும்.

## 630. உதீர்ண:

எவ்விதம் சந்தேகங்களைப் போக்குகிறான்? கர்மம் காரணமாக உண்டாகின்ற சரீரத்தில் உள்ள கண்களாலும் நேரடியாகக் காணலாம்படியாக அவதரிப்பதால் ஆகும் (இராமன், க்ருஷ்ணன் போன்ற அவதாரங்கள்).

## 631. ஸர்வத: சக்ஷு:

இப்படியாக அவதாரங்கள் செய்வதால், நம்மைப் போன்றவர்களின் கண்களுக்கு நேராக நின்று அவற்றை நேராகக் கடாக்ஷிப்பவன். இதன் மூலம் தன்னைப் பற்றிய சந்தேகங்களைப் போக்குபவன் என்றாயிற்று. நேரே தெரிகின்ற ஒரு பொருள் குறித்து ஏதேனும் சந்தேகம் ஏற்படுமோ?

## 632. அநீச:

இது போன்றே அடியார்களுக்காக (அர்ச்சாவதார நிலையில்) திருமஞ்சனம், அலங்காரங்கள், கோஷ்டி போன்றவற்றுக்கு உடன்பட்டபடி உள்ளவன்.

## 633. சாச்வத: ஸ்திர:

இப்படியாக எப்போதும் நேரடியாகக் கண்கள் மூலம் கண்டு அனுபவிக்கும்படியாக, பலவிதமான அர்ச்சா விக்ரஹங்களைத் தனது திருமேனியாகக் கொண்டு, எப்போதும் மறையாமல் உள்ளவன். ஸாத்வத ஸம்ஹிதை – பிம்பா க்ருத்யா ஆத்மநா பிம்பே ஸமாகம்யாவ திஷ்டதி – தன்னுடைய அடியார்கள் வடிக்கின்ற பிம்ப ரூபங்களை ஏற்றுக் கொண்டு, அந்த வடிவில் புகுந்து, அப்படியே நிலைப்பவன் – என்றது காண்க.

## 634. பூசய:

தனது அடியார்கள் தன்னுடைய நித்யமான ஸாந்நித்யத்தை விரும்பியவர்களாக, ஸ்வயம்வ்யக்தம் உள்ளிட்ட அர்ச்சா ரூபங்களைக் காண்பித்து, அதிலே எப்போதும் நிலைக்கவேண்டும் என்று வேண்டினார்கள் என்றால், அவற்றில் ஆவிர்ப்பவிப்பவன். இதன் மூலம் அவர்களுக்கு அநுக்ரஹம் செய்வதான ஸுகம் கொள்பவன்.

## 635. பூஷண:

இப்படியாக அனைவருக்கும் நன்மை அளிக்கும்விதமாக தான் நடந்து கொள்வது என்னும் குணம் மூலம் அலங்கரிக்கப்பட்டவன். சிறந்த ஸ்ரீமானாக உள்ளவர்கள் செல்வதால் தாழ்ந்தவர்களின் வீடுகளுக்குச் சென்று, அவர்கள் அளிக்கின்ற அற்பமான உணவை உட்கொண்டு, அவர்களுடன் கலந்து பழகினால், அந்தச் செயல் தாழ்வை ஏற்படுத்துமோ? மாட்டாது; அது அவர்களுக்கு ஆபரணம் போன்றே விளங்கும்.

## 636. பூதி:

எந்தவிதமான உபாயமும் அறிந்திராத தனது அடியார்களுக்கு அனைத்து செல்வமும் போன்ற ஐச்வர்யமாகவே உள்ளவன். அவர்களுடைய புத்திரன், பசு, உணவு, உறவினர் எல்லாம் தானாகவே உள்ளவன்.

## 637. (அசோக:) விசோக:

இப்படியாக எந்த ஒரு உயிரையும் அனாதையாக விடாத காரணத்தாலே, "நாம் ஒருவரைக் கைவிட்டோமே" என்னும் சோகம் இன்றி உள்ளவன்.

## 638. சோகநாசந:

அவர்களுக்குத் தன்னைப் பிரிவதால் உண்டாகவல்ல சோகத்தையும் தீர்ப்பவன். சாந்தோக்ய உபநிஷத் (7-1-3) - ச்ருதம் ஹி ஏவ மே பகவத்ருசேப்ய: தரதி சோகம் ஆத்மவிதிதி ஸோஹம் பகவ: சோசாமி தம் மா பகவாந் சோகஸ்ய பாரம் தாரயத் – ஹே பகவானே! அப்படிப்பட்ட நான் சோகம் அடைந்துள்ள காரணத்தால், நீவிர் என்னை அந்தச் சோகத்தின் கரைக்குச் சேர்க்கவேண்டும் – என்றது காண்க.

## 639. அர்ச்சிஷ்மாந்

தன்னுடைய ப்ரபாவங்கள் அனைத்தையும் வெளிக்காட்டாமல், அடியார்களின் அகக்கண், புறக்கண் ஆகிய இரண்டும் திறக்கும்படியாக திவ்யமான தேஜஸ்ஸைக் கொண்டவன்.

## 640. அர்ச்சித:

இவ்விதம் பலவாக விளங்குகின்ற அர்ச்சாவதாரத்தைக் கொண்டவன். இப்படியாக உள்ள அர்ச்சாவதாரம் என்பது பரவாஸுதேவன் போன்று வெகுதூரத்தில் இல்லாமலும்,

தேவனாகவும் மனிதனாகவும் அவதாரங்கள் கொண்ட விபவம் போன்று ஏதோ ஒரு காலத்தில் மட்டுமே அமையாமலும், ஏதோ ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டுமே இல்லாமலும், எப்போதும் அனைத்து க்ஷேத்ரங்களிலும், கண்களால் நேரடியாகக் காணலாம்படி இருப்பதாகும். இப்படிப்பட்ட அர்ச்சாவதாரத்தின் தத்வத்தைப் பற்றிய இரகசியத்தை பகவத் சாஸ்த்ரம் என்னும் பஞ்சராத்ர ஆகமம், போதாயன ஸ்ம்ருதி, வைஷ்ணவ ஸ்ம்ருதி, புராணங்கள் போன்ற பலவற்றிலும் காணலாம். மேலும் விஷ்ணு தர்மத்தில், கீழே உள்ள வரிகளிலும் காணலாம்:

- விஷ்ணுதர்மம் (103-19) – ஸுரூபாம் ப்ரதிமாம் விஷ்ணோ: ப்ரஸந்ந வதநேக்ஷணாம் க்ருத்வா ஆத்மந: ப்ரீதிகரீம் ஸுவர்ணரஜாதிபி: - மஹாவிஷ்ணுவின் அர்ச்சா விக்ரஹத்தை அழகான திருமுகத்துடனும், மலர்ந்த திருவாய், அழகான திருக்கண்கள் ஆகியவற்றுடனும் கூடியதாய் வெள்ளி அல்லது தங்கத்தில் செய்து.

- விஷ்ணுதர்மம் (103-28) – தாமர்ச்சயேத் தாம் ப்ரணமேத் தாம் யஜேத் தாம் விசிந்தயேத் விசத்யபாஸ்த தோஷஸ்து தாமேவ ப்ரஹ்மரூபிணீம் – இப்படிப்பட்ட அர்ச்சா விக்ரஹத்தை ஒருவன் வணங்கவேண்டும். அவன் முன்பாக விழுந்து நமஸ்காரம் செய்யவேண்டும். அவனுக்கு அனைத்தையும் அளிக்கவேண்டும். அவனையே த்யானித்தபடி இருத்தல் வேண்டும். இப்படிப்பட்டவன் அனைத்து பாவங்களும் நீங்கப் பெற்றவனாக, இறுதியில் உயர்ந்த ப்ரஹ்மத்தின் திருவடிகளை அடைகிறான்.

## 641. கும்ப:

இந்த உலகில் உள்ள மனிதர்கள் தாங்கள் எவ்விதம் இவனை அழகுடன் காணவேண்டும் என்று எண்ணியபடி உள்ளனரோ, அது போன்ற அழகினால் இவன் இருப்பதாக அனைவராலும் விரும்பப்பட்டபடி உள்ளவன். அல்லது “கு” என்னும் பூமியில் த்யானம், ஆராதனம் போன்ற அனைத்திற்கும் எல்லையாக விளங்குகின்ற அர்ச்சாவதார விக்ரஹத்தில் நின்றபடி, தனது அடியார்களுக்கு யமன் மற்றும் அவனது தூதர்கள் மூலம் ஏற்படுகின்ற பயத்தை போக்கும்படியாக உள்ளவன். இப்படியாக ஸர்வேச்வரன் அர்ச்சா ரூபமாக நிற்கின்ற க்ஷேத்ரங்களில் தங்களது சரீரத்தை விட்டவர்களுக்கு, அவரவர்களின்

தகுதிக்கு ஏற்ப ஸர்வேச்வரன் தானாகவோ அல்லது தனது அடியார்கள் மூலமாகவோ அவர்களுக்கு அந்தப் பிறவியிலேயோ அல்லது புண்ணியமான வேறு ஏதோ ஒரு பிறவியிலேயோ தன்னுடைய ப்ராப்தியை அளிக்கிறான். கீழே உள்ள பல வரிகளையும் காண்க:

- ஆமாஸயதி பூபாகம் பரிதஸ் தத்வதேவ ஹி ஸ்வக்ஷேத்ர: - தான் எழுந்தருளியுள்ள இடத்தின் நான்கு திசைகளையும் விளங்கும்படியாகச் செய்கிறான்.

- யஸ்மாத் தேவலயோத்தேசாத் ஸுத்மாதஜலஜஸ்ய ச பவேத் சப்தாநிவேதச்ச தாவத் க்ஷேத்ரம் ததுச்யதே – ஸர்வேச்வரன் எழுந்தருளியுள்ள திருக்கோயிலின் சங்கின் ஒலியானது எவ்வளவு தூரம் கேட்கிறதோ, அதுவரை பரிசுத்தமான இடமாகவே ஆகிறது.

- ஐஹிகாமுஷ்மிகீ யத்ர ஸித்திர்பவதி தேஹிநாம் அணிமாத்யஷ்டகோபேதா ஸ்வசக்த்யா ஸ்வாத்மநா து வை – அணிமா உள்ளிட்ட அஷ்டமா ஸித்திகளுடன் கூடியதாகவும், இந்த உலகம் மட்டும் அல்லாது, மேல் உலகத்திலும் காணப்படும் ஸித்திகள் அனைத்தும் க்ஷேத்ரங்களில் வசிப்பவர்கள் சற்றே முயன்றால் எளிதாகக் கைகூடுகின்றன.

- அத்வாவநிஷு ஸர்வாஸு நித்யம் குர்வதி ஸந்நிதிம் முக்தயே ஸர்வபூதாநாம் விசேஷேண து வை புவி – ஸர்வேச்வரன் உயர்ந்த ராஜமார்க்கங்களில் மட்டும் அல்லாமல் சிறிய பாதைகளிலும் உள்ளான். ஆகவே அனைத்து உயிர்களும் எந்தவழியில் சென்றாலும் அவனை அடைந்து முக்தி அடையலாம்.

த்ராஹீத்யுக்த்வா ஜகந்நாதம் க்ஷிப்ரம் ஸ்த்ரீ பால பூர்வகை:
ஜ்ஞாத்வா விமுக்ததேஹம் து ஸஹ புர்யஷ்டகேந து
மஹதா தூர்யகோஷேண க்ருத்வா ரதவரே து வை
ஜித்வா அந்தக படாந் ரௌத்ராந் பலாத் க்ஷேத்ரே ச கிங்கரா:
ஆநீய க்ஷேத்ரநாதஸ்ய அபித: க்யாபயந்தி ச
தேவ க்ஷேத்ரே த்வதீயே அஸ்ய விமுக்தம் பாஞ்சபௌதிகம்

சரீரமத்யாநாதஸ்ய குரு சச்வத் யதோசிதம்
க்ஷேத்ரநாதஸ்து தத்வாக்யம் ஸமாகர்ண்ய கணோரிதம்
குருணாநுகதேநைவ தந்நிரீக்ஷ்ய து சக்ஷுஷா

**இதன் பொருள் –** க்ஷேத்ரங்களில் வசிக்கும் ஒருவன் ஜகந்நாதனைக் குறித்து, "பகவானே! என்னுடைய மனைவி மற்றும் புத்திரர்களோடு சேர்ந்துள்ள என்னைக் காப்பாயாக" என்று வேண்டக்கூடும். உடனே அங்கு பகவான் தோன்றுகிறான். முதலில் யமனின் கிங்கரர்களை விரட்டுகிறான். அதன் பின்னர் இனிய சங்கின் ஒலியும் பேரிகைகளும் முழங்க அங்கு வரும் விஷ்ணுதூதர்கள் அந்த ஜீவனை ஒரு அழகான ரதத்தில் ஏற்றி ஸர்வேச்வரனிடம் கொண்டு செல்கின்றனர். ஸர்வேச்வரனிடம் அவர்கள், "பகவானே! இவன் தாங்கள் வசிக்கின்ற க்ஷேத்ரத்தில் பஞ்சபூதங்களுடன் கூடிய தனது சரீரத்தை விட்டான். இப்போது இவன் அனாதன். ஆகையால் இவனுக்கு ஏற்றதைத் தாங்கள் செய்யவேண்டும்", என்று கூறுகின்றனர். உடனேயே க்ஷேத்ரத்தின் அதிபதியாகிய ஸர்வேச்வரன் அந்த ஜீவனை மிகவும் கருணையுடன் கடாக்ஷிக்கிறான்.

இப்படியாக யார் ஒருவர் தங்களது சரீரத்தை ஸர்வேச்வரன் அர்ச்சாவதாரமாக உள்ள புண்ணிய க்ஷேத்ரத்தில் விடுகிறார்களோ, அவர்களது பூர்வவினைகள் அனைத்தும் தூய்மை ஆக்கப்படுகின்றன.

## 642. விசுத்தாத்மா

தன்னை அண்டியவர்களிடம் எந்தவிதமான ஏற்றத்தாழ்வும் ஆராயாமல், அனைவருக்கும் தன்னையும் தன்னுடைய அனைத்தையும் அளிப்பதால் தூய்மையான ஸ்வபாவம் கொண்டவன்.

## 643. விசோதந:

தன்னுடைய க்ஷேத்ரங்களில் சரீரத்தை விட்டவர்களை ஆராய்ந்து, தன்னுடைய ப்ராப்திக்கு உரியவர்களாக அவர்களைச் சேர்த்துக் கொள்பவன்.

## 644. அநிருத்த:

அடுத்து க்ஷேத்ரங்களில் அவன் எழுந்தருளும்போது மேலே உரைக்கப்பட்ட வ்யூஹ ரூபமாகவும், விபவரூபமாகவும் அவன் உள்ள தன்மையை உரைக்கிறார். இந்தப் பூமியில்

வாஸுபாண்டம் என்னும் க்ஷேத்ரத்தில் ஜநார்த்தனன் என்னும் திருநாமம் கொண்டு எழுந்தருளியுள்ளவன் அநிருத்த ஸ்வரூபன் ஆவான்.

## 645. அப்ரதிரத:

அவன் ஜநார்த்தனன் என்பதால் தன்னிடம் விருப்பம் அற்ற மனிதர்களை அழிக்கும் விஷயத்தில், தனக்கு எதிராக மற்றொரு தேர் நிற்க இயலாமல் விளங்குபவன்.

## 646. ப்ரத்யும்ந:

தன்னுடைய ப்ரகாசம் மூலமே அனைத்து ஆத்மாக்களையும் விளங்கச் செய்பவன். ப்ரத்யும்ந: புருஷோத்தம – ப்ரத்யும்நனாகிய அவனே புருஷோத்தமன் – என்றது காண்க. அவன் இந்த உலகில் இருந்தபடி, தனது அடியார்களுக்கு உயர்ந்த புருஷார்த்தத்தை அளிக்கிறான்.

## 647. அமிதவிக்ரம:

த்ரிவிக்ரமனாக நின்ற அவனது மூன்று அடிகளுக்கு இணையாக மூன்று உலகங்களிலும் ஏதும் இல்லாதவன். யாமுநம் ஜலமாச்ரித்ய தேவதேவஸ் த்ரிவிக்ரம: ஸ்தித: கமலஸம்பூத ந்ருணாம் ச ஸுபதிப்ரத: - தாமரையில் அமர்ந்துள்ள நான்முகனே! தேவர்களின் தேவனும், த்ரிவிக்ரமனும் ஆகிய ஸர்வேச்வரன் யமுனையின் கரையில் நிலையாக நின்று, அனைவருக்கும் ஏற்ற புருஷார்த்தத்தை அளிக்கிறான் – என்றது காண்க.

## 648. காலநேமிநிஹா

கீழே கூறப்பட்ட பலவிதமான அர்ச்சாவதார க்ஷேத்ரங்களில் எழுந்தருளியிருந்தபடி கலியின் லீலைகள் எனப்படும் காலசக்ரத்தைப் போக்குபவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- அவித்யாக்யா ச யா நேமி: காலசக்ரஸ்ய துர்தரா ஸா மயீயம் ஸமாச்ரித்ய விக்ரஹம் விதுநெளதி ச – காலசக்ரத்தின் மிகவும் வலியதான அவித்யை என்பதை போக்குவதான தேவனை த்யானிக்கக்கடவன்

- த்யாயேத் தத்ப்ரஸரத்நம் ச தேவம் – அந்தத் தேவனை த்யானிப்போம்

## 649. சௌரி:

உத்பலாவர்த்தக க்ஷேத்ரத்தில் (திருக்கண்ணபுரம் என்பர்) சௌரிராஜன் என்னும் திருநாமத்துடன் அர்ச்சாவதாரமாக உள்ளவன்.

## 650. சூர:

சித்ரகூட பர்வதத்தில் அனைத்து ராக்ஷஸர்களுக்கும் ஸம்ஹார மூர்த்தியாக விளங்குகின்ற இராமன் என்னும் சூரன். தராதரே சித்ரகூடே ரக்ஷ: க்ஷயகரோ மஹாந் ஸம்ஸ்திதச்ச பரோ ராம: பத்மபத்ராயதேக்ஷண: - சித்ரகூடம் என்னும் பர்வதத்தில் அரக்கர்களை அழித்தவனும் நீண்ட கண்களைக் கொண்டவனும் ஆகிய இராமன் எழுந்தருளியுள்ளான்.

## 651. சூரஜநேச்வர:

சூரர்கள் என்னும் ஜனங்கள் அனைவருக்கும் ஈச்வரனாக உள்ளவன்.

## 652. த்ரிலோகாத்மா

மகததேசத்தில் த்ரிலோகநாதன் என்னும் திருநாமத்துடன் ப்ரஸித்தமாக எழுந்தருளியுள்ளவன். மகதாமண்டலே விப்ர மஹாபோததராச்ரித: ஸம்ஸ்திதோ லோகநாதாத்மா தேவதேவோ ஜநார்த்தந: - அனைத்து லோகங்களுக்கும் நாதனும், தேவர்களின் தேவனும் ஆகிய ஜனார்த்தனன், மகதமண்டலத்தில் ஞானிகளால் அண்டப்பட்டபடி எழுந்தருளியுள்ளான். த்ரிலோகாத்மா என்றால் – அடியார்களை அனுக்ரஹம் செய்யும்பொருட்டு எந்த நேரத்திலும், மூன்று உலகங்களிலும் ஓடியபடி உள்ளவன் என்று பொருள்.

## 653. த்ரிலோகேச:

சுபமாஸாத்ய பூபாகம் ப்ராக்ஜ்யோதிஷ்புரே ததா தேவம் விச்வேச்வராக்யம் து ஸ்திதமேத்ய ஸ்வகோசராத் – இந்த பூமண்டலத்தில் உள்ளதான சிறந்த ப்ரதேசமான ப்ராக் ஜ்யோதிஷ புரத்திலே, விச்வேச்வரன் என்னும் திருநாமம் கொண்டு

எழுந்தருளியுள்ள ஸர்வேச்வரனைக் கண்டு – என்பதற்கு ஏற்ப த்ரிலோகேச்வரன் என்னும் திருநாமம் கொண்டான்.

## 654. கேசவ:

கீழே உள்ள வரிகள் காண்க:

- கேசவ: கேசிஹா லோகே த்வைரூப்யேண க்ஷிதௌ ஸ்தித: மதுராக்யே மஹாக்ஷேத்ரே வாரணாஸ்யாமபி த்விஜ – அந்தணரே! துன்பங்களை நீக்குபவனான கேசவன் மதுராவிலும், புண்யக்ஷேத்ரமான காசியிலும் இரண்டுவிதமாக எழுந்தருளியுள்ளான்.

- ஹரிவம்ஸம் (279-47) – க இதி ப்ரஹ்மணோ நாம ஈசோஹம் ஸர்வதேஹிநாம் ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந் – சிவன் மஹாவிஷ்ணுவிடம், "க என்பது நான்முகனைக் குறிக்கும். ஈச என்பது நான் ஆவேன். நாங்கள் இருவரும் கேசவன் என்னும் திருநாமம் கொண்ட உன்னுடைய சரீரத்திலிருந்து வெளிப்பட்டோம்", என்றான்.

## 655. கேசிஹா

கேசவன் கேசிஹந்தாரம் – கேசி என்னும் அரக்கனை வதம் செய்தவன் கேசவன். இப்படியாகவே வேதவ்யாஸர் இந்தத் திருநாமத்துக்கு விளக்கம் அளித்துள்ளார்.

## 656. ஹரி:

கீழே உள்ள வரிகள் காண்க:

- கிரோ கோவர்த்தநாக்யே து தேவ: ஸர்வேச்வரோ ஹரி: ஸம்ஸ்தித: பூஜித: ஸ்தாநே – கோவர்த்தன மலையில் தன்னை அர்ச்சா வடிவில் அமைத்துக் கொண்ட ஸர்வேச்வரனாகிய அவனை ஸ்ரீஹரி என்றே பூஜிக்கிறார்கள்.

- மஹாபாரதம் சாந்திபர்வம் (343-39) – இடோபஹூதம் கேஹேஷு ஹரே பாகம் க்ருதுஷ்வஹம் வர்ணச்ச மே ஹரி: ச்ரேஷ்ட: தஸ்மாத் ஹரி: இதி ஸ்ம்ருத: - யஜ்ஞங்களில் ஸ்ரீஹரிக்கு என்று அளிக்கப்படும் அவிர்பாகத்தை நான் ஏற்கிறேன். என்னுடைய இந்தத் திருநாமம் எனது பச்சையான திருமேனி நிறம் மூலமாக எனக்கு உள்ளது.

## 657. காமதேவ:

இமய மலையில் உள்ள சங்கராலய க்ஷேத்ரத்தில் அனைவருக்கும், அனைத்துவிதமான புருஷார்த்தங்களையும் அளித்தபடி இருந்து, அபஸரஸ்களால் காமதேவன் என்ற பெயரில் பூஜிக்கப்படுபவன்.

## 658. காமபால:

தான் அளித்தவற்றை தானே நின்று காப்பாற்றிக் கொடுப்பவன்.

## 659. காமீ

புருஷார்த்தங்களை அனைவருக்கும் அள்ளிக் கொடுப்பதால், அனைவராலும் ஆசைப்படும்படியாக உள்ளவன் (அல்லது அனைவருக்கும் வேண்டிய அனைத்தையும் தான் வைத்துள்ளதால், காமீ எனப்படுவதாகவும் சிலர் பொருள் உரைப்பர்).

## 660. காந்த:

தானும் அதிக விருப்பத்துடன் உள்ளவன். இவனுடைய விருப்பம் காரணமாக அல்லவோ இவனை அப்ஸரஸ்கள் அனைவரும் விரும்பி நிற்கிறார்கள்? இப்படியாக பல இடங்களில் இவனுடைய திருநாமத்தின் உதவியுடன், இவனுக்கு அந்தந்த க்ஷேத்ரத்துடனான தொடர்பு உணரப்படவேண்டும்.

## 661. க்ருதாகம:

அடுத்து சக்தீசாவதாரம் கூறப்படுகிறது. நாநாமந்த்ரமர்யீ வித்யாம் வ்யஞ்ஜயத்யமல ஆத்மநாம் – அனைத்துவிதமான ஆகமங்களையும் உபதேசிப்பவனாக உள்ள அவன், தூய்மையான மனம் கொண்டவர்களுக்கு பலவிதமான மந்த்ரங்களை உபதேசிக்கிறான்.

## 662. அநிர்த்தேச்யவபு:

அந்தந்த யுகங்களுக்கு ஏற்றபடியான திருமேனிகளை எடுப்பதால், இப்படிப்பட்டது என்று கூற இயலாத சரீரம் கொண்டவன். யுகாநுஸாரகாந்திச்ச – யுகங்களின் தன்மைக்கு ஏற்றபடி திருமேனியின் காந்தி கொண்டவன்.

## 663. விஷ்ணு:

தன்னுடைய நியமனம் செய்யும் சக்தி காரணமாக எங்கும் வ்யாபித்துள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- மந்த்ரவர்ணனம் – ஸர்வசக்த்யாத்மநே – அனைத்து சக்திகளையும் கொண்டவன்
- ஆதித்ய புராணம் – யஸ்மாத் விஷ்டமிதம் ஸர்வம் தஸ்ய சக்த்யா மஹாத்மந: தஸ்மாத் ஸ ப்ரோச்யதே விஷ்ணு: விசேர்தாதோ: ப்ரவேசநாத் – அனைத்து உலகங்களையும் வ்யாபித்து நிற்பதால் அவன் விஷ்ணு எனப்படுகிறான். விஷ்ணு என்னும் பதம் விச் = புகுதல் என்பதிலிருந்து வந்ததாகும்.
- மஹாபாரதம் உத்யோகபர்வம் (69-13) – விஷ்ணுர்விக்ரமணாத் – தன்னுடைய திருவடியால் மூன்று உலகங்களையும் அளந்ததால் விஷ்ணு எனப்படுகிறான்.

## 664. வீர:

ஆஜ்ஞாதப்ரவீக்ஷகேணைவ கதாசக்ரத்வயேந து ப்ரேரிதேந ஹிநஸ்த்யாசு ஸாதுஸந்தாபககாரிண: - தன்னுடைய ஆணைக்காக எப்போது காத்து நிற்கும் கதை

மற்றும் சக்கரம் ஆகியவற்றை ஏவி, தனது அடியார்களுக்கு ஆபத்து உண்டாக்குபவர்களை உடனே முடிக்கிறான்.

## 665. அநந்த:

தேசம், காலம், வஸ்து என்று எவற்றாலும் அளவுபடாமல் உள்ளவன். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- மந்த்ரவர்ணனம் – அநந்தமூர்த்தயே – எண்ணற்ற மூர்த்தங்கள் கொண்டவன்
- கீதை (10-19) – நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே – என்னால் கட்டுப்படுத்தப்படும் பொருள்களுக்கு எல்லையே இல்லை.
- தைத்திரீயம் – அதைதஸ்யைவ அந்தோ நாஸ்தி யத் ப்ரஹ்ம – ப்ரஹ்மம் எனப்படும் அதற்கு எல்லையே இல்லை
- தைத்திரீய ஆநந்தவல்லீ – ஸத்யம் ஞானம் அநந்தம் ப்ரஹ்மம் – ப்ரஹ்மம் ஸத்யமானது, ஆனந்தமயமானது, எல்லையற்றது

இவை அனைத்து எதனை உணர்த்துகின்றன என்றால் அவன் எப்போதும், எந்த இடத்திலும், அனைத்துவிதங்களிலும் செயலாற்றியபடியே உள்ளான் என்பதாகும். அவன் எதனாலும் வரையறுக்கப்படாதவன் என்பதன் மூலம், அந்தந்த பொருள்களும் அவனும் ஒன்றே அன்று பொருள் அல்ல; அவன் இல்லாமல் அவை ஏதும் இல்லை என்றே பொருள்படும்.

## 666. தநஞ்ஜய:

பொருள்களை நாம் அடையவேண்டும் என்னும் ஆசை, சம்பாதிக்கப்பட பொருள்களின் மீது விருப்பம், அதனைக் காப்பாற்றுதல், அதனைக் கொண்டு வாழ்தல் போன்ற

பலவிதமான வியாபாரங்களுடன் கூடிய செல்வத்தைக் காட்டிலும் எம்பெருமானிடம் அதிகமான தனம் உள்ளது. ஆகவே இவன் பொன், இரத்தினம் போன்ற அனைத்தைக் காட்டிலும் மேலாக உள்ளவன்.

## 667. ப்ரஹ்மண்ய:

பெரியதாக உள்ள வஸ்துவுக்கு இதமாக உள்ளவன். எல்லையற்றதான போகமோக்ஷங்கள் இரண்டையும் கர்மம் மற்றும் ஞானம் கொண்டு அனுபவிப்பதால் பெரியதாக உள்ள சேதனத்துக்கும், எண்ணற்ற போக உபகரணங்களாக உள்ளதால் பெரியதாக உள்ள அசேதனத்துக்கும் அவற்றின் ஸ்திதி மற்றும் போகம் போன்ற பலவற்றுக்கும் ஹிதமாக உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- தத் ஞானம் ப்ரஹ்மஸஞ்ஞிதம் – ஞானமயமான உள்ள ஜீவாத்மா ப்ரஹ்மம் எனப்படுகிறான்
- கீதை (5-19) – நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம – பெரியதாக உள்ள அவ்யக்தம் ப்ரஹ்மம் எனப்படுகிறது.
- கீதை (14-3) – மம யோநிர் மஹத் ப்ரஹ்ம – உலகின் காரணமாக ப்ரக்ருதியில் நான் கர்ப்பத்தைத் தரிக்கச் செய்கிறேன்.

## 668. ப்ரஹ்மக்ருத்

ப்ரக்ருதியின் கார்யங்களாக உள்ள மஹத், அஹங்காரம் போன்றவற்றைச் செய்யும் நான்முகனைக் காட்டிலும் பெரியவனாக நின்று நியமிப்பவன் (மஹத், அஹங்காரம் போன்றவையும், நான்முகனும் பெரியதாக உள்ளதால் ப்ரஹ்ம சப்தத்தால் கூறப்படுவர்). முண்டகோபநிஷத் (1-1) – தஸ்மாத் ஏதத் ப்ரஹ்ம நாமரூபமந்நம் நியாம்ய: - ப்ரஹ்மத்திடமிருந்து நாம ரூபங்களுடன் கூடிய பலவும், அன்னம் போன்ற பலவும் உண்டாயின – என்றது காண்க.

## 669. ப்ரஹ்ம

இவ்விதமாக வ்யக்தமாகவும், அவ்யக்தமாகவும் உள்ளதான ஸமஷ்டி வ்யஷ்டி புருஷர்களைப் பருக்கச் செய்பவன். தன்னுடைய எல்லையற்றது, எண்ணற்றதும் ஆன திருக்கல்யாண குணங்களாலும் விபவங்களாலும் தானும் பருப்பவன். இதன் மூலம் அனைத்து வேதங்களாலும் வேதாந்தங்களாலும் அறியப்படும் பரப்ரஹ்மமாக உள்ளவன்.

## 670. ப்ரஹ்மவிவர்த்தந:

இவ்விதமாக வளர்கின்ற ப்ரக்ருதிக்கு தொடக்க காரணமாக உள்ள தவம் போன்ற தர்மங்களை நன்றாக வளரும்படிச் செய்பவன்.

## 671. ப்ரஹ்மவித்

ப்ரஹ்மத்தைக் குறித்தே உரைப்பதால், ப்ரஹ்மம் என்று கூறப்படும் வேதங்களை முற்றிலுமாக அறிந்தவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ப்ரஹ்ம அத்யேஷ்யமாண: - வேதங்களால் மட்டுமே அறியப்படுகிறான்.
- அநந்தா வா வேதா: - வேதங்கள் எண்ணற்றவை
- அநாதிநிதனம் ப்ரஹ்ம ந தேவா நர்ஷியோ விது: ஏகஸ்தத்வேத பகவாந் தாதா நாராயண: ஸ்வயம் – வேதங்கள் தொடக்கமும் முடிவும் அற்றவை; ஆகவே அவை தேவர்களாலும், முனிவர்களாலும் முற்றிலுமாக அறியப்படுவதில்லை; அவற்றை முற்றிலுமாக அறிந்தவன் ஸ்ரீமந்நாராயணன் மட்டுமே ஆவான்.

## 672. ப்ராஹ்மண:

அந்த வேதங்களால் கூறப்படும் விஷயங்களை பலருக்கும் தெரிவிக்கும் விதமாக தானே அத்ரி வம்சத்திலும், பல எண்ணற்ற அந்தண வம்சங்களிலும், தத்தாத்ரேயன் போன்ற ரூபங்களிலும் அந்தணனாய் அவதரிப்பவன்.

## 673. ப்ரஹ்மீ

இப்படியாக ப்ரமாணம் மற்றும் ப்ரமேய (ப்ரமாணம் என்பது ஆதார வாக்கியங்கள், ப்ரமேயம் என்பது அந்த வாக்கியங்களால் அறியப்படும் வஸ்து) ரூபமாக உள்ள அனைத்து வஸ்துக்களும் தனதாகவே கொண்டவன். ஸர்வப்ரஹ்ம்மயோ ஹரி: - அனைத்தும் ப்ரஹ்மம் எனப்படும் ஸ்ரீஹரி ஆகும்.

## 674. ப்ரஹ்மஜ்ஞ:

வேதங்களை நேரடியாகவும், அதன் ஆழ்பொருளுடன் கூடியும் நன்றாக அறிந்தவன். கீதை (15-15) – வேதவிதேவ சாஹம் – வேதங்களை அறிந்தவன் நான் மட்டுமே.

## 675. ப்ராஹ்மணப்ரிய:

வேத அதிகாரிகளான அந்தணர்களிடம் அதிகமான ப்ரியத்துடன் உள்ளவன். கீழே உள்ள பல வரிகள் காண்க:

- க்நந்தம் சபந்தம் புருஷம் வதந்தம் யோ ப்ராஹ்மணம் ந ப்ரணமேத் யதாஹம் – எந்த ஒரு அந்தணன் கொல்கிறானோ, சாபம் கொடுக்கிறானோ, மற்றவர்களைப் புண்படுத்தும் சொற்களைக் கூறுகிறானோ அவனை நான் மதிக்காமல் உள்ளது போன்று, மதிக்காமல் இருத்தல்வேண்டும்.

- கீதை (12-20) – யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யபாஸதே ச்ரத்ததாநா மத்பரமா பக்தாஸ்தேதீவ மே ப்ரியா: - யார் ஒருவன் அமிர்தம் போன்றதான இந்த தர்மத்தைப் பின்பற்றியபடி உள்ளானோ அவன் என்னுடைய பரமபக்தன் ஆவான்; அவன் எனக்கு மிகவும் ப்ரியமானவன் ஆவான்.

- யத் ப்ராஹ்மணஸ்ய முகத: - அந்தணன் ஒருவன் வாயிலிருந்து வெளிவரும் சொற்கள் மதிக்கப்படவேண்டும்.

- ஸ்ரீவிஷ்ணுதர்மம் – விப்ர ப்ரஸாதாத் அஸுராந் ஜயாமி – அந்தணர்களின் பொருட்டே நான் அசுரர்களை அழிக்கிறேன்

- கீதை (9-33) – கிம் புந: ப்ராஹ்மணா: புண்யா: - புண்ணியம் நிறைந்த அந்தணர்கள் குறித்து மேலும் என்ன கூறவேண்டும்

இதன் மூலமாக அவன் பலவிதமாக உள்ளது கூறப்பட்டது. மேலும் கீழே உள்ள வரிகளும் காண்க:

- மஹதோ மஹீயாந் – பெரியவற்றில் பெரியது

- பராத் பரம் யந்மஹதோ மஹாந்தம் – மேலானவற்றில் மேலானதாகவும், உயர்ந்தவற்றில் உயர்ந்ததாகவும்

- மஹாந்தம் விபுமாத்மாநம் – பெரியதும் எங்கும் உள்ளதுமான ஆத்மா

- மஹத: பரமோ மஹாந் – உயர்ந்தவற்றில் உயர்ந்த

## 676. மஹாக்ரம:

அனைத்திற்கும் மேலாக உள்ள தன்னை அடையும்படியாக, அனைத்திற்கும் கீழே மிகவும் ஆழமான ஸம்ஸாரம் என்பதான பாதாளத்தில் உள்ள ஜீவர்களைக் கரையேற்றும்படியாக மிகவும் பெரியதான ஒரு படியைக் கட்டியுள்ளவன். ஒரு தாய் தனது குழந்தைக்கு முதலில் தன்னுடைய ஸ்தனங்களில் உள்ள பாலை அளிக்கிறாள்; பின்னர் பசுவின் பாலை அளிக்கிறாள்; பின்னர் ஆகாரங்களை அளிக்கிறாள்; பின்னர் இன்பம் தருவதை அளிக்கிறாள். இதே போன்ற வரிசையில் ஸர்வேச்வரனும் செய்கிறான் – தான் நன்மை செய்ய விரும்பும் ஒருவனுக்குத் தன்னிடம் உள்ள தோஷங்களை முதலில் போக்குகிறான்; அதன் பின்னர் தன் மீது ஆசை கொள்ளும்படிச் செய்கிறான்; அந்த ஆசையை நன்கு வளர்க்கிறான்; அதன் பின்னர் ஞானத்தை அளித்து, உயர்ந்த கதியைக் காட்டுகிறான்; தொடர்ந்து தன் மீது மஹாவிச்வாஸம் கொள்ளும்படிச் செய்கிறான். இவ்விதமாகப் படிப்படியாகத் தன்னிடம் சேர்த்துக் கொள்கிறான். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- பந்தாயைவம் பவத்யேஷா அவித்யா ஹ்யக்ரமோஜ்ஞிதா – அறியாமை என்பது நீங்கிய பின்னர் ஸம்ஸாரம் ஜீவனைப் பந்தப்படுத்தாது.

- ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோ த்யாந ஸமாதிபி: நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே – ஆயிரக்கணக்கான பிறவிகளில் செய்த தவம், த்யானம், பகவானைக் குறித்த ஸமாதி நிலை ஆகியவற்றுக்குப் பின்னர் ஜீவனின் பாவங்கள் அகல்கின்றன; அதன் பின்னரே அவனுக்கு க்ருஷ்ணன் மீது பக்தி உண்டாகிறது.

- கீதை (7-19) – பஹூநாம் ஜந்மநாமந்தி ஞானவாந் மாம் ப்ரபத்யதே – எண்ணற்ற பிறவிகள் கடந்த பின்னரே ஞானி ஒருவன் என்னை வந்தடைகிறான்.

- கீதை (8-8) – அப்யாஸயோகேந ததோ மாமிச்சாப்தும் தநஞ்ஜய – ஆகவே என்னைத் தொடந்து த்யானிப்பதன் மூலம் அடைய முயல்வாயாக.

## 677. மஹாகர்மா

பூச்சிகள், புழுக்கள் என்றுள்ள அற்பமான உயிர்களையும் மிகவும் உயர்ந்ததான தன்னுடைய விபவங்களை அனுபவிக்கும்படியாகக் கொண்டு செல்பவன்; ஆக பலவிதமான வியக்கவைக்கும் செயல்களைச் செய்பவன்.

## 678. மஹாதேஜா:

எல்லையற்ற காலமாக தாமஸம் என்பதான இருளுக்கு இருப்பிடமாக உள்ள அறியாமை என்பதை நீக்கும்படியான உயர்ந்த தேஜஸ் கொண்டவன்.

## 679. மஹோரக:

கடந்த திருநாமத்தில் கூறப்பட்டபடி அவன் செய்வது எப்படி? மிகவும் உயந்தவனாகிய அவன், மிகவும் தாழ்வானவர்களையும் அடைகிறான்; அவர்களுடைய அந்தகரணங்களில் புகுந்து, அவர்களின் மனதில் புகுந்து, அவர்களுடைய அறியாமையை நீக்குகிறான்.

## 680. மஹாக்ருது:

மிகவும் எளிதாக இயற்றக்கூடிய ஆராதனத்தைக் கொண்டவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுதர்மம் (90-69) – யோ ந வித்தைர்ந விபவை: ந வாஸோபிர்ந பூஷணை: தோஷ்யதே ஹ்ருதயேநைவ கஸ்தமீசம் ந தோஷயேத் – எந்த ஒருவன் செல்வங்களாலோ, வஸ்த்ரங்களாலோ, ஆபரணங்களாலோ மயங்காமல், வெறும் உள்ளத்தில் உள்ள அன்பைக் கொண்டு மட்டுமே மயங்குகிறானோ, அவனை யார் தான் வணங்கமாட்டனர்.

- கீதை (9-27) – யத் கரோஷி – எதனைக் கொண்டு வேண்டுமானாலும்

## 681. மஹாயஜ்வா

தன்னை ஆராதிப்பவர்கள் மற்றவர்களை ஆராதிப்பவர்களைக் காட்டிலும் சிறந்தவர்கள் என்பதால், இப்படியாக அழைக்கப்படுகிறான். தேஷாமேகாந்திந: ச்ரேஷ்டா: தே சைவ அநந்யதேவதா: - அனைவரைக் காட்டிலும் ஸர்வேச்வரனிடம் மட்டுமே பக்தி கொண்டுள்ளவர்கள் உயர்ந்தவர்கள்; அவர்கள் மற்ற தெய்வங்களை நாடுவதில்லையே! – என்பது காண்க.

## 682. மஹாயஜ்ஞ:

அபிகமனம், மதுபர்கம் முதலான யஜ்ஞங்களைக் கொண்டவன். அஷ்டாங்க ஆராதனை என்பது மற்ற அனைத்துவிதமான பகவத் ஆராதனையைக் காட்டிலும் சிறந்தது. கீழே உள்ள வர்கள் காண்க:

- ஸர்வேஷாம் கில தர்மாணாமுத்தமோ வைஷ்ணவோ விதி: ரக்ஷதே பகவாந் விஷ்ணு: பக்தாந் ஆத்மசரீரவத் – அனைத்து தர்மங்களைக் காட்டிலும் மஹாவிஷ்ணுவை ஆராதிப்பதே சிறந்தது; காரணம் அவன் தனது அடியார்களைத் தன்னுடைய திருமேனியின் அங்கங்களாகவே எண்ணிப் பாதுகாக்கிறான்.

- யா க்ரியா: ஸம்ப்ரயுக்தா: ஸ்யு: ஏகாந்தகதவுத்திபி: தா: ஸர்வா: சிரஸா தேவ: ப்ரதிக்ருஹ்ணாதி வை ஸ்வயம் – தன்னிடம் மட்டுமே மிகுந்த பக்தி கொண்டுள்ள அடியார்கள் செய்யும் ஆராதனைகள் அனைத்தையும் தனது தலையைத் தாழ்த்தி பகவான் ஏற்கிறான்.

- அஹோ ஹ்யேகாந்திந: ஸர்வாந் ப்ரீணாதி பகவாந் ஹரி: விதிப்ரயுக்தாம் பூஜாம் ச க்ருஹ்ணாதி சிரஸா ஸ்வயம் – தன்னுடைய அடியார்களிடம்தான் பகவானுக்கு எத்தனை ப்ரீதி உள்ளது! சாஸ்த்ரங்களின் அடிப்படையில் அவர்கள் செய்கின்ற ஆராதனைகளைத் தனது தலையைத் தாழ்த்தி ஏற்கிறானே!

## 683. மஹாஹவி:

ஹிம்சை போன்றவை ஏதும் இல்லாமல் உள்ளதும், மிகவும் ஸாத்விகமாக உள்ளதும் ஆகிய அவிர்பாகத்தை ஏற்பவன். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- மஹாபாரதம் - ந தத்ர பசுகாதோ அபூத்; ஆரண்யகபதோகீதா பாகாஸ்தத்ர அநுர்வணிதா: - பசுவதை ஏதும் இல்லை; அதனைப் போன்ற வரிகள் மட்டுமே ஆரண்யகத்தில் உள்ளன.

- ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்ம ஹவி: - ப்ரஹ்மமாகிய ஜீவனால், ப்ரஹ்மம் என்னும் அவிர்பாகம், ப்ரஹ்மம் என்னும் அக்னியில், ப்ரஹ்மத்திற்கு அளிக்கப்படுகிறது.

- ஜ்ஞாநயஜ்ஞேந – ஞானம் என்னும் யஜ்னம்

- யோ அஹமஸ்மி ஸ ஸந் யஜே யஸ்யாஸ்மி ந தமந்தரேமி – நான் யாருடைய செல்வமாக உள்ளேனோ அவனை ஆராதித்து, அவனை விரோதிக்காமல் உள்ளேன்.

- இதமஹம் மாம் அம்ருதயோநெள ஸூர்யே ஜ்யோதிஷி ஜுஹோமி – என்னை இந்த ஸம்ஸாரத்திலிருந்து உயர்த்தவல்லவனும், சூரியனின் தேஜஸ்ஸாக உள்ளவனும் ஆகிய ஸர்வேச்வரனுக்கு நான் என்னையே அவிர்பாகமாக அளிக்கிறேன்.

- அஹமேவாஹம் மாம் ஜுஹோமி – என்னையே அவிர்பாகமாக அளிக்கிறேன்.

- ஆத்மா ராஜ்யம் தநம் சைவ களத்ரம் வாஹநாநி ச ஏதத் பகவதே ஸர்வம் இதி தத்ப்ரேக்ஷிதம் ஸதா – இந்த ஆத்மா, ராஜ்யம், தனம், மனைவி, வாகனங்கள் போன்ற அனைத்தும் பகவானுக்கே எப்போதும் சொந்தம்

- ச்ரேயாந் த்ரவ்யமயாத் யஜ்ஞாத் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப – மற்ற வஸ்துக்கள் கொண்டு செய்யும் யஜ்ஞத்தைக் காட்டிலும் ஞானம் கொண்டு செய்யும் யஜ்ஞம் சிறந்தது.

## 684. ஸ்தவ்ய:

துதிப்பதற்கு ஏற்றவன். இதன் காரணம் மங்களகரமாகவும், நித்யமாகவும், தோஷங்கள் அற்றதாகவும், எல்லையற்றதாவும் இருக்கின்ற குணங்களை எப்போதும் கொண்டவன்; ஆயிரம் திருநாமங்கள் கொண்டவன் – போன்றவை ஆகும். இப்படியாக உள்ள அவனே அல்லவோ போற்றத்தக்கவன்; விபரீதமான குணங்கள் பல கொண்ட மற்ற தேவதைகளை எவ்விதம் போற்றுவது? கீழே உள்ள வரிகள் காண்க:

- பார்ஹஸ்பத்ய ஸ்ம்ருதி – ஆதரேண யதா ஸ்தெளதி தநவந்தம் தநேசசயா ஏவம் சேத் விச்வகர்த்தாரம் கோ ந முச்யதே பந்தநாத் – தனம் தேடும் ஒருவன் ஒரு தனவானை வேண்டும்போது எவ்விதம் ஆசையுடன் வேண்டுவானோ அது போன்று, இந்த உலகின் காரணமாக உள்ள ஸர்வேச்வரனை ஆசையுடன் வேண்டினால் அனைத்து பந்தங்களும் அறுபடும்.

- மஹாபாரதம் – இதீதம் கீர்த்தநீயஸ்ய – இதுவே அவனைத் துதிக்கும் திருநாமங்கள்

## 685. ஸ்தவப்ரிய:

எப்படி இருந்தாலும், எந்த மொழியாக இருந்தாலும், யாராக இருந்தாலும், தன்னைப் போற்றினாலும், தன்னை இகழ்ந்தாலும் கூறும் சொற்களானவை தன்னையும் தனது குணத்தையும் குறித்து இருந்தது என்றால், அதனை மிகவும் மகிழ்வுடன் ஏற்பவன். இந்த விஷயம் கண்டாகர்ணன் விஷயத்தில் காணலாம் (இவன் சிவனிடம் ஆழ்ந்த பக்தி கொண்டு, மஹாவிஷ்ணுவை ஆராதிக்கவே கூடாது என்று எப்போதும் எண்ணியபடி உள்ளவன்; ஆனால் இவ்விதம் விஷ்ணுவைக் குறித்து எப்போதும் எண்ணியபடி இருந்ததால் மோக்ஷம் பெற்றான்).

## 686. ஸ்தோத்ரம்

தன்னைக் குறித்த துதி என்றால், அதனைத் தான் ஏற்றுக்கொண்டு நிற்பவன். இதனைத் துருவன் விஷயத்தில் தெளிவாகக் காணலாம்.

## 687. ஸ்துத:

ஆயிரம் படம் கொண்ட ஆதிசேஷனாலும், வேத ஸ்வரூபனாகிய கருடனாலும், மற்ற நித்யஸூரிகளாலும், நான்முகன் போன்றவர்களாலும், நம்மாலும் அவரவர்களுக்கான விருப்பங்கள் நிறைவேறும் பொருட்டு எந்தவிதமான வேறுபாடும் இல்லாமல் போற்றப்படுபவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுதர்மம் (43-27) – அசேஷதேவே ச நரேச்வரேச்வரை: ஸதா ஸ்துதம் யச்சரிதம் மஹாத்புதம் – அனைத்து தேவர்களாலும், அரசர்களாலும், ஈச்வரர்களாலும் எப்போதும் துதிக்கப்படும்படியாக அவனது லீலைகள் அற்புதமாக உள்ளன

- புருஷஸூக்தம் – தாதா புரஸ்தாத் யமுதாஜஹார சக்ர: ப்ரவித்வாந் ப்ரதிசச்சதஸ்த்ர: - யாரை நான்முகன் த்யானித்தானோ, யாரை இந்த்ரன் உபாஸித்தானோ, யாரை எட்டு திக்பாலகர்களும் உபாஸித்தார்களோ

## 688. ஸ்தோதா

தன்னைப் புகழ்ந்து துதிப்பவனைப் புகழ்கின்ற சீலன். ஸ்ரீவிஷ்ணுதர்மம் (75-55) – யம் ஸ்துவந் ஸ்தவ்யதாமேதி வந்தமாநச்ச வந்த்யதாம் – யார் அவனைப் புகழ்கிறார்களோ, அவர்கள் அவனால் போற்றப்படுகிறார்கள்; யார் அவனை வணங்குகிறார்களோ, அவர்கள் அவனால் வணங்கப்படுகிறார்கள்

## 689. ரணப்ரிய:

இராமாயணம், மஹாபாரதம் போன்றவற்றால் போற்றப்பட்ட திவ்யமான சேஷ்டிதங்களைக் கொண்டவன். தனக்கு மிகவும் அன்பானவர்கள் மகிழவேண்டும் என்பதற்காகவே யுத்தம் போன்றவற்றைச் செய்பவன். இராமாயணம் யுத்தகாண்டம் (111-31) – தத: ஸகாமம் ஸுக்ரீவமங்கதம் ச மஹாபலம் சகார ராகவ: ப்ரீதோ ஹத்வா ராவணமாஹவே – ராவணனைக் கொன்று, அதன் மூலம் இராமன் சுக்ரீவனையும், அங்கதனையும் மகிழ வைத்தான்.

## 690. பூர்ண:

மிகவும் கடினத்துடன் ஆராதிக்கவேண்டிய அவசியம் இல்லாமல், துதிப்பதால் மட்டுமே அவன் கிட்டுகிறான். இதற்குக் காரணம் - அனைத்துவிதமான அபீஷ்டங்களையும் கொண்டவனாக உள்ளதால் ஆகும்.

## 691. பூரயிதா

இவ்விதமாக பூர்ணமாக உள்ளபோதிலும், குறை உள்ளவன் போன்று, தன்னைத் துதிப்பவனுடைய துதியை விரும்புபவனாக, இதன் மூலம் அவனுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொடுப்பவன்.

## 692. புண்ய:

மிகுந்த பாவங்களைச் செய்தவன் கூட புண்ணியத்தை ஏற்கும்படியாக தூய்மைப்படுத்துபவன்.

## 693. புண்யகீர்த்தி:

தன்னுடைய ஸங்கீர்த்தநம் என்பது தூய்மைப்படுத்தவல்லபடி இருப்பவன். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (6-8-20) – நாமஸங்கீர்த்தனம் பும்ஸாம் விலாயநமுத்தமம் மைத்ரேய அசேஷபாபாநாம் தாதூநாமிவ பாவக: - மைத்ரேயரே! நெருப்பு எவ்விதம் உலோகங்களைத் தூய்மையாக்குகிறதோ அது போன்று, ஈடில்லாத பகவானின் திருநாமங்கள் அனைத்து பாவங்களையும் போக்குகின்றன

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (6-18-19) – அவசேநாபி யந்நாம்நி கீர்த்திதே ஸர்வாபதகை: புமாந் விமுச்யதே ஸத்ய: ஸிம்ஹத்ரஸ்தை: ம்ருகைரிவ – மான் ஒன்று சிங்கத்திடமிருந்து விடுவிக்கப்பட்டவுடன் எவ்விதம் தனது பயம் நீங்கப் பெறுகிறதோ அதே போன்று பகவானின் திருநாமங்களைத் தன்னை அறியாமல் உச்சரிக்கும் ஒருவன் அனைத்து பாவங்களிலும் இருந்து விடுபடுகிறான்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (6-2-17) – கலௌ ஸங்கீர்த்ய கேசவம் – கலிகாலத்தில் கேசவனின் திருநாம ஸங்கீர்த்தனமே போதுமானது.

மேலே உள்ள வரிகளை முன்னிட்டே அவனுடைய திருநாமங்கள் அனைத்தையும் தூய்மைப்படுத்தவல்லது எனப்படுகிறது.

## 694. அநாமய:

இவ்விதம் தன்னுடைய ஸம்பந்தம் என்னும் திவ்யமான மருந்து என்பதன் மூலம் ஸம்ஸாரம் என்னும் மிகப் பெரிய நோயைப் போக்கி அருள்பவன். ஸர்வேச்வரனை அனுபவிக்க இயலாமல் தடுப்பதால் அல்லவோ ஸம்ஸாரம் என்பது நோய் என்றே கூறப்படுகிறது? சாந்தோக்ய உபநிஷத் (4-10-3) – வ்யாதிபி: பரிபூர்ணோ அஸ்மி –

ஸம்ஸாரத்தைப் பற்றி முழுவதுமாக அறிந்தவர்கள் "நான் பூர்ணமான வ்யாதி கொண்டவன்" என்பர் – என்றது காண்க.

## 695. மநோஜவ:

கீழே உரைக்கப்பட்டவற்றை மிகவும் வேகமாகச் செய்வதால் இவன் மனதைக் காட்டிலும் விரைவானவன் என்று கருத்து. கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீமத்பகவத்கீதை (9-31) – க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா – விரைவாக அடைவான்

- ஸ்ரீவிஷ்ணுதர்மம் (83-20) – ஸப்தஜந்மக்ருதம் பாபம் ஸ்வல்பம் வா யதி பஹு விஷ்ணோராலய விந்யாஸ ப்ராரம்பாதேவ – ஏழு ஜன்மங்களில் சேர்க்கப்பட்ட பாவங்களாக இருந்தாலும், அவை அதிகமாகவோ குறைவாகவோ இருந்தாலும், அவை அனைத்து மஹாவிஷ்ணுவின் கோயிலுக்குள் காலை எடுத்து வைத்தால் அழிந்துவிடும்.

## 696. தீர்த்தகர:

தன்னைப் போன்றே நினைப்பதாலும், கீர்த்தனம் செய்வதாலும் அனைத்தையும் தூய்மையாக்கவல்ல கங்கை மற்றும் புஷ்கரம் ஆகிய நதிகளின் அந்தத் தன்மைக்குக் காரணமாக உள்ளவன். ச்ருதி, ஸ்ம்ருதி போன்றவைகளை உண்டாக்கியவன். யோகீ ஞானம் ததா ஸாங்க்யம் – யோகம், ஞானம் மற்றும் ஸாங்க்யம் ஆகியவை அவனிடமே உண்டாயின – என்றது காண்க. ஸமுத்திரம் போன்ற தன்னில் அடியார்கள் புகுவதற்கு ஏற்றபடியாக அவதாரங்கள் என்னும் படித்துறைகளை உண்டாக்கியவன்.

## 697. வஸுரேதா:

(க்ருஷ்ணாவதாரத்தைக் குறித்து அடுத்த 90 திருநாமங்கள் உள்ளன) திவ்யமான தேஜஸ் என்பதே காரணமாக அவதரித்தவன். வஸு என்றால் தேஜஸ். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-1-60) – உஜ்ஜஹார ஆத்மந: கேசோ ஸிதக்ருஷ்ணௌ மஹாமுநே – கறுப்பும் வெளுப்பும் ஆகிய தனது இரண்டு கேசங்களை எடுத்தான்.

- மஹாபாரதம் சாந்திபர்வம் (342-28) – மம தே கேசஸஞ்ஜ்ஜிதா: - இவை என்னுடைய இரண்டு கேசங்கள் ஆகும்.

## 698. வஸுபரத:

மிகவும் உயர்ந்த நிதியான தன்னை தேவகிக்கும் வஸுதேவருக்கும் புத்ரனாக அளித்தவன்.

## 699. வஸுப்ரத:

அவர்கள் இருவருக்கும் தந்தையான அவன், தனக்குப் பிதாவாக அவர்கள் ஆகும்படியான தேஜஸ்ஸை அளித்தவன்.

## 700. வாஸுதேவ:

வஸுதேவரின் புத்திரன் ஆவான்.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், ஸ்ரீரங்கநாதனின் தெய்வீக ஆணையால் ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச்செய்த பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், ஏழாவது நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.

எட்டாவது நூறு திருநாமங்கள் தொடக்கம்

## 701. வஸு:

திருப்பாற்கடலில் வசிப்பவன். கீழே உள்ள வரிகள் காண்க.

- மஹாபாரதம் சபாபர்வம் (47-26) – ஸ லோகாநாம் ஹிதார்த்தாய க்ஷீரோதே வஸதி ப்ரபு: - உலகில் உள்ள அனைவருக்கும் நன்மையைச் செய்யும்விதமாக திருப்பாற்கடலில் சயனித்துள்ளான்.
- ஹரிவம்சம் (113-62) – ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: - மஹாலக்ஷ்மியுடன் எப்போதும் கூடியவனாகிய ஸ்ரீமந்நாராயணன் திருப்பாற்கடலில் சயனித்துள்ளான்.

## 702. வஸுமநா:

தனக்கு மிகவும் விருப்பமானவளாக உள்ள மஹாலக்ஷ்மியின் அவதார இடமான திருப்பாற்கடலில் உள்ளபோதிலும், வஸுதேவரிடம் தன்னுடைய திருவுள்ளத்தை எப்போதும் கொண்டவன். தேவதத்தனை தத்தன் என்றும், ஸத்யபாமாவை பாமா என்றும் கூறுவது போன்று வஸுதேவனை வஸு என்பர் என்று மஹாபாஷ்யக்காரர் உரைத்தார்.

## 703. ஹவி:

இவன் இப்படியாக வஸுதேவரிடமும் தேவகியிடமும் இருப்பதற்கு மிகவும் விருப்பம் கொண்டபோதிலும், அவர்கள் இவனுக்குக் கம்சனால் ஏதேனும் ஆபத்து உண்டாகுமோ என்று பயந்தனர். ஆகவே இவனது விஷயத்தில் இது போன்ற பயம் தேவையில்லை என்றபோதிலும், அவர்களால் நந்தகோபர் மற்றும் யசோதையிடம் அளிக்கப்பட்டவன்.

## 704. ஸத்கதி:

தான் அவதாரம் செய்யும்போதே அசுரன் செய்த ஆபத்தை நீக்கியதால், அனைத்து ஸாதுக்களுக்கும் கதியாக உள்ளவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-3-4) – ஸந்த:

ஸந்தோஷமதிகம் ப்ரசமம் சண்டமாருதா: - (க்ருஷ்ணன் அவதரித்த நேரத்தில்) ஸாதுக்கள் மிகவும் மகிழ்ந்தனர், வேகமாக வீசிக்கொண்டிருந்த காற்று அமைதியானது – என்றது காண்க.

## 705. ஸத்க்ருதி:

தயிர் முதலானவற்றைக் களவு செய்தும், உரலில் கட்டுண்டும், ராஸலீலை செய்தும், இவற்றைக் கேட்டு அறியும் ஜீவன்களுடைய ஸம்ஸார பந்தங்களை அனைத்தையும் நீக்குவதால் நல்ல செய்கைகள் கொண்டவன் என்று கருத்து. ஸ்ரீமத் பகவத்கீதை (4-9) – ஜந்ம கர்ம ச மே திவ்யம் – எனது பிறவியும், கர்மங்களும் திவ்யமானவை – என்றது காண்க.

## 706. ஸத்தா

ஸாதுக்களின் இருப்பாகத் தானே உள்ளவன். அவன் இல்லையென்றால் ஏதும் வாழ இயலாது அல்லவோ? ஸ்ரீமத் பகவத்கீதை (10-39) - ந ததஸ்தி விநா யத் ஸ்யாத் மயா – என்னை விடுத்து ஏதும் இருக்கமுடியாது – என்றது காண்க.

## 707. ஸத்விபூதி:

ஸத்துக்களுக்கு புத்ரன், நண்பன், பந்து, தூதன், சாரதி என்று பலவும் தானாகவே உள்ளவன்.

## 708. ஸத்பராயண:

ஸாதுக்களுக்கு உயர்ந்த கதியாக உள்ளவன் என்று பொருள். கீழே உள்ள பல வரிகளையும் காண்க:

- மஹாபாரதம் த்ரோணபர்வம் – க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா: க்ருஷ்ண: பராயணம் தேஷாம் – பாண்டவர்கள் க்ருஷ்ணனையே தங்களது அண்டும் இடமாகவும், தங்கள் பலமாகவும், தங்களுடைய நாதனாகவும், தாங்கள் சரணம் புக ஏற்ற இடமாகவும் கொண்டனர்.

- ஸ்ரீமத் பகவத்கீதை (18-65) – மாமேவைஷ்யஸி – நீ என்னை நிச்சயம் அடைவாய்.

ஸத்பராயணம் என்று கொண்டால், ஸாதுக்களே தன்னுடைய கதி என்று உள்ளவன். இதனை ஒட்டி உள்ள வரிகளைக் கீழே காண்க:

- மஹாபாரதம் உத்யோகபர்வம் – மம ப்ராணா ஹி பாண்டவா: - என்னுடைய ப்ராணனாகவே பாண்டவர்கள் உள்ளனர்

- மஹாபாரதம் ஸபாபர்வம் – பாண்டவாநாம் பவாந் நாதோ பவந்தம் ச ச்ரிதா வயம் – பாண்டவர்களின் நாதன் நீயே, உன்னிடமே நாங்கள் அடைக்கலம் அடைந்தோம்

- ஸ்ரீமத் பகவத்கீதை (7-18) – ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் – ஞானியே என்னுடைய ஆத்மா ஆவான்.

## 709. சூரஸேந:

இந்தப் பூமியின் பாரத்தைக் குறைப்பதற்காக சூரர்களான யாதவர்களையும், பாண்டவர்களையும் தனக்கு உதவியாகக் கொண்டவன்.

## 710. யதுச்ரேஷ்ட:

ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-20-49) – அயம் ஸ கத்யதே ப்ராஜ்ஞை: புராணார்த்தவிசாரதை: கோபாலோ யாதவம் வம்சம் மக்நமப்யுத்தரிஷ்யதி – கம்ஸன் போன்றவர்களால் மிகவும் தாழ்ந்து போன யாதவ குலத்தை அவன் மேலே உயர்த்துவான் – என்றது காண்க.

## 711. ஸந்நிவாஸ:

மனிதர்களில் தர்மசீலனாக உள்ளபோதிலும், ஸநகன் முதலான ஸாதுக்களுக்கு இளைப்பாறும் இடமாக உள்ளவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-18-42) – ஸநந்தநாத்யைர் முநிபி: ஸித்தயோகைரகல்பஷை: ஸஞ்சிந்த்யமாநம் தத்ரஸ்தை: நாஸாக்ர ந்யஸ்தலோசநை: - யோகம் கைவரும் காரணத்தினால் தூய்மையான ஸநந்தனாதி மாமுனிவர்களால் மூக்கு நுனியில் நோக்கத்தை வைத்து அங்கிருந்து எப்போதும் சிந்திக்கப்படுமவனை – என்றது காண்க.

## 712. ஸுயாமுந:

மங்களகரமானதும், தூய்மையானதும், வசீகரிக்கக்கூடியதும் ஆகிய செய்கைகளை அவன் யமுனை நதியின் கரையில் செய்தான். இவையாவன – ஜலக்ரீடை, ராஸக்ரீடை போன்றவை ஆகும்.

## 713. பூதவாஸ:

க்ருஷ்ணனாக அவதரித்தபோதும், பரத்வ நிலையில் உள்ளது போன்று, அவன் உலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் இருப்பிடமாக இருந்தவன். வஸந்தி த்வயி பூதாநி பூதாவாஸஸ்ததோ ஹரே – ஸ்ரீஹரி! உன்னில் அனைத்தும் வசிக்கின்றன, நீயே அனைத்தின் இருப்பிடம் ஆவாய்.

## 714. வாஸுதேவ:

வஸுதேவருடைய புத்ரனாக உள்ளபோதிலும், வ்யூஹ வாஸுதேவனாகவே விளங்குபவன். மாதுராத அத்புதமாயாய – மதுராவில் ஜனித்து பல அற்புதங்களுடன் கூடியவன்.

## 715. ஸர்வாஸுநிலய:

அனைத்து உயிர்களுக்கும் உயிர்வாழ தாரகனாக உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- விநா க்ருஷ்ணேந கோவ்ரஜா: - க்ருஷ்ணன் இல்லாமல் கோகுலத்தில் உள்ள பசுக்கள் உயிர் தரிக்க இயலாதது போன்று
- மஹாபாரதம் – அஸூர்யமிவ ஸூர்யேண நிவாதமிவ வாயுநா க்ருஷ்ணேந ஸமுபேதேந ஜஹ்ருஷே பாரதம் புரம் – சூரியன் இல்லாத இடத்தில் சூரியன் வந்தது போன்றும், காற்று வீசாத இடத்தில் காற்று வீசியது போன்றும் ஹஸ்தினாபுரத்திற்கு க்ருஷ்ணன் வந்தபோது அங்கிருந்தவர்கள் உணர்ந்தனர்.

## 716. அனல:

ஸாதுக்களுக்கு தான் எத்தனை உபகாரங்கள் செய்தாலும், அதனால் மனநிறைவு கொள்ளாமல் உள்ளவன். கீழே உள்ள வரிகளைக் காண்க:

- ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி – திரௌபதி என்னை கோவிந்தா அழைத்த கூக்குரல் இன்னமும் எனது இதயத்தில் வட்டி கூடும் கடன் போன்றே உள்ளது.

- த்வௌ து மே வதகாலே அஸ்மிந்ந க்ஷந்தவ்யௌ கதஞ்சந யஜ்ஞவிந்தகரம் ஹந்யாம் பாண்டவாநாம் ச துர்ஹ்ருதம் – நான் யாரை வேண்டுமானாலும் பொறுத்துக் கொள்வேன். ஆனால் இருவரை மட்டும் பொறுக்க இயலாது: யஜ்ஞத்தைத் தடுப்பவர்கள், பாண்டவர்களுக்குத் தீமை எண்ணுபவர்கள்.

## 717. தர்ப்பஹா

கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தும், பாரிஜாத மலரைப் பறித்தும், பாணாசுரனுடைய தோள்களைத் துண்டித்தும் – இப்படியாக தேவர்களுடைய அஹங்காரம் மற்றும் திமிரை அடைக்கியவன்.

## 718. தர்பத:

சத்ருக்களை அழித்தும், யாராலும் வெல்ல இயலாத துவாரகையை உண்டாக்கியும், சங்கநிதி, பத்மநிதி, தேவலோகத்தில் உள்ள பாரிஜாதம், தேவர்களுடைய ஸபை ஆகியவற்றைப் பறித்துக் கொடுத்ததன் மூலம் மதுவைப் பருகும் போதையை யாதவர்களுக்கு உண்டாக்கியவன்.

## 719. அத்ருப்த:

இப்படியாகப் பலவும் செய்தபோதிலும், எந்தவிதமான அஹங்காரம் அற்று உள்ளவன். இதனை – ஏவம் விதாநி கர்மாணி க்ருத்வா கருடவாஹந: ந விஸ்மயமுபாகச்சத் பாரமேஷ்ட்யேந தேஜஸா – இப்படியாகப் பலவிதமான செயல்களைச் செய்தபோதிலும், கருடனை வாகனமாகக் கொண்ட அந்த ஸர்வேச்வரன் எந்தவிதமான கர்வமும் கொள்வதில்லை – என்றது காண்க. அல்லது இந்தத் திருநாமத்தை “த்ருப்த” என்று கொண்டால், யசோதையின் அன்பால் மனநிறைவு கொண்டவன் என்றாகும்.

## 720. துர்த்தர:

பாலலீலைகளைச் செய்யும்போது மதம் கொண்ட யானைக்குட்டி போன்று யசோதையாலும், நந்தகோபராலும் பொறுக்க இயலாத பல சேஷ்டைகளைச் செய்தவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- யதி சக்நோபி கச்ச த்வமதிசஞ்சலசேஷ்டித – சேஷ்டைகள் செய்பவனே! முடிந்தால் இங்கிருந்து ஓடு பார்க்கலாம்
- இமம் ஹி புண்டரீகாக்ஷம் ஜித்ருக்ஷந்தி அல்பமேதஸ: படேநாக்நிம் ப்ரஜ்வலதிம் யதா பாலோ யதா அபலா: - அவனுடைய நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த முயன்ற துரியோதனனின் செய்கைகள் அனைத்தும், சிறு குழந்தை ஒன்று பெரிய தீயை சிறிய துணி கொண்டு அணைக்க முயல்வது போன்று தோல்வியிலேயே முடிந்தது.
- துர்க்ரஹ: பாணிநா வாயு: துர்ஸபர்ச: பாணிநா சசீ துர்த்தரா ப்ருத்வீ ஸூர்த்தநா துர்க்ரஹ: கேசவோ பலாத் – காற்றை எப்படிக் கையில் பிடிக்க இயலாதோ, சந்த்ரனை எப்படிக் கையால் தொட முடியாதோ, தலையால் எப்படி உலகை உயர்த்த இயலாதோ, அது போன்று கேசவனை பலத்தால் கட்டுப்படுத்த இயலாது.

## 721. அபராஜித:

மஹாபாரத யுத்தத்தில் மற்ற எந்தவிதமான துணையும் இல்லாமல், தன்னை மட்டுமே உதவிக்குக் கொண்ட காரணத்தினால், சத்ருக்களால் வெல்ல இயலாமல் போன பாண்டவர்களை உடையவன். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- மஹாபாரதம் உத்யோகபர்வம் – ஏகம் ஹநிஷ்யஸி ரிபும் கர்ஜந்தம் தம் மஹாம்ருதே, ந து தம் ப்ரார்த்தயஸ்யேகம் ரக்ஷ்யதே ஸ மஹாத்மநா – இந்த்ரன் கர்ணனிடம், “நீ மிகவும் பலமாகக் கர்ஜிக்கும் வீரனைக் கூட மிகவும் எளிதாகக் வெல்லலாம். ஆனால் க்ருஷ்ணனால் காப்பாற்றப்படும் அர்ஜுனனை உன்னால் வெல்ல இயலாது”, என்றான்.
- மஹாபாரதம் வனபர்வம் - யமாஹுர்வேதவிதுஷோ வாராஹம் அஜிதம் ஹரிம், நாராயணம் அசிந்த்யம் ச தேந க்ருஷ்ணேந ரக்ஷ்யதே – ருத்ரன் ஜயத்ரதனிடம், “வேதங்களாலும், வேதங்களை அறிந்தவர்களாலும் ‘யாராலும் வெல்ல இயலாத ஹரி, வராஹ அவதாரம் எடுத்தவன், நாராயணன்’ என்று பலவாகப் போற்றப்படும்

க்ருஷ்ணன் அர்ஜுனனுக்குத் துணையாக உள்ளான். ஆகவே அவனை வெல்ல இயலாது.

- மஹாபாரதம் வனபர்வம் - அஜயாம்ச்சாபி அவத்யாம்ச்ச தாரயிஷ்யஸி தாந் யுதி, ருதே அர்ஜுனம் மஹாபாஹும் தேவைரபி துராஸதம்; யமாஹு: அமிதம் தேவம் சங்கசக்ரகதாதரம், ப்ரதாந: ஸோஸ்த்ராவிதுஷாம் தேந க்ருஷ்ணேந ரக்ஷ்யதே – போரில் யாருடைய தாக்குதல்களையும் சமாளிக்கலாம்; ஆனால் அர்ஜுனனுடைய தாக்குதல்களை மட்டும் சமாளிக்க இயலாது. காரணம், வர்ணிக்க இயலாத திருமேனியுடனும், சங்கு சக்ரம் கதை ஆகியவற்றைத் தரித்தவனும் ஆகிய க்ருஷ்ணனால் அர்ஜுனன் காக்கப்படுகிறான்.

- மஹாபாரதம் உத்யோகபர்வம் – யஸ்ய த்வம் புருஷவ்யாக்ர ஸாரத்யம் உபஜக்மிவாந் ச்ருதம் ஏவ ஜயஸ்தஸ்ய ந தஸ்யாஸ்தி பராஜய: - ஸர்வேச்வரா! நீ யாருக்கு சாரதியாய் உள்ளாயோ அவனை வெல்ல யாராலும் இயலாது. ஆகவே அவனுக்கு எப்போதும் தோல்வி கிடையாது.

- சவதோஹம் தநுஷைகேந நிஹந்தும் ஸர்வபாண்டவாந் யத்யேஷாம் ந பவேத் கோப்தா விஷ்ணு: காரணபூருஷ: - பீஷ்மரும், துரோணரும், “அனைத்து வஸ்துக்களுக்கும் காரணபுருஷனாகிய க்ருஷ்ணன் பாண்டவர்களின் பக்கம் இல்லை என்றால், அனைத்து பாண்டவர்களையும் ஒரே பாணத்தில் சாய்த்துவிடுவோம்”, என்றனர்.

- இராமாயணம் யுத்தகாண்டம் – த்ருவம் வை ப்ராஹ்மணே ஸத்யம் த்ரவா ஸாதுஷு ஸந்நதி: ஸ்ரீர்த்ருவா சாபி தக்ஷேஷு த்ருவோ நாராயணே ஜய: - அந்தணர்களிடம் ஸத்யமும், ஸாதுக்களிடம் மனிதாபிமானமும், திறமைசாலியிடம் செல்வமும், நாராயணனிடம் வெற்றியும் எப்போதும் உள்ளன.

- இராமாயணம் யுத்தகாண்டம் – அஜய்ய: சாச்வதோ த்ருவ: - அவனை வெல்ல இயலாது, அவன் எப்போதும் உள்ளவன், உறுதியாக உள்ளவன்.

- இராமாயணம் யுத்தகாண்டம் – அஜித: கட்கத்ருக் – அவனை வெல்ல யாராலும் இயலாது, உறுதியான வாளைக் கொண்டவன்.

- மஹாபாரதம் உத்யோகபர்வம் – யத: க்ருஷ்ணஸ்ததோ ஜய: - எங்கு க்ருஷ்ணன் உள்ளானோ அங்கு வெற்றி உள்ளது.

- ஸ்ரீமத் பகவத்கீதை (18-78) – யத்ர யோகேச்வர: க்ருஷ்ணன் – எங்கு க்ருஷ்ணன் உள்ளானோ...

- ஆயுர்வேத சரகஸம்ஹிதையில் – யதாஹம் நாபிஜாநாமி வாஸுதேவே பராஜயம் மாதுச்ச பாணிக்ரஹணம் ஸமுத்ரஸ்ய ச சோஷணம் ஏதேந ஸத்யவாக்யேந ஸிஞ்சயதாம் அகதோ ஹ்யம் – வாஸுதேவன் தோல்வியையே காணாதவன். எது போல என்றால் – எனது தாயின் திருமணத்தையும், கடல் வற்றுவதையும் எப்படிக் காண இயலாதோ, அது போன்று ஸத்யமான இந்த வார்த்தை மூலம் எனது நோய் தீரக்கடவது.

- வைதரண ஸம்ஹிதையில் விஷத்தைப் போக்கவல்ல மந்த்ரம் குறித்து உரைக்கும்போது – ரத்நாகரம் இவாக்ஷோப்யோ ஹிமவாநிவ சாசல: ஜாததேவ: இவாத்ருஷ்யோ நாராயண இவாஜய: - கலக்க இயலாத கடல் போன்றும், அசைக்க இயலாத இமயமலை போன்றும், அணுக இயலாத அக்னி போன்றும், வெல்ல இயலாத நாராயணன் போன்றும்.

## 722. விச்வமூர்த்தி:

அது எப்படி மிகுந்த பலம் கொண்டவர்களான கௌரவர் போன்றவர்கள், பலம் குறைந்தவர்களான பாண்டவர்கள் போன்றவர்களை வெல்ல இயலும் என்று கேட்கலாம். இதன் காரணம் – அனைத்து லோகங்களையும் தனது சரீரமாகவே ஸர்வேச்வரன் கொண்டுள்ளதால் ஆகும். கீதையில் (10-20) - அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசயஸ்தித: - அனைத்து உயிர்களின் ஆத்மாவாக நானே உள்ளேன் – என்றது காண்க.

## 723. மஹாமூர்த்தே:

விச்வரூபத்தைக் காண்பித்தபோது, அனைத்து உலகங்களையும் பரவி நிற்பது போன்று பெரியதாய் காணப்பட்ட திருமேனி உள்ளவன். கீதையில் (11-7) – இஹைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்நம் பச்யாத்ய ஸசராசரம் மம தேஹே குடாகேச யச்சாந்யத் த்ரஷ்டும் இச்சஸி – அர்ஜுனா! இப்போது எனது இந்த சரீரத்தில் ஒரே இடத்தில் அனைத்து சராசரங்களுடன் கூடிய உலகம் முழுவதையும் நீ காண்பாயாக – என்றது காண்க.

## 724. தீப்தமூர்த்தி:

இந்தப் ப்ரபஞ்சத்தில் ஏதேனும் ஒரு பொருள், ஒரு குணத்தால் ப்ரகாசித்தாலும் அது இவனுடைய விசேஷம் காரணமாகவே ஆகும். கீதையில் (10-41) – யத்யத் விபூதிமத்

ஸத்வம் ஸ்ரீமதுர்ஜிதமேவ வா – எந்த ஒன்று ஐச்வர்யத்தால் பிரகாசம் அடைந்தாலும், அது எந்து ஒரு சிறிய துளியால் மட்டுமே என்று அறிவாய் – என்றது காண்க.

## 725. அமூர்த்திமாந்

அவ்யக்தம், புருஷன் முதலான அனைத்தையும் தனது உடைமையாகவே உள்ளவன். கீழே உள்ள பல வரிகளைக் காண்க:

- கீதை (7-4) - பூமிராபோநலோ வாயு: - பூமி, நீர், அக்னி, வாயு ஆகியவை என்னுடையவையே
- கீதை (7-5) – அபரேயமிதஸ்து அந்யாம் ப்ரக்ருதிம் – இது எனது தாழ்ந்த ப்ரக்ருதி, இதனைக் காட்டிலும் வேறான உயர்ந்த ப்ரக்ருதியும் உண்டு
- ஸுபால உபநிஷத் – யஸ்ய அவ்யக்தம் சரீரம் – யாருக்கு அவ்யக்தம் சரீரமோ
- ஸதபத ப்ராஹ்மணம் – யஸ்யாத்மா சரீரம் – யாருக்கு இந்த ஆத்மா சரீரமோ

இங்கு முன்னும் பின்னும் ஸர்வேச்வரனுக்கு மூர்த்தியாக உள்ளதைக் குறித்துக் கூறுவதால், அமூர்த்தி என்பதை "மூர்த்தி அல்லாதவன்" என்று சிலர் வ்யாக்யானம் செய்வது சரியல்ல.

## 726. அநேகமூர்த்தி:

க்ருஷ்ணனாக அவதரித்தபோதிலும் வாஸுதேவன் முதலான நான்கு வ்யூஹ மூர்த்திகளை விடாமல் உள்ளதாலும், மேலும் இந்த அவதாரத்தில் பல மூர்த்திகளை எடுப்பதாலும் இவ்விதம் கூறப்படுகிறான். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-31-18) – ஷோடச ஸ்த்ரீ ஸஹஸ்த்ராணி சதமேகம் ததோதிகம் தாவந்தி சக்ரே ரூபாணி பகவாந் தேவகீஸுத: - 16108 தேவிமார்களுடன் எப்போதும் தான் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தால், தேவகியின் புத்ரனாகிய க்ருஷ்ணன் 16108 ரூபங்களைக் கொண்டான் – என்றது காண்க.

## 727. அவ்யக்த:

தனது மேன்மை போன்றவற்றை மனிதனாக உள்ள சரீரம் கொண்டு மறைப்பவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- கீதை (7-25) – நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய – நான் அனைவருக்கும் ஸர்வேச்வரனாகப் புலப்படுவதில்லை.

- கீதை (11-53) – நாஹம் வேதைர்நா தபஸா – எனது இந்த விச்வரூபத்தை வேதங்களை அறிவதாலோ, தவங்கள் செய்வதாலோ காண இயலாது.

## 728. சதமூர்த்தி:

தன்னைக் காண ஆசை கொண்ட அர்ஜுனனுக்குத் தனது விச்வரூபத்தைத் தெளிவாகக் காண்பித்தவன். கீதை (11-5) – பச்ய மே பார்த்த ரூபாணி சதசோத ஸஹஸ்ரச: - எனது நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான ரூபங்களை நீ காண்பாயாக – என்றது காண்க.

## 729. சதாநந:

பல முகங்கள் கொண்ட ரூபம் தரித்தவன். கீதை (11-10) – அநேகவக்த்ரநயநம் – பல முகங்களுடன் உள்ளதை – என்றது காண்க.

## 730. ஏக:

கீழே கூறப்பட்ட மஹிமைகளுடன் கூடியவனாக, தன்னைப் போன்று வேறு ஒருவன் இல்லாத காரணத்தினால் இரண்டு போன்ற எண்ணிக்கையில் சிக்காமல், ஒருவனாக உள்ளவன். இரண்டு அந்தணர், மூன்று க்ஷத்ரியர் என்று கூறும்போது அந்தணர் முதலான குல தர்மங்களை ஒத்துள்ளவர்கள் பலர் உள்ளதால் அது போன்று கூறப்படுகிறது; ஆனால் ஸர்வேச்வரன் விஷயத்தில் அது போன்று மற்றொரு வஸ்து இல்லாத காரணத்தினால் அவ்விதம் கூற இயலாது அல்லவோ?

## 731. நைக:

தனக்கு விபூதியாக்க் உள்ள பல பதார்த்தங்களைக் கொண்டுள்ளதால், அதனால் பலவாகவும், அவற்றின் அந்தர்யாமியாகவும் உள்ளவன். கீதையில் (10-40) –

நாந்தோஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப – எனது திவ்யமான விபூதிகளுக்கு எல்லை இல்லை – என்றது காண்க.

## 732. ஸ:

இப்படியாக உள்ள ஸித்தாந்தத்தை எங்கும் பரவச்செய்து, தன்னைக் குறித்து நிச்சயம் செய்யும்படிச் செய்தவன்.

## 733. வ:

அனைத்து பூதங்களிலும் வசிப்பவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (6-5-6) – வஸந்தி தத்ர பூதாநி பூதாத்மந்யகிலாத்மநி ஸ ச பூதேஷ்வசேஷேஷு வகாரார்த்தஸ்ததோ முநே – அனைத்தும் அவனில் உள்ளன. அவன் அனைத்திற்கும் அந்தராத்மாவாக உள்ளான். ஆகவே அவன் வகாரத்தால் கூறப்படுகிறான் – என்றது காண்க.

## 734. க:

தாழ்ந்த வஸ்துக்களில் இருந்தாலும் மிகவும் பிரகாசமாகவே உள்ளவன்.

## 735. கிம்

தத்வத்தை அறிய விரும்பியவர்களால் கேட்கப்படுபவன். சாந்தோக்ய உபநிஷத் – ஸோந்வேஷ்டவ்ய: ஸ விஜிஞ்ஜாஸிதவ்ய: - அவனே அனைவராலும் தேடப்படுபவன்; அவனைக் குறித்து அறியவேண்டும் என்னும் ஆசை இருக்கவேண்டும் – என்றது காண்க.

## 736. யத்

தன்னுடைய அடியார்களை ரக்ஷிப்பதில் எப்போதும் முயன்றபடி இருப்பவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- க்ருஷ்ண க்ருஷ்ணேதி க்ருஷ்ணேதி யோ மாம் ஸ்மரதி நித்யச: ஜலம் பித்வா யதா பத்மம் நரகாதுத்தராம்யஹம் – யார் ஒருவன் என்னை "க்ருஷ்ணா, க்ருஷ்ணா, க்ருஷ்ணா" என்று எப்போதும் கூறியபடி உள்ளானோ அவனை நான்

தாமரைமலரானது எவ்விதம் நீரிலிருந்து வெளியே வருகிறதோ அது போன்று நரகத்திலிருந்தும் மேலே எடுப்பேன்.

- வராஹ சரமச்லோகம் – அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் – நான் என்னுடைய அடியார்களை எப்போதும் நினைவில் கொள்வேன், அவர்களை எனது உயர்ந்த கதிக்கு இட்டுச்செல்வேன்.

## 737. தத்

தன்னைக் குறித்தே சிந்தித்தபடி உள்ளவர்களுக்கு ஞானம் மற்றும் பக்தி முதலாயவற்றை உண்டாக்குபவன். கீழே உள்ள வரிகளைக் காண்க:

- காயத்ரி மந்த்ரம் – தத்ஸவிதுர்வரேண்யம் – அனைத்திற்கும் காரணமான அவனுடைய ப்ரகாசம்

- ஓம் தத் ஸத் இதி நிர்தேச: - ஓம், தத், ஸத் ஆகிய மூன்றும் ப்ரஹ்மத்தைக் குறிக்கும்

## 738. பதம் அநுத்தமம்

அவர்களுக்கும் மிகவும் உயர்ந்த அடையும் இலக்காக உள்ளவன்.

## 739. லோகபந்து:

இந்த உலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் பந்துவாக உள்ளவன். எந்தவிதமான ஏற்றத்தாழ்வும் ஆராயாமல், அனைத்து உயிர்களையும் அனுக்ரஹம் செய்வதற்கான காரணம் கூறப்பட்டது. கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸுபால உபநிஷத் – மாதா பிதா ப்ராதா நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் கதிர்நாராயண: - தாய், தந்தை, சகோதரன், வீடு, புகலுடம், நண்பன், இலக்கு ஆகிய அனைத்தும் ஸ்ரீமந்நாராயணனே ஆவான்.

- ஸ்ரீமத் பகவத்கீதை (9-17) – பிதா அஹமஸ்ய ஜகத: - இந்த உலகின் தந்தையாக நானே உள்ளேன்.

## 740. லோகநாத:

லோகத்திற்குப் பந்துவாக இருப்பதற்கான காரணம், அவன் அனைத்து லோகங்களுக்கும் நாதனாக உள்ளதால் ஆகும்.

## 741. மாதவ:

லோகத்துக்கு பந்துவாகும்போது மாதாபிதாவாக லக்ஷ்மீஸஹிதனாய் இருப்பதைக் கூறுகிறது. மது என்னும் பெயர் கொண்ட யாதவகுலத்தில் வந்தவன் என்றும் கொள்ளலாம். மஹாபாரதம் உத்யோகபர்வம் (71-4) – மௌநாத் த்யாநாச்ச யோகாச்ச வித்தி பாரத மாதவம் – மௌநம், த்யானம், யோகம் என்பதைக் கொண்டதால் மாதவன் எனப்படுகிறான் – என்றது காண்க.

## 742. பக்தவத்ஸல:

கிழே கூறப்பட்ட ஸ்வாமித்வத்தை ஏற்று, அதில் ஈடுபாட்டுடன் உள்ள பக்தர்களிடம் அவன் உள்ள நிலையைக் கூறுகிறது. தன்னிடம் ஈடுபாட்டுடன் உள்ள பக்தர்கள் கிட்டினால், தனக்கு வேறு ஏதும் உள்ளதாக எண்ணாமல், அனைத்தையும் மறந்து இருப்பவன்.

## 743. ஸுவர்ணவர்ண:

கீழே உரைக்கப்பட்ட குணத்திற்கு ஏற்றபடி, பசும்பொன் போன்று தகதகவென்ற திருமேனி உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- முண்டக உபநிஷத் (3-3) – யதா பச்ய: பச்யதே ருக்மவர்ணம் – அவனைக் காணும் முனிவர்கள் அவனைப் பொன்னிறமாகவே காண்பர்.

- மநுஸ்ம்ருதி (12-122) – ருக்மாபம் ஸ்வப்நதீகப்யம் – தங்கமயமான அவனுடைய சரீரத்தைக் கனவில் உள்ளது போன்ற அமைதியான மனம் மூலமே காணலாம்.

- புருஷஸூக்தம் (20) – ஆதித்யவர்ணம் – சூரியன் போன்ற பொன்னிறம் கொண்டவன்
- சாந்தோக்ய உபநிஷத் (1-6-6) – ஹிரண்மய: புருஷ: .... ஸர்வ ஏவ ஸுவர்ண: - அவன் பொன்னிறமான புருஷன்.

## 744. ஹேமாங்க:

கீழே உரைக்கப்பட்ட நிறத்துக்கு ஆதாரமாக எப்போதும் சுத்தஸத்வமாக விளங்கும் திருமேனி கொண்டவன். ஹிரண்யமய: புருஷ: த்ருச்யதே – பொன்நிறமான புருஷனைக் காணலாம் – என்றது காண்க.

## 745. வராங்க:

இவ்விதம் உபநிஷத்துக்களில் கூறப்பட்டதும், தேவகிப்பிராட்டிக்கு மிகவும் மகிழ்ச்சியை உண்டாக்குவதும் ஆகிய திவ்ய அடையாளங்களை மறைத்துக் கொண்டுள்ள திவ்யமங்கள விக்ரஹத்தைக் கொண்டவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-3-8) – புல்லேந்தீவரபத்ராபம் சதுர்பாஹும் நிரீக்ஷ்ய தம் ஸ்ரீவத்ஸவக்ஷஸம் ஜாதம் துஷ்டாவ ஆநகதுந்துபி: - ஆநகதுந்துபி எனப்படும் வஸுதேவர் அப்போது பிறந்த க்ருஷ்ணனைக் கண்டார்; நீல அல்லி மலரின் இதழ்கள் போன்ற நிறமும், நான்கு திருத்தோள்களும், ஸ்ரீவத்ஸம் கொண்ட திருமார்பும் கண்டு மகிழ்ந்தார் – என்றது காண்க.

## 746. சந்தநாங்கதீ

தோள்வளைகள் மற்றும் பல திவ்யமான ஆபரணங்கள் கொண்டவன். க்ருஷ்ணனாக அவதரித்தபோது, அவனுடைய திருமேனியில் எந்தவிதமான ஆபரணங்களும் இல்லாதபோதிலும், அவனுடைய திருமேனியே ஆபரணம் போன்று காணப்பட்டவன்.

## 747. வீரஹா

ஏதும் அறியாத குழந்தையாக இருந்தபோதிலும் பூதனை, சகடன், யமளார்ஜுனர்களை அடியுடன் அழித்தவன்.

## 748. விஷம:

இப்படியாக நல்லவர்களுக்கு க்ஷேமத்தையும், தீயவர்களுக்குப் பயத்தையும் அளித்தபடி உள்ளவன்.

## 749. சூந்ய:

மனிதனாக அவதாரங்கள் செய்தபோதிலும் எந்தவொரு தோஷமும் அடையாமல் உள்ளவன்.

## 750. க்ருதாசீ:

தன்னுடைய திருக்கல்யாண குணங்களால் இந்த ஜகத்தை வாழ வைப்பதில் திருவுள்ளம் கொண்டவன். அல்லது ஆயர்பாடியில் உள்ள பால், தயிர் முதலியவற்றில் மிகுந்த ஆசை உள்ளவன்.

## 751. அசல:

துரியோதனன் முதலான தீயவர்களால் அசைக்க இயலாதவன்.

## 752. சல:

தன்னைச் சரணம் அடைந்த பாண்டவர்கள் போன்றவர்களுக்காகத் தன்னுடைய ஸத்ய ஸங்கல்பத்தையும் கைவிடக்கூடியவன். மஹாபாரத யுத்தத்தில் ஆயுதம் எடுப்பதில்லை என்று ஸத்யம் செய்தபோதிலும், இவன் பாண்டவர்களைக் காப்பாற்றும் பொருட்டு, பீஷ்மர் முன்பாக சக்கரத்தை எடுத்தான் அல்லவோ? கீழே உள்ள வரிகளைக் காண்க:

- மஹாபாரதம் பீஷ்மபர்வம் – தமாத்தசக்ரம் ப்ரணதந்தமுச்சை: ருத்தம் மஹேந்த்ராவரஜம் ஸமீக்ஷ்ய ஸர்வாணி பூதாநி பும்சம் விநேது: க்ஷயம் குரூணாமிதி சிந்தயித்வா – மஹேந்த்ரனின் தம்பியான வாமனனாக அவதரித்த க்ருஷ்ணன், குக்ஷேத்ர யுத்தத்தில் கையில் சக்கரத்துடன் பீஷ்மரை நோக்கி ஓடினான். இதனைக் கண்ட அனைவரும் கௌரவர்களின் முடிவு ஏற்பட்டது என்றனர்.

- ஸ வாஸுதேவ: ப்ரக்ருஹீத சக்ர: ஸம்வர்த்தயிஷ்யந்நிவ ஜீவலோகம் அப்யுத்பதந் லோககுருபபாஸே பூதாநி தக்ஷ்யந்நிவ தூமகேது: - அனைத்து லோகங்களின்

ஸர்வேச்வரனாகிய வாஸுதேவன் தன்னுடைய தேரில் இருந்து திருக்கரத்தில் சக்கரத்துடன் குதித்தான். அவன் பாண்டவர்கலின் விரோதிகளான கௌரவ சேனையை முற்றிலுமாக அழித்துவிடுவது போன்று ஓடினான். அப்போது இந்த ப்ரபஞ்சத்தை அழித்துவிடக்கூடிய வால்நக்ஷத்ரம் போன்று அவன் விளங்கினான்.

## 753. அமாநீ

தன்னுடைய அடியார்களின் விஷயத்தில் சிறிதும் அஹங்காரம் இல்லாமல் உள்ளவன். இதனால்தான் அவன் சிறிதும் நாணம் இல்லாமல் தூது சென்றான் அல்லவோ?

## 754. மாநத:

அர்ஜுனனுக்குச் சாரதி என்னும் பெருமையையும், உக்ரஸேநர் மற்றும் யுதிஷ்டிரர் ஆகியோருக்கு இராஜ்யத்தை மீட்டுக் கொடுத்தவன் என்னும் பெருமையையும் அவர்களுக்கு அளித்தவன்.

## 755. மாந்ய:

இது போன்ற பக்தர்களுக்கு அடங்கி இருப்பதையே தனக்குப் பெருமை என்று எண்ணுபவன். ந ஸாரதே: ஸாத்வதகௌரவாணாம் க்ருத்தஸ்ய முச்யதே ரணேத்ய கச்சித் – மஹாபாரத யுத்தத்தில் அர்ஜுனனின் சாரதியாக உள்ள க்ருஷ்ணனை சீற்றம் கொள்ள வைத்தால் ஸாத்வதர்களும் கௌரவர்களும் தப்ப இயலாது.

## 756. லோகஸ்வாமீ

இப்படியாக உள்ள பல கார்யங்களைச் செய்தவன் யார் என்றால், லோகஸ்வாமியான இவனே ஆவான்.

## 757. த்ரிலோகத்ருக்

இப்படியாக மிகவும் உயர்ந்தவனாக விளங்குபவன், அதிநீசர்களுடனும் உள்ளது எப்படி என்றால் – மூன்று உலகத்தையும் தரிப்பதும் போஷிப்பதும் இவனே என்பதால் ஆகும்.

## 758. ஸுமேதா:

தன்னை எப்போதும் ஆராதிப்பவர்களிடம் பரிவாக இருக்கும் திருவுள்ளம் கொண்டவன்.

## 759. மேதஜ:

இதனால்தான், தேவகியானவள் தனக்குப் புத்ரன் வேண்டும் என்று நேர்த்த விரதமாகிய யஜ்ஞத்தில் அவதரித்தவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்துதோஹம் யத் த்வயா பூர்வம் புத்ரார்த்திந்யா ததத்ய தே ஸபலம் தேவி ஸஞ்ஜாதம் ஜாதோஹம் யத் தவோதராத் – தாயே! நீ உனது புத்ரனாக நான் ஜனிக்க வேண்டும் என்ற காரணத்தால் என்னைப் புகழ்ந்தாய். உன்னுடைய ப்ரார்த்தனைகள் பலித்ததன் விளைவாக உன்னுடைய கர்ப்பத்தில் நான் வந்தேன்.

- ஸம்யகாராதிதேநோக்தம் யத் ப்ரஸந்நேந தே சுபே தத் க்ருதம் ஸபலம் தேவி – தாயே! நீ உன்னுடைய பூர்வத்தில், என்னைச் சரியான முறையில் ஆராதித்து வந்தாய். அதனால் மகிழ்ந்த நான் உன்னுடைய புத்ரனாகப் பிறப்பேன் என்று வாக்களித்தேன். அந்த வாக்கு இப்போது என்னால் நிறைவேற்றப்பட்டது.

## 760. தந்ய:

தேவகிக்குப் பிறந்தவன் என்னும் செல்வத்தை உடையவன்.

## 761. ஸத்யமேதா:

இடையர்களிடமும் வஸுதேவர் முதலானவர்களிடமும் ஒரு நாடகம் போன்று அல்லாமல், தன்னை ஸத்யமாகவே அவர்களில் ஒருவராக எண்ணியிருந்தான். இவன் அவர்களிடம் கீழே உள்ளது போன்று உரைத்தான்:

- ஶ்ரீவிஷ்ணுபுராணம் (5-13-14) – அஹம் வோ பாந்தவோ ஜாத: - நான் உன்னுடைய (தேவகி) கர்ப்பத்தில் ஜனித்தேன்

- ஶ்ரீவிஷ்ணுபுராணம் (5-13-1) – யதி வோஸ்தி மயி ப்ரீதி: ச்லாக்யோஹம் பவதாம் யதி ததாத்மபுத்திஸத்ருசீ புத்திர்வ: க்ரியதாம் மயி – க்ருஷ்ணன் ஆயர்களிடம், “நீங்கள் அனைவரும் என்னை நேசிக்கிறீர்கள் என்றால், என்னைப் போற்றத்தக்கவன் என்று எண்ணியுள்ளீர்கள் என்றால், என்னை உங்களில் ஒருவனாகவே உங்களைப் போன்றே எண்ணவேண்டும்”, என்றான்.

- ஶ்ரீவிஷ்ணுபுராணம் (5-13-11) – நாஹம் தேவோ ந கந்தர்வோ ந யக்ஷோ ந ச மாநவ: அஹம் வோ பாந்தவோ ஜாத: ந வச்சிந்த்யம் அதோந்யதா – க்ருஷ்ணன் ஆயர்களிடம், “நான் தேவனோ, கந்தர்வனோ, யக்ஷனோ, அசுரனோ அல்லன். நான் உங்களில் ஒருவன், உங்களுடைய பந்து ஆவேன். என்னை வேறுபடுத்தி எண்ணவேண்டாம். உங்களில் ஒருவனாகவே எண்ணுங்கள்”, என்றான்.

## 762. தராதர:

கோவர்த்தனம் என்னும் மலையைத் தரித்தவன். ஶ்ரீவிஷ்ணுபுராணம் (5-13-13) – ததேததகிலம் கோஷ்டம் த்ராதவ்யமதுநா மயா இமமத்ரிமஹம் தைர்யாத் உத்பாத்யாசு சிலாதநம் தாரயிஷ்யாமி கோஷ்டஸ்ய ப்ருதுச்சத்ரமிவாபரம் – இப்போது இந்த ஆயர்பாடி என்னால் காப்பாற்றத் தக்கதாக உள்ளது. ஆகவே இப்போது நான் தைரியமாக இதனைக் காப்பாற்ற பெரிய குடையைப் பிடித்தது போன்று இந்த மலையை எடுத்துத் தாங்குகிறேன் – என்றது காண்க.

## 763. தேஜோவ்ருஷ:

தன்னுடைய அடியார்களைக் காப்பாற்றுதல் என்பதான மிகப் பெரிய தேஜஸ்ஸைப் பொழிபவன்.

## 764. த்யுதிதர:

இந்தக் காரணத்தினால்தான், சிறிய வயதாக உள்ளபோதிலும் இந்த்ரனையும் வெல்லவல்லதான, மனிதர்களுக்கு இல்லாத காந்தியை உள்ளவன்.

## 765. ஸர்வசாஸ்த்ரப்ருதாம்வர:

நரகாசுரன், ஜராஸந்தன் போன்றவர்களுடன் செய்த யுத்தத்தில் ஆயுதம் தரித்த அனைவரைக் காட்டிலும் மேலாக விளங்கியவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-33-14) – மநுஷ்யதர்மலீலஸ்ய லீலா ஸா ஜகத்பதே: அஸ்த்ராண்யநேகரூணாபி யத் அராதிஷு முஞ்சதி – சத்ருக்களிடம் பலவிதமான அஸ்த்ரங்களைப் பிரயோகித்தல் என்பது, மனிதர்களைப் போன்று விளையாடும் ஜகந்நாதனின் ஒருவிதமான விளையாட்டே ஆகும் – என்றது காண்க.

## 766. ப்ரக்ரஹ:

அர்ஜுனனுக்குக் கடிவாளம் இட்டு, அவனை ஓட்டிச் செல்பவன்.

## 767. நிக்ரஹ:

அர்ஜுனனுடைய புருஷத்தன்மையை எதிர்பாராமலேயே, தன்னுடைய தேரோட்டும் திறமையாலே சத்ருக்களை அழிக்கவல்லவன்.

## 768. வ்யக்ர:

அர்ஜுனனின் விரோதிகளை அழிக்கும் விஷயத்தில் யுத்தம் என்னும் செயலைச் செய்யாதவரை பொறுத்துக் கொள்ள இயலாதவன். மஹாபாரதம் – யே யாந்தி யாந்த்யேவ சிநிப்ரவீரி யே அவஸ்திதா ஸத்வரம் தே அபி யாந்து பீஷ்மம் ரதாந் பச்யத் பாத்யமாநம் த்ரோணம் ச ஸங்க்யே ஸகணம் மயா அத – யார் யார் போகிறார்களோ அவர்களும், இங்கேயே நிற்பவர்களும் என்று யாராக இருப்பினும், நான் ஒருவனாகவே இருந்து இப்போதே இந்த பீஷ்மரையும், துரோணரையும் வீழ்த்துகிறேன் – என்றது காண்க.

## 769. நைகச்ருங்க:

புத்தி ஸாமர்த்யம், தேர் ஓட்டுதல், ஆயுதம் எடுப்பதில்லை என்னும் சபதம், சரியான நேரத்தில் ஆயுதம் எடுத்தல் போன்றதான பலவிதங்களிலும் விரோதிகளைப் பாதிக்கும்படியான செயல்களைச் செய்பவன்.

## 770. கதாக்ரஜ:

வஸுதேவரின் மற்றொரு மனைவியாகிய ஸுநாமையின் புத்ரனாகிய கதன் என்பவனுக்கு முன்னர் பிறந்தவன்.

## 771. சதுர்மூர்த்தி:

இந்த விபவ அவதாரத்திலும், இதற்குக் காரணமாக உள்ள வ்யூஹ நிலைகளைக் கூறுகிறார். பலபத்ரன், வாஸுதேவன், ப்ரத்யும்நன், அநிருத்தன் ஆகிய நான்கு மூர்த்திகளுடன் சேர்ந்து யதுகுலத்தில் அவதரித்தவன்.

## 772. சதுர்பாஹு:

வ்யூஹத்துக்கும் மூலமாக உள்ள பரஸ்வரூபத்துடன் தேவகியின் கர்ப்பத்தில் அவதரித்ததால் நான்கு திருத்தோள்களுடன் கூடியவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-3-13) – உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதத் சதுர்புஜம் ஜாநாது மா அவதாரம் தே கம்ஸ: அயம் திதிஜந்மஜ: - உன்னுடைய அதிகப்படியான இரண்டு கரங்களை மறைத்துக் கொள்வாயாக. உன்னுடைய இந்த ரூபத்தைக் கம்ஸன் முதலான அசுரப் பிறவிகளுக்குக் காண்பித்து, நீ விஷ்ணுவின் அவதாரம் என்று உணர்த்தவேண்டாம் – என்றது காண்க.

## 773. சதுர்வ்யூஹ:

இந்த க்ருஷ்ணாவதாரத்திலும் தன்னுடைய ஆறு குணங்களைச் சேர்த்தும் பிரித்தும் வெளிப்படுத்துவதால் நான்கு வ்யூஹத்தோடு கூடியவன்.

## 774. சதுர்கதி:

தன்னை உபாஸிப்பவர்களின் தகுதியைப் பொறுத்து நான்குவிதமான கதியை அளிப்பவன்.

## 775. சதுராத்மா

அதிகாரியின் தகுதிக்கு ஏற்றபடி அறியப்பட்ட ஸ்தூல ஸூக்ஷ்மங்களில், ஜாக்ரத் உள்ளிட்ட நான்கு நிலைகளிலும் (ஜாக்ரத் – விழிப்பு, ஸ்வப்நம் – கனவுடன் கூடிய உறக்கம், ஸுஷுப்தி – கனவு இல்லாத ஆழ்ந்த உறக்கம், மூர்ச்சை – மயக்கம் அல்லது தூரியம்) தன்னுடைய நான்கு ஸ்வரூபங்களையும் ப்ரகாசிப்பவன்.

## 776. சதுர்பாவ:

இவ்விதமான உள்ள பதினாறு விதங்களிலும் நான்கு வ்யூஹமாக நின்று (விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ்ந்த உறக்க நிலை, மூர்ச்சை என்பது நான்கு வ்யூஹங்களில் = 16) ஜகத் வ்யாபாரங்களைச் செய்தல், சாஸ்த்ரங்களைப் பரப்புதல் முதலான ஸ்தூல ஸூக்ஷ்ம வ்யூஹ பிரயோஜனங்களைச் செய்தபடி இருப்பவன்.

## 777. சதுர்வேதவித்

வ்யூஹத்திலும், வுபவத்திலும் வெளிப்பட்ட இந்த உயர்ந்த வைபவங்கள் மஹாவிபூதி என்னும் பெரிய ஸமுத்திரம் போன்றதாகும் என்பதை அனைத்து தத்துவங்களையும் நன்றாக அறிந்த நான்குவேதங்கள் ஓதக்கூடியவர்களால் உணரும்படி உள்ளவன்.

## 778. ஏகபாத்

மேலே கூறப்பட்ட காரணத்தால் இவ்விதமாக அவர்களும் உரைத்தனர்:

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் - அம்சாவதாரோ ப்ரஹ்மர்ஷே! யோயம் யதுகுலோத்பவ: - ப்ரஹ்மரிஷியே! யதுகுலத்தில் அவதரித்த இந்த க்ருஷ்ணனின் அவதாரம் என்பது அவனுடையதில் ஒரு சிறிய பகுதியே ஆகும்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் - அம்சாசேந அவதீர்ய உர்வ்யாம் – இந்த உலகில் அவன் தனது ஒரு சிறிய துளியுடன் மட்டுமே வருகிறான்

- இராமாயணம் யுத்தகாண்டம் - விஷ்ணோர்பாகம் அமீமாம்ஸ்யம் – விஷ்ணுவின் மேன்மையை அறிய இயலாது.

- இராமாயணம் பாலகாண்டம் – ஸாக்ஷாத் விஷ்ணோ: சதுர்பாக: - இராமன் விஷ்ணுவின் நான்கில் ஒரு பாகம் மட்டுமே ஆவான்

## 779. ஸமாவர்த்த:

இப்படிப்பட்ட வ்யூஹம் மற்றும் விபவ ரூபங்கள் அனைத்தும் இவனிடம் எப்போதும், எங்கும் வெளிப்பட்டபடியே உள்ளவன்.

## 780. நிவ்ருதாத்மா

இந்த உலகின் மீது உள்ள கருணைக்கு வசப்பட்டு மட்டுமே ஜகத்வ்யாபாரங்களைச் செய்கிறான். தான் அனைத்துவிதமான விருப்பங்களும் நிறைவேறப்பட்டவன் என்பதால், இவற்றில் சிறிதும் பற்றுதல் இல்லாமல் இருப்பவன். சாந்தோக்ய உபநிஷத் (3-14) – அவகீ அநாதர: - மௌனமாய் யாருடனும் பேசாமல் உள்ளான்.

## 781. துர்ஜய:

தேவர்கள் மற்றும் மனிதர்கள் ஆகியோரின் சக்தி கொண்டு வெல்ல இயலாதவன். சாந்தோக்ய உபநிஷத் (3-15) – யந்ந தர்சிதவாந் ஏஷ கஸ்ததந்வேஷ்துமர்ஹதி – இவன் தானே தன்னை வெளிக்காட்டாமல் இருந்தால், யாரால் காண இயலும்?

## 782. துரதிக்ரம:

இவ்விதம் உள்ளதால், இனி தன்னுடைய திருவடிகளைத் தவிர இங்கு உள்ள உயிர்கள் வேறு கதியை நாடிச் செல்ல இயலாதபடி உள்ளவன். கீழே உள்ள வரிகளைக் காண்க:

- ச்வேதாஸ்வதர உபநிஷத் (6-20) – யதா சர்மவதாகாசம் வேஷ்ட யிஷ்யந்தி மாநவா: - ததா தேவமவிஜ்ஞாய துக்கஸ்யாந்தம் நிகச்சதி – ஒருவன் ஆகாயம் முழுவதையும் ஒரு பையில் அடைக்க இயலும் என்றால் மட்டுமே, அவன் ஸர்வேச்வரனை நாடாமலேயே தனது துக்கங்களைப் போக்க இயலும்.

- வாஸுதேவமநாராத்ய கோ மோக்ஷம் ஸமாவாப்நுயாத் – வாஸுதேவனை அறியாமல் உள்ள யாருக்கு மோக்ஷம் கிட்டும்?

- ந ஹி விஷ்ணும்ருதே காசித் கதிரந்யா விதீயதே இத்யேவம் ஸததம் வேதா காயந்தே நாத்ர ஸம்ஸய: - அனைத்து வேதங்களும் ஒருமித்தபடி "விஷ்ணு அல்லாமல் வேறு புகலிடம் இல்லை, இதில் எந்தவிதமான ஐயமும் இல்லை" என்று முழங்குகின்றன.

## 783. துர்லப:

மனதையும், இந்த்ரியங்களையும் வசப்படுத்தி ஆராதிக்காமல் உள்ளவர்களுக்கு அல்லாமல் மற்றவர்களுக்கு ஜநார்த்தனன் அடைய இயலாதவன் ஆவான். மஹாபாரதம் உத்யோகபர்வம் (78-21) – அப்ராப்ய: கேசவோ ராஜந் இந்த்ரியைரஜிதை: ந்ருணாம் – இந்த்ரியங்களை வெல்லாதவர்களால் கேசவனை அடைய இயலாது – என்றது காண்க.

## 784. துர்கம:

கண்ணில் நோய் உள்ளவர்கள் உச்சிப்பொழுதில் உள்ள சூரியனைக் காண இயலாதது போன்று, ஒப்பில்லாத தேஜஸ்ஸுடன் உள்ளதால் தன்னுடைய பக்தர்கள் அல்லாதவர்களால் உணர இயலாதபடி உள்ளவன்.

## 785. துர்க்க:

அவித்யை முதலான அகழிகளும் மதிள்களும் உள்ளதால், ப்ரவேசித்துக் கிட்டுவதற்கு அரிதாக உள்ளவன்.

## 786. துராவாஸ:

இப்படியாகத் தனது திருவடியின் அடியில் வசிப்பதற்கு மிகவும் அரிதானவன்.

## 787. துராரிஹா

இப்படியாக அடைவதற்கு மிகவும் அரிதாக உள்ளதன் காரணமாக, இவனை அடையவேண்டும் என்னும் சிந்தனை இல்லாத பாவிகளுக்காக உண்டான புத்த அவதாரத்தைக் கூறுகிறார். அதாவது அவர்களைத் தகாத மார்க்கங்களில் ஈடுபடுத்தி, தனக்குப் பகைவர்களாக இருக்கும் அவர்கள் வேதமார்க்கத்தைக் கைவிடும்படிச் செய்து, பலவிதமான உபாயங்கள் மூலம் அழிப்பவன். விஷ்ணுபுராணம் (3-18-34) – மாயாமோஹேந தே தைத்யா: ப்ரகாரை: பஹுபிஸ்ததா வ்யுத்தாபிதா யதா நைஷாம் த்ரயீம் கச்சித் அரோசயத் ஹதாச்ச தே அஸுரா தேவை: ஸந்மார்க்க பரிபந்திந: - அந்த அஸுரர்களை மாயை மூலமாக பலவிதங்களிலும் மயக்க, அதன் காரணமாக அவர்களில் ஒருவன் கூட வேதமார்க்கத்தை விரும்பாதவனாக, வேதங்களுக்கு விரோதி ஆனார்கள்; அதன் பின்னர் ஸாது மார்க்கத்தை அழிக்கத் தோன்றிய அவர்கள், தேவர்களால் வெல்லப்பட்டனர் – என்றது காண்க.

## 788. சுபாங்க:

புத்தனாக வந்த இவன் அஸுரகுணம் உள்ளவர்களை மயக்கி அழிப்பது எப்படி? இவன் மிகவும் நம்புவதற்குத் தகுந்தவன் என்று மயங்கிப் போகும்படியாக, மிகவும் மனோஹரமான திருமேனி உள்ளவன்.

## 789. லோகஸாரங்க:

எவ்விதம் மயக்குகிறான்? லோகத்தில் உள்ள ஸாரமான விஷயங்களான போகம் மற்றும் மோக்ஷம் குறித்து உரைத்து மயக்குகிறான். அவர்களுக்கு ஸ்ரீவிஷ்ணுபுராணம் – குருத்வம் மம வாக்யாநி யதி முக்திமபீத்ஸத – மோக்ஷம் அடையவேண்டும் என்றால், எனது சொற்படி கேட்டு நடக்கவேண்டும் – என்று உபதேசித்து மயக்கினான்.

## 790. ஸுதந்து:

மிகவும் சாந்தமாக உள்ளது போன்று தோன்றி, தான் ஏற்படுத்தும் நூல்வலையை விட்டு அவர்கள் அகல இயலாதபடி உள்ளவன்.

## 791. தந்துவர்த்தந:

இவ்விதம் அவர்களுக்குப் பாவம் செய்வதில் ருசியை உண்டாக்கி, அதன் மூலம் ஸம்ஸாரம் என்னும் கயிறு கொண்டு அதனை மேலும் வளர்ப்பவன். கீழே உள்ள வரிகளைக் காண்க:

- ஸ்ரீமத் பகவத்கீதை (16-19) – தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் – இந்த உலகில் உள்ள க்ரூரமானவர்களையும், என்னை வெறுப்பவர்களையும் நான் ஸம்ஸாரம் என்பதில் அஸுரயோனிகளில் தள்ளுகிறேன்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (3-18-32) – த்ரயீமார்க்க ஸமுத்ஸர்க்கம் மாயாமோஹேந தே அஸுரா: காரிதாஸ்தந்மயா ஹ்யாஸாந் ததா அந்யே தத்ப்ரசோதிதா: தைரப்யந்யே அபரே தைச்ச தேரப்யந்தே பரே ச தை: - என்னுடைய மாயை என்னும் மந்திரக்கோல் கொண்டு அஸுரகுணம் உள்ளவர்கள் மயக்கப்படுகிறார்கள். அவர்கள் மூன்று வேதங்கள் கூறும் மார்க்கத்திலிருந்து அகற்றப்படுகிறார்கள். இவர்களால் மற்றவர்களும் பாதிக்கப்பட்டு, இது தொடர்கிறது.

## 792. இந்த்ரகர்மா

தன்னைச் சரணம் அடைந்த இந்த்ரன் முதலானவர்களுக்காக இவ்விதம் செய்பவன். இதனை ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (3-17-36) – தமூசு: ஸகலா தேவா: ப்ரணிபாத புரஸ்ஸரம் ப்ரஸீத நாத தைத்யேப்ய: த்ராஹீதி சரணார்த்திந: - அனைத்து தேவர்களும் அவன் முன்பாகச் சென்று, “பகவானே! எங்களுக்குக் கருணை காண்பிக்கவேண்டும். எங்களை அஸுரர்களிடமிருந்து காக்கவேண்டும். உன்னைச் சரணம் அடைகிறோம்”, என்றனர் – என்றது காண்க.

## 793. மஹாகர்மா

இப்படியாகத் தன்னைச் சரணம் அடைந்தவர்களைக் காக்கவும், தீயவர்களுக்கு தண்டனை அளிக்கவும், மிகவும் கருணை உள்ளவனான அவன் வஞ்சனையாகச் சில செயல்களைச் செய்வது ஏற்றமே ஆகும். இப்படிப்பட்ட நியாயமான செயல்களைச் செய்பவன்.

## 794. க்ருதகர்மா

அவர்களை வஞ்சிக்கும்விதமாக, தானும் அப்படிப்பட்ட கர்மங்களைச் செய்பவன்.

## 795. க்ருதாகம:

அப்படிப்பட்ட வஞ்சகச் செயல்களைச் உறுதிப்படுத்தும்விதமாக புத்தமதம், ஆர்ஹதமதம் முதலானவற்றை உண்டாக்கியவன்.

## 796. உத்பவ:

மோக்ஷத்திற்கான உபதேசம் செய்யும்போது, அப்போதே ஸம்ஸாரத்திலிருந்து புறப்பட்டவன் போன்று காண்பித்துக் கொள்பவன்.

## 797. ஸுந்தர:

(யாரை வஞ்சிக்கவேண்டுமோ) அவர்கள் கண்களுக்கு அழகான (புத்தனாக) ரூபத்துடன் விளங்குபவன்.

## 798. ஸுந்த:

இதன் காரணமாக அஸுர ஸ்வபாவம் உள்ளவர்கள் மனதிலும் ஈரம் உண்டாகும்படிச் செய்பவன்.

## 799. ரத்நநாப:

பண்டிதனாவதற்கு ஏற்றபடியான திரண்ட வயிறு மற்றும் அழகான நாபியுடன் உள்ளவன்.

## 800. ஸுலோசந:

தன்னைக் காண்பவர்களைக் கவரும்படியான கண்கள் கொண்டவன். இதனைக் கீழே உள்ள வரிகளில் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (3-18-2) – ததோ திகம்பரோ முண்ட: - (புத்தன்) திகம்பரனாகவும், மொட்டை அடித்தும்

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (3-18-16) – புநச்ச ரக்தாம்பரத்ருக் மாயாமோஹ: அஜிதேக்ஷண: - (புத்தன்) மயக்கத்தை உண்டாக்கவல்ல காவி உடையிலும், வெல்ல இயலாத மயக்கத்தை உண்டாக்கக்கூடிய கண்களும் கொண்டு.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், ஸ்ரீரங்கநாதனின் தெய்வீக ஆணையால் ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச்செய்த பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், எட்டாவது நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.

ஒன்பதாவது நூறு திருநாமங்களின் தொடக்கம்

## 801. அர்க்க:

"ஆஹா! இவர் மஹாத்மா! சிறந்த தர்மசாலி!" என்று பலராலும் போற்றப்படுபவன் (புத்தன்).

## 802. வாஜஸநி:

நாஸ்திக வாதங்களை முன்வைத்து, இந்த லோகத்தின் இனிமையான வாழ்வாக உள்ள தயிரும் சோறுமாக உண்பதையே உகந்து அனுபவிப்பவன். க்ஷபணகர்களான பௌத்தர்களின் விரதம் என்னவென்றால் காலையில் தயிரும் சோறும் கலந்து உண்பதாகும்.

## 803. ச்ருங்கீ

ஹிம்ஸை செய்யக்கூடாது என்பதற்கு அடையாளமாகத் தனது கையில் மயிற்தோகை உள்ளவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் – பஹிபத்ரதர: - கையில் தோகை உள்ளவன் – என்றது காண்க.

## 804. ஜயந்த:

ஞானம் என்பதே ஆத்மா என்றும், ப்ரபஞ்சம் முழுவதும் மாயை என்றும் உள்ள மித்யாவாதங்கள் செய்து பலரையும் வென்றவன்.

## 805. ஸர்வவிஜ்ஜயீ

பிரமாணங்களான வேதங்களுக்கு விரோதமான வாதங்களைக் கூறி எப்படி நம்பவைத்தான்? அனைத்தையும் அறிந்தவர்களையும் எளிதாக (மயக்கி) வெல்ல வல்லவன்.

## 806. ஸுவர்ணபிந்து:

மிகவும் நேர்த்தியான அக்ஷரங்களைச் சேர்த்த வாக்கு சாதுர்யத்தால் ஆஸ்திகர்களின் வாதங்களைத் தள்ளுபவன்.

## 807. அக்ஷோப்ய:

மிகவும் உறுதியான இதயம் உள்ளதால், யாராலும் கலக்க இயலாதவன்.

## 808. ஸர்வவாகீச்வரேச்வர:

வாய் உள்ளவர்கள் யாராக இருந்தாலும் அவர்களை அடக்க ஆள்பவன். இராமாயணம் அயோத்யாகாண்டம் (1-14) – உத்தரோத்தரயுக்தௌ ச வக்தா வாசஸ்பதிர்யதா – அவன் ப்ருஹஸ்பதி போன்று ஒரு வாதத்திலிருந்து அடுத்த வாதம் என்று வாதங்களில் வல்லவன் – என்றது காண்க.

## 809. மஹாஹ்ரத:

பாவிகளாக உள்ளவர்கள் மீண்டும் தலை தூக்காமல் முழுகும்விதமாகவும், புண்ணியவான்கள் முழுகிமுழுகி நிறைவடையும்படியாகவும் விளங்கும் குளம் போன்றவன். கீதையில் (16-19) – க்ஷிபாம்யஜஸ்ரம் அசுபாம் ஆஸுரீஷ்வேவ யோநிஷு

– அவர்களை நான் மிகவும் தாழ்ந்த அஸுர ஸ்வபாவம் கொண்ட பிறவிகளில் தள்ளுகிறேன் – என்றது காண்க. அவர்கள் மீண்டும் மீண்டும் பிறந்தபடி உள்ளனர்.

## 810. மஹாகர்த்த:

இப்படியாக வேதங்களுக்கு விரோதமாக உள்ள மதங்களிலும், மயக்கவல்ல வாதங்கள் நிறைந்த நாஸ்திக மதங்களிலும் புகுந்து ஆத்மநாசம் தேடிக்கொள்பவர்களுக்கு ரௌரவம் முதலான நரகங்களை அளிப்பவன். கீதையில் (9-3) – அச்ரத்ததாநா: புருஷா: தர்மஸ்யாஸ்ய பரந்தப அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யு ஸம்ஸாரவர்த்தமநி – எதிரிகளை வாட்டும் அர்ஜுனா! தர்மமார்க்கத்தில் பிடிப்பு இல்லாத மனிதர்கள், என்னை அடையாமல் மரணம் நிறைந்த இந்த ஸம்ஸாரத்தில் சுழன்றபடி உள்ளனர் – என்றது காண்க.

## 811. மஹாபூத:

மஹாத்மாக்களைத் தன்னுடைய செல்வமாகவும் சொத்தாகவும் எண்ணுபவன். ஸ்ரீமத் பகவத்கீதை (9-13) – மஹாத்மாநஸ்து மாம் பார்த்த – மஹாத்மாக்கள் மயக்கம் அடையாமல் என்னை அடைகிறார்கள் – என்றது காண்க.

## 812. மஹாநிதி:

அந்த மஹாத்மாக்களைத் தன்னுடைய உயர்ந்த நிதியாக எண்ணுபவன். ஸ்ரீமத் பகவத்கீதை (12-20) – யே து தர்ம்யாம்ருதமிதம் – யார் ஒருவன் தர்மமே வடிவான அமிர்தத்தைப் பின்பற்றியபடி உள்ளனரோ, அவர்கள் எனக்கு மிகவும் ப்ரியமானவர்கள் – என்றது காண்க.

## 813. குமுத:

இந்த உலகத்தில் அவர்கள் உள்ளபோதே, அவர்களுடன் இன்பமாக இருந்து வருபவன்.

## 814. குந்தர:

குருக்கத்தி மலர் போன்று மிகவும் தூய்மையான பரதத்வ ஞானத்தை அவர்களுக்கு அளிப்பவன். ஸ்ரீமத் பகவத்கீதை (10-10) – ததாமி புத்தியோகம் தம் – அவர்களுக்கு நான் உயர்ந்த ஞானத்தை அளிக்கிறேன் – என்றது காண்க.

## 815. குந்த:

மிகவும் நேர்த்தியான வரிசையில் தங்களுடைய பூர்வவாஸனையை வென்று, அதன் பின்னர் ஞானம் மற்றும் பக்தி ஆகியவற்றை அடைந்தவர்களுக்கு, மேன்மேலும் பரபக்தி பரஜ்ஞானங்களை அளிப்பவன். அல்லது குந்தர: என்பது அவர்களுடைய பாவங்களைப் பிளப்பவன் என்றும், குந்த: என்பது அவ்விதம் பிளந்த பாவங்களைச் சோதிப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

## 816. பர்ஜந்ய:

தன்னைப் பற்றி நன்றாக அறிந்த ஞானிகளுடைய மூன்றுவகையான துன்பங்களைப் போக்குவதற்காக, அவர்களுக்கு மழையின் தேவதை போன்று கடாக்ஷங்களைப் பொழிபவன்.

## 817. பவந:

அவர்களுடைய துன்பங்களை நீக்கும்பொருட்டு அவர்களிடம் செல்பவன்.

## 818. அநில:

அவர்களுக்கு அனுக்ரஹம் செய்வதற்கு, தன்னை யாரும் ஏவ வேண்டாதபடி, தானாகவே செய்பவன். ததப்ய ப்ரார்த்திதம் த்யாதோ ததாதி மதுஸூதந: - மதுஸூதனனை பிரார்த்திவனுக்கு, அவன் வேண்டாத செல்வங்களையும் அளிக்கிறான்.

## 819. அம்ருதாச:

தன்னுடைய குணங்கள் என்னும் அமிர்தத்தை அவர்கள் பருகும்படிச் செய்பவன்.

## 820. அம்ருதவபு:

அமிர்தம் போன்றுள்ள திருமேனி கொண்டவன்.

## 821. ஸர்வஜ்ஞ:

இதனைச் செய்வர், இதனைச் செய்ய இயலாது, இது நடக்கும், இது நடக்காது என்று அனைத்தையும் அறிபவன்.

## 822. ஸர்வதோமுக:

இத்தகைய உபாயத்தால் மட்டுமே இவனை அடைய இயலும், இதனைத் தவிர வேறு உபாயம் இல்லை என்று எந்தவிதமான நிர்ப்பந்தமும் இல்லாமல், ஏதோ ஒரு காரணத்தாலே அவர்களால் அடைய இயலும்படி உள்ளவன். ஆர்த்தோ வா யதி வா த்ருப்த: பரேஷாம் சரணாகத: - அவன் துன்பம் அடைந்தவனாக இருந்தாலும், பொறுத்துக் கொள்பவனாக இருந்தாலும், பகைவனிடமிருந்து வந்து சரணம் புகுந்தவன் – என்றது காண்க.

## 823. ஸுலப:

இந்தக் காரணத்தால், மிகவும் விலைமதிப்பு இல்லாதவன் என்றாலும், எந்தவிதமான விலையும் கொடுத்துப் பெறவேண்டிய அவசியம் இல்லாதவன். வஸ்த்ரே ப்ரக்ருஹ்ய கோவிந்தம் மம தேஹம் வ்ரஜேதி வை – சிறிது சந்தனம் மட்டுமே கொடுத்து அந்த கோவிந்தனைத் தனது இல்லத்திற்கு வரும்படிச் செய்தாள் – என்றது காண்க.

## 824. ஸுவ்ரத:

எந்தவிதத்தில் தன்னிடம் சரணம் புகுந்தாலும், அவர்களை அனைத்துவிதத்திலும் காப்பாற்றுதல் என்னும் உறுதியான விரதம் கொண்டவன். இராமாயணம் யுத்தகாண்டம் - ஸக்ருதேவ ப்ரபந்நாய – அவன் என்னை ஒருமுறை சரணம் என்று புகுந்தால் போதுமானது, அவன் நண்பனா விரோதியா என்று நான் ஆராய்வதில்லை – என்றது காண்க.

## 825. ஸித்த:

தன்னுடைய தத்வத்தைக் குறித்து உள்ளது உள்ளபடி அறிந்தவர்கள் சிறிதும் முயற்சிக்க வேண்டிய அவசியம் இல்லாமல், தன்னை அளிக்கத் தயாராக உள்ளவன்.

## 826. சத்ருஜித் சத்ருதாபந:

சத்ருக்களை வெல்லவல்லவராகிய ககுஸ்த புருகுஸ்தர்களுக்குத் தன்னுடைய சக்தியை அளித்து, அவர்கள் மூலமாக சத்ருக்களை தவிக்கும்படிச் செய்பவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (4-2-31) – சதக்ரதோ: வ்ருஷரூபதாரிண: ககுஸ்த்த: அதிரோஷ ஸமந்வித: பகவத: சராசரகுரோ: அச்யுதஸ்ய தேஜஸா ஆப்யாயிதோ தேவாஸுர ஸங்க்ராமே ஸமஸ்தாநேவ அஸுராந் நிஜகாந – இந்த்ரன் காளை போன்ற ரூபம் எடுத்தபோது, அவன் மீது ககுஸ்த்தன் மிகுந்த கோபம் கொண்டவனாக, சராசரநாதனாகிய அச்சுதனின் தேஜஸ் மூலம் மிகுந்த பலம் அடைந்தவனாக, தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் இடையில் உண்டான யுத்தத்தில் அஸுரர்களை அழித்தான்.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (4-3-10) – புருகுத்ஸ: ரஸாதலகதச்ச அஸௌ பகவத்தேஜஸா ஆப்யாயிதவீர்ய: ஸகலகந்தர்வாந் ஜகாந – புருகுஸ்தன் ஸர்வேச்வரனுடைய தேஜஸ் முழுவதும் நிறைந்தவனாக ரஸாதல லோகம் சென்றான். அங்கு நாகர்களுக்கு இடையூறு செய்தபடி இருந்த கந்தர்வர்களை வென்றான்.

## 827. ந்யக்ரோதோதும்பர:

தான் மிகவும் உயர்ந்தவர்களாலே வணங்கப்படுபவனாக உள்ளபோதிலும், மிகவும் தாழ்ந்தவர்களால் தன்னுடைய அனுக்ரஹம் வேண்டி அவர்களால் பிரார்த்திக்கப்படும் விதத்தில் உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுதர்மம் (33-105) – அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ – இரண்டு கைகளையும் குவித்துச் செய்யும் அஞ்ஜலி முத்திரையானது, பகவானை வெகுவிரைவில் குளிரச்செய்யும்.

- இராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் (32-17) – க்ருதாபராதஸ்ய ஹி தே நாந்யத் பச்யாம்யஹம் க்ஷமம் அந்தரேணாஞ்ஜலிம் வத்தவா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத் – அனுமன் சுக்ரீவனிடம், “நீ ஒரு மிகப்பெரிய அபராதம் செய்துவிட்டாய். இதனால்

கோபம் கொண்டுள்ள லக்ஷ்மணனை, அஞ்ஜலி முத்திரையுடன் சென்று வனங்குவது அல்லாமல் வேறு மார்க்கம் எனக்குப் புலப்படவில்லை", என்றான்.

அனைத்து குணங்களாலும் உயர்ந்துள்ளதும், லக்ஷ்மீ முதலான செல்வங்களால் ஸம்ருத்தி உள்ளதும் ஆகிய பரமாகாசத்தைத் தன்னுடைய இருப்பிடமாகக் கொண்டவன்.

## 828. அச்வத்த:

நித்யம் அல்லாத இந்த்ரன் முதலான பதவிகளில் உள்ள புருஷர்களின் இதயத்தில் அவர்களை நியமிப்பவனாக உள்ளவன். இதனை ஸ்ரீவிஷ்ணுபுராணம் – மூர்த்திம் ரஜோமயீம் ப்ராஹ்மிமாச்ரித்ய ஸ்ருஜதி ப்ரஜா: ஆச்ரித்ய பௌருஷீம் ஸாத்விகீம் ய: ஸ பாலயந் காலாக்யாம் தாமஸீம் மூர்த்திமாச்ரித்ய க்ரஸதே ஜகத் – நான்முகனின் சரீரத்தில் இருந்தபடி உலகைப் படைக்கிறான். ஸத்வகுணம் நிறைந்த விஷ்ணுவின் சரீரத்தில் இருந்தபடி உலகைக் காக்கிறான். தாமஸகுணம் உள்ள சிவனின் சரீரத்தில் உள்ளபடி அனைத்தையும் ஸம்ஹாரம் செய்கிறான் – என்றது காண்க.

## 829. சாணூராந்த்ரநிஷூதந:

அந்த இந்த்ரன் முதலானவர்களுக்கு விரோதியாக இருந்த சாணூராந்திர அசுரனை அழித்தவன்.

## 830. ஸஹஸ்ரார்ச்சி:

தூய்மை, உஷ்ணம், பிரகாசம், உலத்தும் தன்மை முதலானவை உள்ள ஆயிரக்கணக்கான கிரணங்களை சூரியனுக்கு, இந்த லோகத்திற்குப் பயனளிக்கும்விதமாகக் கொடுத்தவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- பௌஷ்கர ஸம்ஹிதை – அக்நீஷோமாத்ம ஸஜ்ஞஸ்ய தேவஸ்ய பரமாத்மந: ஸூர்ய சந்த்ரமஸௌ வித்தி ஸாகாரௌ லோசநேச்வரௌ – சூரியனும் சந்த்ரனும்

அவனுடைய இரண்டு கண்கள் என்று அறிக, இப்படியாக உள்ள அவன் அக்னிஷோமாத்மா எனப்படுகிறான்.

- ஸ்ரீமத்பகவத்கீதை (15-12) – யத் ஆதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதேகிலம் யத் சந்த்ரமஸி யச்சாக்நௌ தத்தேஜோ வித்தி மாமகம் – சூரியனில் உள்ள எந்த ஒளி அனைத்து உலகையும் பிரகாசிக்கும்படிச் செய்கிறதோ, எந்த சந்த்ரனிலும் அக்னியிலும் உள்ளதோ, அது என்னுடைய ஒளி என்று அறிவாயாக.

## 831. ஸப்தஜிஹ்வ:

அது போன்றே காளி, கராளி முதலான தேவதைகளுக்கு அவிர்பாகத்தைக் கொண்டு செல்லுவதான ஏழு ஜ்வாலைகள் உள்ள அக்னியில் விளங்குபவன். பௌஷ்கர ஸம்ஹிதை – தத்வக்த்ர தேவதாநாம் ச ஹுதபுக் பரமேச்வர: மந்த்ரபூதம் யதாதாய ஹுதமாஜ்ய புரஸ்ஸரம் ப்ரஹ்மாண்டபுவநம் ஸர்வம் ஸந்தர்பயதி ஸர்வதா – அக்னியை முகமாகக் கொண்ட அந்தத் தேவர்களுக்குள் ஹோம திரவியங்களை அந்தப் பரமேச்வரன் ஏற்கிறான்; மந்த்ரம் மூலம் தூய்மை அடைந்த நெய் முதலான ஹோம திரவியங்கள் மூலம் பிரம்மாண்டமான அனைத்து லோகங்களுக்கும் எப்போதும் திருப்தி உண்டாக்குகிறான் – என்றது காண்க.

## 832. ஸப்தைதா:

யஜ்ஞங்களில் அளிக்கப்படும் அவிர்பாகங்களை ஏற்றபடி, அந்த யஜ்ஞங்களில் உள்ள அக்னியில் ஏழுவிதமான இந்தநங்களை உடையவன் (அக்னிக்கு - ஔபாஸநம், வைசுவதேவம், ஸ்தாலீபாகம், அஷ்டகை, மாஸிச்சிராத்தம், ஈசாநபலி, ஸர்ப்பபலி என்னும் பாக யஜ்ஞங்கள் ஏழு; அக்னிஹோத்ரம், தர்சபூர்ணாமாஸம், பிண்டபித்ரு யஜ்ஞம், பசுபந்தம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், ஸௌத்ராமண்யம் என்னும் ஹவிர் யஜ்ஞங்கள் ஏழு; அக்நிஷ்டோமம், அதியக்நிஷ்டோமம், உக்த்யம், ஷோடசம், வாஜபேயம், அதிராத்ரம், ஆப்தோர்யாமம் என்னும் ஸோம ஸம்ஸ்தங்கள் ஏழு – என்றுள்ளவை ஸமித்துகளாக உள்ளன. அவற்றை உடையவன் என்று கருத்து. அல்லது பலாசம், புரசம், வன்னிமரம் முதலான ஏழு விறகுகளை உடையவன் என்றும் கொள்க).

## 833. ஸப்தவாஹந:

காயத்ரி முதலான வைதிக மந்த்ரங்களுக்கு அபிமான தேவதைகளான சூரிய ரத வாஹனங்கள் ஏழையும் கொண்டவன் (அதாவது காயத்ரி, உஷ்னிக், அனுஷ்டுப், ப்ரிஹதி, பங்க்தி, த்ருஷ்டுப் மற்றும் ஜகதி என்னும் ஏழு சந்தஸ்களை உடையவன்). கீழே உள்ள வரிகள் காண்க:

- தைத்திரீயம் – ஸப்த ப்ராணா: ப்ரபவந்தி – ஏழு ப்ராணன்களும் அவனிடமிருந்து வருகின்றன.

- குஹசயா நிஹிதா: ஸப்த – அனைத்து உயிர்களுக்கும் காணப்படும் ஆழமான குகையான அவனிடமிருந்து ஏழு ப்ராணன்களும் வருகின்றன

- பௌஷ்கர ஸம்ஹிதை – விச்வேச ப்ராண சக்தேர்வை வாய்வாக்யம் அதிதைவதம் ஜகத் ஸந்தாரகம் சைவ நாநாஸ்கந்தாத்மநா து வை ஏதே பகவதாராமா: திஷ்டந்த்யஸ்மிந் ஜகத்ரயே – வாயுவானவன் தனது சக்தியை ஸர்வேச்வரனிடமிருந்து பெற்ற பின்னர், இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள ஏழு பிரதேசங்களிலும் ஸஞ்சரிக்கிறான். இவை மூன்று லோகங்களில் காணப்படும் ஸர்வேச்வரனின் இளைப்பாறும் இடங்களாக உள்ளன.

## 834. அமூர்த்தி:

இவ்விதமாக தான் அதிஷ்ட்டித்துள்ள ஸ்தூலமான, பஞ்சபூதங்களான சரீரங்களைக் காட்டிலும் வேறானவன். பௌதிகமானவற்றைக் காட்டிலும் வேறுபட்டவன்.

## 835. அநக:

கர்மங்களுக்கு வசப்படாமல் உள்ளதால், அந்த சுழற்சியில் சிக்கியபடி உள்ள ஜீவன்களைக் காட்டிலும் வேறுபட்டவன்.

## 836. அசிந்த்ய:

முக்தி அடைந்தவர்களோடு கூட ஒப்பிட இயலாதவன்.

## 837. பயக்ருத்

தன்னுடைய ஆணைகளை மீறுபவர்களுக்கு அச்சத்தை உண்டாக்குபவன்.

## 838. பயநாசந:

தன்னுடைய ஆணைகளைச் சரியாகப் பின்பற்றுபவர்களுக்கு உள்ள அனைத்து பயங்களையும் நீக்குபவன். பயாபயகர: க்ருஷ்ண: - பயத்தை உண்டாக்குபவனும், நீக்குபவனும் க்ருஷ்ணனே – என்றது காண்க.

## 839. அணு:

அடுத்து அணிமா முதலானவற்றை தனது அதீனமாக்கி வைத்துள்ளதைக் கூறுகிறார். மிகவும் ஸூக்ஷ்மமாக உள்ள தஹராகாசம் (இது நமது இதயத்தில் உள்ளதாகும்), அவ்யக்தம், ஜீவன் முதலானவற்றில் ப்ரவேசிக்கும் திறமை உள்ளதால் அணுவாக உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- அணீரணீயாந் – அணுவைக் காட்டிலும் சிறியவன்
- நிபுணோ அணீயாந் பிஸோர்ணாயா: - தாமரைத் தண்டைக் காட்டிலும் நுட்பமாகவும் வலுவாகவும் உள்ளவன்

## 840. ப்ருஹத்

மிகவும் விஸ்தாரமாக உள்ள பரமாகாசத்தையும், தனது அற்பமான பாகத்தில் அடக்கிக் கொள்ளும்படியான மஹத்தாக உள்ளவன்.

- புருஷஸூக்தம் – ஸ பூமிம் விச்வதோ வ்ருத்வா அத்யதிஷ்டத் தசாங்குலம் – லீலாவிபூதி முழுவதும் வ்யாபித்து பது அங்குலமாக நிற்கிறான்.
- தைத்திரீயம் – மஹதோ மஹீயாந் – உயர்ந்தவற்றைக் காட்டிலும் உயர்ந்தவன்

## 841. க்ருச:

பஞ்சு, காற்று முதலானவற்றைக் காட்டிலும் மிகவும் எடை குறைந்தவனாக உள்ளதால், எங்கும் எந்தவிதமான தடையும் இல்லாதபடி செல்பவன்.

## 842. ஸ்தூல:

தான் ஓர் இடத்தில் இருந்தபடியே அனைத்தையும் தொடும்படியாக, அதாவது பூமியில் உள்ளபடியே சந்த்ரனையும் தொடும்படியான ப்ராப்தி என்னும் ஐச்வர்யம் உள்ளவன்.

## 843. குணப்ருத:

தன்னுடைய ஸங்கல்பம் மூலமாக அனைத்தையும், அனைத்து நிலைகளிலும் தனக்குக் குணம் போன்றே தரித்துள்ளவன். இதுவே இவனுடைய உயர்ந்த ஈச்வரத்தன்மை ஆகும். ஸர்வஸ்ய வசீ ஸர்வஸ்யேசாந: - அனைத்தையும் வசீகரித்து, அனைத்தையும் ஆள்பவன் – என்றது காண்க.

## 844. நிர்க்குண:

இவ்விதம் அனைத்தையும் பரித்தபடி உள்ளபோதிலும், அவற்றுக்கு வசப்படாமல் உள்ளதால் அவற்றின் குணம் தனது மீது ஏறாமல் உள்ளவன். அதாவது பரம ஸ்வதந்த்ரன் என்று கருத்து. இதுவே அவனுடைய மிகவும் உயர்ந்த வசீகரத்வம் ஆகும். கீழே உள்ள வரிகள் காண்க:

- விச்வஸ்ய மிஷதோ வசீ – அனைத்து உலகும் அவனுடைய கட்டுப்பாட்டில் உள்ளது.

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் – ஸத்த்வாதயோ ந ஸந்தீசே யத்ர ச ப்ரக்ருதா குணா: - ஸத்வம் முதலான குணங்கள் ப்ரக்ருதியுடன் ஸம்பந்தம் உடையவை அல்லாமல், அவனுடன் தொடர்புடையவை அல்ல.

## 845. மஹாந்

ப்ராகாம்யம் என்னும் உயர்ந்த ஐச்வர்யம் உள்ளவன். தான் என்ன செய்ய எண்ணுகிறானோ அதனைச் செய்யும் சக்தி உள்ளவன். அவன் செய்ய எண்ணுவதைத் தடுக்க யாராலும் இயலாது. அவனால் இந்தப் பூமியை ஸமுத்ரத்தில் மிகவும் எளிதாக அமிழ்த்தி எடுக்க இயலும். ஸம்ப்ரயோஜ்ய வியோஜ்யாயம் காமகாரகர: ப்ரபு: யத்யதிச்சேத் அயம் சௌரி: தத்தத் குர்யாத் அயத்நத: - சௌரியாகிய ஸர்வேச்வரன் தான் விரும்பும்படி நடப்பவன்; அனைத்தையும் தனது விருப்பத்திற்கு ஏற்ப இணைக்கவோ அல்லது பிரிக்கவோ செய்பவன்; அவன் எதனைச் செய்தாலும் கடினப்படாமல் எளிதாகச் செய்பவன் – என்றது காண்க.

## 846. அத்ருத:

மற்றவர்களுடைய நிழலில் புகுந்து அவர்களுடைய உள்ளத்தைக் கைக்கொள்ளுதல், தன்னைத் த்யானித்தபடி உள்ளவர்களுடைய உள்ளத்தில் புகுந்து வசீகரித்தல், உயிருடன் உள்ளபோதோ அல்லது உயிரற்றபோதோ ஒருவருடைய சரீரத்தில் புகுதல், குளம் வெட்டுதல் முதலான நற்செயல்களில் ஈடுபட வைத்தல் என்பதான நான்குவிதமான செயல்களைச் செய்தபடி இருந்தாலும், அவற்றால் கட்டுப்படாமல் உள்ளவன். இதன் மூலமாக இவனுடைய நினைத்தபடி செயலாற்றுதல் என்பதான “காமாவஸாயித்வம்” என்பதன் அதிசயம் உரைக்கப்பட்டது. இவன் செய்த ஒரு நிகழ்ச்சி – பரமபதத்திற்குப் போகத் தகுதியான ஸித்திகள் பெறாமல் இருந்தபோதிலும், ஒரு அந்தணனின் எட்டு குழந்தைகளைத் தனது ஸங்கல்பத்தால் பரமபதம் போகவைத்தான் (ஸந்தானகோபாலம் என்னும் நிகழ்வு). பரமபதம் போனவர்கள் மீண்டும் திரும்புதல் இல்லை என்பதான விதியை மாற்றி, அக்குழந்தைகளை மீண்டும் இங்கு வரச்செய்தான். ஆக இவன் நினைத்தால் சித், அசித் முதலானவற்றையும், அவற்றின் ஸ்வரூபத்தையும் மாற்றும் திறன் கொண்டவன் என்னும்போதிலும், ஏதோ ஒரு சில காரணங்களுக்காக, அவற்றை மாற்றாமல் உள்ளான் என்று தேறுகிறது.

## 847. ஸ்வத்ருத:

மந்த்ரம், மூலிகை, தவம், த்யானம் முதலானவைகள் கிட்டப்பெற்ற ஸம்ஸாரிகளுடைய அஷ்டமாஸித்திகள் என்னும் ஐச்வர்யங்களைக் காட்டிலும், இவனுடைய ஐச்வர்ய

மேன்மை அடுத்து கூறப்படுகிறது. அதாவது அவர்களைப் போன்று இவனுடைய ஐச்வர்யம் இல்லாமல், இவை இவனுக்கு இயல்பாகவே உள்ளதாகும்.

## 848. ஸ்வாஸ்ய:

ஸம்ஸாரத்தில் மூழ்கியபடி இருக்காமல், முக்திதசையில் ப்ரவேசிக்கும் முக்தர்களுடைய "அந்த நேரத்தில் உண்டாகும் ஐச்வர்யம்" போன்று இல்லாமல், எப்போதும் வெளிப்பட்டபடி உள்ள ஐச்வர்யம் கொண்டவன்.

## 849. ப்ராக்வம்ச:

எப்போதும் முக்தர்களாக உள்ள நித்யஸூரிகளுக்கும் உற்பத்தி இடமாக உள்ளவன். அதாவது, அனைத்தும் அனைத்துவிதத்திலும் அவனுடைய இச்சையைப் பின்பற்றியே செல்கின்றன என்னும் கருத்தில் எந்தவிதமான விவாதங்களும் இல்லாமையால், நித்யஸூரிகளுடைய ஸ்வரூப வெளிப்பாடும் இவனுடைய கட்டுப்பாட்டிலேதான் உள்ளது என்று கருத்து. ததா அஷ்டகுணைச்வர்யம் நாத ஸ்வாபாவிகம் பரம் நிரஸ்தாதிசயம் யஸ்ய ததஸ்தோப்யாமி கிம் த்வஹம் – நாதனே! எனது ஐச்வர்யம் போன்று எட்டுமடங்கு கூடுதலாக உள்ள அதிசயிக்கத்தக்கது, தனக்கு மேல் ஏதும் இல்லாததும் ஆகிய பரவஸ்துவை நான் என்னவென்று துதிக்கப்போகிறேன் – என்றது காண்க.

## 850. வம்சவர்த்தந:

அந்த நித்யஸூரிகளைக் காட்டிலும் இவன் மேன்மையாக உள்ளதற்குக் காரணமான தன்மை கூறப்படுகிறது. கீழே உரைக்கப்பட்ட தனது ஸந்தாநபூதர்களாகிய நித்யஸூரிகளின் வம்சத்தை வளர்ப்பவன். ப்ரணத: அஸ்மி அநந்தஸந்தானம் – தனது அடியார்கள் சூழ உள்ள அவனை நான் வணங்குகிறேன்.

## 851. பாரப்ருத்

முக்தர்களுடைய ஸம்ஸார பந்தங்களை நீக்குவதையும், அவர்கள் தங்களுடைய ஸ்வரூபத்தை மீண்டும் அடையச் செய்வதையும், தன்னுடன் அவர்களைச் சேர்த்துக் கொள்ளுவதையும் செய்து, அவர்களுடைய பாரத்தைத் தாங்குபவன்.

## 852. கதித:

இதுவரை கூறப்பட்டவைகளும், இனி கூறப்பட உள்ளவைகளும் ஆகிய குணங்களுடன் எப்போதும் அவன் விளங்குகிறான் என்று அனைத்து சாஸ்த்ரங்களாலும் கூறப்படுபவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- வேதேஷு ஸபுராணேஷு ஸாங்கோபாங்கேஷு கீயஸே – அனைத்து வேதங்களும், புராணங்களும், வேதாங்கங்களும், உப அங்கங்களும் போற்றுகின்றன

- ஜிதந்தே ஸ்தோத்ரம் – வேதே ராமாயணே புண்யே பாரதே பரதர்ஷப ஆதௌ மத்யே ததாந்தே ச விஷ்ணு: ஸர்வத்ர கீயதே – பரதகுலத்தில் உத்தமனே! வேதங்கள், இராமாயணம் போன்ற பலவற்றிலும் தொடக்கம், மத்தி, இறுதி என்று பல பகுதிகளிலும் மஹாவிஷ்ணு போற்றப்பட்டுள்ளான்.

## 853. யோகி

இவை அனைத்தையும் உண்டாக்கக்கூடியவன். சேராதவற்றையெல்லாம் சேரும்விதத்தில் செய்யுதல் என்னும் உயர்ந்த சக்தி உள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- கீதை (11-8) – பச்ய மே யோகமைச்வர்யம் – எனது உயர்ந்த தெய்வீகமான யோகத்தைக் காண்பாயாக.

- கீதை (18-78) – யோகேச்வர: க்ருஷ்ண: - யோகேச்வரனாகிய க்ருஷ்ணன்

- கீதை (18-75) – யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணாத் – யோகேச்வரனாகிய க்ருஷ்ணனிடமிருந்து வெளிப்பட்ட யோகத்தை

- கீதை (11-9) – மஹாயோகேச்வரோ ஹரி: - யோகேச்வரனாகிய ஸ்ரீஹரி

## 854. யோகீச:

ஸநகர் உள்ளிட்டவர்களுடைய யோகங்களுக்கும் பொறுப்பாக உள்ளவன். ஸ்ரீவிஷ்ணு புராணம் – ஸநந்தநாதீந் அபகல்மஷாந் முநீந் சகார பூய: அதிபவித்ரிதம் பதம் – பாவங்கள் ஏதும் இல்லாதவர்களாகிய ஸநந்தர் முதலானவர்களுக்கு மேலும் தூய்மை அளித்து, அவர்களுக்கு ஸ்ரீவைகுண்டத்தைக் காண்பித்தான் – என்றது காண்க.

## 855. ஸர்வகாமத:

யோகத்திலிருந்து நழுவுபவர்களுக்கும், அணிமா உள்ளிட்ட அஷ்டமா ஸித்திகள் போன்ற பலவிதமான பலன்களை, அந்த யோகத்திற்கு இடையூறாக அளிப்பவன். கீதையில் (6-41) – ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாந் உஷித்வா சாச்வதீ ஸமா: - யோகத்திலிருந்து நழுவியவன், புண்ணியம் செய்தவர்கள் அடையும் ஸ்வர்க்கத்தில் நீண்டகாலம் வசித்து – என்றது காண்க.

## 856. ஆச்ரம:

அவர்களுக்கு அந்த அணிமா முதலானவற்றிலிருந்து வெளியே வரும்போது, ப்ரஹ்ம வித்யை உண்டாகும் விதத்தில் அவர்களை, ஸ்ரீவைஷ்ணவர்களுடைய இல்லங்களில் அவர்களுக்குப் பிறவியை அளித்து, அவர்களுக்கு நிம்மதி அளிப்பவன். கீதையில் (6-41) – சுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்ட: அபிஜாயதே – யோகங்களிலிருந்து நழுவியவன், நீண்டகாலம் ஸ்வர்க்கங்களில் இருந்த பின்னர், நல்லொழுக்கமுள்ளவர்களின் வீடுகளில் பிறக்கிறான் – என்றது காண்க.

## 857. ச்ரமண:

முன்பு தடைப்பட்ட யோகங்களைச் செய்வதற்கு அவர்களுக்கு வாய்ப்பளிக்கிறான். இப்படியாக உள்ளவர்களில் சிலருக்கு அவர்களுடைய கர்மம் கழியாமல் இருக்கலாம் அல்லது ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வீடுகளில் பிறந்துள்ளபோதிலும் பூர்வவாஸனை கழியாமல் இருக்கலாம். இவர்களுக்கு மீண்டும் அந்தந்த யோகங்களைத் தடையில்லாமல்

கிட்டும்படிச் செய்பவன். தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம் – அங்கு முன்பு இருந்த சரீரத்தில் உண்டான புத்தியோகத்தையே அடைகிறான் – என்றது காண்க.

## 858. க்ஷாம:

இப்படியாகத் தனது யோகத்தில் மீண்டும் திரும்பிய உடனேயே, அவர்கள் யோகத்தில் வல்லவர்களாக உள்ளபோதிலும், ஸம்ஸார துக்கத்தைப் பொறுத்துக் கொள்ளக்கூடிய சக்தியை உள்ளவராகச் செய்பவன். ந ஹி கல்யாணக்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி – நன்மையைச் செய்தவன் எப்போதும் துக்கத்தை அடைவதில்லை.

## 859. ஸுபர்ண:

இவ்விதம் ஸமாதிநிலை கைகூடப் பெற்றவர்கள், சுகமாக தமஸ் குணத்தின் கரையை அடையும்படி செய்பவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- மௌஸல ஸம்ஹிதை – ஸ்வபாரம் பகவாந் நயதி – அவர்களைப் பகவான் கரை சேர்க்கிறான்.

- கீதை (6-45) – அநேக ஜந்ம ஸம்ஸித்த: ததோ யாதி பராம் கதிம் – பல ஜன்மங்களில் உண்டான மனோவலிமை காரணமாக, யோகி ஒருவன் இந்தப் பிறவியில் உயர்ந்த கதியை அடைகிறான்.

## 860. வாயுவாஹந:

தவிர்க்க முடியாத காரணங்களால் ஸம்ஸார ஸமுத்திரத்தில் வீழ்ந்து தவிப்பவர்களை, மிகவும் வேகம் நிறைந்த கருடனால் கரை சேர்ப்பவன். ஸ்ரீவிஷ்ணுதத்வத்தில் – அதவா பக்ஷிராட் தூர்ணமாகத்ய ஸ்வாமிந: பதம் நேஷ்யதி – பறவைகளின் அரசனாகிய கருடன் வேகமாக வந்து, தன்னுடைய ஸ்வாமியின் இருப்பிடத்திற்குக் கொண்டு செல்கிறான் – என்றது காண்க.

## 861. தநுர்த்தர:

இப்படியாக உள்ள தனது உபாஸகர்களுடைய விரோதிகளை அழிப்பதற்காகத் தானே கையும் வில்லுமாக வருபவன்.

- ஏததர்த்தம் ஹி லோகே அஸ்மிந் க்ஷத்ரியைர்தார்யதே தநு: - இந்தக் காரணத்தினால்தான், இந்த உலகில் உள்ள க்ஷத்ரியர்கள், தங்களுடைய கைகளில் வில்லை வைத்துள்ளனர்.

- தார்யதே க்ஷத்ரியை: சாபோ நார்த்தசப்தோ பவேதிதி – உலகில் துன்பம் உண்டாகாமல் இருக்கவே க்ஷத்ரியர்கள் தங்களுடைய கைகளில் வில்லை வைத்துள்ளனர்.

## 862. தநுர்வேத:

தன்னால் படைக்கப்பட்ட தேவர்கள் மற்றும் மனிதர்கள் ஆகியோரும் தன்னிடமிருந்து வில்வித்தை பயிலும்படியாக, அந்தந்த சாஸ்த்ரங்களை ஏற்படுத்தியவன்.

## 863. தண்ட:

வேததர்மங்களைக் காப்பாற்றுபவர்களாக உள்ள அரசர்கள் மூலமாக தண்டனை முதலனாவற்றை அளித்து, தீயவர்களைத் தண்டிப்பவன்.

## 864. தமயிதா

தானும் நேரடியாக அவதரித்து இராவணன் போன்ற அரக்கர்களை அழிக்கும்விதமாக தண்டிப்பவன்.

## 865. அதம:

தனக்கு மேலே யாரும் இருந்து தன்னை நியமிக்கும்படியாக இல்லாதவன். மஹாபாரதம் உத்யோகபர்வம் (67-8) – பஸ்ம குர்யாத் ஜகத்ஸர்வம் மநஸைவ ஜநார்த்தந: ந து க்ருத்ஸ்நம் ஜகச்சக்ரம் கிஞ்சித் கர்த்தும் ஜநார்த்தநே – தன்னுடைய ஸங்கல்பத்தால் மட்டுமே ஜநார்த்தனனாகிய ஸர்வேச்வரன் இந்த உலகை சாம்பலாக்க இயலும்; ஆனால் அனைத்து ப்ரபஞ்சங்களும் ஒன்று திரண்டாலும் அவனுக்கு எந்தத் தீங்கையும் உண்டாக்க இயலாது – என்றது காண்க.

## 866. அபராஜிதா:

இப்படியாக எங்கும் தன்னுடைய ஆணைகளைச் செலுத்தியபடி உள்ளபோது, எந்த ஓர் இடத்திலும், எப்போதும், யாராலும் வீழ்த்தப்பட இயலாதவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- தாசார்ஹம் அபராஜிதம் – நம் அனைவராலும் சரணம் அடையத்தக்கவனும், வெல்ல இயலாதவனும்

- மஹாபாரதம் – யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந: ஹரி: த்ரைலோக்யநாத: ஸந் கிம் நு யஸ்ய ந நிர்ஜிதம் – தன்னுடைய மந்த்ரியாகவும், பாதுகாவலனாகவும், நண்பனாகவும் ஸ்ரீஹரியைக் கொண்டுள்ள ஒருவனுக்கு இந்த உலகில் எதனைத்தான் வெல்ல இயலாது?

## 867. ஸர்வஸஹ:

தகுதி இல்லாத அதிகாரிகள் ஆராதிக்கும்விதத்தில் மற்ற தேவதைகளைத் தன்னுடைய ஆணைச்சக்கரத்தால் தாங்கி நிற்பவன்.

## 868. நியந்தா

அந்தந்த தேவதைகளை அண்டி நிற்பவர்களுக்கு, அந்தத் தேவதைகளிடம் அதிக ஈடுபாட்டினை ஏற்படும்படியாகச் செய்பவன். கீதை (7-21) – யோ யோ யாம் யாம் தநும் பக்த: ச்ரத்தயா அர்ச்சிதுமிச்சதி – எந்தெந்த தேவதைகளை யார் யார் ஆராதிக்கிறார்களோ, அந்தந்த தேவதைகள் விஷயத்தில், அவரவர்களுக்கு நான் ஈடுபாட்டை அளிக்கிறேன் – என்றது காண்க.

## 869. நியம:

அந்தத் தேவதைகள் மூலமே அவர்களுக்கு குலம் (பிறப்பு), ஆயுள், இன்பம் முதலானவற்றை அளிப்பவன். கீதையில் (7-22) – லபதே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந் – அந்தந்த தேவதைகளிடமிருந்து, என்னால் அவர்களுக்கு அளிக்கபட்டவற்றைப் பெறுகிறார்கள் – என்றான்.

## 870. யம:

அந்தந்த பலன் அளிப்பவர்களான யமன் முதலான தேவதைகளை அடக்கி ஆள்பவன். ஸ்ரீவிஷ்ணுபுராணம் (3-7-13) – ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு: - என்னை அடக்கும் திறன் விஷ்ணுவுக்கு உண்டு (யமனின் கூற்று) – என்றது காண்க.

## 871. ஸத்வவாந்

இப்படியாக ரஜஸ் மற்றும் தமஸ்ஸுக்களை அவன் அடக்கும்விதம் உரைத்த பின்னர், ஸத்வத்தை வளர்த்தல் குறித்துக் கூறப்படுகிறது. மோக்ஷத்திற்குக் காரணமாக உள்ள ஸத்வ குணத்திற்கு, தானே அதிஷ்டானமாக உள்ளதால் ஸத்வம் உள்ளவன். அவனால்தான் ரஜஸ் மற்றும் தமஸ்ஸுக்களும் இயக்கப்பட்டாலும், அதனை நான்முகன் மற்றும் ருத்ரன் மூலமாகச் செய்வதால், ஸத்வம் மட்டும் அவனுடைய நேரடியான கட்டுப்பாட்டில் உள்ளது என்று கருத்து. கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (3-7-13) – மஹாந் ப்ரபூர்வை புருஷ: ஸத்த்வஸ்யைஷ ப்ரவர்த்தக: - மூன்று குணங்களில் உயர்ந்த ஸத்வத்தை வழிநடத்துகிறான்.

- ஸ்ரீவராஹபுராணம் – ஸத்த்வேந முச்யதே ஜந்து: ஸத்த்வம் நாராயணாத்மகம் ரஜஸா ஸத்த்வயுக்தேந பவேத் ஸ்ரீமாந் யசோதிக: - ஒரு ஜீவன் பந்தங்களிலிருந்து ஸத்வம் காரணமாகவே விடுதலை பெறுகிறது. அந்த ஸத்வம் நாராயணனே ஆவான். ஒருவனுக்கு ஸத்வத்துடன் ரஜஸ்ஸும் சேரும்போது, அவன் புகழ் மற்றும் செல்வம் உள்ளவன் ஆகிறான்.

- தஜ்வ பைதாமஹம் வ்ருத்தம் ஸர்வசாஸ்த்ரேஷு பட்யதே யத் ரஜஸ் தமஸோ பேத ஸோஹம் நாஸ்த்யத்ர ஸம்சய: - அனைத்து சாஸ்த்ரங்களிலும் நான்முகனின் ஸ்வபாவம் என்பது ரஜஸ் மற்றும் தமஸ் கலந்ததாகவே உள்ளது எனப்படுகிறது. அந்த நான்முகன் என்னால் நியமிக்கப்படுகிறான்; இதில் எந்தவிதமான ஐயமும் இல்லை.

## 872. ஸாத்விக:

ஸாத்விகமாக உள்ள தர்மம், ஞானம், வைராக்யம், ஐச்வர்யம், ரூபம், பலம் போன்ற பலவற்றையும் நியமிப்பவன் என்பதால் ஸத்வகுணத்துக்கு ஏற்றவன்.

## 873. ஸத்ய:

ஸாத்விகமான சாஸ்த்ரங்கள் அனைத்திலும் கூறப்படுபவன் என்பதால் அவனுடைய வைபவங்கள் அனைத்தும் ஸத்யமானவை ஆகும். அல்லது மஹாபாரதம் உத்யோகபர்வம் (69-12-13) – ஸத்யே ப்ரதிஷ்டித: க்ருஷ்ண: ஸத்யமஸ்மிந் ப்ரதிஷ்டிதம் ஸத்தாஸத்தே ச கோவிந்த: தஸ்மாத் ஸத்ய: ஸதாம் மத: - க்ருஷ்ணன் ஸத்யத்திலும், ஸத்யம் க்ருஷ்ணனிடமும் நிலையாக உள்ளதைக் காணலாம்; கோவிந்தனிடம் இருப்பும் இல்லாமையும் ஒடுங்கி உள்ளது; ஆகவே அவன் ஸத்யம் எனப்படுகிறான் – என்ற வரிக்கு ஏற்ப, ஸத்யத்தில் இருப்பவனாகவும், ஸத்யத்திற்கு இருப்பிடமாகவும் உள்ளதால் ஸத்யம் எனப்படுகிறான்.

## 874. ஸத்ய தர்ம பராயண:

ஸாத்விகமான அதிகாரியையும் பலத்தையும் உடையதான தர்மம் என்பதை கடைப்பிடித்தபடி உள்ளவர்களைக் கண்டு மகிழ்பவன். அவர்கள் ஸாத்விக சாஸ்த்ரங்களில் கூறப்பட்டதால், தர்மவழி நிற்கிறார்கள்.

## 875. அபிப்ராய:

ஸத்ய தர்மத்தில் நிலைநிற்கும் மஹாத்மாக்களால் எப்போதும் தங்களுடைய இயல்பான எஜமானன் என்று விரும்பப்படுபவன்.

## 876. ப்ரியார்ஹ:

இவ்விதமாக ஸர்வேச்வரனாகைய தனக்காக மட்டுமே வாழ்பவர்களை, தானும் மிகவும் உகந்திருப்பவன். அவனிடம் மட்டுமே பக்தியுடன் உள்ளவர்கள் விஷயத்தில், ஸர்வேச்வரனுக்குத் தனக்குத்தானே ப்ரீதி உண்டாகுதல் என்பது ஏற்படும் அல்லவோ? பொருள் வேண்டியும், ஆத்மப்ராப்தி வேண்டியும் உள்ளவர்கள் கூட, தன்னை வேண்டினால், தன்னுடைய ஔதார்ய குணம் காரணமாக, அவர்களிடம் ப்ரீதியுடன் உள்ளான் அல்லவோ? கீழே உள்ள வரிகள் காண்க:

- கீதை (7-17) – தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த: ஏகபக்திர்விசிஷ்யதே – அவர்களில் என்னிடம் மட்டும் ஆழ்ந்த பக்தியுடன் உள்ள ஞானி மிகவும் சிறந்தவன்.

- கீதை (7-18) – உதாரா: ஸர்வே ஏவைதே – அவர்கள் அனைவரும் சிறந்தவர்களே

## 877. அர்ஹ:

மற்ற எதுவும் அவசியம் இல்லை என்று தெளிவாக உள்ள அவர்களால் அடையப்படும் தகுதி உள்ளவன். கீதை (7-18) – ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம் – என்னிடம் ஒன்றிய மனமும் பக்தியும் கொண்ட ஞானி, மிகவும் உயர்ந்த என்னையே அடைகிறான் – என்றது காண்க.

## 878. ப்ரியக்ருத்

மற்ற பலன்களை விரும்பி தன்னை அடைந்தவர்களிடமும், அவர்களுடைய விருப்பத்திற்கு ஏற்றபடி நடந்துகொண்டு, அவர்களுக்கும் நல்லவனாக உள்ளவன். நிராசீ: கர்மஸம்யுக்தாநம் ஸாத்வதாம்ச்சாபி அகல்பயம் – ஒரு சிலர் உலகவிஷயங்களுக்காக என்னிடம் வருவதுண்டு; அவர்கள் என்னை அதற்காக வணங்கியபோதிலும், பலனை எதிர்பாராமல் செயல்களைச் செய்யும் பக்குவத்தை நான் அவர்களுக்கு அளிக்கிறேன் – என்றது காண்க.

## 879. ப்ரீதிவர்த்தந:

இவ்விதமாக அவர்களுக்குத் தன்னுடைய குணங்களை மேன்மேலும் உணர்த்தி, தன்னிடம் அவர்களுக்கு ஆழ்ந்த ப்ரீதி உண்டாகும்படிச் செய்பவன்.

## 880. விஹாயஸகதி:

இவ்விதமாக பக்தியின் எல்லையில் நிற்பவர்களுக்கு, மிகவும் உயர்ந்த கதியான பரமபதம் அளிப்பவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- ஸ்ரீவிஷ்ணுபுராணம் (5-19-26) - முக்த்வா ச விபுலாந் போகாந் த்வமந்தே மத்ப்ரஸாதத: மமாநுஸ்மரணம் ப்ராப்ய மம லோகே நிவத்ஸ்யஸி – என்னுடைய எல்லையற்ற கருணை காரணமாக இந்த உலக இன்பங்களை எல்லையற்று

அனுபவித்து, உனது இறுதி சமயத்தில் என்னுடைய சிந்தனை உண்டாகும். அதன் பின்னர் என்னை அடைந்து எனது லோகத்தில் இருப்பாய்.

- ப்ரஹ்மஸூத்திரம் (4-2-16) – ததோகோக்ரஜ்வலநம் தத்ப்ரகாசி தத்வாரோ வித்யா ஸாமர்த்யாத் தச்சேஷகத்யநுஸ்ம்ருதி யோகாச்ச ஹார்த்தாநுக்ருஹீத: சதாதிகயா – ப்ரஹ்மஞானி பரவித்யை காரணமாகவும், அந்த வித்யைக்கு அங்கமான அர்ச்சிராதி மார்க்க சிந்தநரூபமான யோகத்தாலும் தன்னுடைய இதயத்தாமரையில் உள்ள ஸர்வேச்வரனுடைய கருணையைப் பெறுகிறான். அந்த க்ருபை காரணமாக, அவனுக்கு அந்தர்யாமியின் இருப்பிடமான அந்த இதயம் ப்ரகாசிக்கிறது. அந்த ஒளி மூலம் அவன் வெளியேற வேண்டிய நூற்றோராவது ஸுஷும்நா நாடியை அறிந்துகொண்டு, அதன் மூலம் வெளியேறுகிறான்.

## 881. ஜ்யோதி:

(இந்தத் திருநாமம் தொடங்கி 889 முடிய, மோக்ஷம் போகும் ஜீவன் செல்வதான அர்ச்சிராதி மார்க்கமும், அதில் உள்ள பலவிதமான தேவதைகளும் கூறப்பட்டு, அவற்றை நியமிப்பவன் என்று உணர்த்தப்படுகிறான்) பரமபதத்திற்குக் கொண்டு சேர்க்கும் முதல் நிலையான அர்ச்சிஸ் என்பதை நியமிப்பவன். அது ஒளியுடன் உள்ளதால் ஜ்யோதி எனப்படுகிறது. சாந்தோக்ய உபநிஷத் (5-10-1) – தே அர்ச்சிஷம் அபிஸம்பவந்தி – அவர்கள் அர்ச்சிராதி மார்க்கத்தை அடைகிறார்கள் – என்றது. பகவத் உபாஸகர்களை அர்ச்சிராதி மார்க்கமாக வழி நடத்துபவர்கள் ஆதிவாஹிகர்கள் ஆவர். கீழே உள்ள வரிகளைக் காண்க:

- அர்ச்சிராதிநா தத் ப்ரதிதே: - அவர்கள் ஒளியுடன் கூடிய அர்ச்சிராதி மார்க்கமாகச் செல்கிறார்கள் என்று உபநிஷத்துக்கள் முழங்குகின்றன

- ஆதிவாஹிகாஸ் தல்லிங்காத் – அவர்கள் ஆதிவாஹிகர்கள் ஆவர்

## 882. ஸுருசி:

உதிக்கும் சூரியன் அதன் அழகான கிரணங்களால் காண்பதற்கு இனிமையானவன், அதன் உதயம் காரணமாக பகல்பொழுது ப்ரகாசமாக உள்ளது, அந்தப் பகல்பொழுதை அழகாக்குபவன் என்பதால் ஸுருசி எனப்படுகிறான்.

## 883. ஹுதபுக்விபு:

அமிர்தமாய் பரிணமிக்கும் ஹுதம் என்னும் திரவியத்தை புசிக்கின்ற சந்த்ரனுக்கு பூர்ணத்வம் அளிப்பதான ஸுக்லபக்ஷத்தின் தேவதையை நியமிப்பவன்.

## 884. ரவி:

நித்திரையிலிருந்து எழும் காலமாக உள்ளதால் உத்தராயணத்தில் கொண்டாடப்படுபவன். ஆபூர்யமாணபக்ஷாத் யாந் ஷடுதங்ஙேதி மாஸாந் – சுக்லபக்ஷ தேவதையிடமிருந்து, ஆறுமாதத்தின் தேவதையை அடைகிறான்.

## 885. விரோசந:

அடுத்து அயநங்களின் வழியாக ஆதித்யனோடு கொண்டு சேர்க்கும் ஸம்வத்ஸர தேவதையை நியமிக்கிறான்.

- சாந்தோக்ய உபநிஷத் (5-10-2) – மாஸேப்ய: ஸம்வத்ஸரம் – மாதங்களிலிருந்து வருடத்தை அடைகிறான்
- தைத்திரீய உபநிஷத் – ஸம்வத்ஸர: அஸாவாதித்ய: - ஆதித்யனே ஸம்வத்ஸரம் என்னும் வருடம் ஆவான்.

## 886. ஸூர்ய:

எங்கும் திரிந்தபடி உள்ள தன்மை கொண்ட வாயுலோகத்தின் அபிமான தேவதை.

## 887. ஸவிதா

சூரியன் மூலமாக மழையையும், பயிர்களையும் உண்டாக்குபவன். கீழே உள்ள வரிகள் காண்க.

- சாந்தோக்ய உபநிஷத் (5-10-2) – ஸம்வத்ஸராத் ஆதித்யம் – ஸம்வத்ஸரம் என்னும் ஆண்டிலிருந்து ஆதித்யனை அடைகிறான்.

- ப்ரஹ்மஸூத்திரம் (4-3-2) – வாயுமப்தாத் அவிசேஷவிசேஷாப்யாம் – வருடத்திற்குப் பின்னர் அர்ச்சிராதிகதியில் வாயு வருகிறது.

## 888. ரவிலோசன:

சூரியனுடைய கிரணங்களின் வழியே சந்த்ரன், மின்னல், வருணன் முதலானவர்களிடம் அழைத்துச் செல்பவன்.

- சாந்தோக்ய உபநிஷத் (5-10-2) – ஆதித்யாத் சந்த்ரமஸம் சந்த்ரமஸௌ வித்யுதம் – ஜீவாத்மா ஆதித்யனிடமிருந்து சந்த்ரனிடமும், சந்த்ரனிடமிருந்து மின்னலிடமும் செல்கிறான்.

- கௌஷீதகீ உபநிஷத் – ஸ வருணலோகாந் – அதன் பின்னர் வருணலோகம் செல்கிறான்

## 889. அநந்தஹுதபுக்போக்தா

மிகவும் மஹிமை உள்ளவர்களான ஹுதபோக்தாவை நியமிப்பவனையும் நியமிப்பவன். அதாவது யாகங்களில் அளிக்கப்படும் அவிர்பாகத்தை ஏற்கின்ற இந்த்ரனையும், அனைத்து பிரஜைகளையும் பரிபாலிக்கும் பிரஜாபதியையும் நியமிப்பவன். ஸ இந்த்ரலோகம் ஸ ப்ரஜாபதிலோகம் – அதன் பின்னர் ஜீவாத்மா இந்த்ரலோகமும், பிரஜாபதி லோகமும் செல்கிறான்.

## 890. ஸுகத:

அமாநவன் திருக்கரத்தால் ஸ்பர்சிக்க வைப்பதன் மூலம் ஸம்ஸாரத்தை அதன் வாசனையுடன் நீக்கி, ப்ரஹ்மப்ராப்தி என்னும் சுகமான நிலையை அளிப்பவன். சாந்தோக்ய உபநிஷத் (5-10-3) – தத்புருஷ: அமாநவ: ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி – அதன் பின்னர் அந்த உயர்ந்த புருஷனாகிய அமானவன் ஜீவாத்மாவை பரமாத்மாவிடம் கொண்டு சேர்க்கிறான்.

## 891. நைகத:

பலவற்றையும் கொடுப்பவர்களை உடையவன். எண்ணற்ற திவ்யமாலை, திவ்ய அஞ்சனம், திவ்ய வஸ்த்ரம் முதலான ப்ரஹ்ம அலங்காரங்களை எடுத்துக் கொண்டு, முக்தனை எதிர்கொண்டு அழைக்கக்கூடிய திவ்யமான அப்ஸரஸ்ஸுக்கள் பலரையும் கொண்டவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- கௌஷீதகீ உபநிஷத் (1-4) - தம் பஞ்சசதாந்யப்ஸரஸ: உபதாவந்தி சதம் மாலாஹஸ்தா: சதம் அஞ்ஜநஹஸ்தா: - முக்தனை எதிர்கொண்டு அழைக்க ஐந்நூறு அப்ஸரஸ்ஸுக்கள் ஓடி வருகிறார்கள். அவர்களில் நூறு பெண்கள் தங்களுடைய கைகளில் மாலையையும், நூறு பெண்கள் கண்ணில் இடும் மையையும் அலங்கரிப்பதற்காக எடுத்து வருகிறார்கள்.

- தம் ப்ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி – முக்தனை ப்ரஹ்ம அலங்காரம் செய்கிறார்கள்.

## 892. அக்ரஜ:

இப்படியாக அர்ச்சிராதி மார்க்கமாகத் தன்னை வந்தடைந்த முக்தர்களுக்கு முன்பாக, அனைத்து ஐச்வர்யங்களும் அண்டி நிற்கும் பெரியபிராட்டியுடன் சேர்ந்தவனாக, பர்யங்கவித்யையில் கூறியபடி, உயர்ந்த இன்பம் அளிக்கும்விதத்தில் வீற்றுள்ளவன். கீழே உள்ள வரிகள் காண்க:

- கௌஷீதகீ உபநிஷத் (1-5) – ஸ ஆகச்சதி அபிதௌஜஸம் பர்யங்கம் – முக்தன் ஸர்வேச்வரனுடைய பர்யங்காசனத்தை அடைகிறான்.

- கௌஷீதகீ உபநிஷத் (1-5) – உபஸ்ரீரூபப்ரும்ஹணம் தஸ்மிந் ப்ரஹ்மாஸ்தே தமித்தம்வித் போதேநைவ அக்ரே ஆரோஹதி தம் ப்ரஹ்மாஹ "கோ அஸி" இதி – அந்த பர்யங்காசனத்தில் ஸர்வேச்வரன் தன்னுடைய பத்னியாகிய பெரியபிராட்டியுடனும், தன்னுடைய சேவகர்கள் சூழந்தபடியும் வீற்றுள்ளான். இப்படியாக ஸர்வேச்வரன் உள்ளதை இதுநாள் வரை உபாஸித்து வந்த முக்தன், இப்போது அந்த ஸர்வேச்வரனைக் கிட்டி, அவன் வீற்றுள்ள பர்யங்காசனத்தின் மீது ஏறுகிறான். அப்போது ஸர்வேச்வரன் அவனை, "நீ யார்?" என்று வினவுகிறான்.

- கௌஷீதகீ உபநிஷத் (1-6) – ஸா யா ப்ரஹ்மணி சிதி: யா வ்யஷ்டி: தாம் சிதிம் ஜயதி தாம் வ்யஷ்டி வ்யச்நுதே இதி – அந்த ப்ரஹ்மத்தைக் குறித்த ஞானத்தை முக்தாத்மா அடைகிறான், அந்த ப்ரஹ்மத்தின் ஆனந்தத்தை அடைகிறான்.

## 893. அநிர்விண்ண:

இவ்விதம் தன்னை அண்டியவனை மிகவும் ஆழமான ஸம்ஸாரம் என்னும் பெரிய பள்ளத்திலிருந்து கரையேற்றி, தனது திருவடிகளின் கீழே சேர்த்துக் கொண்டு, அவன் துக்கங்கள் அடையாமல் உள்ளதைக் கண்டு, தான் தனது துயரங்கள் நீக்கி இருப்பவன். இராமாயணம் பாலகாண்டம் (1-85) – க்ருத்க்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர: - தன்னைச் சரணம் புகுந்த விபீஷணனுக்கு இராமன் அப்போதே இலங்கை அரசனாகப் பட்டாபிஷேகம் செய்துவைத்தான். அதன் பின்னர் தான் செய்யவேண்டியதைச் செய்த மகிழ்ச்சியில் ஆழ்ந்தான் – என்றது காண்க.

## 894. ஸதாமர்ஷீ

முக்தன் தன்னை அடைந்த காலம் தொடக்கமாக, அவன் தான் அடைந்த பேற்றுக்குப் பதிலாகச் செய்யும் கைங்கர்யங்கள் அனைத்தையும் ஏற்றுக் கொள்ளும் தன்மை உடையவன். தைத்திரீய உபநிஷத் (1-2) – ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா – அந்த முக்தன் ப்ரஹ்மத்தின் அனைத்துவிதமான போகங்களையும் அனுபவிக்கிறான் – என்றது காண்க.

## 895. லோகாதிஷ்ட்டாநம்

முக்தர்களுக்கு இன்பமாக உள்ள அனைத்து உத்தமமான லோகங்களுக்கும் ஆதாரமாக உள்ளவன். அநுத்த்தமேஷு உத்தமேஷு லோகேஷு – உத்தமமான லோகங்களில் தனக்கு நிகராக யாரும் இல்லாமல் – என்றது காண்க.

## 896. அத்புத:

அந்த உலகங்களில், எப்போதும், அனைவரும், எல்லாவிதமாகவும் அனுபவித்தபடி இருந்தாலும், அப்போதைக்கப்போது புதிது புதிதாகத் தோன்றி, வியப்பை உண்டாக்கியபடி உள்ளவன்.

## 897. ஸநாத்

இவ்விதம் அவர்களால் எப்போதும் அனுபவித்தபடி உள்ளவன் (அல்லது) அனைத்து முக்தர்களுக்கும் ஒரே போன்று ஆனந்தம் அளிப்பவன்.

## 898. ஸநாதநதம:

எப்போதும் உண்டாயிருந்தாலும், அப்போதுதான் உண்டானது போன்று, எப்போதும் இன்பம் அளித்தபடி உள்ளவன்.

## 899. கபில:

மின்னல் கூட்டத்தின் நடுவில் உள்ள காளமேகம் போன்றுள்ள திருமேனியுடன் கூடியவன்.

## 900. கபிரவ்யய:

எப்போதும் உள்ளதான ஆனந்தத்தைத் தானும் எப்போதும் அனுபவித்தபடி உள்ளவன். அதனைத் தடையில்லாமல் முக்தர்களுக்கும் அளிப்பவன்.

இப்படியாக ஹாரீத குலத்திற்குத் திலகம் போன்ற ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானின் திருக்குமாரரும், ஸ்ரீரங்கநாதனின் தெய்வீக ஆணையால் ஸ்ரீபாராசரபட்டர் என்னும் பெயர் பெற்றவரும் ஆகிய ஸ்ரீரங்கநாதன் அருளிச்செய்த

பகவத் குண தர்ப்பணம் என்ற ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், ஒன்பதாவது நூறு திருநாமங்களின் வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.

பத்தாவது நூறு தொடக்கம்

## 901. ஸ்வஸ்தித:

இவ்விதம் அனைவருக்கும் மிகவும் உயர்ந்த மங்களங்களை அளிப்பவன்.

## 902. ஸ்வஸ்திக்ருத்

தன்னுடைய திருக்கல்யாண குணங்களால் தனது போகத்துக்கு க்ஷேமத்தைச் செய்து கொள்பவன்.

## 903. ஸ்வஸ்தி

தானே மங்கள ஸ்வரூபமாக உள்ளவன்.

## 904. ஸ்வஸ்திபுக்

இவ்விதமாக உள்ள மங்களங்களைக் காப்பாற்றுபவன்.

## 905. ஸ்வஸ்திதக்ஷிண:

தன்னுடைய அடியார்கள் தனக்குச் செய்யும் கைங்கர்யங்களுக்கு ஏற்றபடி திவ்யசரீரம், திவ்யசக்தி முதலான மங்களங்களை, தன்னுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தை அளிப்பதான மஹாயாகத்திற்கு ரித்விக்குகளாக உள்ள நித்யஸூரிகளுக்குத் தக்ஷிணையாக அளிப்பவன்.

## 906. அரௌத்ர:

மிகவும் உயர்ந்த ஐச்வர்யங்கள் நிறைந்தவனாக உள்ளபோதிலும், தன்னுடைய குணங்களால் குளிர்ந்துள்ளவன் என்பதால், தணிந்துள்ளவன்.

## 907. குண்டலீ

